உ
ஓம் தத் சத்:
திருச்சிற்றம்பலம்.

# அகம்புற ஆராய்ச்சி விளக்கம்.

இஃது
திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகள் ஆதீனம்
ஈசூர் - சச்சிதாநந்த சுவாமி அவர்கள்
மாணாக்கருள் ஒருவராகிய,

தண்டறை
ஸ்ரீ. சுப்பராய ஆச்சாரிய சுவாமி அவர்கள்
தமது சுவானுபவத்தி லுதித்தவாறு இயற்றியது.

ஷை சுவாமியவர்கள் மாணாக்கரில் ஒருவரும்
வேதாந்த பூஷணமுமாகிய
ஸ்ரீ. எஸ். கந்தசாமி பிள்ளையவர்களாலும்

மதுரைத் தமிழ்ச் சங்க வித்வானும்
அத்வைத ஆராய்ச்சியாளருமாகிய
ஸ்ரீ. நா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களாலும்
பார்வையிடப்பெற்று,

மதுரை, ஸ்ரீ மீனாம்பிகை பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.

[ 3-வது பதிப்பு. ]

1939

 [விலை ரூபா 1—4—0

ஓம்:
பரப்பிரம்மணே நம:



அகண்ட பரிபூரண சச்சிதானந்த அவாங் மனோகோசர ஆதிமத்தியாந் தரகித சொரூப சாக்ஷாத்கார நிஷ்டரும், வேதாந்த மகாவாக்கிய லக்ஷியார்த் தத்தைச் சந்தேக விபரீதமற அங்கை நெல்லிக்கனிபோல் முமூட்சுக்களுக்கு அநுக்கிரகிக்கும் அதுல்ய வித்வச் சூடாமணியும், இந்திர பீடம் கரபாத்திர சுவாமிகள் பரம்பரையில் வந்த பிறைசை ஸ்ரீ அருணாசல சுவாமிகள் மாணாக் கரும், ஸ்ரீமத் ஜகத்குரு சங்கர பகவத் பாதாசாரியாரால் நிலை நிறுத்தப்பட்ட அத்வைத சித்தாந்தத்தைத் தமிழ் நாட்டினர் பலரும் எளிதிலுணருமாறு பல வேதாந்த கிரந்தங்களைப் பிரசித்தஞ் செய்தவருமான

ஸ்ரீமத் ஈசூர். சச்சிதானந்த சுவாமிகள்.



வேண்பா.

சார்பிறவி நோய்தீர்க்கும் தத்துவஞா னப்பொருளைப்
பார்முழுதும் ஓங்கவைத்த பைங்குரவர்!—நேர்பெரிய
இந்திரபீ டத்தார்ந் திருந்தசச்சி தானந்தர்
கந்தமலர்த் தாள்நமக்கோர் காப்பு.

ஓம்:
பரப்பிரம்மணே நம:





ஸ்ரீமத். ஈசூர் - சச்சிதானந்த சுவாமிகள் மாணுக்கருள் ஒருவரும், பிரத்தியகாத்ம அபின்ன பிரஹ்ம சாட்சாத்காரத்தை யடைந்து விளங்கியவரும் தமிழ் மக்களுய்ய ஞானநூல் பல வருளிச் செய்தவரும், கூடஸ்த பிரஹ்ம ஐக்கியத்தை ஐயந்திரிபின்றி நன் மாணவர் பலருக்கு விளக்கி வைத்தவருமாகிய

ஸ்ரீமத். தண்டறை,

## சுப்பராய ஆச்சாரிய சுவாமிகள்.

---

### அறுசீர் விருத்தம்.

கண்டபொருள் வசமாகித் தனதுநிச வடிவறியாக் கவலைதீர
அண்டமுத லெவற்றினுக்கு மதிட்டான சாட்சியறி வாக்கவல்ல
பண்டமறை முடிவையெலாஞ் சந்தேக மடம்போக்கிப் பரிவிலீந்த
தண்டறைசற் குருசுப்ப ராயனது மலர்த்தாளைத் தலைமேற் கொள்வாம்.

### வெண்பா.

தண்டறைவாழ் சுப்பராய சாமி மலர்ப்பதத்தை
விண்டறைவார் பந்தமெலாம் விட்டொழித்துக்—கண்டதெலாம்
பொய்ப்பொருளாந் தோற்றமெனப் பொய்யாகிப் போயினபின்
மெய்ப்பொருளாய் நிற்பார் மிளிர்ந்து.

ஓம்:
பரப்பிரம்மணே நம:



மேற்படி சுவாமிகள் மாணாக்கரில் ஒருவரும், இவ் அசம்புற ஆராய்ச்சி யென்னும் நூலை மூன்றாம் பதிப்புப் பதிப்பித்துக் குரு காணிக்கையாகக் கொடுத்தவருமான
**மதுரை, எஸ். கந்தசாமி பிள்ளை.**

ஸ்ரீமத் தண்டறை,
**சுப்பராய ஆச்சாரிய சுவாமிகள்.**

வாட்டமுடன் வந்தவருக் கபய மீந்து
வார்த்தைசொலிச் சந்நிதியின் வகையி ருத்திக்
கேட்டவுடன் சிந்தித்த தெளிவி னாலே
கெடுதியுறு பீடணையுந் தாபத் தீயும்
ஓட்டமே தங்கெடவே காட்டிப் பின்னும்
நன்கில்லாக் காமியசஞ் சிதம்பி ரார்த்தம்
ஓட்டுவகை வற்புறுத்திச் சொல்வா ராமே
ஒப்போதண் டறைசுப்ப ராய னென்னே.

கண்டோர்க ளெஞ்சுருகுங் கருணை நோக்குங்
கற்பவர்க ளன்புருகு மதுர வாக்குங்
கொண்டேசின் மயமாதல் உடலின் பாங்குங்
குண்டலத்தோ டக்கமணி மாலை பூண்டு
தண்டாரும் பதுமத்தா தனமி ருந்து
தயவாக வடியார்க்கு நல்லு ரைத்தார்
விண்டாரே திருமேனி யாரே சொல்வார்
விண்ணுறைதண் டறைசுப்ப ராய னென்னே.

ஓம்:
பரப்பிரம்மணே நம:



ஸ்ரீமத் தண்டறை,
சுப்பராய ஆச்சாரிய சுவாமிகள்.

ஷை சுவாமிகள் இயற்றிய புருஷார்த்
தபோதினி யென்னும் நூலிற்குப்
பொருளுதவி செய்த
லக்கூர், கிருஷ்ணைய செட்டியார்.

## எழுசீர் விருத்தம்.

சகந்தனில் வீணாய்ப் பிறந்திறந் துழன்று
தணிவுறு தலைந்திடு மெந்தம்
அகந்தைகள் யாவு மகற்றிடக் கருதி
யருளுருக் கொண்டெதிர் போந்து
சுகந்தனின் மேலாஞ் சுகமது பிரமச்
சுகமெனத் தோன்றிடக் காட்டித்
திகழுதண் டறையார் சுப்ப ராயன்மெய்ச்
சேவடி சென்னி சேர்த்திடுவாம்.

## எண்சீர் விருத்தம்.

தேகாதி தத்துவமாம் பாரை நேதிச்
சீர்கருவிக் கொண்டுவிசா ரித்துத் தோண்டிப்
போகாநின் றவர்பயனு யறிவாய்க் கண்ட
புதைபொருளே மரணமெனு மொன்றி னுக்காள்
ஆகாநின் றோமென்றே யஞ்சுவார்க்கு
மபயமளித் துயிர்ப் போதங் கெடப்போ திந்துச்
சாகாத வரமளிக்குந் தலைவ வெந்தாய்
தண்டறை சற்குரு சுப்ப ராயதேவே.

உ

திருச்சிற்றம்பலம்.

அகம்புற ஆராய்ச்சி விளக்கத்தின்

# அத்தியாய அட்டவணை.


| இலக்கம் | | பக்கம் |
|---|---|---|
| 1. | சாத்துக் கவிகள். ... ... ... | 1 – 10 |
| 2. | முகவுரை. ... ... ... | 11 – 21 |
| 3. | பாயிரம். ... ... ... | 22 – 24 |

அகத்தாராய்ச்சி விளக்கத்தில்

| | | |
|---|---|---|
| 1. | நாட்டபேத விளக்கம். ... ... | 25 – 33 |
| 2. | ஐம்பொறி ஆராய்ச்சி விளக்கம். ... ... | 34 – 39 |
| 3. | அந்தக்கரண ஆராய்ச்சி விளக்கம். ... ... | 40 – 45 |
| 4. | சிவபோத ஆராய்ச்சி விளக்கம். ... ... | 46 – 63 |
| 5. | கூடஸ்த சைதன்னிய இலட்சியார்த்த விளக்கம். | 64 – 79 |
| 6. | துவைத சிதாரோப ஆராய்ச்சி விளக்கம். ... | 80 – 90 |
| 7. | துவைத இன்பாரோப ஆராய்ச்சி விளக்கம். ... | 91–100 |

புறத்தாராய்ச்சி விளக்கத்தில்

| | | |
|---|---|---|
| 1. | தேகமென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம். | 101–104 |
| 2. | அவயவமென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம். | 105–107 |
| 3. | மாமிசாதியென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம். | 108–120 |
| 4. | மண்ணின் மகத்தென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம். ... ... ... | 121–124 |
| 5. | மண்ணின் தூலவணுவென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம். ... ... ... | 125–127 |
| 6. | மண்ணின் சூக்குமவணுவென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம். ... ... ... | 128–130 |
| 7. | மண்ணின் காரணமாகிய பரமாணுவென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம். ... | 131–149 |
| 8. | அருவபாவ ஆராய்ச்சி விளக்கம். ... ... | 150–161 |
| 9. | மண்முதலிய சதுர்ப்பூத குணிப்பொருள் ஆராய்ச்சி விளக்கம். ... ... . | 162–171 |
| 10. | பிரமசைதன்னிய இலட்சியார்த்த விளக்கம். | 172–190 |
| 11. | அறிவாநந்த ஐக்காநுபவ விளக்கம். ... | 191–203 |

இப்பதினெட்டாவது அத்தியாயத்திலுள்ளவை.


1. ஞானகுரு சற்குரு இலக்கணம். ... ... 203–205
2. போலிஞானம். ... ... ... 205–216
3. மகாவாக்கிய நிரூபணம். ... ... ... 216–223
4. கேட்டலென்பது. ... ... ... 223–224
5. சிந்தித்தலென்பது. ... ... ... 224–225
6. தெளிதலென்பது. ... ... ... 225–226
7. வழிபடுதற்கியைந்த துவிதம். ... ... 226–234
8. வழிபடுதற்கியைந்த விசிட்டாத் துவைதம். ... 234–243
9. எதார்த்த துவிதம். ... ... ... 243–247
10. எதார்த்த விசிட்டாத்துவிதம். ... ... 247–251
11. அத்துவிதம். ... ... ... 251–265

திட்டாந்த தாட்டாந்த துவித முதலியவற்றுள்

12. திட்டாந்தத்தில் துவிதம். ... ... 265–267
13. திட்டாந்தத்தில் விசிட்டாத்துவிதம். ... 267–268
14. திட்டாந்தத்தில் அத்துவிதம். ... ... 269–271
15. தாட்டாந்தத்தில் துவிதம். ... ... 271–273
16. தாட்டாந்தத்தில் விசிட்டாத்துவிதம். ... 273–274
17. தாட்டாந்தத்தில் அத்துவிதம். ... ... 274–278
18. சரியையென்பது. ... ... 278–279
19. கிரியையென்பது. ... ... ... 280
20. யோகமென்பது. ... ... 281–286
21. வேதவேதாந்த விசாரமென்பது. ... .. 286–289
22. அறமாதிநான்கு மிணையவென்பது. ... ... 289–293
23. சீவன்முத்தரது பேதங்கள். ... ... 293–295
24. நிட்டை யென்பது. ... ... ... 295–296


அகம்புற ஆராய்ச்சி விளக்கத்தின்

அத்தியாய அட்டவணை

முற்றிற்று.



ஓம்:
பரப்பிரம்மணே நம:

திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகளாதீனம்

ஸ்ரீமத் ஈசூர்-சச்சிதானந்த சுவாமிகள் மாணுக்கர்

## ஸ்ரீமத் தண்டறை சுப்பராய ஆச்சாரிய சுவாமிகள்

# சரித்திரச் சுருக்கம்.

சர்வான்மாக்களும் துக்க நிவிர்த்தியும் ஆனந்தப் பிராப்தியும் அடைந்துய்ய வேண்டுமென்றே சுருதி, ஸ்மிருதி, புராணேதிகாசங் களாதி சதுர்த்தச வித்தைகள் விளங்கி யிருக்கின்றன. ஆயினும் கன்ம உபாசனையைப் போதிப்பன அற்ப சுருதிகளாதலின் அவை பரம்பரா சாதனமென்றும், ஞானத்தைப் போதிப்பன மாத்திரம் பிர பல சுருதிகளாதலின் இவை காரணமாகத் தெளியும் ஞானம் ஒன்றே சர்வ துக்க நிவிர்த்தியும், பரமானந்தப் பிராப்தியும் பெறுவதற்கு நேர் சாதனமென்றும் ஆன்றோர்கள் கூறியவாறே வேதோக்தமாய் யுக்தி யனுபவ பூர்வகமாய் எடுத்துக்காட்டிப் பிரபல சுருதிகளாகிய உபநிடதம், கீதை, பிரமசூத்திரமென்னும் பிரஸ்தானத்திரயங்களை யும், அவற்றின் வழிநூல்களையும் தெள்ளிதில் விளக்கிப் பேதவாதங் களைக் கண்டித்து வேதாந்தத்தைப் பரவச்செய்த ஸ்ரீ சங்கரபகவத் பாதாச்சாரியரால் ஏற்படுத்தப்பட்ட பீடம் நான்கினுள் இந்திரபீடம் என்பது திருத்துருத்தி யென்னும் திவ்விய பதியின்கண் உள்ளது. இது புராதனத்தில் பிராமண வருணத்தவர்களாலேயே ஆச்சாரிய தானம் வகித்து நடைபெற்று வந்தது. சிரவணஞ் செய்பவர்களும் பிராமண வருணத்தவர்களா யிருந்தனர். இம்முறையே பிராமண வருணத்தினின்று சந்நியாச ஆசிரமம் பூண்டு ஆத்மாநாத்ம விசாரம் புரிந்து பிரமான்ம ஐக்கிய ஞானத்தை அபரோட்சமாக அடைந்து அப்பீடத்தின்கண் ஆச்சாரியராக வீற்றிருந்தவர் கரபாத்திர சுவாமிக ளென்னும் சதாசிவப்பிரமேந்திர யோகீஸ்வரர். இவர் காலத்தில் சூத்திர வருணத்தைச் சார்ந்த தேத்தாத்திரேய சுவாமிகள் பூர்வ ஜன்ம புண்ணிய பரிபாகத்தால் இவரை வந்தடுத்து ஆத்மார்த்தத்தை

யருளவும், அநுக்கிரகிக்கவும் பன்முறை வேண்டினர். கரபாத்திரர் இவரையும் ஆளாக்க வேண்டுமென்னுங் காருண்யம் உள்ளத்தில் கொண்டிருப்பவராதலால் சிரவணிக்கும் பிராமணர்கள் தடைசெய் தும் மடத்தின் ஒருபுறத்தி லிருக்கச்செய்து வேதாந்தார்த்தத்தை விளக்கி வைத்தனர். பின்பு தனியிடத்திலிருத்தி அநுக்கிரகமுஞ் செய்தனர். தெத்தாத்திரேயர் தமக்காசிரியர் உணர்த்தியவற்றைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடிச் சுவானுபூதி வாய்க்கப்பெற்று விளங்கினர். இவருக்குப்பின் இவரையடுத்துத் தெளிந்தவர் சேங்கமல சுவாமிகள். ஷை யார் மாணுக்கர் முத்தைய சுவாமிகள். ஷையார் மாணுக்கர் சுப்பிரமணிய சுவாமிகள். ஷையார் மாணுக்கர் நாகை அருணசல சுவாமிகள். ஷையார் மாணுக்கர் பிறைசை அருணசல சுவாமிகள். ஷையார் மாணுக்கர் ஈசூர் சச்சிதானந்த சுவாமிகள். ஷை யார் மாணுக்கர் தண்டறை சுப்பராய சுவாமிகள். இவர் 1838-ஸுத் துக்குச் சரியான கலியுகாதி 4939-ல் விளம்பி-ஸு விஸ்வகுலத்தில் அவதரித்துக் கல்வியறி வொழுக்கங்களால் சிறந்து விளங்கியிருந் தனர். 1858-ம்ஸு சென்னை சூளை ஷண்முகஞானபுரத்தில் ஞானப் பிரகாசராய் விளங்கிப் பலருக்கும் வேதாந்த ஞானத்தைப் புகட்டி வந்த ஷை சச்சிதானந்த சுவாமிகளை ஆசிரியராக அடுத்து, ஆப்தாங் கதான சத்பாவ மென்னும் நான்கு அங்கங்களோடு ஆசிரியரிடத்தில் ஒழுகி வந்தனர். ஆசிரியரும் இவர் மீது பெருங் கருணைகொண்டு வேதாந்தத்தின் முடிவாகிய மகாவாக்கியத்தின் அதியிரகசியங்களை யெல்லாம் அநுக்கிரகித்தனர். இங்ஙனம் ஆசிரியரிடத்தில் கேட்டுத் தெளிந்த இவர் பின்னும் ஆசிரியரை விடாது சிரவணம் புரிந்து வந் தமையால் மற்றைய மாணுக்கர் யாவருள்ளும் இவர் மிக்க சிறந்தவ ராய் விளங்கினர். பிறகு தாம் கேட்டவற்றைப் பிறருங் கேட்டுய்யு மாறு 1875-ஸு தாமிருக்கும் இல்லத்தின் கண்ணேயே வேதாந்தப் பிரசங்கம் புரிய ஆரம்பித்து, 10-வருடகாலமாக நிறைவேற்றி வந்த னர். இங்ஙனமிருக்க 1885-ம்ஸு ஸ்ரீமத் சச்சிதானந்த சுவாமிகள் பிரமானந்த வியாபக விளக்கத்தில் ஐக்கிய முற்றுவிடவும் அவரது மடாலயத்தில் வேதாந்தப் பிரசங்கம் தடையுற்றமையால் ஷை மடா லயத்தில் தாம் பிரசங்கிக்குமாறு உடன்பட்டு 12-வருடம் வரையில் நடத்தி வந்தனர். அதற்குமேல் கும்பகோணம், (மௌன சுவாமி கள் மடாலயம்) ஸ்ரீரங்கம், மதுரை, உறையூர், சேலம், வேலூர், திருவண்ணமலை, திருச்செந்தூர் முதலான விடங்களுக்குச் சென்று

ஆங்காங்குத் தம்மை வந்தடுத்த பரிபாகிகளுக்குச் சம்பிரதாயார்த் தத்தைச் சுருதி யுக்தி சுவானுபவ வாயிலாக்த் தெள்ளிதி லுணர்ந் துய்யுமாறு அநுக்கிரகித்தும் பிரசங்கித்தும் இடையில் வந்தாட்சே பித்த பரவாதிகளையும், போலி வேதாந்திகளையும், ஞாயம், சோதனை, பொருத்த வாயிலாகக் கண்டித்துத் தெளிவித்தும் சென்னை வந்து சேர்ந்தனர்.

1899-ம்ஞு வண்ணாரப் பேட்டை ஸ்ரீமத் தக்ஷிணாமூர்த்தி மடாலயத்தில் திருக்கு திரிசிய விவேகம் முதலான நூல்களையும், தமது சுவானுபவத்திலுதித்தவா றியற்றிய அகம்புறவாராய்ச்சி விளக்க மென்னும் நூலையும் விளக்கியுரைத்துப் பிரசங்கித்து வந்த னர். 1901-ஞு ஷை மடாலயத்தில் பிரசங்கத்தை நிறுத்திவிட்டுத் தமது கிருகத்தினிடத்திலேயே வந்து தரிசித்த பக்குவிகளுக் கெல் லாம் ஆத்மார்த்தத்தைப் புகட்டியதுமன்றிப் பிற்காலத்துப் பலர்க் கும் பயன்படுமாறு அறிவறியாமை ஆதாரவிளக்கம், ஞானஞ்ஞான ரகித அகம் பொருள் விளக்கம், புருஷார்த்த போதினி என்னும் நூல் களை சுவானுபவ சித்தமாக இயற்றினர். இறுதியாகத் தமது கால முழுவதும் தாமுணர்ந்த வாறே யுல்குணர்ந்துய்யக் கருணைத் திரு மேனிகொண்டு விளங்கியிருந்து 1908-ம்ஞு டிசம்பர்மீ 24-உக்குச் சரியான கீலக-ஞு மார்கழிமீ 11-உ சுக்கிர வாரம் பூர்வபட்சம் துதிகை திதி உத்திராட நட்சத்திரத்தில் காலை 9-மணிக்குக் கூடஸ்த பிரம நிரதிசயாநந்தானுபவ சாக்ஷாத்கார சுயஞ்சை தன்னியத்தில் ஐக்கியமுற்றன ரென்க.

சுபம் ஓம் தத் சத்.

இந்திரபீ டத்தமர்ந்த வெங்கைசுப்ப ராயக்கோன்
சந்ததமும் தன்னிலையைத் தானோக்கிப்—பந்தமெல்லாம்
அற்ற வகத்தி லமுந்த நிலைத்திருந்து
நற்றவத்தோ ரேயானார் நன்கு.

கீலகவென் னும்வருடங் கீர்த்திகனூர் மாதத்தில்
மால்பதினோர் தேதிசுக்ர வாரமதில்—சால்புறாஉம்
உத்ராடந் தன்னி லுயர்நிலையி லேசென்று
சித்துருவே யானார் சிறந்து.

—ooo—

## ஸ்ரீமத் தண்டறை சுப்பராய ஆச்சாரிய சுவாமிகள்

### அருளிறை வணக்கம்.

---

எழுசீர் விருத்தம்.

சத்தொடு சித்தா யானந்த மாகிச் சமந்திரஞ் சாட்சியே கமுமாய்
நித்தமாய்ச் சுத்த நின்மல மாகி நிறைந்திடுந் துரியநற் சிவமே
வித்தக வேட மேவிநற் குருவாய் மேதினி வந்ததண் டறைநன்
முத்தனுஞ் சுப்ப ராயனற் பதத்தை முடிமிசை யிருத்தியேத் திடுவாம்.

உள்ளதாய்த்தோன்று முயர்விலொவ்வொன்று முறுமனோ விகற்பமென் றுண
துள்ளதா முயர்வீ டெய்திடப் பலநூ லோதிடும் வாதிகள் பலரும்[ரா
விள்ளுமாகத்தி லமிழ்ந் திடாவாறு மேதினி வந்துகைக் கொண்ட
வள்ளல் தண்டறையார் சுப்பராயையன் மலரடி வணங்கி யேத்திடுவாம்.

பிருதிவியப்பு தேயுகால் வானம் பிறங்குறு சீவனெங்கும்
மருவிடும் சோம சூரிய ருருவாய் வயங்கிடு மான்மதத்துவமே
கருதிய வடியர் கறைதனைப் போக்கக் கால்கைகளாமுறுப் பென்று
முருவுகொண் டெழுந்த தண்டறை சுப்ப ராயனல் லுயர்பதம் பணிவாம்.

சகந்தனில் வீணுய்ப் பிறந்திறந் துழன்று தணிவுறு தலைந்திடுமெந்தம்
அகந்தைகள் யாவு மகற்றிடக் கருதி யருளுருக் கொண்டெதிர் போந்து
சுகந்தனின் மேலாஞ் சுகமதுபிரமச் சுகமெனத் தோன்றிடக் காட்டித்
திகழுதண்டறையார் சுப்ப ராயன்மெய்ச் சேவடி சென்னிசேர்த்திடுவாம்.

விண்ணுலகோரு மரியயனரனும் வேதமெண்ணளவைகளாலே
நண்ணுறநாடி நண்ணுதற்கரிய ஞானமாய் நற்றவத்துடையோ
ரெண்ணுதற்குரிய வின்பமாய் மற்றீண் டிருங்குரு வுருவுகொண் டாண்ட
தண்டறை சுப்பராய னற்பதத்தைத் தாழ்ந்தெம தகத்தினுட் கொள்வாம்.

மதிகதிர்மணியாய் மாணிக்கமலையாய் மாலயன் முதலிமையோர்க [றும்
ளதிபெருஞ் சுடராய்ச் சுடரொளி விளக்காய்ச் சோதியாய்ச் சுகமா யெஞ்ஞான்
விதிவிலக்கின்றி யிலகிடும்பொருளாய் விளங்குநல் லடியவர் தமக்கோர்
கதியெனத் தோன்றுந் தண்டறை சுப்பராயனு நிமலனைத் துதிப்பாம்.

எத்தனையுதிக்கு மத்தனையாகி யிதிலிகப்பரமெனு மிவற்றைப்
பெத்தமு வீடு மாய்மயங் கிடுமெம் பித்தினை யகற்றிமெய் யின்பச்
சித்தெமதாக மாகவோர் மொழியைச்செப்பிய தண்டலைஞானச்
சுத்ததேசிகனுஞ் சுப்பராயன் றன் றாவடி சிரமணிந்திடுவாம்.

முத்தனுய் முதலாய் முப்புரமெரித்த மோனமாய்ஞானநன் மணியாய்ச்
சித்தனுய்த் தூய நற்றவ முடையோர் தொழுதிருபுறத்தினுந் துதிக்க
இத்தரை வந்தெ முடலொடுமூன்று மேற்றுநற் பதத்தையெஞ் சென்னி
வைத்து வாழ்வளித்த தண்டலை சுப்பாராய மெய் வள்ளலைப் பணிவாம்.

அரியமானுடரா யந்தணராகி யாண்வடிவா யவுதரித்துந்
தெரிவுறப் பலநூற் கற்றுமெய்ஞ் ஞானத் திரமிலா விடய வாதனையாற்
பிரிவுறுமூடர் பிறவிநீத் துய்யப் பேரரு ளுருவுகொண் டெழுந்த
அரியமெய்ஞ் ஞான சற்குரு சுப்பராய னல் லடியிணைத் தொழுவாம்.

ஆதியேபோற்றி யெமதாவியேபோற்றி சமயாதீதநாதா போற்றி [போற்றி
அருளுருவமேபோற்றி யெமையாள் செய்தண்டலையி னையனேபோற்றி
நீதியேவாழி யிந்திரபீடமரபில்வரு நேயர் திருவடிகள் வாழி
நிமிலனீசூர்சச்சி தானந்த னடிவாழி நினதுதா ளிணைகள்வாழி.

ஜோதியே சரணமுயிர்காருண்ய சரணமைக்கடாக்ஷித்த குருவே சரணம்
கருதுநிதியே சரணமொளிர் சுப்பராயகருணைகரா நினதுசரணம்
சோதியே சரணிந்திரபீட மரபோங்குமீசூர் சச்சிதானந்தமெய்ச்
சொற்பிரானற் கருணையுற்றபேர் பெற்றகுரு சுப்பராயப் பிரமமே.



## அருட்குரு தகவம்.

---

### எண்சீர் விருத்தம்.

மறைநின்ற தற்பொருளை யுணரா தீண்டு
    மயங்கியவ ரதில்மீண்டெந் நாளு முய்வான்
இறைவன்றன் கருணை யினாற் சான்றோர்வந்த
    வெழிறொண்டை மண்டலத்துச் சென்னைசூளை
பிறையன்ன விச்சுவகன் மன்கு லத்திற்
    பிறந்திட்டானலமுறவே யவன்பே ரோதண்
டறைசுப்ப ராயகுரு வாமவ் வாசான்
    றகுமேதண் டறைசுப்ப ராய னென்னே. (1)

துருத்திபதி யிந்திரபீடத்து வந்த
    தோன்றல்கர பாத்திரன்கால் வந்த வீரூர்
பெருத்தகுரு வானச்சி தானந் தற்குப்
    பின்னோனு யவனருளாற் கலைக டேர்ந்து
பொருந்தமுட னில்லறத்தும் வழிபா டெய்திப்
    புண்ணியராம் பன்மகவை யளித்துத் தேற்றி
இருத்தரணி நலமுற்றி யிப்பேர் பெற்றோ
    னிறைவன்றண் டறைசுப்ப ராய னென்னே. (2)

பரமூர்த்த குகனருளா லுயிர்ப்போ தம்போய்ப்
    பரமான சிவபோதம் பற்றிப் பின்னுங்
குரவன்றன் கருணை யினாற் றற்போதத்திற்
    கூடியிருந் தெஞ்ஞான்று மதுவாய்த்தேறி
அருமுத்தர் வகையதனிற் பிரம வித்தா
    யண்டிவரு பக்குவரவ் வடைவை யெய்தக்
குருமூர்த்த மானவனே யவனா ரென்றன்
    கோனே தண்டறைசுப்ப ராய னென்னே. (3)

வாட்டமுடன் வந்தவருக் கபய மீந்து
    வார்த்தை சொலிச் சந்நிதியின் வகையிருத்திக்
கேட்டலுடன் சிந்தித்த றெளிவினாலே
    கெடுதியுறு மீடணையுந் தாபத்தீயும்

நாட்டபே தங்கெடவே நாட்டிப் பின்னும்
நன்கில்லா காமியசஞ் சிதம்பி ரார்த்தம்
ஓட்டுவகை வற்புறுத்திச் சொல்வ ராரே
யொப்போதண் டறைசுப்ப ராய னென்னே. (4)

சாதனையோர் நான்கினையும் வகையாய்க் கூறித்
தமக்குறுமூ வுடல் சார்பா மவித்தையோடு
வாதனைசெய் யபி மான பேதமோதி
மகத்தான வாக்கியத்தை வகுத்துக் கூறி
ஆதலுட னைக்கியமு மதில்வி ளக்கி
யந்நிலையப் பொருளுரிமை வியத்தா வியத்தம்
ஏதுமல யாவுமது வென்பார் யாரே
யெழிலோன்றண் டறைசுப்ப ராய னென்னே. (5)

பக்குவரின் வகையூடே கருணை கூர்ந்து
பற்வையொடு மீனுமை யன்ன தன்பால்
ஒக்கவிருந் துரைகேட்ப நிருபத் தானு
முச்சாவலினு நிட்டைநடை யோர்ந்து தேற்றித்
தக்கவரை யேனையவர்க் கோதச் செய்துந்
தயவாகச் சாதுஜன சங்கஞ்சேர்த்து
மிக்ககரு ணையினுள்வோ ரியாரே மண்ணின்
மேலோன்றண் டறைசுப்ப ராய னென்னே. (6)

திரிபுடியோ ரிருவகையு மிரண்டு நிட்டை
தெரித்துசத்தை மூன்றெனவே தேரத் தேற்றி
யருநெறிய பேதமொட பாவம் பட்ச
மத்தனையும் விருத்தியொரு மூன்று கூறும்
புருடபய னொருநான்குங் காண்ட மூன்றும்
புகலத்து விதந்துவிதம் விசிட்டாத் தொய்தம்
பரிவுடனே பகருவரார் வகையறிந்து
பாங்கேதண் டறை சுப்ப ராய னென்னே. (7)

அறிவறியா வாதார விளக்க மொன்றே
டகம்புறவா ராய்ச்சியெனும் விளக்க மொன்று
குறியுடன்ஞா னஞ்ஞான விளக்க மொன்று
கொளத்தக்க புருடார்த்த போதி னியொன்

றுறுமதிகா ரிகள்பயில வியற்றித் தந்து
முளவான வாழ்பொருள்க ளெடுத்து ரைத்து
மறுவறுவே தாந்தநிலை யாரே சொல்வார்
வானோன்றண் டறைசுப்ப ராய னென்னே. (8)

நூதனவி வேகிவரி னிதுகா றற்ற
நொய்ய விவகார மதைக் கைக்கச்செய்தும்
ஓதுபுல வோர்கள்வரி னிதுநாள் கற்ற
வொப்பரிய-கல்விதனைக் கைக்கச்செய்தும்
பூதனபாக் கியர்கள்வரி னிதுநாள் பெற்ற
பொருளாதி செல்வமதைக் கைக்கச் செய்தும்
மீதுகொளுங் கருணையினு லாரே சொல்வார்
மேலோன்றண் டறைசுப்ப ராய னென்னே. (9)

கண்டோர்க ணெஞ்சுருகுங் கருணை நோக்குங்
கற்பவர்க ளென்புருகு மதுர வாக்குங்
கொண்டேசின் மயமாகல் லுடலின் பாங்குங்
குண்டலத்தோ டக்கமணி மாலை பூண்டு
தண்டாரும் பதுமத்தா தனமி ருந்து
தயவாக வடியார்க்கு நலமுரைத்தார்
விண்டாரே திருமேனியாரே சொல்வார்
விண்ணோன் றண் டறைசுப்ப ராயனென்னே. (10)



## சற்குரு ஸ்தோத்திரம்.

### எண்சீர் விருத்தம்.

உலகாதி யண்டங்க ளுயிர்க ளாகி
யோதுகின்ற மற்றவெலாந் தானே யாகிப்
பலவான வவைதமக்குஞ் சாட்சி யாகிப்
பரமான பூரணசிற் பதியே யன்பர்
மலமாதி யிருள்கடியக் கருணைச் சோதி
மலரவிரித் தெழுகின்ற கதிரே ஞானத்
தலமான வேழ்முடிவி லெழுந்த மன்னே
தண்டலைசற் குருசுப்ப ராய தேவே. (1)

வாழ்வனைத்துந் துச்சமெனக் கண்டார் கொண்ட
வாழ்வேமா சற்றோர்கள் கணக்கி லாமற்
சூழ்விருந்தே ஞானவமு தளித்துப் பொல்லாத்
தொல்பிறவித் துன்பவிடாய் தணித்துப் போதக்
கேழ்விளங்குந் தெய்வதநற் பசுவே யிச்சைக்
கிளைதழைத்த சங்கற்பத் தருவை மூலந்
தாழ்வுதரத் துணிக்குநவி யம்மே யெந்தாய்
தண்டலைசற் குருசுப்ப ராய தேவே. (2)

மன்னியதன் னிலையுணர்ந்தோ ரெந்த நாளு
மாறாது சுகிக்கின்ற சுகமே யன்னோர்
கன்னலொடு முக்கனியின் பிழிந்த சாறுங்
கற்கண்டுந் தேன்பெய்து கலந்த தென்னத்
தின்னவுமே தெவிட்டாது குறையா தோங்குந்
தித்திப்பே யானந்தக் கடலே மோன
தன்னிலையிற் றனேயாய்ப் பிறங்கு மெந்தாய்
தண்டலைசற் குருசுப்ப ராய தேவே. (3)

தேகாதி தத்துவமாம் பாரை நேதிச்
சீர்கருவி கொண்டுவிசா ரித்துத் தோண்டிப்
போகாநின் றவர்பயனு யறிவாய்க் கண்ட
புதைபொருளே மரணமெனு மொன்றி னுக்காள்

ஆகாநின் றேமென்றே யஞ்சு வார்க்கு
மபயமளித் துயிர்ப்போதங் கெடப்போ திக்துச்
சாகாத வரமளிக்குந் தலைவ வெந்தாய்
தண்டறைசற் குருசுப்ப ராய தேவே. (4)

மாற்றறியாப் பசும்பொன்னின் வயலே யோங்கு
மாணிக்கப் பெருமலையே வயிர முத்தே
வேற்றொருவர் காணமல் மறைந்தாய் நின்றே
மெய்யுணர்ந்தோர் கைக்குளகப் பட்ட வொன்றே
போற்றியெனப் புலம்பென்றோர் காங்கு வித்துப்
புனிதபர மேட்டியுயர் முனிவ வென்றுச்
சாற்றியசொன் மலரணிந்து விளங்கு மெந்தாய்
தண்டறைசற் குருசுப்ப ராய தேவே. (5)

அன்பர்க மலர்முழுதுந் ததும்பி நிற்கு
மானந்தத் தேனேயத் தேனி லூறி
யின்பருளுஞ் சுவையேமெய்க் கண்ணே கண்ணி
லிருந்தொளிருங் கருமணியே பக்கு வர்க்குத்
துன்பகல வுபதேச மருந்தை நல்கித்
தொல்வேதக் கருத்தணியா லலங்க ரித்துன்
றன்பதமா மலர்சூட்டிச் சிறக்க வைத்த
தண்டறைசற் குருசுப்ப ராய தேவே. (6)

உரையுணர்வு கடந்துகடந் தறிவாய் நின்ற
வுத்தமர்க டமக்குரிய வுறவே யென்றும்
புரையுடைய மனத்தவர்க்குப் பகையே யேய்ந்த
புகலுறவும் பகையுமலாப் பொருளே போதக்
கரையறியாப் பிறவியெனுங் கடலி லாழ்ந்து
கலங்காமற் காக்கவல புணையே மற்றுந்
தரையிலெமக் கன்னையினு மினிய தாயே
தண்டறைசற் குருசுப்ப ராய தேவே. (7)

கரணமெனுங் காடென்றையுங் காம மாதி
கடுமிருகங் களையழிக்கு மறிவாம் வேந்தே
வரமுடைநல் லுளத்திடையே விவேக விர்த்தி
வளர்பயிரை வளர்க்குமருண் மழையே நின்னைப்

பரவிடுசா தகர்க்குறாஉ மடஞ்சந் தேகப்
பனிபோக்கித் தெளிவிக்கும் பானு வேநின்
சரணமெனு மரண்புகுவோர்க் கருளிக் காக்குந்
தண்டறைசற் குருசுப்ப ராய தேவே. (8)

ஒளிர்கின்ற வொளிக்கெல்லா மொளியே யெங்கு
முணர்கின்ற வுணர்வுதமக் குணர்வே பூத
வெளிக்கிடமாய்த் திகழ்ஞான வெளியே நிட்டை
மேவியவர் வண்டெனவாய்த் தேடுந் தேட்டத்
தளிமலரே யம்மலர்க்குட் செறிந்த தேனே
யமலர்களாஞ் சற்சங்கப் பறவை வாழுந்
தளிர்கிளையாய்த் தயைபொறையார் தருவே யெந்தாய்
தண்டறைசற் குருசுப்ப ராய தேவே. (9)

ஏத்துணைநா ளெத்துணையாய்ச் சொன்னு முந்தா
னெழுதவிசைந் தானுந்தா னென்னே யென்னே
அத்துணைக்கு மடங்காமற் பூரித் தான்ற
வருந்தபுக ழுடைப்பரனே யரனே யட்ட
சித்திதமை யருளவல விறையே ஞானச்
சித்திவடி வாயமைந்த தெருளே மேலாஞ்
சத்துருவாய்ச் சகுணமுநிர்க் குணமுங் கொண்ட
தண்டறைசற் குருசுப்ப ராய தேவே. (10)



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மகா குருபூஜையிற் செய்யுங் கிரிகை.

ஓர் பீடப்பலகையின் மேல் ஓர் துண்டு வாழையிலையை வைத்து அதன் மேல் பச்சரிசி பரப்பி அதன் மேல் ஓர் பத்திரம் வைத்து அதன் மேல் நூல் சுற்றிய கலசத்தில் ஜலம் விட்டு வைத்து அதன் மேல் மாவிலை வைத்து அதன் மேல் இளநீர் வைத்து அதற்கு விபூதிப் பட்டங்கட்டிச் சந்தனம் அக்ஷதையிட்டுப் பட்டு வஸ்திரம் சுற்றிக் கலசம் நிறுத்திப் புஷ்பாலங்காரம் பண்ணி எதிரில் இரண்டு வட்டிலில் அர்க்கிய தீர்த்தம் வைத்தல் வேண்டும். அவற்றிற்கு எதிரில் தீர்த்தம், விபூதி, சந்தனம், அக்ஷதை இந்நான்கையும் நான்கு கிண்ணங்களில் வைத்து நைவேத்தியமும் தாம்பூலமும் வைத்தல்வேண்டும்.

இங்ஙனஞ் செய்த கலச ஆவாகனத்தை உபாசனா மூர்த்தமாகப் பாவித்து அபிஷேகக்கிரியையும் நைவேத்திய ஆராதனையும் செய்த பின்பு ஒவ்வொருவரும் ஷை தீர்த்தம் விபூதி, சந்தனம், அக்ஷதை இவற்றால் அர்ச்சனை செய்து புஷ்பம் சமர்ப்பித்தல் வேண்டும். ஈற்றில் ஒருவர் அஷ்டோத்திரஞ் சொல்ல ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் புஷ்பத்தைக் கலசத்தின் அடியிற் சமர்ப்பித்து நமஸ்கரித்தல் வேண்டும். பின்பு யாவரும் பத்திரங்களைக் கையிற்கொண்டு பிரதக்ஷணஞ் செய்து வருகிறபோது ஷை பரம்பரைத் தோத்திரங்களைச் சொல்லிப் பின்பு கைகளிலுள்ள பத்திரங்களைக் கலசத்தின் அடியிற் சமர்ப்பித்து நமஸ்கரித்து குரு தியானத்தோடு விபூதி பெற்றுக் கொள்ளல் வேண்டும். சுபம்.

முற்றிற்று.

சச்சிதானந்தன் திருவடி வாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நிர்க்குண அஷ்டோத்திரம்.

ஓம்.

ஞானஸ்வரூபாய நம :
ஆனந்தஸ்வரூபாய நம :
ஆத்மஸ்வரூபாய நம :
கூடஸ்தாய நம :
அகண்டாய நம : ௫

அபரிச்சின்னாய நம :
ஆதியே நம :
அநாதியே நம :
காரணாய நம :
அகாரணாய நம : ௧௦

அஹேயாய நம :
அகர்த்தாய நம :
அகர்மணாய நம :
அக்ரோதாய நம :
அவ்யாகிர்தாய நம : ௧௫

அவாங்மநோகோசராய நம :
அசங்காய நம :
அசரீராய நம :
அக்ஷராய நம :
அசலாய நம : ௨௦

அச்சுதாய நம :
அசம்சாரியாய நம :
அணுவே நம :
ஸ்தாணுவே நம :
அத்வைதாய நம : ௨௫

ஓம்.

அநந்தாய நம :
அநாவிர்தாய நம :
அநாதிமுக்தாய நம :
அநுபாதேயாய நம :
ஏகஸ்வரூபாய நம : ௩௦

அநேகஸ்வரூபாய நம :
அபரோக்ஷாய நம :
அபயாய நம :
அபேதாய நம :
அப்ரவிர்தாய நம : ௩௫

அப்ராணாய நம ;
அப்ரமேயாய நம :
அபோக்தாய நம :
அமநஸாய நம :
அமிர்தாய நம : ௪௦

அலோபநாய நம :
உந்நதாய நம :
ஏகாத்மநே நம :
சர்வாத்மநே நம :
சர்வக்ஞாய நம : ௪௫

சர்வகதாய நம :
சர்வாகாராய நம :
சர்வாபாவாய நம :
சர்வகாரணாய நம :
சர்வசமநாய நம : ௫௦

ஓம்.

சர்வாதாராய நம :
சர்வாதிஷ்டாய நம :
சத்தேயாய நம :
சத்தியாய நம :
சச்சிதாநந்தாய நம : ௫௫

சாக்ஷியாய நம :
சாந்தாய நம :
சிந்மாத்ராய நம :
சிவாய நம :
சூந்யாய நம : ௬௦

மகாசூந்யாய நம :
ஸ்வயம்பிரகாசாய நம :
ஸ்வப்பிரகாசாய நம :
சுத்தாய நம :
புத்தாய நம : ௬௫

சுயம்புவே நம :
க்ஷேத்திரக்ஞாய நம :
திர்க்காய நம :
திர்ஸ்யாய நம :
நாநாரூபாய நம : ௭௦

நிர்விகாராய நம :
நிஷ்கிரியாய நம :
நிர்ச்சம்பந்தாய நம :
நிர்லேபாய நம :
நிர்மலாய நம : ௭௫

நிருபாதிகாய நம :
நிரவயவாய நம :
நிர்விகல்பாய நம :
நிர்க்குணாய நம :
நிராகாராய நம : ௮௦

ஓம்.

நிரீசுவராய நம :
நிரிந்திராய நம :
நிர்ஜ்ஜீவாய நம :
நிஷ்பிரகிர்தியே நம :
நிர்விசேஷாய நம : ௮௫

நிஷ்ப்ரபஞ்சாய நம :
நிரஞ்சநாய நம :
நித்தியாய நம :
நித்யாநந்தாய நம :
நித்யமுத்தாய நம : ௯௦

நிராதாராய நம :
நிர்விஷயாய நம :
நிர்த்தோஷாய நம :
துரியாய நம :
துரியாதீதாய நம : ௯௫

பரமார்த்தாய நம :
பரப்பிரஹ்மாய நம :
பிரத்தியக்ஷாய நம :
புராணாய நம :
புராதநாய நம : ௧௦௦

பூரணாய நம :
மகத்தாய நம :
முக்தாய நம :
வஸ்துவாய நம :
விபுக்தாய நம : ௧௦௫

அதோமுக்ய நம :
ஸ்ரீசற்குருவே நம :
சம்பூர்ணசமாப்தா. ௧௦௮

திருச்சிற்றம்பலம்.
முற்றிற்று.

# அநுபவரூபம்.

முத்தியை மேவ நானிங்ஙன் முற்படமேவி மொய் கழல்
பத்தியை மேவ மேனிகொண்டு பத்தர்கள் சூழவே புகுந்
தெத்தி யெனாவி வாரியுண்டு மெற்றுதி பேணா மீசனை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காணலாவதே. 1

தத்தமன விகார மென்று தற்குண ராது வீடுறப்
புத்தக மோர்தி மாளுகின்ற புத்தர்முன் னான் வாதிகள்
கத்தில் விழாத வாறுவந்து கைக்கொளு நாயனார் தமை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காணலாவதே. 2

பொத்திய வூனமாகி வந்த புற்புத மாகிநா னெனாது
சத்திய ஞானமான வின்ப தத்துவ மாகு வானென்ன
வித்தக வேட மேவிவந்த மெய்க்குரு நாயனார் தமை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காணலாவதே. 3

அத்தனை வேறிலா தெழுந் தத் தமியாத சோதி சித்
சத்தென வேதமோதுதொந் தற்பொரு டானி தாமென
சித்தநல் வேட மாகிவந்து செப்பிய நாயனார் தமை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காணலாவதே. 4

சித்த விகார மாகிநின்று சிற்சட வேறு பாடுசெய்
பெத்தமும் வீடுமாய் மயங்கும் பித்தது தீருமாறு சத்
சித்தென தாகமாக வொன்று செப்பிய தேசி கேசனை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காண லாவதே. 5

வித்தக மாகவேபரந்து மெய்ப்பொருள் போல மேதினில்
கைத்தல மேவு முதையம்பு கட்டழல் சோம சூரியர்
சித்திய மான நானினைந்த சித்திரக் காரியார் தமை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காண லாவதே. 6

இத்தனை யோர்வு றாதநெஞ்சி விட்டிடை மாதர் பாலுற
மத்தரின் வீழுமாறு கண்டு வைத்தெனை மாசில்சோதிமெய்த்
தத்துவ மாகவேத கஞ்செய் சற்குரு நாயனார் தமை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காணலாவதே. 7

முத்தனை மூலநாடி லொன்றை முற்படு மாதி மூலனைச்
சுத்தனை மேனிதானி தென்று சுட்டவொண்ணாத சோதியை
சித்தனை வேறிலா வனந்த சிற்சுக லோக தாயியை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காண லாவதே. 8

ஒத்த தொவ்வாத தாயலைந்த வுற்பவ வேலை பாழ்பட
நித்த மெய்ஞ்ஞான மாமனந்த நிர்க்குண நீரமேறிநற்
பத்தர்கள் பாடி யாடவந்த பத்ம விராச பாதனை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காண லாவதே. 9

தொத்தர மாடுவீடு மைந்தர் சுற்றமோ டாசைமாறி நற்
பத்தி மெய்ஞ்ஞான மேவு சிந்தைபற்றி விடாது மேவுகின்ற
உத்தம சீலரோ டும்வந்தெ னுச்சியின் மேவு பாதனை
யெத்தனை யூழி மாதவஞ் செய் திப்படிக் காண லாவதே. 10

ச ம் பூ ர ண ம்.

சுபம்.

ஓம்: தத். சத்.



## சிவானந்த போதம்.

மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு
கல்லுண்டு மரமுமுண்டு
மனிதரிலு நீர்வாழுஞ் சாதியுண்டு
அநேககுல மனிதருண்டு
மனிதரிலு மனிதருண்டு வானவரு
மனிதராய் வருவ துண்டு
மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே
அருமையென வகுத்தார் முன்னோர். (3)

தி ரு ச் சி ற் ற ம் ப ல ம்.

மு ற் றி ற் று.



# தத்துவஞானியே குருவெனல் மனிடா பஞ்சகம்.

ஒருதினஞ் சங்கரா சாரியன் காசியில்
உத்தம வீதியிற் சஞ்சரிக் கும்பொழு
தொருவன்சண் டாளவே டந்தரித் தங்ஙனே
யூனமில் லாவிவன் ஞானஞ்சோ திக்கவே
திரிதரும் போதவன் றன்னையங் கன்னவன்
திட்டியாற் கண்டுநீ யெட்டிப்போ போவெனப்
பரவிடும் வாக்கியங் கேட்டதற் குத்தரம்
பறையனுந் தேவன்றான் பகர்ந்ததைப் பகருவாம். (1)

அன்னமே யாதியாம் பஞ்சபூ தத்தினால்
ஆக்கிய வுன்னுடை யாக்கையைப் பற்றியிவ்
வன்னமே யாதியின் காரிய வாக்கையை
யணுகவொண் ணாதென வெட்டிப்போ வென்பதோ
பின்னமே தும்மிலாப் போதவான் மாவினைப்
பேணியான் மாவினைப் போவெனச் சொன்னதோ
பன்னிடும் பரமகஞ் சாச்சிரம யதிகளிற்
பரமனே யிவ்வித மென்றுநீ பகருவாய். (2)

அலையிலா வாரிபோற் சச்சிதா னந்தமா
மான்மவா காசமே யெங்கணு மசலமா
யெலையற நிற்கவிங் கந்தணன் புலையனென்
றிம்மகா பேதமெக் கலையினாற் கண்டதோ
விமலமாங் கங்கையி னப்பிலும் புலையர்தம்
வீதியி னப்பிலும் விம்பமாந் தன்மையா
னிலகுசொன் னக்குட மட்குடப் புணர்வினு
மிரவிவா னங்களி னேதுபே தஞ்சொலாய். (3)

சாக்கிரஞ் சொப்பன நித்திரை மூன்றினுஞ்
சாட்சியாய்ப் பங்கய னாதிதம் பாந்தமா
மாக்கைக டம்மினுங் கோவையாய்ச் சாட்சியா
யச்சித்தி யாதொன்று காசமே போன்றிடுந்
தாக்கறுஞ் சித்ததே நானிந்தத் திரிசியந்
தானல வென்றுற நிச்சய முள்ளவன்
யோக்கிய வந்தண னீசன்று னாகினும்
முத்தவா சானென வென்மனோ நிச்சயம். (4)

எந்தச்சித் துத்தனைத் தேவர்திர் யக்கொடு
விந்நர ரியாவரு மியானென வறிவரோ
வந்தச்சித் தொளியினாற் சடமன விந்திய
வாக்கையெப் புலனுமே சித்தென வொளிர்வதோ
வந்தமே கத்தினான் மறைவதா மிரவிபோல்
வளர்கர ணங்களான் மறையுமச் சித்தினைச்
சந்ததம் பாவித்துச் சுகமுறு மியோகிதான்
சாதியா லாரெனுங் குருவெனு நிச்சயம். (5)

பிரமநா னென்னுடை மாயைமுக் குணமதாற்
பேதமாஞ் சுகபர சீவகற் பிதமதாம்
பரமபூ ரணசிதா காசநா னேயெலாம்
பரமநா னொழியவோ ரணுவும்வே றின்றெனப்
பரசுக நித்தநின் மலநிரஞ் சனபரப்
பிரமநிச் சயவுர முடையனா ரோவவ
னருமையா மந்தண னீசன்று னாகிலும்
அகிலவா சானென வென்மனோ நிச்சயம். (6)

குரவன்வாக் காற்சக நசுவரம் பிரமமே
குற்றமி னித்திய மென்றுரங் கூர்ந்துபின்
னொருமையாய் நாடொறு மிடையறப் பிரமமே
யுணர்ந்துதா னேதனிற் சாந்தமாஞ் சித்தனாய்ப்
புரிந்தமுன் வினையினைப் பெளடிய வினையுடன்
போதமாம் வன்னியிற் றகனமே செய்துபின்
வருபிரா ரத்தத்துக் காக்கையை யொப்பித்து
வானம்போ னிற்பவன் குருவென நிச்சயம். (7)

எந்தவின் பக்கட லேசலே சத்தினா
விந்திர னாதிய ரின்பமுற் றுள்ளவ
ரெந்தவின் பந்தனை யோகிகள் சாந்தமா
மிதயமீ தெய்தியே யின்பமே லாகினா
ரந்தவின் பக்கட லுள்ளடங் கும்மனத்
தன்மையோன் பிரமமே பிரமவித் தல்லமற்
றந்தத்தே வேசரும் வந்திக்கும் பாதனா
மன்னவன் குருவென வென்மனோ நிச்சயம். (8)

உ

திருச்சிற்றம்பலம்.

# சாத்துகவிகள்.

மகாவித்வான் காஞ்சீபுரம்

## இராமசாமி நாயுடு அவர்களியற்றிய

எண்சீர் ஆசிரியவிருத்தம்.

இந்தநில மன்பதைமுத் தாபமொருங் கொழிய
விணையறுபே ரின்பவம்பு ராசிபடிந் திடுவான்
சந்தமிகு மிந்திரபீ டத்துமர போங்கத்
தனிவருசச் சிதாநந்தன் றாளிணையெஞ் ஞான்றுஞ்
சிந்தையெனுஞ் சினகரத்து நிறுவியுயர் ஞான
தீரஙணி யுறுசுப்ப ராயப்பே ரறிஞ
னந்தமில்சீ ரகம்புறவா ராய்ச்சிவிளக் கமதென்
றருநூலீந் தனனன்னோற் கவனியென்னுற் றுவதே.

---

மகா-ா-ா-ஸ்ரீ திருமழிசை, கந்தசாமி முதலியார் குமாரரும்
சொர்க்கபுரம்
இராமலிங்கத் தம்பிரானவர்கள் மாணுக்கருமாகிய

## வடிவேலுமுதலியா ரியற்றிய

வெண்பா.

அளக்கவரி தாகு மகம்புறவா ராய்ச்சி
விளக்கமெனு மோர்நூல் விளம்பித்—துளக்கமறு
மத்துவித வுண்மையறைந் தான்சச்சி தாநந்தன்
கொத்தடிமை சுப்பராயக் கோ.

---

திருமூலர் மரபு
சதாசிவப் பிர்மயோகிகட்கும், ஈசூர், சச்சிதாநந்த
சுவாமிகட்கும் மாணுக்கராகிய மகா-ா-ா-ஸ்ரீ

## தே. சுப்பராயமுதலியா ரியற்றிய

நிலமண்டில ஆசிரியப்பா.

ஓங்கிடு பரவைசூ ழுலகிடை யுயிர்க
டாங்கிடு மவித்தை தணந்தரு ளடையச்
சிறந்திடு சங்கரா சாரியர் தேர்ந்தே
யறம்வளர்ந் தோங்க வன்புளங் கூர்ந்து

மாசினூற் பீட மதித்திட வகுத்தனர்
தேசுறு நூலிற் றிகழிந்த்ர பீடத்
துயர்மர பதனி லுவந்தினி திலகு
மயலறு கரபாத் திரனடி மருவு
மண்ணலாந் தெத்தாத் திரய னருஞ்சரண்
வண்ணமா யனுதினம் வணங்குமுத் தையன்
சொல்லரு மவனடி தொழுசுப்ர மண்ய
னெல்லையி னவன்று ளின்பொடு வணங்குந்
திருநாகை வாழருணாசலன் றிருவடி
மருவிப் பணிந்திடு மாசிலாப் பிறைசை
வந்திடு மருணா சலகுரு மணியைச்
சிந்தையி லிருத்திச் சிவோகம் பாவித்தே
யறிவறி யாமை யகன்றருள் வடிவாய்ப்
பிறிவிலா மாயா பேத மறிய
ஜெகசீ வபரச் சிக்கினை யகற்றி
யகம்பிர மமென வருளியோர் மொழியாற்
காட்டிட வல்ல கருணைவா ரிதியா
நாட்டந் தரவே நாட்டிய வள்ள
லீசூர்ச் சச்சிதா நந்த னிணையடி
நேசமோ டேத்து நின்மல னுவந்து
தால மதனிற் றங்கிய வுயிர்கள்
வேலையாம் பவத்தை விட்டகன் றேறி
நித்திய திருத்தி நிதமும் பொருந்தச்
சத்திய மாகச் சகலவே தாந்த
நூலெலா மாய்ந்து நுண்ணறி வதனாற்
பாலெலாங் கடையப் படுநவ நீதந்
தேறிய தொக்கத் திகழனு பூதியை
மாறிடா துணர்ந்து மாதவஞ் சிறந்து
சாந்தி முதலிய சற்குணம் பொருந்திக்
காந்தி யுடனே கருணைவா ரிதியா
யடுத்தவர் தங்க ளையம தகற்றி
விடுத்திட வவித்தை விழியினை யருளிச்
சச்சிதா நந்தத் தரும்பொரு ளுணரு
நிச்சய ஞான நிலைபெற வுணர்த்தி

யத்துவா மார்க்க மகன்றுமே னுய்யத்
தத்துவா தீதத் தன்மையுங் காட்டி
மோன மொழியான் முடிவினை யுணர்த்தி
ஞான நிலைதனை நாட்டிடு புனித
னுயர்வுறு விஸ்வ குலமதி லுதித்தோ
னயர்வகன் றில்லந் தனினமர்ந் திட்டோன்
சுப்பரா யனெனுந் தூய்மதி யுடையோ
னப்பரா பரநிலை யாய்ந்ததன் னனுபவ
முலகினி லுயிர்க ளுவந்தடைந் துய்யக்
கலக மிலாவறக் கருணை யதனு
லகம்புற மிரண்டினு ராய்ச்சி விளக்கஞ்
சுகமுட னிருபதத் தியாயமாய்ச் சுருக்கித்
தரத்தினி லுயர்ந்த தனிமுகி லுலகிற்
சிரத்தொடு பெய்யுந் திறமெனப் பொழிந்தா
னடைகுவோ ரின்ப மடைகுவ ரதனுற்
றிடமுட னிதனைத் தேர்ந்தறி குவதே
நிலையதாக் கொண்டோர் நிகரிலாச் சகச
நிலையினைப் பொருந்தி நீடுவாழ் குவரே.

---

இந்திரபீடம் ஈகூர், சச்சிதாநந்த சுவாமிகள் மாணுக்கர்
மகா-ா-ா-ஸ்ரீ மழவை, தங்கவேலைய ரியற்றிய
நேரிசை ஆசிரியப்பா.

மலர்தலை யுலகிற் றலைமை சான்ற
மக்க ளாக்கையிற் புக்கவெவ் வுயிரும்
வித்தக மாயநன் முத்தியந் திசையிற்
சிவசீ வர்களின் றிரமது நோக்கின்
செயற்கையி லொன்று மியற்கையி லிரண்டுமென்
றோதிடு மாயா வாத மயக்கொரீஇச்
சொருபஞ் சகசமென் றிருபகு தியவா
நிட்டையில் விளங்குங் கட்டத்திற் கேற்ப
நிலையெது வோவந் நிலையே தன்னிலை
பிறவோ வென்னிற் பிறவே பிறவே
தன்னிலை யென்ன லெந்நிலை யென்னிற்
காலத் தானுந் தேசத் தானும்

பரிச்சே தமின்றிப் பரிபூ ரணமாய்ச்
சுசாதி விசாதி சுகத பேத
மிறந்தொரு படித்தாய்ச் சிறந்தொளி ரறிவே
யென்றுளத் தறிந்தே யினிதுற வகம்புற
வாராய்ச் சிவிளக்க மருளின னம்ம
வன்னவ னுரெனி னறைகுவன் கேண்மின்
பிறைமுடிப் பெம்மான் கறைமிடற் றண்ணல்
றிருவுளம் பற்றிய வருமறை நான்கின்
சிரமிசைப் பொலியு மொருமொழி யுண்மை
விளக்க வடிவாய் விளங்கிடுஞ் சதுரன்
சண்முக ஞானத் தலத்துறை யெங்கோன்
சச்சிதா நந்தன் சரணமேற் கொண்டவன்
பூரண நோக்கம் புரியப் பெற்றவன்
பந்தமித் தையதாய்ப் பார்த்தசிற் கண்ணன்
எத்தகை யோர்க்குஞ் சித்தமால் களைந்து
தத்துவார்த் தங்களைச் சாற்றி மகிழ்பவன்
கருணைக் களஞ்சியன் காட்சிக் கினிய
னுபசாந் தத்திற் குறைவிட மேலோ
னொப்புயர் வில்லா வொருவன் சுப்ப
ராயநந் தூயவின் னவனே.

---

ஈசூர், சச்சிதாநந்தசுவாமிகள் மாணுக்கர் மகா-ா-ா-ஸ்ரீ
பி. ஆறுமுகமுதலியா ரியற்றிய
நேரிசை ஆசிரியப்பா.

உயர்நிலம் போந்த வுயிர்த்தொகை யனைத்துந்
தமத்தெழு பேதச் சார்பகன் றென்று
பிரியா தேகமா யிலங்கிடற் கந்நாள்
சங்கரா சாரிய சுவாமிகள் வகுத்த
விந்திர பீடத் தெந்தைநஞ் சச்சி
தாநந்த னென்னுஞ் சாந்தனெங் கோமான்
சரணே சரணெனச் சார்ந்தவன் பாலே
சிரவண மாதி சிறக்கச் செய்தே
யுண்மை யிஃதென வுணர்ந்தது வாகி
ஜெனன மரணத் திகைப்பினை யொரீஇ

யெம்போல் வார்நெடு வெம்பவ நீங்கி
யுய்வா னருளை யுள்ளத் தமைத்தே
யகம்புற வாராய்ச் சிவிளக்க மென்னு
நூல தொன் றுவன்றன னெங்கள்
மெய்ப்பயன் கொண்டு மிளிர்தருஞ்
சுப்ப ராய தூயமெய்த் தவனே.

---

ஈசூர், சச்சிதாநந்தசுவாமிகள் மாணாக்கர்
மகா-ள-ள-ஸ்ரீ அரிகரபாடி
சின்னையாமுதலியா ரியற்றிய
வெண்பா.

இந்திரபீ டத்தமர்ந்த வெந்தைசச்சி தாநந்த
னந்தலில்சீ டன்சுப்ப ராயக்கோன்—சிந்தையினைச்
சீராயா ராய்ந்தேயச் சித்தாந்த மேநாடிப்
பாரார் புகழுற்றான் பார்.

அகம்புறவா ராய்ச்சி விளக்கவரு நூலைச்
செகம்பரவ வேயியற்றிச் சீராய்ச்—சுகம்பெறவே
யாய்ந்துய்வ தற்கே யளித்ததனை நல்லோர்கள்
காய்ந்திகழா ரென்றுமே காண்.

---

ஈசூர், சச்சிதாநந்தசுவாமிகள் மாணாக்கர் மகா-ள-ள-ஸ்ரீ
தே. வேலுநாயக ரியற்றிய
வெண்பா.

அகம்புறவா ராய்ச்சிக்கோ ராதவனைப் போலே
யகம்புறவா ராய்ச்சி யருநூற்—சுகம்பெறவே
யிந்திரபீ டந்தழைக்க வேய்ந்தசுப்ப ராயக்கோன்
றந்தனனன் னேற்கார் சரி.

செகமாதி மெய்யெனவே தேர்ந்தமரு ளர்க்குச்
செகமாதி பொய்யெனமுன் றேர்வித்—தகமதுதான்
சச்சிதா நந்தமதாத் தானிலங்கச் சர்மமறை
யெச்சமிலா தோதினு னீங்கு.

---

திரிசிரபுரம் உறையூர், மகாவித்வான் விஸ்வகுலதிலகர்
வாணிபீடம் முத்துவீரமாமுனிவர் குமாரரும்
புராணப் பிரசங்கியாருமாகிய மகா-ா-ா-ஸ்ரீ
வைத்தியலிங்க ஆசாரியா ரியற்றிய
நிலமண்டில ஆசிரியப்பா.

திருவளர் மறையுந் தேர்ந்த மனமு
மருவளர் முடிவி லமையு மூன்றிற்
பொருளா ரோபிதம் போக்கி யிருமையு
மொருமையாய்த் துலங்க வுள்ளத் துள்ளிச்
சுயம் பிரகாசச் சுகமாம் பிரம
மயக்கமில் மதியாய் வயங்குரு தனையே
நவநவ மாக நயந்தனு பவித்த
துவந்துவ மற்ற சுவானு பவமே
நமதுரு வென்ன நவின்றன ரோர்நூ
லமையு மகம்புற வாராய்ச் சியினும்
விளக்க மென்ன வியன்வே தாந்தநூற்
றுளக்கறத் தேர்ந்தோர் துதித்திடச் சென்னைப்
பதியே வசிக்கும் பதியாக் கொண்டு
மதியுளோர் தினஞ்சிர வணித்திட வாய்மலர்க்
திங்கங் ககம்புற மியானீ யென்று
தங்கு முள்ளது மில்லதுஞ் சத்தே
யென்று சுருக்கமா யெடுத்தெடுத் தன்பர்
வன்றுயர் தீர மாறு துணர்த்துங்
குலவு விஸ்வ குலஞ்செய் தவத்தி
னிலவு வுதித்து நிகரிலா வாசான்
றங்கிய நிலையே தானென நின்ற
நங்கள் சுப்ப ராயதே சிகனே.

---

இந்நூலாசிரியர் மாணாக்கருள் ஒருவராகிய மகா-ா-ா-ஸ்ரீ உறையூர்,
அ. க. ரெ. பெருமாள்செட்டியா ரியற்றிய
நிலமண்டில ஆசிரியப்பா.

ஆர்கலி சூழு மம்புவி யதனிற்
கார்தரு மந்த காரமு மகல
விளங்கொளி விரிந்து யாவையும் விளக்கு
மிளங்கதி ரிரவி யனையோ னாகிப்

பிறப்பிறப் பளவு பிழைமுனி வொப்ப
மறப்போ டாசை மருவா மணிதிரு
பகவத் பாதா சாரிய ரெனப்பகர்
சகல கலையுணர் சங்கரா சாரியே
பிரம குலத்திற் பெருந்தகை யாகித்
திரமுள மக்கனல் லுண்மைதேர் தற்கே
தான்வகுத் தருளிய தகைமைப் பீட
நான்கனு ளிந்திர பீட நண்ணிய
மகாகர பாத்திர சுவாமி மரபுளோர்
சுகானு பவத்தைச் சொலக்கேட் டுவந்தருள்
சச்சிதா நந்த சுவாமிசீ டருண்மிகு
மிச்சை மாணவ னென்றியம் பிடவே
வாதிலா ஞானிகள் வளர்த்தமா தவமொடு
தீதிலா மாந்தர்கள் செய்தநற் றவத்தின்
பேறெலாந் திரண்டு பிறங்கிய தாமெனக்
கூறவோர் மானவக் குப்பா யம்போர்த்
தோர்விசு வகுலத் தொளிமிக விளங்கு
மோர்தரு தினகர னென்னவ தரித்துச்
சென்னைமா நகரிற் சீர்பெற விளங்குவோன்
நன்னய வாக்குள நனவ னெப்பிலா
வேதாந் தத்தின் மேவத் துவித
நாதாந் தத்தை நன்று யுணர்ந்தபின்
றத்துவ மசிபதந் தன்னை யுணர்த்திடு
மத்து விதநூ லனைத்து மாகிய
கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கின் மேவிடு பிணிபல
வேனுநூன் முறையை விதமா யறிந்து
மானுடர்க் கிரங்கிமுன் வழுத்துசாத் திரமெலா
மனனஞ் செய்துநல் வழிதனை மருவுதல்
கனவுயர் வாமெனக் கருத்தினி லுன்னி
யத்து விதநூ லனைத்தினு முள்ள
தத்துவக் கருத்தைத் தானே சுருக்கி
மிகவகம் புறவா ராய்ச்சி விளக்கநூல்
சகமது புகழ்கொளச் சாற்றின னம்ம

நித்தமெங் கட்குறு நெறிதனை யுணர்த்துஞ்
சுத்தநன் மனமுறு சுப்பரா யக்கோன்
றிரணமும் பற்றிலாத் தீரனு மவனிரு
சரணதா மரைமலர் தலைக்கணி வோமே.

---

மாயூரம், அட்டாவதானம் மகா-ா-ா-ஸ்ரீ

## சந்திரசேகர உபாத்தியாய ரியற்றிய

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சிற்ப நூலின் படிச்சாமுத் திரிக நூலின் படியுருவும்
பொற்பு மமைக்குங் கைவல்லோர் புனைசித் திரங்கட் குயிருளதோ
கற்கு மியனூ லிலக்கிய நூற் கரைகண் டிருக்குங் கவிவலவ
ரொற்க மின்றிப் பாடியநூ லுண்மைப் பொருள்பெற் றிலவன்றே.

எத்தன் மையதா யினுமயன்செய் படைப்புக் கிணையொன் றிலையதுபோற்
சித்துமயமா மெய் நூல்க டேர்ந்து சென்னைத் திருநகர்வாழ்
சுத்தன் விசுவப் பிரமகுல திலகன் சுப்ப ராயப்பேர்
முத்தன் மொழிநூற் கிணைபகர மும்மை யுலகத் தினுமின்றே.

அந்நூ லதன்பே ரகம்புறவா ராய்ச்சி விளக்க மெனப்படுமா
லிந்நூல் படிப்போர் கேட்போர்க ளியாவ ரேனு மிவர் தமக்குப்
பன்னூல் வேண்டா தறவுதவம் பயில வேண்டா வேதாந்தத்
தொன்னூ லளிக்கும் பேரின்பத் தூய பதத்திற் றுலங்குவரே.

---

உறையூர், மகாவித்வான் வாணிபீடம்

முத்துவீரமாமுனிவர்கள் மாணுக்கர் ஷெ ஊர் மகா-ா-ா-ஸ்ரீ

## தொ. மு. நல்லசாமிப்பிள்ளை யியற்றிய

### இருவிகற்ப நேரிசை வெண்பா.

எல்லாஞ்சித் தென்றே யெழுந்த வனுபவத்தை
யெல்லாருங் கண்டிங் கிதமடையச்—சொன்ன
வகம்புறவா ராய்ச்சி விளக்க வருநூற்
குகனே யெவர்க்குங் குரு.

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

சுத்திமரங் கயிற்றில்வெள்ளி யாளரா வெனவுருவு
தோன்று மாபோல்
பெத்தமுடை யுலகமுணர்ந் துணர்வொழித்திட் டருமறையின்
பேற்றைக் கண்டிங்
கத்துவிதச் சுவானுபவந் தனதுருவென் றறிவுருவா
யமையும் லீலைச்
சுத்தமாய்க் காட்டியநற் சுப்பரா யக்குருவே
துணையா மன்றே.

---

உறையூர், மகாவித்வான் வாணிபீடம்
முத்துவீரமாமுனிவர் மாணுக்கரும், சதாசிவ பாடசாலை
மானேஜருமாகிய வித்வான் மகா-௱-௱-ஸ்ரீ
சதாசிவசெட்டியா ரியற்றிய
நேரிசை வெண்பா.

அகமகிழுஞ் சென்னை யறிஞர்குலத் துற்ற
குகஞான சுப்பரா யக்கோன்—சுகமா
ரகம்புறவா ராய்ச்சி விளக்கவரு நூலைச்
சகம்புகழச் சாற்றினான் றன்.

---

தேவகுருசுவாமிகள் பரம்பரை மகா-௱-௱-ஸ்ரீ
உறையூர், அருணாசல ஆசாரியா ரியற்றிய
அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

செகம்பரவப் பரமநிலை செப்பியவே தாந்தமெலாந் தெளிந்தமேலோர்
சுகம்பெறுமிந் திரபீடக் கரபாத்ர சுவாமிகளின் றாயா தீன
னிகம்பரமாங் கற்பிதங்க ளுணர்விஸ்வ குலசுப்ப ராய வேந்த
லகம்புறவா ராய்ச்சிவிளக் கப்பெயர்கொ ளருநூலை யருளி னானே.

---

மதுரைத் தமிழ்ச்சங்க வித்வானும்
அத்வைத ஆராய்ச்சியாளரும் பன்னூலாசிரியரும்
ஸ்ரீமான் இ. மா. கோபாலகிருஷ்ணக்கோனார் அவர்களது
எக்ஸெல்ஸியர் பவர் பிரஸ் மானேஜருமாகிய
ஸ்ரீ நா. கிருஷ்ணசாமி நாயுடவர்கள் எழுதிய
மும்மணிப்பாயிரம்.

வெண்பா.

எதுநான் எதுநானென் றெஞ்ஞான்றுந் தேடி.
அதுநானு யார்ந்திருக்கும் ஐக்யம்—இதுவாம்
அகம்புறவா ராய்ச்சிசொன்னார் ஆதிசுப்ப ராயர்
சுகம்பெறவீ தொன்றே துணை.

அயல்தேடும் யானுரென் றுயாமல் அந்தோ!
மயல்தேடும் வாழ்வுழன்றேன் வம்பாய்—செயலென்?
அகம்புறவா ராய்ச்சியிதை யான்கண்டேன் *"கண்டேன்"
செகமனைத்தும் யானென சித்து.

இந்திரபீ டத்தார்ந்த எந்தைசுப்ப ராயகுரு
இந்த ஒருநூல் இயற்றுரேல்—பந்தபவம்
மாய்வதெங்கே *"புத்தி" வருவதெங்கே நானுரென்
றுய்வதெங்கே சற்றே அமர்ந்து?

---

இந்நூலாசிரியர் மாணக்கரிவோருவராகிய
மதுரை, ஸ்ரீ மீனும்பிகை பிரஸ் மானேஜர், மகா-ள-ள-ஸ்ரீ
எஸ். கந்தசாமி பிள்ளை அவர்களியற்றிய

வெண்பா.

நானென் றுடலதனை நம்பிவீ ணுகாமல்
நானென் றுணர்வதனை நாடியே—தானுகிச்
சாதனையிற் பாரென்று சாற்றியவன் தண்டுறைவாழ்
ஆதிசுப்ப ராயகுரு வாம்.

அன்றுரைத்த வாறே அகம்புற வாராய்ச்சி
நன்றும் விளக்கமதை நானிலத்தில்—குன்றுமல்
சொன்னசுப்ப ராயகுரு தூய மலர்ப்பதத்தை
பன்னுள் துதிப்பேன் பணிந்து.

சாத்து கவிகள் முற்றிற்று.

---

* கண்டேன் - படித்தேன். * புத்தி - ஞாபகம் என்னும் பொருளது.

உ

திருச்சிற்றம்பலம்.

# அகம்புற ஆராய்ச்சி விளக்கம்.

## முகவுரை.

உபாதி சகிதமாகிய எண்ணரிய உயிர்களுள் என்ஞான்றும் எங்கணும் நான் நானென்னும் போதவடிவில்லாது நிகழும் உயிர் ஒன்றேனும் இல்லவே இல்லை. இல்லையாயினும், அவ்வவ்வுயிர்களாகிய போதங்களுள், ஓர் கடத்துக்கு உபாதான காரணமாக இருக்கின்றது எந்த மட்பொருளோ அந்த மட்பொருளொன்றே எண்ணரிய கடபேதங்கட்கும் உபாதான காரணமாக இருக்குமாறு ஓர் போதத்துக்கு உபாதான காரணமாக இருக்கின்றது எந்த ஆதாரப் பெரும் போதமோ அப்போத மொன்றே ஷை சோபாதிகமாகிய எண்ணரிய போதங்கட்கும் உபாதான காரணமாக இருந்திலங்குகின்றது. இஃது வறிய சொல்வாதமன்று, சுருதி யுக்தி அனுபவங்கட்கு ஒத்த அர்த்தவாத சம்மதம். இங்ஙனமிருக்கும் அவ்வாதாரப் பெரும்போதமானது, அதிட்டான ஆரோபங்கட்கு இயைந்த சுத்தாசுத்த சகல கேவலங்கட்கு அதீதமுற்றிருக்கின்றது. அவ்வாறிருக்கினும், அஃது அவத்தாத்திரய முதலியனவாக நிகழும் அஞ்ஞான நிசைக்கண் ஷை எண்ணரிய சீவபோதமாகவும், இருவித சமாதிகளென்னும் ஞானநிசைக்கண் ஏகமாகிய சிவபோதமாகவும், ஆரோப அதிட்டானங்கட்கு இயைந்து பிரகாசிக்கின்றது. இங்ஙனம் பிரகாசிக்கின்ற இவ்விருபோதமும் ஷை ஆதாரமாகிய முதற்போதத்தின்பாலதன்றோ? அதனால், அவ்வாதாரமாகிய முதற்போதமானது தற்போத மெனப்படும். அதாவது, தானே தானாகிய போதமென்பதா மென்க. என்னை?

சொரூபசாரம்.

"நித்தியமா யேகமாய் நிர்மலமாய்ப் பூரணமாய்ச்
சத்தியமாய் நின்றொளிருந் தற்போதஞ்—சுத்தராய்ச்
சித்தநிலை பெற்றவராய்த் தீர்ந்தசென னத்தவரா
யுத்தமரா யுள்ளார்க் குறும்."

என்றும்,

### தாயுமானவர்.

“தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கற்பூர தீபம் போலப்
போயொளிக்கு மல்லாது புலன்வே றின்றாம்
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கு
மானாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வா
ரதுவானா லதுவாவா ரதுவே சொல்லும்.” என்றும்,

### வாசிட்டம்.

“அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந் தனவரத முரைப்ப தாகி
நிகழொளியா மாத்துமதத் துவமான சொரூபத்தை நினைத்தல் செய்வார்
திகழிதைய குகையுறையுந் தேவதையை விட்டயலே தெய்வந் தேடன்
மிகவரிய கவுத்துவத்தை யெறிந்துசிறு மணிதேடும் வேட்கை போலாம்.”
என்றும்,

### உபநிடதம்.

“நானிவன்றா னவனென்றே நவின்றறியா தேயுழன்ற நாயி னேற்குத்
தானமரு நிலையிதுவே தாந்தவுப சாந்தமிது தானே தானா
மோனமொழி யிதுவெனநான் மறையினுப நிடதமொழி முடிவு காட்டும்
ஞானகுரு தேசிகனை நாவகத்தும் பாவகத்து நவிற்று வாமே.” என்றும்,

### கைவல்ய நவநீதம்.

“ஞானங் காரண மறிவுகாண் காரிய நாமரூ பப்போக
ளான தெப்படி யழிந்ததெப் படியென வாய்குதல் பயனன்றே
மான மைந்தனே தீர்க்கசொப் பனசகம் வந்ததும் பாராமற்
போனதும் நினை யாமலுன் போதமாய்ப் பூர்ணமா யிருப்பாயே.” என்றும்,

### தத்துவராயர் பாடுதுறை.

“உள்ளது போதமென் றூதேடா காள
மூலகமோக் காளமென் றூதேடா காளம்
வெள்ள வெளியீதென் றூதேடா காளம்
வேதஞ் சொன்னவண்ண மூதேடா காளம்.”

“புத்திவி கற்பம றுக்குமூ ரெங்களூர்
பூரண போதமே யானவூ ரெங்களூர்
வித்தும் விளைவுமி லாதவூ ரெங்களூர்.
விண்முதற் பூதம்வி ளைந்தவூ ரெங்களூர்.”

என்றும் கூறியவாற்றாற் காண்க. மேற்கூறியுள்ள உயிர்களாகிய சர்வபோதத்துள், மக்கள் யாக்கையைப் பெற்று நிகழும் போத

மாகிய உயிர்கள், முன்னூன்று ஷை சிவபோதமாகிப் பின்னூன்று தற்போதமாதற்கு, வேதமாதா தனது இயற்கைக் கருணையினால் விரிந்திராநின்ற காண்டத்திரயத்துள் முடிவாகிய ஞானகாண்டத்துள்ளே முற்கூறிய இருவகையாயுள்ள சமாதிகளில் முன்னூன்று அகச்சமாதிக்கண் தனிச்சாட்சி போதமாகவும், பின்னூன்று புறச்சமாதிக்கண் சர்வசாட்சி போதமாகவும் ஆகுமாறு, தான் உணர்த்திய இவ்விருவித சுவானுபூதியாகிய அரிய பெருஞ் செல்வங்களை எளிதிலுணரும்வண்ணம் அகம்புற ஆராய்ச்சி என்னும் இந்நூலானது வசனரூபமாக அமைக்கப்பட்டு இருக்கின்றது. இங்ஙனம் அமைந்த இந்நூல் முகவுரை உட்பட இருபது அத்தியாயங்களா யிருக்கின்றது. அவற்றுள் 1-வது முகவுரை, 2-வது சிறப்புப்பாயிரம், 3-வது நாட்டபேத ஆராய்ச்சி விளக்கம், 4-வது ஐம்பொறி ஆராய்ச்சி விளக்கம், 5-வது அந்தக்கரண ஆராய்ச்சி விளக்கம், 6-வது சீவபோத ஆராய்ச்சி விளக்கம், 7-வது கூடஸ்த சைதன்னிய இலட்சியார்த்த விளக்கம், 8-வது துவைத சித்தாரோப ஆராய்ச்சி விளக்கம், 9-வது துவைத இன்பாரோப ஆராய்ச்சி விளக்கம் ஆக இவ்வொன்பதும் முதலாவது அகத்தாராய்ச்சி விளக்கத்தின்கண் உள்ளன. மற்றவை, 10-வது தேகமென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம், 11-வது அவயவமென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம், 12-வது மாமிசாதிகளென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம், 13-வது மண்ணினது மகத்தென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம், 14-வது மண்ணினது தூல அணுவென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம், 15-வது மண்ணினது சூக்கும அணுவென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம், 16-வது மண்ணினது காரண அணுவென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம், அதாவது பரமாணுவெனப்படுவது, 17-வது அருவபாவ ஆராய்ச்சி விளக்கம், 18-வது சதுர்ப்பூத குணிப்பொரு ளாராய்ச்சி விளக்கம், 19-வது பிரமசைதன்னிய இலட்சியார்த்த விளக்கம், 20-வது அறிவானந்த ஐக்யானுபவ தற்போத விளக்கம். ஆக இப்பதினொன்றும் ஷை 2-வது புறத்தாராய்ச்சிக்கண் உள்ளன. இங்ஙனமாக இருக்கின்ற இந்நூலின்கண் கர்மோபாசனகாண்ட மிரண்டையும் கௌணமாகத் தழுவிச் சொல்லுகின்றது. ஏனெனின், கர்மகாண்டத்தில் உயிர்கள் பழிபாவமென்னும் தீயநெறிகளிற் புகாது மடங்கி அறநெறியிற் கட்டுண்டிருத்தற்கு விதிநிஷேதங்களையும், உபாசன காண்டத்தில் அங்ங

னம் கட்டுண்டொழுகி முதிர்ந்த உயிர்கள் பின்னொன்று அவ்வற நெறியில் முக்கியமாகப் புகாது அதைக் கௌணமாகத் தழுவிச் சுதந்தர மிழத்தலென்னுஞ் சித்தசுத்தி வாய்ந்திருத்தற்குச் சரியை யாதி மூன்றினையும் உணர்த்தி யிருக்கின்றதாலென்க. இந்நூல் அவ்விரு காண்டத்தையும் கௌணமாகத் தழுவி யிருத்தலால் இவ்விருதிறத்தருக்கும் எங்ஙனம் உடன்பாடாகு மெனின், இவ் விருவருள் கர்மகாண்டிகள் அவத்தாத்திரயங்கடோறும் தூல முதலி யனவாகிய உபாதித்திரயங்களை நானானென் றழுந்தியிருக்கும் மயக்கமான சீவபேதம் கிஞ்சித்துங் குன்றாது முற்றும் விரிந்தவ ராயும், உபாசனாகாண்டிகள் அச்சீவபோதம் கிஞ்சித்தும் நசிப்புறாது முற்றுங் குன்றினவராயு மிருக்கினும், இவ்விருவருக்கும் எவ்விதத் தும் சீவபோதம் முற்றுங் கெடவேண்டுவது அவசியமாகலின், இவர்களுடன்பாட்டிற்கு முரணின்றென்க. இவ்விருவரது போத மும் கெடவேண்டுவ தெற்றுக்கு? போதமானது முற்றும் விரிந்தி ருக்கும் கர்மகாண்டிகளே பின்னொன்று உபாசனா காண்டிகளாய் நின் றொழுகும் தவத்தால் அப்போதம் குன்றியிருக்கப் போகிறார்கள். அங்ஙனம் குன்றுதலே சாலுமன்றோ? போதம் கெடவேண்டு மென்பா னேனெனில், இவ்விருகாண்டத்திற்குமேல் ஞானகாண்ட மிருப்பது யாது செய்தற்கு? அவ்விருவரது போதமும் கெடச் செய்தற்கன்றோ? எங்ஙனமெனின், இவ்விருகாண்டிகளும் காமியத் தவம், நிட்காமியத் தவம் புரிவது யாதுக்கு? காமியத்தவம் இக சுவர்க்கபோகமாகிய சிற்றின்பத்தையும், நிட்காமியத்தவம் சாலோ காதி பதவிப் பேறாகிய பேரின்பத்தையும் அனுபவித்தற்கன்றோ? அன்றியும், இவ்வின்பப்பே றிரண்டும் யாருக்கு? உயிர்கட்கெனின், உயிர்கள் போதசொரூப மற்றவர்களா யிருக்கட்டுமே! அங்ஙனம் கூறுவா னேனெனின், நான் நானென்னாத உயிர்கள் இன்றாகலின் மேற்படி இன்பப்பே றிரண்டும் நானென்பதற் கென்னாது உயிர்களுக் கென்று முன்னிலையாக்கிக் கொள்வானேன்? அங்ஙனம் கொள்வ தனால் நானென்னும் முக்கியப் பொருளின்றாகும்! இன்றானலன் றோ உயிர்கள் வேறு பொருள்களெனக் கொள்ளலாம்? ஆகலின், அவ்வின்பப்பே றிரண்டும் நானாகிய உயிர்களுக்கே என்க. உபாசனா காண்ட நெறிப்படி நின்றுழிப் போதமுண்டோவெனின், மேற் கூறிய மூவித போதங்களுள் அவர்கள் எந்தப்போத மற்றவர்க ளெனப்படுவர்? சீவபோத மற்றவரெனின், உபாசனாகாண்டத்தி

விருப்பது சிவபோதந்தானுக்கும்! அச்சிவ போதமானது உபாசனு காண்டத்தைத் தழுவிச் சாலோகாதி பதவிப்பேரின்பத்தை அனுபவிப்பதாக்கும்! அங்ஙனமாயின், சீவபோதமானது ஞானகாண்டத்தைத்தழுவி நிரதிசயானந்தத்தை அனுபவிப்பதாக்கும்! இஃது விந்தையினும் விந்தை! இதுநிற்க, உபாசனுகாண்டிகள்புரியும் தவமனைத்தும் ஈசுரார்ப்பணமாயினும், அத்தவத்தை அடிமையென்று புரிவதா? அஃதின்றிப் புரிவதா? அடிமை யென்றே புரிவதெனின், அடிமை ஆரெனப்புரிவது? நானெனப் புரிவதன்றோ; அங்ஙனம் புரிவதனு லன்றோ "என்றுநீ யன்றுநா னுன்னடிமையல்லவோ" என்று ரான்றோர். இதனுல், அடிமை நானென்னும் போத சொரூபமாயிற் றென்க. மேலும், பேரின்பப் பேறு யாருக்கு? அங்ஙனம் அடிமைப்பட்டிருக்கும் நானென்பதற்கன்றோ? அடிமை நானென்பது சிவபோதமா? அன்றிச் சிவபோதமா? சீவபோதமாகலின், அப்பேரின்பப் பயன் நானென்பதற்கென்றும் நான் அடிமை யென்றும் கொண்டிருக்கும் இவ்விபரீத போதம் எங்கே அகன்றது? உபாசனு காண்டிகட்குப் போதம் குன்றியிருக்கின்றதென முன்ஞான்று கூறியதெங்ஙனமெனின், தூலோபாதியை நானென மயங்கிய ஞான்று, இவ் உபாதி காரணமாகத் தான் உபசரித்துக்கொள்ளுதலும், அங்ஙனம் உபசரித்தற்கு இயைந்த சுகசாதனக்கருவிகளை எனதெனக்கொள்ளுதலும் குன்றினதேயன்றி, அடிமை யென்பதைப்பற்றியும் பேரின்பமென்பதைப்பற்றியும் ஏறியிருக்கின்ற யானென தென்னும் போதம் கிஞ்சித்தும் குன்றவில்லையே! அன்றியும், இவ்வுபாசனு காண்டிகள் பேரின்பப்பயனை எந்த நானுக நின்று புசிக்கின்றது? அவ்வுபாசனு சித்தாந்தப்படி அடிமையாகிய நானென்கிற சீவன் சார்போதனுகலின் ஏதோ ஒரு நானல்லாததை நானெனச்சார்ந்து நின்றல்லவோ புசிக்கவேண்டியது! தானே தானுக நின்றல்லவே! தானே தானுகத் தெளிந்த தெளிவின்படி இருந்திடிற் சுகிப்பானென்பதும் சுகமென்பதும் ஏது? இல்லையே! அன்றியும், இவர்கள் தம்மால் உபாசித்தற்கு இயைந்த உபாசனு மூர்த்தங்கள் தமக்கு எனது எனதென்னுங் கிழமைப்பொருள்க ளாகின்றனவா? அன்றி நான் நானென்னுந் தன்மைப் பொருள்க ளாகின்றனவா? எனது எனதென்றே பந்தித்துப் பூசிக்கின்றதால் அவைகள் நானென்பது அன்று, எனதென்பவைக ளாகின்றவெனின், இவற்றுல் பூசிப்பான் நானென்பதும் பூசிக்கப்படும் உபாசனு மூர்த்தங்கள் எனதென்பதும் ஆகின்

றன. ஆகவே, யானென்னும் அகங்காரமும் எனதென்னும் மமகார மும் கிஞ்சித்தும் அகன்றதன்று, அவ்வகங்கார மமகாரங்களை அகற்ற வேண்டுமென்றன்றோ

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்."

எனக் குறள் மகாவாக்கியம் பிறந்திருக்கின்றது. பிறந்துள்ள இவ் வாக்கியம் இவ்விருகாண்டிகட்கும் அன்றோ? அன்றெனின், கர்ம காண்டிகள் இச் சுவர்க்க போகங்கட்கு இயைந்த தவம்புரிஞான்றும் எந்த நானாக நிற்பது? தூலோபாதி நானாக அல்லவோ! அவ்வினை கள் புரிஞான்றும் நானென்பது தூலோபாதியாயினும் அவ்விரு பயனையும் அனுபவிக்கு ஞான்றும் எந்த நானாக நிற்பது? இவ்விக போகத்தைத் தூலநானாகவும், சுவர்க்க போகத்தைச் சூக்கும நானா கவும் நின்றன்றோ புசிக்கின்றது! இதுபோல, சாலோகாதி பதவிப் போகங்கட்கு இயைந்த தவம் புரிஞான்றும் எந்த நானாக நிற்பது? தூலோபாதி நானாக வல்லவோ! அவ்வினைகள் புரிஞான்றும் நான் என்பது தூலோபாதியாயினும் அவ்வினைக்கியைந்த பேரின்பப்பயனை அனுபவிக்கு ஞான்றும் எந்த நானாக நிற்பது? தூல நானுமன்று; சூக்கும நானுமன்று! இரண்டுமல்லாத ஏதோவோர் மேலாகிய சுத் தோபாதி நானாகவல்லவோ! தூலமுதலிய இம்மூன்று நானும் நானென்ப தல்லாதவைகளா? அன்றி நானென்பவைகளா? கிஞ்சித் தும் நானென்பதற்கு இயைந்தவைகளன்றே! அன்றியும், சாக்கிரத் துள்ள தூலபோதம் சொப்பனத்திற் குன்றியிருப்பது எவர்க்கும் சகசமாயிருத்தலால், அச்சொப்பனத்தில் இத்தூலபோதம் இல்லை யெனப்படுமோ? இதுபோல், உபாசனை வொழுக்கத்தில் முன்னிலை யாகார முதிர்ச்சியால் இத்தூலபோதம் குன்றியிருத்தலின் இஃதில் லாமற் போயிற்றோ? இருக்கின்றதே! இஃதிங்ஙனமிருக்க, இவ்விரு காண்டிகளுள், ஒவ்வொருவருக்கும் இது நானென வழக்கற்ற இலட்சியார்த்தமாகத் தெளியப்பட்டிருக்கின்றது எது? வழக்கென் பது, பரிபாகமுதிர்ச்சி வந்துழி எது நான் எது நானென் றெட்டுங் கால், நானன்றெனப்படும் தத்துவக் குழாங்களுள் ஒவ்வொன்றும் நான் நானெனற்கு இயைவதுபோல் தோன்றுந்தோறும், அததுவும் முன்ஞான்று தத்தம் சொரூபங்களால் ஆமெனவும், விவகாரானு பவங்களால் உண்டெனவும், பின்ஞான்று தாம் தத்தம் உபாதான காரணமெனப் படாமையால் அன்றெனவும், அவ்வவ் வுபாதான

காரணங்களையன்றித் தாமொரு முதலாகாமையால் இன்றெனவும் ஆகின்றன. ஆகலின், இந்நான்குவித வழக்குமயமாயுள்ள ஒவ்வோர் தத்துவத் தடிப்பும் அறிவறியாமைப் பேதங்களாகின்றன வென்க. நானென்னும் போதமோ இவ்விரு வழக்காகிய அறிவறியாமை கடந்ததாகின்றது. என்னை?

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு."

எனப் பிறந்திருக்கின்ற இவ் வாக்கியானுபவத்திற்கு எதிர்மறை யனுபவமாயிருப்ப தெங்ஙனம் கூடும்? எதிர்மறை யனுபவமாவது:— பழுதையைப் பழுதையென்றுணர்ந் தின்புறுவதுபோல் தானென லைத் தானென்றுணர்ந் தின்புற்றிருத்தலென்க. எவரெவர் எவ் வெவ் வினையையும் நான் நானென்று புரிதலும், அவ்வவ் வினை கட்கு இயைந்த பயன்களை எனது எனதென்று நுகர்தலுமாகிய இவ்விரு போதானுபவங்கள் கிஞ்சித்து மின்றியும், பந்தாகாமியம் பந்தசஞ்சித மிரண்டும் இனிவந்து தங்குதற் கிடமின்றியும், அவத் தாத்திரயங்கட்குச் சாட்சிமாத்திரமாய் நின்று பந்தப் பிராரத்வத் தைக் கழித்துக்கொண்டு வருபவரோ அவரவரும், நானென்பதை ஆராய்ந்து தெளியவேண்டுவதின்று! ஏனெனின், அவர்கள் அயலை நான் நானென்னுதவர்க ளாகலினென்க. என்னை?

தத்துவராயர் பாடுதுறை.

"முன்செய் தவத்திலே முயன்றவப் பெருமையாற்
பின்சாதி கழிந்தோமென் றுந்தீபற
பிரமமே யானேமென் றுந்தீபற."

என்பதனாற் காண்க. இங்ஙனமாகத் தெளியாதார் எத்திறத்தாராயி னும் அவர்கள் எது நான் எது நானென் றாராய்ந்து தெளியவேண்டு வது அவசியமாமென்க. அந்த நானென்னும் போதத்தை எவ்வித மாகத் தெளியவேண்டுவதெனின், அகம்புறமில்லாத உயிர்களின் முதலின், முன்ஞான்று அகத்துள் வியட்டிகளாக நிகழும் தத்துவக் குழாங்களை, ஆமெனவும் உண்டெனவும் அன்றெனவும் இன்றெ னவும் நியதி களையப்பட்டமுடிவில் அன்றெனற்கும் இன்றெனற்கும் பின்ஞான்றியையாத ஆமெனற்கும் உண்டெனற்குமே இயைந்து விளங்கிய கூடத்த சைதன்னிய போதமாயும், பின்ஞான்று புறத் துள் சமட்டிகளாக நிகழும் தத்துவக் குழாங்களை, ஆமெனவும் உண் டெனவும் அன்றெனவும் இன்றெனவும் நியதி களையப்பட்ட முடி

வில் அன்றெனற்கும் இன்றெனற்கும் பின்ஞான்றியையாத ஆமெனற்கும் உண்டெனற்குமே இயைந்து விளங்கிய பிரமசைதன்னிய போதமாயுமென்க. முதலாவது, கூடஸ்தபோதமென்பது அறிவே வடிவாயும், இரண்டாவது, பிரமபோதமென்பது ஆனந்தமே வடிவாயும் நிற்றலென்க. இவ்விரு போதானுபவங்களும் யதார்த்தமாகலின் சிற்சடக் கற்பனைகளேப்போல் தனித்தனியே நின்று அன்னியோன்னியாபாவ மெய்தாது அறிவே ஆனந்தமாயும் ஆனந்தமே அறிவாயும் ஐக்கியமுற்றிருக்கும் இவ்வித போதமே மேலாகிய தற்போதமா மென்க. இத்திரிவிதானுபூதி போதங்களேயும் எளிதிலுணர்த்துதற்கே இந்நூல் அகம்புறவாராய்ச்சி விளக்கம் என்னும் காரணப் பெயர்கொண்டு வெளிப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் வெளிப்பட்டிருக்கும் இந்நூல் பரிபாகிகட்கன்றி ஏனையர்க்குப் பயன்படாது. பரிபாகிகளாவார், விடய முதலிய அநுபந்த சதுட்டயத்துள் ஓர் பாகமாயுள்ள அதிகாரிகள். இவ்வதிகாரிகளது பரிபாகமாவது:—நித்தியாநித்தியவத்து விவேகம், இகமுத்திரார்த்த பலபோகவிராகம், சமாதி சட்கசம்பத்தி, முமூட்சுத்துவம் என நான்குமாமென்க. அவற்றுள் நித்தியாநித்தியவத்து விவேகமென்பது, நாற்பொழுதும் உண்மையைத் தழுவி இலங்குகின்ற அகமென்னும் ஆத்மசொரூபமே நித்தியமென்றும், அந்த நாற்பொழுதும் இன்மையைத் தழுவி இலங்குகின்ற அனாத்மாவாகிய ஜீவேசுர சகத்சொரூபமனேத்தும் அநித்தியமென்றும், சுருதீக்கியைந்த யுத்திக்கொத்துத் தேர்ந்திருக்கும் தேர்ச்சியேயாமென்க. இகமுத்திரார்த்த பலபோகவிராகமென்பது, இம்மை மறுமைக்கண் வரற்பாலனவாகிய தூல சூக்குமோபாதிகளாயுள்ள நானாவித போகங்களினும் முற்றும் விரக்தியாகிய தோட திருட்டியா மென்க. சமாதிசட்கசம்பத்தி என்பது, 1-வது முன்னர் விரக்தி தோன்றியவற்றுள் மீண்டும் ஒவ்வோர் ஞான்று இச்சை செல்லுழி மனம் முதலிய உட்கரணங்கள் அந்நெறியிற் செல்லாது நிற்குமாறு தடுத்துக்கொண் டிருத்தலும், 2-வது பின்ஞான்று புறக்கரணங்கள் முன் பழக்க நெறியிற்செல்லாது நிற்குமாறு தடுத்துக்கொண்டிருத்தலும், 3-வது தத்தமக்கியைந்த கிருத்தியங்களே நாளுக்குநாள் சிறுகச் சிறுகக் குன்றச் செய்தலும், 4-வது சுகதுக்கங்கள் மிகுதியாகவரினும் அததன் வசமுறாதிருத்தலும், 5-வது சிரவணார்த்தங்களே விடாது பாதுகாத்துக்கொண்டிருத்தலும், 6-வது தமது சொரூபத்தை விளக்

கும் பிரபல சுருதிகளிடத்தும் கட்கிமைபோன்ற ஆப்தரிடத்தும் ஆப்தாங்கதான சத்பாவ முற்றிருத்தலுமா மென்க. முமூட்சுத் துவமென்பது, அகப்பற்றுக்கள் புறப்பற்றுக்களனைத்தையும் ஒருங் கேவிட்டுத் தன்னை யுணர்தற்கியைந்த அதிதீவிரதர முற்றிருத்தலா மென்க. நாம் கல்வி கேள்வி முதலிய மிக்க அரிய வித்தைகளால் எத்துணைச் சிறப்புற்றிருக்கினும் மக்கின சுழுத்திக்கண்ணின்று விழித்ததுமுதல் மீண்டு மொடுங்குங்காறும் நமதகத்தில் நிகழும் ஒழுக்கமானது நாமரூபமாகிய அவன் அவள் அது முதலியவற்றை மெய்ப்பொருளெனவும் இன்புருவெனவும் மயங்கி அவற்றை விடா மல் நுகர்தலுக்குச் சற்றும் நாணமுறாது இதற்குமேல் ஷெ கல்வி கேள்விகளுக்குப் பயன் தோல்வி வெற்றிகளையன்றி வேறே யின் றென நம்பி நம்பி இறுமாந் திறுமாந்து விவர்த்தமுற்றிருக்கின்ற தால், ஷெ முமூட்சுக்களது அதிதீவிரதர எழுச்சிக்கியைந்த அகத் தில் நிகழும் ஒழுக்கம் யாதெனின் தஸ்மாணை வாய்க்குமளவும், அதாவது ததாகாரமாகுங்காறும் ஐயவெழுச்சியும் ஆராயாமையுமாம்.

அவையாவன, சாக்கிர முதலிய மூன்றவத்தைக்கண்ணுமுள்ள தூலமுதலிய காட்சிகளை யுணர்ந்து வருகின்றதும். அவ்வவற்று ளுண்டாம் இன்ப துன்பங்களை விடாது நுகர்ந்து வருகின்றதும் நாமன்றே? அங்ஙனமாகிய நமக்கு இங்ஙனங் காணப்படும் இத்தேக முதலிய உலகமியாதெனவும், எத்துணையதெனவும், எவ்விடத்த தெனவும், எதுகாறுமெனவும், நமக்கிஃது பேதமுற்றிருக்கின்றதா அன்றி அபேதமுற்றிருக்கின்றதா? எனவும், பேதமுற்றிருக்கின்ற தெனின், ஓர் ஞான்றேனும் உபாதித்திரய பாவமின்றி நாம் வேறு ய்த்தனித்திருந்திருக்க வேண்டுமெனவும், அபேதமுற்றிருக்கின்ற தெனின், அவ்வுபாதித்திரயங்களில் ஒன்றேனும் நாமெனப்பட வேண்டுமெனவும், நானென்பது பொருளா? குணமா? தொழிலா எனவும், பொருளெனின் யாது பொருளெனப்படுமெனவும், உரு வப்பொருளெனின், சாக்கிரத்தில் நம்மாலுணரப்பட்ட தூலவடிவம் நாமாகவேண்டுமெனவும், அருவப்பொருளெனின், அஃதும் சுழுத் திக்கண் நம்மாலுணரப்பட்ட சூனியவடிவம் நாமாக வேண்டுமென வும், உருவாருவப் பொருளெனின், அஃதும் சொப்பனத்தில் நம்மா லுணரப்பட்ட சாயாவடிவம் நாமாக வேண்டுமெனவும், அன்றியும், சித்துப்பொருளெனின், அஃதறிவெனப்படும். அறிவென்பதுதா

னெனின், அஃது தொழிற் குணமாக வேண்டுமெனவும், அன்றியும் அத்தொழிற்குணம் ஒன்றினதாக வேண்டுமெனவும், அவ்வறிவாகிய தொழிற்குண மொன்றினதாயின், சாக்கிராதி மூன்றவத்தைக் கண்ணு மிருந்துணர்ந் தனுபவித்துக்கொண்டு வருகின்ற முதல் நாமின்றி வேறொன்றாக வேண்டுமெனவும், நாமென்பது குணந்தா னெனின், அஃதும் ஒன்றினதாக வேண்டுமெனவும், உபாதி குணந் தொழில்கள் நம்முடையனவாயிருக்க, நாம் எந்த முதலினது குணந் தொழிலெனப்படுமெனவும், நமது உபாதிகுணந் தொழிலென்பது முறையே தூல சூக்கும காரணமென்னும் மூன்று சரீரங்களும் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியென்னும் மூன்றுகுணங்களும், பிர விர்த்தி நிவிர்த்தி என்னும் இரண்டு தொழில்களுமாயிருக்கின்றன. இங்ஙனமிருக்க, நாம் என்ன நிலைமைத்தாயிருக்கின்றது, இதுநான் இதுநானென வழக்கறக் கண்டுகண் டின்புறுக்காறும், நாமொவ் வொருவரும் எந்த நானாகவிருக்கின்றது? திணைபாலிட முதலியவை களுள் ஒவ்வொரு நானாக விருக்கின்றதா? அங்ஙனம் கூடாதெனின், பின்னொன்று எந்த நானாகவிருக்கின்றது? எந்த நானாக இருக்கினும் அந்தந்த நானும் மாறிவிடுகின்றதே! ஆகலின், எதுநான் எது நானெனத் தேடுதற் கியையவேண்டுமே! அங்ஙனம் நம்மைத் தேடாது எதைப் பொருளெனவும், இன்புருவெனவும் கருதித் தேடுகின்றது? அயலைத் தேடலாமெனின், அயலைத்தேடுந் தன்னைத் தேடியாயிற்றா? தன்னைத்தேடிக் கண்டுபிடித்த பின்னொன்றன்றோ அயலைத் தேடவேண்டும். அன்றியும், அயலென்பதற்குப் பொருள் கிஞ்சித்தேனும் இல்லையே! தன்னைத் தேடிக்கண்டின்புற வகையறி யாது, அயலைத்தேடிக் கண்டின்புறுதற்கோ இதுகாறும் மக்களியாக் கையைக் கொண்டுகொண்டு வந்தது!! இச்சிறந்த விவேகத்துக்கு ஏனைய ஆக்கைகள் சாலுமன்றோ? நாம் உருவமுதலிய உபாதிகளுள் ஒன்றை நானாகத் திடமுற்றிருப்பதே முதற்கோணலாயின், அதற்கு மேல், வருணாச்சிரம முதலியனவாகிய கற்பனைகளால் நானின்னான் நானின்னானென்று உள்ளபடியே நம்பி நம்பி இறுமாந்துகொண்டி ருப்பது எத்துணைக் கோணலென்பம். இங்ஙனம் முற்றும் கோண லுற்றிருத்தல் என்ன விவேகமோ? இவ்வாறுள்ள கோணல்களுக்கு மனத்தின்கண்ணும், முகத்தின் கண்ணும், வாக்கின் கண்ணும் கிஞ் சித்தும் துக்கக் குறிகளில்லாதவரை அரிய ஆப்தரென வறும் புண்ணி லீப்போல் மயங்கியடுத்தல் என்ன விவேகமோ தெரிகிலம்! அன்றியும்,

## சோநுபசாரம்.

*"தன்னைத்தான் றேடாச் சதிகார ரேன்பிறந்தா*
*ரன்னத்தால் வந்தவுட லார்தாமார்—முன்னம்*
*விடுத்தவுட லெத்தனையோ மீண்டுமீண் டின்பா*
*லெடுத்தவுட னூறு யிரம்."*

என அறிவுறுத்தி யிருக்கின்றார்களே? இதுகாறும் மேன்மையைப் பயக்குவதாக விடாது நிகழ்ந்துவந்த நமது இச்சாஞானக் கிரியைக ளனைத்தும் அவலமாய்ப் போயிற்றே! எது நான் எது நானெனத் தேடும் இவ்வெழுச்சியானது உதித்து மேலிடவில்லையே! அஃது மேலிட்டாலன்றோ, அவத்தாத்திரயங்களுக்கு விலட்சணமுற் றிருத் தற் கியையும். அஃது இயைந்தாலன்றோ, பிரவிர்த்தி நிவிர்த்தி யின்றி இருத்தற்கியையும். அங்ஙனமிருக்கினன்றோ, சித்தம் நிலைத் திருத்தற்கியையும் அஃது நிலைத்தாலன்றோ, பின்னொன்றுநாம் வெளிப்படுதற் கியைந்த நிட்டையெனக் கூறுவரறிஞர். இதற்கு நாம் என்ன செய்வோமென் றிடைவிடாது அழுதகண்ணும் சிந்தையு முற்றிருத்தலா மென்க.

முகவுரை முற்றிற்று.





உ

திருச்சிற்றம்பலம்.

# அகம்புற ஆராய்ச்சி விளக்கம்.



## பாயிரம்.



### வெண்பா.

#### சொரூப வணக்கம்.

சோதிமய மாம்வெளியே தோற்றுசக சீவபரக்
காதியாய் நிற்கு மறிவுருவை—யேதமின்றி
நன்கிறைஞ்சி நிற்றற்கு நானதுவா வென்னகுறை
யின்பமிகை வேறொன் றிலே. (௧)

#### மகான்கள் வணக்கம்.

தத்துவங்க ளெல்லாந் தமதுருவ மன்றெனவுந்
தத்துவமாந் தம்மியல்பு தாமுணர்ந்து—தத்துவங்க
டம்மையன்றி யின்றெனவுந் தாந்தெளிந்தோர் மென்கழலை
யிம்மையினம் பற்கே திடர். (௨)

#### குருவணக்கம்.

மன்னு மறைமுடிவின் மாசின்றி நின்றொளிரு
முன்னற் கரிய வொருசிவமே—பன்னுதற்குச்
சச்சிதா நந்தனெனத் தானுதித்த சற்குருதா
ளுச்சிதமாக் கொண்டகமே யோர். (௩)

#### அவையடக்கம்.

பன்னூலு நன்குணர்ந்த பான்மையுளோர்க் கிந்நிலனி
லென்னுவா னென்றற் கியைந்தவெனுற்—சொன்ன
வகம்புறவா ராய்ச்சியிந்நூ லாய்ந்துணர்ந்தோர்க் கென்று
மகம்பொருளை நன்குணர்த்து மால். (௪)

### இந்நூற்பெயர்.

அகம்புறத்திற் காண்பவற்றை யாராய்தல் செய்வித்
தகம்பொருளைக் காட்டுதலா லாங்காங்—ககம்புறமா
மாராய்ச் சிவிளக்க மாகுமிந் நூற்பெயர்தா
னோராற் கிதையென்னுண் டுற்று. (ரு)

உள்ளும் புறம்பு மொளியிட் டிலகுமென்பா
லுள்ளனவே போனிகழு மூற்றமிலாக்—கள்ள
வறிவறியா மைக்குணத்தை யாங்காங் ககற்று
நெறியதனை நன்குரைக்கு நேர். (சு)

### அகம்புறம் வந்ததற்கேதுவும் அவற்றலுண்டாம் சேட்டைகளும் இனையவெனல்.

எவ்வுயிருந் தேகோக மெய்தியதா லுட்புறமு
மவ்வவ் வுயிர்க்கு மமைந்தனவே—யொவ்வா
வறிவறியா மையா லடுக்கனந்த பேத
வெறியிவற்றா னேர்ந்தனவா மெய். (எ)

### இந்நூல் கற்பனைக்கியைந்த நாத்திகாத்திகத்தை ஏற்றற்பால தன்றெனல்.

எஞ்ஞான்றுஞ் சீவேச ரில்லையுள தென்றேற்கு
மஞ்ஞானப் புன்மதிதா னுங்ககல—வெஞ்ஞான்றுங்
காண்பனைத்து நாத்தியென்றுங் காண்பானன் காத்தியென்று
மாண்புறுமிந் நூலுரைக்கும் வந்து. (அ)

### இந்நூல் தெளிந்தோர்க்கு உரைத்த தன்றெனல்.

ஞானதனு வாயினர்க்கு நாட்டியதன் றிந்நூலஞ்
ஞானதனு வாயிலகு நாத்திகர்க—ளென்னலை
நன்குணர்ந்திங் கின்புறற்கு நாட்டியதா லெவ்வமிலை
நன்மதியோ ரேற்பார் நயந்து. (கூ)

### இந்நூல் சதுர்வேத மகாவாக்கியங்களின் அனுபவமுடிவை எடுத்தாளு முறைமைகள் இனையவெனல்.

காண்பனைத்தும் பொய்யெனமுன் காட்டாதிப் பொய்மைகளை
மாண்பாம்பின் பிர்மமென்னேம் வண்மையதா—யாண்மையெனு
மப்பிரம மேயாவு மாமென்னு தப்பிரம
மொப்பிரா னேயென்றே மோர்ந்து. (க0)

இந்நூல் தானேதானுகநிற்கு மகம்பொருளாகவாதற்கு ஒன்றுக்கொன்று உயர்வுற்று நிகழப்படுந் துவிதமுதலிய மூன்றினது இலக்கணங்களினையவென்றும், பின்னர் அம்மூன்றும் முடிபிற் கியைந்த தன்றென்றுங் கூறல்.

*திரிபொருளு நித்யமெனத் தேர்ந்தமரு ணீங்கத்*
*திருக்குத் திரிசியமாத் தேர்த—விருந்துவிதந்*
*தோன்றுமனைத் துந்தன்பாற் றோற்றரவாத் தேர்ந்திலக*
*லான்றவிசிட் டாத்துவித மாம்.* (கக)

இதுவுமது.

*தோற்றமெலாந் தன்னுருவாத் தோன்றக் கரைத்துரிதஞ்*
*சாற்றரிய சின்மயமாத் தானொளிர்தன்—மாற்றரிய*
*வத்துவித மாகுமே யான்ற வகமென்ன*
*வித்தனையு மல்லவா மே.* (கஉ)

இந்நூல் ஞானகதப் பிரத்தியட்சத்திற் கியைந்த சரியை கிரியை யோக சாதனங்கள் இனையவெனல்.

*தோன்றுமய லத்தனையுந் தோற்றமா கக்கரைத்த*
*லான்ற சரியையிதிங் காகுமே—தோன்றுமெலாந்*
*தோற்றமென நீங்கியெது சொந்தநா னெனதுவென்*
*றூற்றலுற னற்கிரியை யாம்.* (கங)

இதுவுமது.

*தனைத்தேடுந் தேட்டத்தாற் றானுமில காதாங்*
*கனைத்தயலி லுஞ்சற்று மாமூா—துனற்கியைந்த*
*விவ்விரண்டின் மத்யநிலை யெய்தி நிலைத்திருத்த*
*லெவ்வமிலா யோகமதா மே.* (கச)

இந்நூற்கு மேற்கோளாவது இனையவெனல்.

*ஏடிரண்ட தாகுமே யேய்ந்தவொன்று தானு*
*மேடயலொன் றுமிவற்று ளென்னேட்டை—நாடியிவ*
*ணேதினதா விந்நூலை யொவ்வொருவர் தானுதற்*
*கேதிதற்கிங் கென்று மிடர்.* (கரு)

இந்நூற்கதிகாரிக ளாவாரு மாகாரும் இனையரெனல்.

*எப்பா வனைக்கு மியையா திருந்தென்றுந்*
*தப்பாம னிட்டைதனைச் சாதிப்பா—ரொப்புமா*
*றேற்பரிந்நூ லந்நிட்டை யேலாத வேழையர்க*
*ளேற்பரோ வெஞ்ஞான்று மீங்கு.* (கசு)

பாயிரம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

# அகம்புற ஆராய்ச்சி விளக்கம்.

## முதலாவது

## நாட்டபேத விளக்கம்.

வெண்பா.

*இந்தவா ராய்ச்சிக்க ணெவ்வுயிரு நாடுதற்குத்*
*தந்தமா தாரத்தைத் தான்செல்லும்—தொந்தநெறி*
*யீங்கிரண்ட தாகுமவை யேய்ந்த வகம்புறமா*
*வோங்கு முழைப்போர்க் குற.*

அகம்புறமாவது உட்புறமெனவும், வெளிப்புறமெனவுமாம். உட்புறம் வெளிப்புறமென் றிரண்டிருக்கின்றதால், இடைப்புறம் என்பது ஒன்றிருக்கவேண்டுமே? அஃதியாதென்னின், அதுதான் முகவுரையிற் கூறிய தேகோக மென்னப்படுவது. அஃதெங்ஙனமெனின், எண்ணரிய போதவுயிர்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வோருபாதியையும் நான் நானென மயங்கி மருவாதுழி, இச்சா ஞானக் கிரியைகளென்பதேது? இவற்றுள், இச்சா ஞானமிரண்டும் உட்சேட்டையும், கிரியை யென்பதொன்றுமே வெளிச் சேட்டையுமாம். இவ்விருவித சேட்டைகளும் எழுதற்குக் காரணம் அகமும் புறமும், இவ்வகம்புறமிரண்டும் வாய்த்தற்குக் காரணம் தேகத்தை நான் நானென மயங்கி அழுந்தி இருக்கும் தேகோகமும் ஆம். அவ்வத்தேகோகங்களால் வந்த அகத்தின்கண் சிற்சடபேதங்களாகிய வியட்டி யறிவறியாமை அடுக்குகளேயும், அங்ஙனமே புறத்தின்கண் சிற்சடபேதங்களாகிய சமட்டி யறிவறியாமை அடுக்குகளேயும் ஆராயவேண்டியவாறு ஆராய்ந்து தெளிந்த தெளிவின்படியே நின்றிலங்க வேண்டுமென்க. தேகோகத்தால் வந்திருக்கின்ற அகத்தும் புறத்து முள்ளனவற்றை ஆராய்ந்து தெளியவேண்டு மென்பது எற்றுக்கெனின், உயிர்களாகிய ஒவ்வோர் போதமும் இத்தேக முதலிய விடயங்களின்மேல் யானெனவும் எனதெனவும் வந்து விழுந்திருக்கின்றதா? அன்றி வேறொன்றின்மேல் வந்து விழுந்

திருக்கின்றதா? விடயங்களின் மேலேயே வந்து விழுந்திருக்கின்ற தெனின், ஆங்காங்கும் அவ்வப்போதமாகிய நாட்டம் இவ்விடயங் கள்மேல் வந்து விழுந்திருப்பானேன்? காணப்படுகின்றதா லெனின், காணப்படாத விடயங்கள் மேலும் வந்து விழுவானேன்? அவ்விட யங்கள், நாம் முன்னொன்று தூலமாகக் கண்டதனாலும் கேள்வியினு லும் சூக்குமமாகவேனும் காணப்படுகின்றதாலெனின், அங்ஙனமே போதமாகிய தன்னைத்தான் கேள்வியினாற் கேட்டிருக்கின், தன்னை நாடவேண்டுந்தானே? அப்போதம் நாமரூபமன்றாதலின் நாடவேண் டுவதின்றெனின், நாமரூபங்களையே நாடவேண்டு மென்பதென்னை? அவற்றாலன்றிச் சுகோதயம் வேறொன்று மின்றெனின், கேவலாவத் தையாகிய சுழுத்திக்கண் சுகோதயம் இன்றெனப்படட்டும்! ஆங்குச் சுகமென்பதும் துக்கமென்பதும் இன்றிய சூனியமாயிருக்கின்ற தெனின், யாவரும் நித்திரையைத் தேடுவானேன்? இச்சகலாவத் தைக்கண் அமைதியும் அல்லலும் இருக்கின்றதால் இவ்விரண்டில் அல்லல் மாத்திரம் தணிந்திருத்தற்கே யன்றி அமைதியாகிய சுகோ தயம் தணிந்திருத்தற்கன்று. இங்ஙனமிருக்கச் சுழுத்திக்கண் சுகோ தயமென்ப தேது? விழித்த பின்னொன்றன்றோ? அஃது சுகமய மென்றறியாமையினாற் கூறுகின்றது. ஆகலின், சுகோதயத்துக்குச் சகலாவத்தையாகிய இந்நாமரூபங்களே யன்றி வேறொன்று மில் லவே இல்லையெனின், இச்சகலாவத்தைக்கண் இருபாகத்தில் ஒரு பாகமாகிய அல்லல் தணிந்திருத்தலே சுகோதயமென்றா லென்னை? உறக்கத்தால் அல்லல் தணிக்கப்படின், அவ்வுறக்கஞ் சுகோதய மென்னலாமோ? எவ்வெச்சுகங்களும் இச்சாக்கிராவத்தாச் சுகத் தினது லேசங்களே யன்றி வேறென்ப தன்றெனின், இவ்விடயங் களை நாடும் போதமானது தன்னை நாடுழிச் சுகமென்ப தின்றாமோ? அப்போதந் தோன்றும் பொருளாயின் தன்னை ஒருவாறேனும் நாட வேண்டியதே! முற்றும் தோன்றாமையைப்பற்றி நாடவேண்டுவ தின்றெனின், நாம் நாடுதற் கியைந்த இவ்விடயங்கள் காரணமாகச் சுகம் விளைவதாயின், அச்சுகம் இவ்விடயங்களின் பாலதா? அன்றி இவ்விடயங்களின்மேல் வந்துவிழும் போதத்தின் பாலதா? இவ் விடயங்களின் பாலதேயெனின்,

பிரபுலிங்கலீலை.

*"விருப்பு வெறுப்புரு வாம்விட யத்தோ*
*டிருக்கு மயற்சக மென்பதி லாமற்*
*பரப்பிர மத்தியல் பார்ப்ப தெமக்குத்*
*தெரித்தரு ளென்றுரை செய்து துதித்தான்."*

எனக் கூறியிருப்பானேன்? இவ்விடயங்கள் அவ்வண்ணமாகவும் இருக்கின்ற தியல்பாமெனின், ஷை நூலின்கண் மயக்கமாகிய சக மென்பானேன்? விடயங்களுடைய இயற்கை அங்ஙனமு மிருக்கின்ற தாலெனின், இவ்விடயங்கள் மயங்குகிறதுமுண்டா! உண்டெனின், இவைகள் சித்துப்பொருளாகவேண்டுமே? சித்துப்பொருளன் றெனினும், எஞ்ஞான்றும் இவ்விடயங்கள் விருப்பு வெறுப் புருவாக இயற்கையாக வருகின்றதே இதற்கு யார் என்ன செய்வ தெனின், விடயங்கள் ஒன்றுக்கொன்று எதிர்மறையாகிய குணங் களை ஏற்பதுண்டா? எதிர்மறையாவது ஷை விருப்புருவாயும் வெறுப்புருவாயும் உபேட்சை யுருவாயுமிருக்கின்றன. இவற்றுள் உபேட்சையாவது விருப்பு வெறுப்பிரண்டு மில்லாமை. ஒவ்வொரு விடயமும், எதிர்மறைத் தன்மையை யேற்றதன்று. ஒன்று விருப் புருவாயும், மற்றொன்று வெறுப்புருவாயும், மற்றொன்று உபேட் சையுருவாயுமிருந்து நிகழுகின்றதாமெனின், ஓர் போதத்துக்கு எவ்வெவ் விடயம் விருப்புருவாயிருக்கின்றதோ, அவ்வவ் விடயமும் மற்றோர் போதத்துக்கு வெறுப்புருவாயும், எவ்வெவ்விடயம் வெறுப் புருவாயிருக்கின்றதோ, அவ்வவ் விடயமும் மற்றோர் போதத்துக்கு விருப்புருவாயும் இருப்பானேன்? அன்றியும், இவ்விரு தன்மைத் தாகிய அவ்வவ்விடயமும் மற்றோர் போதத்துக்கு உபேட்சையுரு வாயும், இவ்வுபேட்சை யுருவாகிய ஒவ்வோர் விடயமும் மற்றோர் போதத்துக்கு ஷை விருப்பு வெறுப்பிரண்டி லொன்றாயு மிருப் பானேன்? இஃதன்றியும், ஓர் போதத்துக்கு எவ்வெவ்விடயம் விருப்புருவாயிருக்கின்றதோ அவ்வவ்விடயமே அப்போதத்துக்கு வெறுப்புருவா யிருப்பானேன்? ஓர் போதத்துக்கு எவ்வெவ்விடயம் வெறுப்புருவாயிருக்கின்றதோ அவ்வவ்விடயமே அப்போதத்துக்கு விருப்புருவா யிருப்பானேன்? ஓர் போதத்துக்கு விருப்புருவாயிருக் கும் ஞான்றே, மற்றோர் போதத்துக்கு வெறுப்புருவா யிருப்பா னேன்? ஓர் போதத்துக்கு வெறுப்புருவாயிருக்கும் ஞான்றே, மற் றோர் போதத்துக்கு விருப்புருவா யிருப்பானேன்? ஓர் போதத்துக்கு

எவ்வெவ் விடயம் விருப்பு வெறுப்புருவ மிரண்டில் எவ்வுருவா யிருக்கின்றதோ அஞ்ஞான்றே மற்றோர் போதத்துக்கு உபேட்சை யுருவா யிருப்பானேன்? ஓர் போதத்துக்கு எவ்வெவ் விடயம் உபேட்சையுருவா யிருக்கின்றதோ அஞ்ஞான்றே மற்றோர் போதத் துக்கு விருப்பு வெறுப்புருவ மிரண்டில் ஒன்று யிருப்பானேன்? அன்றியும், ஒவ்வோர் விடயமும் முன்ஞான்று அவ்விருப்பு முத லிய மூன்றி லொன்றாயும், பின்ஞான்று அம்மூன்றில் மற்றொன் றாயும், மற்றோர் ஞான்று அம்மூன்றில் மற்றொன்றாயும் காணப் படுகின்றமையால் இவ் விருப்பு முதலிய மூன்று நிலைமையும் யாதின்பால தெனப்படும்? அவ்வவ் விடயத்தின் பாலதெனின், அதுதுவும் விருப்பு முதலியவைகளால் மாறிக்கொண்டிருக்கவேண் டுமே! தத்தஞ் சொரூபம் கிஞ்சித்தும் மாறவில்லையே? இருந்தபடி யிருக்கின்றதே! எங்ஙனம் இவைகள் இப்பிறழ்ச்சியை ஏற்கின்றது? இல்லையே! இதுகாறும் இப்பிறழ்ச்சியை ஏற்றி இயங்கும் இயக்கத் துக்கு முதலியாதென ஆராய்ந்து தெளிந்ததுண்டா? கிஞ்சித்து மில்லையே! இதற்கென்செய்தும்? எஞ்ஞான்றும் இப்பிறழ்ச்சியை ஏற்று வரற்பாலது இவ்விடயங்களையன்றி வேறொன்றுளதாகக் கண் டிலமே யென்னின், இவ்விடயங்கள் ஒவ்வொன்றும் இருப்பெனப் பட்டதா? அன்றி இன்மையெனப்பட்டதா? இருப்பெனப்பட்ட தெனின், இன்மையென்பது எவ்வண்ணமிருக்கின்றது? அன்மை யென்பதை உற்றிருக்கின்றதெனின், இருப்பென்பது ஆமென்ப தை யுற்றிருக்கவேண்டுமன்றோ? ஒவ்வோர் விடயமும் இருப்புள்ள தெனின் ஆராய்ச்சிக்கண் அன்மையெனவும் இன்மையெனவும் முடி யாது ஆமெனவும் உண்டெனவும் ஏற்கட்டுமே! ஒவ்வோர் விடய மும் தோற்றும் தோற்றத்தால் ஆமெனவும், அவ்வத் தோற்றத் திற்கியைந்த விவகாரானுபவத்தால் உண்டெனவும், தத்தமுபாதான காரணம் தாமாகாமையால் அன்மையெனவும், அவ்வவ்வுபாதான காரணத்தையன்றித் தாம் வேறாகாமையால் இன்மையெனவுமிருக் கின்றது. இங்ஙன மிருக்கின்றமையின்,

சீவகாருணிய விளக்கம்.

"உண்டில்லை யாமலவென் றோர்நான்கு மேலாமற்
கண்டபொரு ளொன்றேனுங் காட்டாதார்க்—குண்டோ
குருத்துவந்தான் வல்லீர் குளறிவழி தற்கோ
பெருத்தகுரு வென்றுகொண்ட பேர்."

எனக் கூறியிருக்கின்றது. அன்றியும்,

ஞானவாசிட்டம்.

"இல்லதன்றுண் டல்லவறி வில்லாவுருவி லறிவுருவ
மல்லவான்ம வுருவுமல வயலன்றுலக மெனநினைவாய்."

என்றுங் கூறியிருக்கின்றது. இங்ஙனம் இருக்கும் இவ்விடயங்களைத் தூல மதியினால் நாடுதலைவிட்டுச் சூக்கும மதியினால் ஆராயவேண்டுமே? அங்ஙனமாராய்ந்து தெளியாதுழி அடி தேகோகமயக்க மெவ்வண்ணம் அகலும்? இதுநிற்க, தேகோகமென்பது தேகத்தை நான் நானென மயங்கி யழுந்தியிருப்பதாயினும், அவ்வத் தேகத்தின்மேல் நான் நானென வந்து வந்து விழுந்தழுந்திய அவ்வப் போதமானது எங்கிருந்தெழுந்தது? அதையேனுஞ் சற்றூகிக்குதும். எங்ஙனமெனில், அங்ஙனமெழும் அவ்வவ் வெழுச்சிகளும் சடவெழுச்சிகளன்று, சித்தாகிற நினைவெழுச்சிகளாகலின் இவைகளெழுதற் காதாரமென்பது எப்பொருளெனப்படும்? அவ்வாதாரம் சித்துப் பொருளன்றாயின், அதில் நின்றும் எழுந்த எழுச்சிகளாகிய அவ்வப் போதங்களானது சித்தம்சங்களா யிருக்குமா? அதாவது நினைவாகிற சங்கற்பவெழுச்சிகள். இவைகளிங்ஙன மிருக்கின்றமையின் அவ்வாதாரம் சித்துப்பொருளென்பதற்கு முரணின்று. அச்சித்தாதாரத்தில் நின்றெழுந்த நான் நானென்னும் இப்போதத்துக்கு அதிட்டானப்பொருள், அதாவது உபாதான காரணமென்பது, அவ்வாதார மெனப்படுமா? அன்றி ஆங்காங்குமுள்ள அவ்வத்தேக மெனப்படுமா? அவ்வத் தேகங்க ளெனப்படுமெனின், அவ்வத் தேகங்களும் சொப்பனவத்தைக்கண்ணும் சுழுத்தியவத்தைக்கண்ணும் நான் நானென்பதற் கியைகின்றனவா? கிஞ்சித்தும் இயையவில்லையே! ஆங்காங்கும் அவ்வவ் வீரவத்தைகடோறும் நான் நானென்னும் போதமில்லையா? இருக்கின்றதே! அங்ஙனமிருக்கும் அவ்வப்போதமும் எதனது அம்சங்களெனப்படும்? தாம் எந்த முதலின்கணின்று எழுந்தனவோ அந்த முதலினது அம்சங்களன்றோ? தன் அம்சங்கள் தன்பால் விழுந்தழுந்தாது மற்றவற்றில், அவையாவனவடி அவ்வத் தேகங்களில் விழுந்தழுந்தியிருக்கலாமா? கூடாதன்றோ? ஆங்காங்கும் அவ்வத்தேகாம்சமே சர்வ உயிர்களாகிய போதவெழுச்சிகளெனின், அவ்வத் தேகங்களும் சதுர்ப்பூதாம்ச சையோக எழுச்சிகளாகாதிருக்கட்டும். மீண்டும், அச்சதுர்ப் பூதமாகாதிருக்கட்டும், ஆகின்றதால், தேகங்களாகிய அம்சங்களுக்குச் சதுர்ப்பூதங்கள்

ஒவ்வொன்றும் ஆதாரமாயும், முதற்காரணமாயும், அதிட்டானமாயும், ஏகத்துவமாயும், நித்தியமாயும் இருக்கின்றதன்றோ? இவற்றால் ஒவ்வொரு தேகமும் கற்பனையன்றோ? இவ்வொவ்வொரு கற்பனைத் துணை நான் நானென்றிருக்கும் ஒவ்வொரு போதமும் கற்பனையன்றோ? தேகங்களாகிற கற்பனைகட்கு ஆதாரபூதங்களிருப்பது போல் அவ்வக் கற்பனைகளாகிய தேகங்களுள் நான் நானென நிகழும் கற்பித உயிர்கட்கும் ஆதாரமாயும், முதற்காரணமாயும், அதிட்டானமாயும், ஏகமாயும், நித்தியமாயும் இருத்தற்கு ஒன்று உண்டன்றோ? இன்றெனின், உபாதித்திரயம்; அவத்தாத்திரயம், அபிமானத்திரயம் என்னும் இவையனைத்தும் எதன்கண் மாறுகின்றன? இங்ஙனம் மாறுதல் அறிவினிடத்தா? அன்றி அயலினிடத்தா? அயலென்பது உபாதித்திரயம் முதலியவைகள் வேறன்று. ஆங்காங்குமுள்ள அவ்வத் தேகங்களும் முதலாயின், அவ்வத்தேகத்துணை நான் நானென்னும் தேகியும் முதலென்னப்படும். தேகமனைத்தும் சடாம்சங்களாகலின், மீண்டும் சதுர்ப்பூதங்களாய் முடிகின்றன. இதுபோல், தேகியனைத்தும் சித்தம்சங்களாகலின், இவைகள் மீண்டும் எதுவாக வேண்டும்? ஆதாரமாகிய சிற்போதமாக வேண்டுமன்றோ? அன்றியும், இவ்வொவ்வொரு போதமும் தானாகிய அகண்ட வியாபக போதத்தினின்று விஸ்மரணையாகத் தனித்தனியாயெழுந்த எழுச்சியே முதற்கோணலாயின், அங்ஙனமெழுந்தவைகள் மீண்டும் அக்கணமே அவ்வாதார போதமாய் விடுதற்கு அதில் விழுந்தழுந்தாது விட்டது இரட்டித்த கோணலன்றோ? அங்ஙனம் அதில் விழுந்தழுந்தாவிடினும், தாமெழுந்த எழுச்சிமட்டிலேனும் நிற்கவேண்டுமே! அங்ஙனமும் நில்லாது விடயாகாரமாய்த் திரும்பினது, அதனினும் கோணலன்றோ? அங்ஙனம் திரும்பினமட்டிலேனும் நிற்கவேண்டுமே? அங்ஙனமும் நில்லாது விடயங்கள் பலவற்றுள் ஒவ்வொன்றில் அதாவது ஆங்காங்கும் அவ்வச் சரீரங்களில் நான் நானென வந்து வந்து விழுந்தழுந்திவிட்டது பின்னும் மிகுந்த கோணலன்றோ? இங்ஙனம் ஒவ்வொரு போதமும் நான்கு நான்கு கோணல்களுற்றிருக்கின்றதால், இக்கோணல்களகன்று தானுயிருத்தற் கியைந்த உழைப்பின்றே! இருக்கின்றதால், அவ்வுழைப்பிற் செல்லாமல் இதுகாறும் ஏமாந்திருப்பானேன்? இங்ஙனம் ஏமாந்திருப்பது கல்விகேள்விகளே போதுமான திர்ப்தியென்பதனாலோ? இக்கல்வி கேள்விகள் மட்டில் நின்றுவிடின், தன்னேட்டை முற்றும் விட்டுவிட்டு, அயலேட்டில்

சொக்கியிருக்கவேண்டிவருமே? அன்றியும், பிறர் தோல்வியையும், தாம் வெற்றியையும் எய்துதற்கே அங்காந்துகொண்டிருக்கவும் வருமே? அங்ஙனம் அங்காந்துகொண் டிருக்குங்காறும், பிறரால் தாமும், தம்மால் பிறரும் இழிவை யேற்கவும் வருமே? ஷை கல்வி கேள்விகளால், பிறரது பூர்வபட்சத்தையும், தமது சித்தாந்த பட்சத்தையும், விளக்குதற்கு இயைந்ததாயினும், நாடவேண்டியதை எத்துணைக் கட்டமுற்றேனும் நாடவேண்டுவது கல்விகேள்விகளுக் கழகன்றோ?

திருக்குத் திரிசிய விவேகம்.

"ஏட்டைப் படித்திங் கிறுமாப்பா லென்னபய
னூட்டம் படித்தன்றோ நாமறுப்பம்—வாட்டமெலா
மெச்சனனத் தேனு மிரும்பொருளை நாடாத
வெச்சத்தா லன்றோ விவை."

என்றருளி யிருக்கின்றதே! அஃது நூதன நூலானமையால் இஞ்ஞான்று பயனுறுதெனின், பின்ஞான்றேனும் பயனுறுமன்றோ? பின்ஞான்று பயனுறுவது, இஞ்ஞான்று பயனுறாதோ? உறுதெனின், நாம ரூபங்களில் கைப்புறுமையினாலும், பொறுமை மேலீட்டாலுமே அன்றி ஷை நான்குவித கோணல்களுக்கும் சகிக்கக்கூடாத சித்த விருத்திகட்கு நூல்கள் முன்ஞான்றதென்றும் இஞ்ஞான்றதென்றும் நாடவேண்டிவருமோ? எஞ்ஞான்றதாயினும் ஷை ஆதார அதிட்டானத்தை எட்டுவதற்கு யுத்தி அனுபவங்கட்கு ஒத்ததாயின் சாலுமன்றோ? முன்ஞான் றமைந்த நூல்கள் அஞ்ஞான் றிருந்தவர்க்கு நூதன நூல்களாகவிருந்து அறிஞர்க்கு அஞ்ஞான்றே சிறப்புற்றதுபோல் இஃது இஞ்ஞான்றும் சிறப்புறுமென்க.

தாயுமானவர்.

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறு வுற்பவநோய் மாறுமோ—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம்."

என்றருளி யிருக்கின்றதும் யாதுக்கு? தானாகிய ஏட்டை விடாதிருத்தற் கென்க.

ஞானவாசிட்டம்.

"ஊகமுள தேற்சிறுவ ருரையுங் கொள்க
 வொழிக்ததய னுரைசெயினுந் திரண மொப்ப
வேகவிடு வாய்ஞான மெளிது தோன்ற
 வியம்புமுவ மானமெலா மேக தேச
மாகிினை வாயுருவ மற்ற ஞான
 மாகார மாமுவமைக் கண்டா தென்னு
மூகரனு பவமில்லா விகற்பத் தாலே
 மொழிகுதர்க்க மறிவழிக்கு முயல வேண்டாம்."

என்றருளியதில், சுருதி யுத்தி யனுபவத்துக்கு ஒத்துச்சொல்பவர் மிக்க சிறுவர்களாயினும் சாலுமென்பது கருத்தென்க.

குறள்.

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்று டொழாஅ ரெனின்." என்றும்,

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்." என்றும்,

வாக்கியம் பிறந்திருக்கின்றதே, இவற்றுள் கற்றதனுலாய பயனென்னென்றருளியது, கல்விகேள்விகளில் முதிர்ந்தும், அயல் நாட்டமென்பது முன்ஞான்று முற்றும் மழுங்காமலும் பின்ஞான்று நாடவேண்டிய தன்னேட்டைக் கிஞ்சித்தும் நாடாமலும், மிதந்திருத்தலின் அவர்களைத் தாழ்த்தியும், பின்ஞான்று விலங்கொடு மக்களனைய ரென்றருளியது, அக்கல்வி கேள்விகளுக்குப் பயன் தன்னேட்டை நாடாது மிதந்திருத்த லல்லவென்று அம்மிதப்பில் நின்றகன்று, ஷை ஆதாரப் போதமாகிய தன்னேட்டை யெட்டுதலின் அவர்களை உயர்த்தியு மிருக்கின்றது. அன்றியும், அக்குறள் மகாவாக்கியமே,

"ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு."

எனவும் பிறந்திருக்கின்றது. இவைகள் இங்ஙனமிருக்க, நாம் உழைக்கவேண்டிய உழைப்பைவிட்டு எங்ஙன மிருக்கக்கூடும்? ஷை உழைப்பென்பது எங்ஙனமெனின், அதுதான் அகம்புற ஆராய்ச்சியென முன்ஞான்று கூறியதென்க. அவ்விரண்டுழைப்பும் எவற்றைப்போல வெனின், ஓர் புருடனால் எறியப்பட்ட கைப்பந்தானது தான் சென்று மோதியவிடத்தில் நில்லாது மோதிய அக்கணமே திரும்பி எறிந்தவன்பால் வந்து தாக்கி விழுந்து விடுவது

போல, அவ்வச்சரீரங்களிலும் நான் நானென வந்துவிழுந்த அவ் வப்போதமும், தாமெங்கிருந் தெழுந்து வந்தனவோ அவ்விடத்தி லேயே அதாவது அவ்வாதாரப் போதத்திலேயே அகநெறித் தாகச் சென்று மோதி விழுந்தழுந்தி அதுவாயிருந்திட வேண்டு வதும், ஒருவன் வெடிமருந்திற் சேர்த்துப் பிரயோகஞ் செய்யப் பட்ட வெடிகுண்டானது தான்சென்று மோதியவிடத்தில் நில்லாது ஊடுருவிச் சென்றுவிடுவதுபோல், தாம் அவ்வச் சரீரங்கள் மட்டில் நில்லாது அக்கணமே புறநெறித்தாகச் சென்று ஊடுருவி ஷை அவ் வாதாரப் போதத்தில் மோதி விழுந்தழுந்தி அதுவாயிருக்க வேண்டு வதுமா மென்க. இங்ஙனமாகிய இவ்விரண்டுழைப்புகளுள் ஒன்றி லேனும் செல்லாமல் மலசல விசர்ச்சனங்கள் செய்துகொண்ட சிசுக்களானவை, அம்மலசலத்தில் நின்றும் தாம் நீங்காமலும், அம் மலசலத்தையேனும் ஒதுக்கிக் கொள்ளாமலும் அவ்வவற்றிலேயே உழன்றுகொண் டிருக்குமாறுபோல், ஆங்காங்கும் அவ்வத்தேக பாகத்தில் நானெனதாகவே ஆலவிருட்சம் விழுதிட்டு வேரூன்றி நிற்பதுபோல் நின்று உழைத்துக்கொண்டிருப்பது எத்துணைக் கோணலெனப்படும்! இங்கே கோணலென்பது மயக்கமெனற்பாலது. இக்கோணங்களாகிய மயக்கங்களில் நின்றும் அகலவேண்டுமா? அன்றி வேண்டாமா? வேண்டுவதெனின், ஷை கைப்பந்தைப்போல் முன்ஞான்று அகநெறி யாராய்ச்சியும், வெடிகுண்டைப்போல் பின் ஞான்று புறநெறி யாராய்ச்சியும் செய்துசெய்து தானே தானாக வேண்டுவதே திண்ணமென்க. முன்ஞான்று அகநெறியிற்சென்று எவற்றை யாராய்ந்து தானாகத்தெளிய வேண்டுவதெனின், தூல சரீர முதல் அவித்தை யிறுவாயுள்ள அறிவறியாமை அடுக்குப் பேதங்களை யென்க. பின்ஞான்று புறநெறியிற் சென்று எவற்றை யாராய்ந்து தானாகத் தெளியவேண்டுவதெனின், பிருதிவி தத்துவ முதல் ஆகாயமிறுவாயுள்ள அறிவறியாமை அடுக்குப் பேதங்களை யென்க. அவ் வகம்புறத்துள்ள அறிவறியாமை யடுக்குக்களை ஆராய்வதெங்ஙனமெனின், இவ்வகம்புற ஆராய்ச்சி விளக்கத்தில், முன்ஞான்று அகத்தாராய்ச்சி விளக்கம் கூறப்புகுந்த இவ்வாராய்ச் சிக்கண், முதலிலே ஐம்பொறியாராய்ச்சி யுழைப்பைப்பற்றிச் சற்று ஊகிக்கின்றது.

முதலாவது
நாட்டபேத விளக்கம் முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

# இரண்டாவது

# ஐம்பொறி ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

*இந்தவா ராய்ச்சியின்க ணேய்ந்த புலனைந்துந்*
*தந்தமக்கு முண்மையுருத் தானின்றி—யெந்த*
*விதத்துமறி யாமையதாய் மேவுறுமுப் போதுந்*
*திதித்தலெது நாளுந் தெளிவு.*

சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தமாகிய இவ்வைந்தும் சுகசாதன விடயங்கள். இவ்விடயங்கள் காணப்படுந் தகையதாகலின், ஒன்றுக் கொன்று காணப்படுகின்றனவா? அன்றித் தமக்குத்தாம் காணப் படுகின்றனவா? தமக்குத்தாமே காணப்படுகின்றனவெனின், கனவிலும் சுழுத்தியிலும் இவைகளிருக்கின்றதால் அவற்றிற் காணப் படாதிருப்பதென்னை? இதனால் தமக்குத்தாம் காணப்படுவ தன் றென்க. வேறொன்றுக்கே காணப்படுகின்றனவெனின், அஃதியா தெனப்படும்? நானென்கிற வோர் போதமாமெனின், அப்போத மெத்தகைய தெனப்படும்? அவை கட்பொறி முதலிய பஞ்சேந் திரியங்களாமெனின், இவ்வைம்பொறிகளும் நானென்பதற்குப் பொருள்களா? அங்ஙனமாயின், ஐந்துவித நானிருக்க வேண்டுமே! அங் ஙனமில்லையே! இவ்வைந்தும் பொருள்க ளன்றாகலின், தொழிற் குணங்களா? அன்றித் தோற்றக் குணங்களா? நாமரூபங்கள்போற் காணப்படாமையின், தோற்றக் குணங்களன்று; தொழிற்குணங் களெனின், இவைகள் எவ்வெத்தொழில்க ளெனப்படும்? கேட்டல் பரிசித்தல் பார்த்தல் ருசித்தல் முகர்தல் ஆகியவாமெனின், இத் தொழில்கள் யாதின்பால தெனப்பெறும்? வேறொன்றின் பால தெனின், அவ்வேறொன்று நானென்பதன்றோ? நானென்ப தெல்லா வற்றையு முணரும் உணர்வு வடிவமன்றோ? இங்ஙனமிருக்க, எங் ஙனம் நானென்பதற் கியையும்? அன்றியும், இவ்வைம்பொறிகளும்

டி விடயங்களை இருப்பாகக்கொண் டுணருகின்றனவா? அன்றிக் கற்பனைகளெனக்கொண் டுணருகின்றனவா? இருப்பெனக்கொண் டே உணருகின்றனவெனின்! இதனு லிவ்வைம்பொறிகளும் அறிவாகிய முதலெனப்படுகின்றனவா? அன்றி அறியாமையாகிய கற்பனையெனப் படுகின்றனவா? இவ்வைம்பொறிகளையுமன்றிச் சத்த முதலானவைகளை யுணர்தற்கு வேறுபொரு ளின்முகலின் இவை அறிவாகிய முதலெனப்படுமெனின், இவ்வைந்தும் தமக்கயலாகிய வற்றை யறிகின்றனபோல் தம்மைத்தா மறிவதுண்டா? தமக்குத் தாம் தோன்றலின்றென முன்னேஞான்று முடிந்தமையால், தம்மைத் தா முணர்வதன்று. அன்றேனும், மேலொன்றால் தாமறியப்படா திருக்கட்டுமே? அங்ஙனமுமில்லையே? இப்பொறிகள் தத்தமக் கியைந்த விடயங்களை யுணரும் உணர்வு வடிவாயிருக்க, மேலொன்றால் எங்ஙன மறியப்படுமெனின், இவைகள் அம்மேலொன்றுக்குக் கிழமைப்பொருளா யிருக்கின்றதா லென்க. எங்ஙனமெனின், இவ்வைந்துள் ஒவ்வொன்றும் பழுதுற் றிருத்தலையும் பழுதற் றிருத்தலையும் கிஞ்சித் பழுதுற் றிருத்தலையும் நன்குணரப்படுகின்றனவே! அவையாவன, என் செவிப்புலன் நன்கிருக்கின்றதென்றும் நன்கில்லையென்றும் முற்றும் கேட்கவில்லையென்றும், என் பரிசப்புலன் நன்கிருக்கின்றதென்றும் நன்கில்லையென்றும் முற்று முணரவில்லையென்றும், இங்ஙனமே ஏனையரூப முதலிய முப்புலன்களு மிருக்கின்றதால் கிழமைப்பொருளென்பதற்கு முரணென்னை? கிழமையென்பது உரிமையுற்றிருத்தல். இவற்றால் இவ்வைந்து மெங்ஙன மறிவென்பதற்கியையும்; அன்றியும் இவைகள் நான் நானெனனுந் தன்மைப் பொருள்க ளன்று. முன்னிலைப் பொருள்களாகலின், இவைகள் சுதந்தரமென்பதற்கு விருத்தமென்னை? இவ்விருவகைக் கிழமைகளும் பிறிதின் கிழமைகளா? அன்றித் தற்கிழமைகளா? தற்கிழமைப் பொருள்களெனின், இக்கிழமை நானென்கிற முதலை விட்டகலாச் சுதந்தரமுற் றிருக்கவேண்டுமே! அச்சுதந்தரம் இச் சாக்கிராவத்தை நீங்கலாக மற்றீரவத்தைக் கண்ணுமில்லையே! அவை சொப்பனஞ் சுழுத்தியென்க. இதனுற் பிறிதின்கிழமை யென்

பதே திண்ணமாயிற்று. ஆகவே, இவைகள் சடப்பொருள்களு மாயிற்றென்க. இவைகள் மேலே ஓர் நானென்பதனை யுணரப் பெறும் பொருள்களாயினும், தமக்கன்னியங்களாகிய ஊடி சத்த முதலிய விடயங்களின் பாகுபாடுகளையேனும் நன்குணர்ந்து வருகின் றமையின், அறிவுப் பொருள்களென்னாது சடப்பொருள்களென்ற தென்னையெனின், இதனால் இவை சித்துப்பொருளாகின்றன. ஆகவே, மேலொரு நானென்பதனைலறியப் பெறுகின்றமையால் அறி யாமையு மாகின்றதே! இதற்கென்செய்வது? அன்றியும் இப்பொறி கள் அறியாமையென்பதற்கு இயைந்தனவா? அன்றி அறிவென் பதற்கு இயைந்தனவா? இவ்விரண்டிற்குமே இயைந்தனவெனின், இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று நேர் எதிர்மறைத் தர்மங்களாக விருக்கின்றனவே! இவை ஓர் பொருள் ஒளியுமிருளுமாயிருக்கின் றது போலாமென்க. இங்ஙனமிருப்பதால் தோடமென்னை யெனின், ஒளியுள்ளஞான் றிருளும் இருளுள்ளஞான் றொளியும் இன்மை யாகு மாறுபோல், இவைகளும் அறிவெனப்படுஞான்று அறியாமையும், அறியாமை யெனப்படு ஞான்று அறிவுமின்றிப் போகவேண்டி வருமே? இங்ஙன மிருத்தற்கு அன்னியோன்னியாபாவ மெனக் கூறு வரறிஞர். இவ்விரண்டும் அன்னியோன்னியாபாவ மெய்தினும், இவ் விரண்டுமாகவுடைய பொறிகள் ஒவ்வோர் முதலாக வில்லையோ வெனின், இப்பொறிகள் அறிவாகவேனும், அறியாமையாகவேனும், திரமுற் றிருக்கவேண்டுமே? அங்ஙனமின்றி மிசிரிம்பித்திருப்பதால், ஓர் முதலென்ப தெங்ஙனம்? அங்ஙனம் இரண்டுபட்டிருப்பதாகவே வைத்துக்கொள்ளினும், இப்பொறிகள் ஓர்போதேனும் அறிவென் பதற் கியைந்தனவா? அன்றி அல்லவா? எனச் சற்றாகிக்குதும். எங்ஙனமெனின், இப்பொறிகள் எவற்றையறிகின்றதா லறிவெனப் படுகின்றன? சத்த முதலிய ஐந்து விடயங்களையுமா மெனின், இவ் விடயமைந்தும் பொருள்களா? அன்றிக் குணங்களா? பொருள்க ளாமெனின், எவ்வகைக் குணந் தொழில்களுக்கு இவ்வைந்தும் பொருள்களெனப்பெறும்? அங்ஙனம் பொருள்களல்லவே! அன்றி யும் இவைகளைப் பொருள்களென்று சொல்வதற்கு எவ்வெப் பொருள்களென் றேற்பது? நிலப்பொருள் நீர்ப்பொருள் நெருப்புப் பொருள் காற்றுப்பொருள் வானப்பொரு ளென்பவையா மெனின்,

ஔவையார் குறள்.

"நிலமைந்து நீர்நான்கு நீடங்கி மூன்றே
யுலவை யிரண்டொன்று விண்."

எனக் கூறியிருப்பானேன்? அவையாவன:—நிலமென்பது கந்த முதலிய ஐந்துவித தர்மங்களும், நீரென்பது கந்தம் நீங்கலாக ஏனைய சுவைமுதலிய நான்குவித தர்மங்களும், நெருப்பென்பது கந்தம் சுவை நீங்கலாக ஏனைய ரூபமுதலிய மூன்றுவித தர்மங்களும், காற்றென்பது கந்தம் சுவை ரூபம் நீங்கலாக ஏனைய பரிசமுதலிய இரண்டுவித் தர்மங்களும், வானமென்பது கந்தம் சுவை ரூபம் பரிசம் நீங்கலாக ஏனைய சத்தமாகிய ஓர்வித தர்மமும் உடையனவாம். இவற்றுள் சத்தம் ஐந்து, பரிசம் நான்கு, ரூபம் மூன்று, சுவை இரண்டு, கந்தம் ஒன்று ஆகப் பதினைந்துவித தர்மங்களாயிருக்கின்றன. இவற்றுள், ஐந்து சத்தமாவது: ஆகாயம் வறும் சத்தம், வாயு சலசல சத்தம், அக்கினி பகபக சத்தம், சலம் புளபுள சத்தம், பிருதிவி கடகட சத்தம் என்பனவாம். நான்கு பரிசமாவது: வாயு மிருதுப் பரிசம், அக்கினி உட்டினப் பரிசம், சலம் சீதளப் பரிசம், பிருதிவி கடினப் பரிசம் என்பனவாம். மூன்று ரூபமாவது: அக்கினி சிவப்புநிற ரூபம், சலம் வெண்மைநிற ரூபம், பிருதிவி பலநிற ரூபம் என்பனவாம். இரண்டு சுவையாவன: சலம் மதுரச் சுவை, பிருதிவி பலவகைச் சுவை என்பனவாம். ஓர்வித கந்தமாவது: கந்தம் பலவாயினும் இவற்றிற்கு முதல் ஒன்றாயிருத்தலால் கந்த மொன்றெனப்பட்டது. ஆகாய முதலிய ஒவ்வொரு பூதமும் குணபேதமா யிருத்தலின், பொருளென்ப தெங்கே? இல்லையே! குணபேதங்கள் இரண்டாக விருக்கின்றன. அவையாவன: தொழிற் குணமும் தோற்றக் குணமுமா மென்க. தொழிற்குணமாவது: தமக்கெனப் பொருள்படாத அணுக்கள் ஒன்றோடொன்று சையோகித்திருக்கும் ஒன்றன்கூட்ட விகாரமும், தோற்றக் குணமாவது: இச் சையோகம் வியட்டி சமட்டிபேத வடிவங்களாகக் காண்டலுமாம். தொழிற் குணங்களையுந் தோற்றக் குணங்களையும் ஒவ்வோர் முதலெனக்கொண்டு உணருகின்றது மயக்கமா? அன்றித் தெளிவா? மயக்கமாகலின், இம்மயக்கம் அறியாமையா? அன்றி அறிவா? உணருந்தகைய தாகலின் அறிவாமெனின்,

குறள்.

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு."

என்றதேன்? அன்றியும், ஷ்டி இருவித குணங்களுக்கும் முதலை யெட்டினதுண்டா? இல்லையே! இல்லையேனும், அவைகளைவை யெனத் தேடினதாவதுண்டா? மேற்சொல்லிய பொருளல்லவற் றைப் பொருளென்றுணரு மருளென்ற மகாவாக்கியத்திற் கிணக்க மாயிற்றே! ஆகவே, இவ்வைம்பொறிகளும் அறியாமை யென்பத தற்கு முரணென்னை? அன்றெனின், பொருளைப் பொருளென் றுணரும் அறிவாகவேண்டும். அங்ஙனமில்லையே! ஆகலின், அறி யாமையென்பதே திண்ணமென்க. அன்றியும், தம்மையறிகின்ற மேலொன்றையேனும் அறிகின்றனவா? அங்ஙனமு மில்லையே! அதனாலும் தாம் அறியாமை யாகின்றனவே! இவ்வீரிடத்தும் அறியாமை யெனப்படினும், தம்மையேனும் தாமறிவதுண்டா? அங்ஙனமு மில்லையே! முப்போதும் அறியாமைத் தன்மையா யிருக்கின்றதால் சடத்துவமென்பதற்கு முரணின்றென்க. இஃ திங்ஙனமிருக்க, மேலேயிருந்தறிகின்ற அறிவையன்றி இவைகள் ஒவ்வோர் முதலாகவேனும் இருக்கின்றனவா எனச் சற்றாகிக்கு தும். எங்ஙனமெனின், மேலே நின்றுணரும் அவ்வறிவானது வேறே யோர் விடயாகாரப்பட்டுழி, இப்பொறிகள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் பொருளாயிருக்கின்றனவாயின், நேரிலிருக்கின்ற சத்த மாதி விடயங்களை உணருமல்லவா? கிஞ்சித்தேனும் உணரவில்லை யே! ஆகலின், இப்பொறிகள் ஒவ்வொன்றும் முதலன்றென்பதே திண்ணமென்க. பொறிகள் ஓர் முதலன்றாயின், இவைகளின்றிச் சத்தமாதி விடயங்களை மேலிருக்கும் அறிவு அறியாததென்னை யெனின், அம்மேலறிவையன்றி இப்பொறிகளறியாததென்னை? மேலேயிருக்கு மறிவுக்கு இப்பொறிகளறிகருவிகளாக விருக்கின்ற தாலெனின், இதனால் விடயங்களை யறிகின்றது மேலே யிருக்கின்ற வறிவா? அன்றி இப்பொறிகளா? இப்பொறிகள்தாமெனின், இப் பொறிகட்கு மேலேயிருக்கும் அறிவு அறிகருவிகளாக இருக்க

வேண்டுமே! இப்பொறிகள் அறிகருவிகளா யிருப்பானேன்? ஓர் பொருளை மற்றோர்பொரு ளறியவேண்டுமாயின், அவ்வறிவுக்கு எது அறிகருவியா யிருக்கின்றதோ அவ்வறிகருவி அறிகின்ற தல்லவே? அதுபோல், மேலேயிருக்கு மறிவு விடயங்களையறிதற்குப் பொறிகள் கருவிகளாக விருக்கின்றமையின், அம்மேலறிவையன்றி எங்ஙனம் இப்பொறிகள் தாமே விடயங்களை அறியக்கூடும்? இதனால், பொறிகள் ஒவ்வோர் பொருளுமன்று வினைமுதலுமன்று! ஆகலின், இவைகள் முற்றும் அறியாமை யென்பதாயிற்று. ஆகவே, முன் ஞான்று இப்பொறிகளை இருப்புள்ளவைகளென்றும் வினைமுதல்களென்றும் கொண்டது மயக்கமா? அன்றித் தெளிவா? மயக்கமாகலின் இம்மயக்கம் அஞ்ஞான் றறிவாயும் இஞ்ஞான் றறியாமையாயு முடிந்தன. முடியவே, பொறிகளாகிய அறியாமையானவை, மேலிருந்தறியு மறிவுக்குப் பிராகபாவம் பிரத்தொம்சாபாவம் அன்னியோன்னியாபாவம் அத்தியந்தா பாவமாகிய இந்நான்கினையும் ஏற்கின்றமையின், அந்த நான்குபொழுதும் மேலிருந்தறிகின்ற நானென்னும் அறிவே பாவமாயிற்று. ஆகவே, அவ்வறிவு சித்தாந்த பட்சமும் இப்பொறிகள் பூர்வபட்சமுமாகின்றன. இதுகாறும் ஆராய்ந்துவந்ததில், இப்பொறிகள் நானென்பதற்குப் பொருள்களன்றென்ப தாயிற்றென்க. ஆகவே, இவ்வைம்பொறியாராய்ச்சியில் தேர்ந்த தியாதெனின் அனந்த அடுக்குப் பேதங்களாயிருக்கின்ற முதலடுக்காகிய அறிவறியாமைப் பேதமும், இவற்றிற்குமேல், உறுதியாயும் விலட்சணமாயுமிருக்கும் ஒப்பற்ற அறிவுமாமென்க.

இரண்டாவது

ஐம்பொறி ஆராய்ச்சி விளக்கம் முற்றிற்று.





உ
திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது

# அந்தக்கரண ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

இந்தவா ராய்ச்சிக்க ணேய்ந்த வகக்கரண
மெந்தவிதத் தும்முதலா வின்றதனுற்—சந்ததமுங்
கற்பனையாய் நீக்கமுற்றுக் காரணமா நானெனலே
யொற்கமில் லாவிருப்பா மோர்.

எங்ஙனமெனின், முன்னை ஞான்று ஐம்பொறி யாராய்ச்சிக்கண் நானென்பதற்குப் பொருள் இவ்வைம்பொறிகளும் அன்றெனப் பட்டமையால், வேறே எது நானெனப்படுவது? அஃதன்றோ அறிவெனப்படும். அவ்வறிவு யாது பொருள்? அந்தக்கரணமென்பாமெனின், அவ்வந்தக்கரணம் இல்லாஞான்று நானென்பதில்லாதிருக்க வேண்டுமே? அஃதில்லா ஞான்று சுழுத்தி மூர்ச்சை சமாதி முதலியவைகளாம். இஞ்ஞான்றுரைத்த அவத்தைகளிடத்து இவையில்லாமையைக் கண்டுகண்டு உணர்ந்து வருகின்றதியாது? நானென்பதன்றோ? அஃது நானென்பதாயினும், அந்தக்கரணத்தையன்றி ஐம்பொறி முதலியவைகளை உணர்ந்துவருகிறதற்கு யாதுமில்லையே யெனின், அதனால் அந்தக்கரணத்தி னியல்பைச் சற்றாய்க்குதும். எங்ஙனமெனின், அவ்வந்தக்கரணம் ஐந்தலைநாகம் போல்வது. அதாவது, ஷை சட்சுமுதலிய வைம்பொறிகளையும் ஐந்து சிரங்களாகவும், தான் இச்சிரங்களுக்கோர் உடலாகவு மியைந்து, ஷை சத்த முதலிய விடயங்களை உணர்தற்கியைந்த அறிவாயிருக்கின்றது. இருக்கு மிஃது, ஐம்பொறி வழித்தாகச் சென்றுணராவுழி விடயங்களென்பதெங்ஙனந்தோன்றும்? இதனால், அந்தக்கரணம் ஐந்தலைநாகம் போன்றதென்பதற்குமுரணின்று. ஐம்பொறிகட்கும் அந்தக்கரணந் தலைமையாயிருத்தலின், அஃதறிவெனப்படுமா? அன்றி அறியாமை யெனப்படுமா? அறிவெனப்படுமெனின், அவ்வந்தக்கரண மிரண்டாக விருக்கின்றது. அவை மனமெனவும் புத்தியெனவுமாம். அவற்றுள் ஒன்று அகக்கிரியைக்கும் மற

றென்று புறக்கிரியைக்கு மியைந்தன. அகக்கிரியைக் கியைந்தது மனமெனவும், புறக்கிரியைக் கியைந்தது புத்தியெனவு மாகின்றன. இங்ஙனமிருக்கும் இவ்வந்தக்கரணத்தை ஞானமெனவும் மனமெனவும் புத்தியெனவும் சித்தமெனவும் அகங்கார மெனவும் சில நூல்கள் பகுத்துக் கூறுகின்றன. ஏனெனின், மூலப்பிரகிருதியின் குணத்திரயத்துள் இறுதியாயிருக்கும் தமோகுணம்சமாகிய விக்ஷேபம் ஆவரணம் என்னும் இரண்டுள் விக்ஷேப சத்தியின் காரியமாகிய பஞ்சபூதங்களில், ஆகாயத்திலாகாயம் ஞானமெனவும், ஆகாயத்தில் வாயு மனமெனவும், ஆகாயத்தில் அக்கினி புத்தியெனவும், ஆகாயத்தில் அப்பு சித்தமெனவும், ஆகாயத்தில் பிருதிவி அகங்கார மெனவுமாயிருக்கின்ற இக்காரணம் பற்றியென்க. சித்தத்தையும் அகங்காரத்தையும் மனம் புத்தி இரண்டினுமொடுக்கி அந்தக்கரண மிரண்டெனவுங் கூறியிருக்கின்றனர் சிலர். எவ்வுயிருந் தேகோகமா யிருத்தலைப்பற்றி அகமெனவும் புறமெனவும் வந்திருப்பதுள் அகத்துள் மனமானது இச்சா ஞானமாக நின்றியங்குதலும், புறத்தில் புத்தியானது ஞானேந்திரிய கர்மேந்திரிய சம்பந்தமாகப் பலகிரியைகளு மியற்றுதலுமாம். புத்தியானது புறக்கரணங்களாகிய தசேந்திரியங்களோடு நிகழ்ந்து வருகின்றதென்ப தெங்ஙனமெனின், இவ்விகத்தில் ஒவ்வொருவருஞ் செய்யும் செய்தொழிலைக்கண் டதிசயித்தலும், இகழ்வுறுதலும் எதனை? அவரவர் புத்தியையன்றோ? மனதையல்லவே! எங்ஙனமெனின், ஆச்சரியமான காரியங்களைக்கண்டு இவர்களது புத்தியானது எத்துணைச் சிறப்புற்றிருக்கின்ற தெனவும், சாமானியமான காரியங்களைக்கண்டு இவர்களது புத்தியானது எத்துணை மடமையுற்றிருக்கின்றதெனவும், நீடித்து வழங்கிவருகின்றதால், இவையே சாலுமான சான்றென்க. ஷை அந்தக்கரணத்தின் தொழில் எத்தகையதெனின், ஒன்றை வேண்டுமென்று அபேட்சித்தல் மனமெனவும், அங்ஙனம் அபேட்சிக்கப்படுவதைப் பகுத்துணர்தல் புத்தியெனவும், அங்ஙனம் பகுத்துணரப்பட்டதை யானெனதென்று பந்தித்தல் அகங்காரமெனவும், இம்மூன்றையுந் தளரவிடாது உறப்படுத்திக்கொண்டிருப்பது சித்தமெனவுமா மென்க. அன்றியும், ஷை மனமென்பதன் இயற்கை குரங்கு போல்வதாயிருக்கின்றது. இங்ஙனமாகிய மனமென்பதன் திரிபே அரவுபோன் றிராநின்ற புத்தியெனவும், இங்ஙனமாகிய புத்தியின் திரிபே மதத்த ஆனை

போன்றிராநின்ற அகங்காரமெனவும், இங்ஙனமாகிய அகங்காரத்தின் திரிபே விடாது தொடர்ந்து திரியும் நாய்போன்றிராநின்ற சித்தமெனவுமாம். இப்புத்தி முதலிய மூன்றும் ஒன்றினுக்கொன்று திரிபாயிருத்தல்போல, இம்மூன்றினுக்கும் முதலாயுள்ள மனமானது எதனது திரிபெனப்படும்? இஃதும் ஓர் முதலினது திரிபாகுமன்றே? அம்முதல் மேலே நின்றுணரு மறிவென்பதன்றே? இஃதிங்ஙனமிருக்க, இவ்வந்தக்கரணம் ஐம்பொறி முதலியவைகளை அறிவதாயினும், இவைகள் மேலொன்று லறியப்பட்டனவா? அன்றி அறியப்படாதனவா? அறியப்படாதனவெனின், கிழமையென்பதற்கியையாதிருக்கட்டும்! எங்ஙனமெனின், என்மனமெனவும் என் புத்தியெனவும் என்னகங்காரமெனவும் என்சித்தமெனவும் வழங்கப்படுகின்றதென்க. அங்ஙனம் வழங்குவதற்கியைந்த அநுபவமெங்ஙனமெனின், என் மனமானது கணமும் நிலைக்காது சலித்துக்கொண்டிருக்கிறதென்றும், அங்ஙனம் சலிப்புறாது நிலைத்திருக்கின்றதென்றும், என் புத்தி நன்கு தெளிவுற்றிருக்கின்றதென்றும், அங்ஙனமின்றி மழுங்கியிருக்கின்றதென்றும், என்னகங்காரம் பந்த மேலிட்டிருக்கின்றதென்றும், அங்ஙனமின்றிக் குன்றியிருக்கின்றதென்றும், என் சித்தம் இவைகளை விடாது இரமித்திருக்கின்றதென்றும், அங்ஙனம் இரமிக்காது மிதந்திருக்கின்றதென்றும் வழங்கி வருகின்றதே சாலுமென்க. இங்ஙனம் மேலொன்று லறியப்படுகின்றமையால் இக்காரணங்களென்னவெனப்படுமெனின், அறியாமை யெனப்படுமென்க. மேலொன்றுக்குத் தாம் அறியாமையாயினும் ஐம்பொறி முதலிய அனந்த விடயபேதங்களின் பாகுபாடுகளை நன்குணர்ந்து வருகின்றமையின் அறிவென்பதற்கு முரணென்னையெனின், இவற்றை ஆராய்வுழி அறியாமை யென்பதை ஏலாதிருக்கட்டுமே! எங்ஙனமெனின், ஒன்றுக்கொன்று திரிபாயிருந் தறியப்படுவதாலென்க. மற்றவற்றையுணர்ந்துவருவதால் இவைகள் அறிவென்பதை ஏலாதிருக்கட்டுமேயெனின், இவற்றால் அறிவறியாமை யென்பதாகின்றதே! அங்ஙனமிருப்பதால் என்னிழுக்கெனின், ஒன்றுக்கொன்று நேர் எதிர்மறைக் குணங்களைப்பெற்று ஓர் முதல் எங்ஙனமிருக்கும்? ஓர் பொருள் சீதோஷ்டணமாயிருக்குமா? இராதே! அறிவாகவேனும் அன்றி அறியாமையாகவேனு மிருப்பதுதா னியல்பெனப்படும். இஃதிங்ஙனமில்லையே! இவ்வறி வறியாமை யிரண்டும் கடத்திற்

படமும் படத்திற் கடமு மில்லாவாறுபோ லாகின்றனவே! அவை, அறிவெனப்படும் ஞான்று அறியாமையும், அறியாமை யெனப் படும் ஞான்று அறிவுமில்லாமற் போகின்றன. இவற்றிற்கன்றோ? அன்னியோன்னியா பாவமென்றறிஞர் கூறுவர்? அன்றியும், அவ் வந்தக்கரணமானது தம்மை யறியும் மேலோரறிவையேனும் தாம் அறிகின்றனவா? அன்றி அறியாதிருக்கின்றனவா? அறிகின்றன வெனின், சாக்கிர சொப்பனத்தில் தாம் உண்டாயிருத்தலையும் சுழுத்திக்கண் இன்றாயிருத்தலையும் மேலொன்றால் விடா துணர்ந்து கொண்டுவர, எங்ஙனம் அம்மேலறிவை அறிகின்றன? அன்றியும், தாம் பழுதற் றிருத்தலையும் பழுதுற் றிருத்தலையும் அறிதற்கே கூடாதுழி, மேலொன்றை எங்ஙனம் அறிதற் கியையும்? மேலே யிருந்தறியும் அறிவு அகம்பொருளெனத் தம்மாலறியப் பெறுகின் றதேயெனின், அங்ஙனம் அறியப்பெறுகின்ற அவ்வகம்பொரு ளுக்குத் தாம் பிறிதின் கிழமையா யிருக்கலாமா? தம்மாலறியப் பெறுகின்றதன்றோ பிறிதின் கிழமைக் கியைந்திருக்கவேண்டும்? அன்றியும், தாமில்லாஞான்று தம்மால் அறியப்படுகின்ற அவ்வகம் பொரு ளிருக்கலாமா? தாமில்லா ஞான்று சுழுத்தியவத்தையன்றோ? அச்சுழுத்தியிலிருக்கும் அவ்வகம்பொருள் இவ்வந்தக்கரணத்தால் எங்ஙனம் அறியப்படுகின்றது? மேலும், தம்மாலறியப்படுவது அகம் பொருளெனத் தாம் கருதி நிகழ்வது அஃதுள்ள ஞான்றுமா? அஃது ள்ள ஞான்றும் தாமுண்டா? அங்ஙனமில்லையே! அஃதுள்ள ஞான் றில் தாம் ஓர்ஞான் றுண்டாயும், தாமில்லா ஞான்று அஃதுண் டாயுமிருக்கலாமா? அஃதில்லா ஞான்று தாமுண்டாயிருக்கின்ற தென்பது சுமையைச் சுமப்பவன் கீழேவிழுந்த ஞான்று அவனது சுமையானது கீழே விழாதிருக்குமாப்போலாக்கும். இஃது மிக்க விந்தை! அவ்வகம்பொருளிருக்கும் ஞான்றே தாமில்லையாயின், (அதாவது சுழுத்தி மூர்ச்சை சமாதிகளில்) அங்ஙனமில்லாமை யாகிற இக்கரணங்களால் அவ்வகம்பொருள் எங்ஙனமறியப்படும்? அன்றியும், ஒவ்வோர் நாமரூபங்களையும் ஆராய்வுழி முடிவில் அவ் வவ் நாமரூபங்க ளில்லாஞான்று இருப்பது அவ்வகம்பொருளல் லவா? அஞ்ஞான்று தாமுண்டா? இல்லையே! தமதிருப்பையும் தம தின்மையையும் இவ்விரண்டுக்கு மிடைக்கணிருக்கின்ற தமது குற்ற குற்ற நிலைமையையும் ஒருங்கேயிருந்தறிகின்ற மேலறிவை எங்ங னந் தாமறிகின்றன?

குறள்.

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா தியாங்கு."

என்ற மகாவாக்கியத்தையேனும் யோசிக்கவேண்டுமென்றோ? ஏனெனின், பொருளில்லார்க்கிவ்வுலகமில்லை யென்புழி இப்பொருள் யார்பாலுள்ளது? பொருட்பிரியமுள்ளவர் பாலன்றோ? பொருட் பிரிய மில்லாரொன்று, ஏவுதற் கர்த்தாவாகவும், இயற்றுதற் கர்த்தா வாகவும் நிகழுங் கிர்த்தியங்கள் கிஞ்சித்தேனு முண்டாயிருக்குமோ? அப்பிரியம் புருடர்பாலதன்றோ? அதுபோல், இம்மை மறுமைப் பயனாகிய சிற்றின்பப் பேரின்பத் தாகமில்லாரொன்று, கர்மோபாச னைத் தவம் புரிதற் கியைந்த இச்சா ஞானக்கிரியையாகிய அந்தக் கரணமென்னுஞ் சேட்டைகள் உண்டெனப்படுமா? அந்தச் சேட் டைகளாவன மேற்கூறிய அபேட்சை முதலியவைகளாமென்க. அவையாவன: அபேட்சியாதுழிப் பகுத்துணர்தலும், அவ்வபேட் சையும் பகுத்துணர்தலு மில்லாவுழி அபிமானித்தலும், அவ்வ பேட்சை முதலிய மூன்று மில்லாவுழி, விடயகாரமாகவே மோகாந்த கார முற்றிருத்தலு மின்றென்பதென்க. இச்சேட்டைகளன்றி அந்தக்கரண மென்பதேது? இல்லையே! இந்நான்கு புடைபெயர்ச்சியு மெதன்பாலதெனப்படும்? மேற்கூறிய பொருட் பிரியத்தின்பால தென்றாற்போல் இப்போகப் பிரியத்தின்பால தன்றோ? அப்போகப் பிரிய மியார்பாலது? மேலேயிருந்தறிகின்ற ஓர் அறிவின் பால தன்றோ? அவ்வறிவு யாதினாலறியப்படுகின்றது? கரண முதலியவற் றாலறியப்படுகின்றதா? அல்லவே? அவ்வறிவாகிய பொருளால் இக் கரண முதலியவைகள் அறியப்படுகின்றதால் இவைக ளறியாமை யென்பதற் கையமென்னை? அன்றியும், இவ்வந்தக்கரணமானது, கட்பொறி முதலியவற்றை அறிகின்றதெனமுன்னர்க் கூறியதைப் பற்றியேனும் அறிவென்பதற் கியைகின்றதா? அன்றி இல்லையா? எனச் சற்றாகிக்குதும். எங்ஙனமெனின், ஷை ஐம்பொறிகளும் இவ்வந்தக்கரணங்களுக்கறி கருவிகளாயும், தொழிற்பெயர்களாயும், அறியாமை யென்னும் சடங்களாயும், முன்னர் முடிந்தமையால், இப்

பொறிகள் பொருள்களாயிற்று? ஆகவில்லையன்றோ? இவைகள் பொருளாகாதுழி, தொழிலும் பண்புகளுமன்றோ? இத்தொழிற் பண்புகள் சொல்மாத்திரக் கற்பனைகளன்றோ? இக்கற்பனைகள் ஒவ்வோர் முதலாக உணர்வதன்றோ அந்தக்கரணமென வழங்கப்படுகின்றது! இங்ஙனம் அறியும் அந்தக்கரணம் அறியாமை யெனப்படுமா? அன்றி அறிவெனப்படுமா? அறிவெனப்படுமெனின், பொருளல்லவற்றைப் பொருளென்றுணரு மருளென்றதென்னை கூறள் மகாவாக்கியம்? இதனால், அறியாமையென்பதற் கையமென்னை? அன்றியும், சத்த முதலிய விடயங்களை அறிகின்ற இவ்வந்தக்கரணம் பொருள்களாக மயங்கி அறிகின்றதா? அன்றிக் கற்பனைகளெனத் தெளிந்தறிகின்றதா? கற்பனைகளாகவே தெளிந்தறிகின்றனவெனின், அவ்வவ் விடயங்களால் இன்பதுன்பத் தாக்கின்றியிருக்கவேண்டுமே! அங்ஙனமில்லையே! பொருளாகவே மயங்கியறிகின்றமையால், அதனாலும் அறியாமையென்பதற்கு முரணென்னை? கற்பனைகளை முதலாக மயங்கி யுணர்வதனாலும், தம்மைத்தாம் உணராமையினாலும், தலைமையையு முணராமையினாலும் அறியாமையெனப்படுமன்றோ? இதனால், அறிவென்பதற்குக் கிஞ்சித்தும் இடமில்லையே? ஆகலின், தாமொரு முதலுமன்று; வினைமுதலுமன்றென்க. இவ்வந்தக்கரண ஆராய்ச்சியிற்றேர்ந்த தியாதெனின், இரண்டாவது அடுக்காயுள்ள அறிவறியாமைப் பேதமும் இவற்றிற்கு மேல் உறுதியாயும் விலட்சணமாயுமிருக்கும் ஒப்பற்ற அறிவுமாமென்க.

மூன்றாவது
அந்தக்கரண ஆராய்ச்சி விளக்கம் முற்றிற்று.





## நான்காவது

# சிவபோத ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

இந்தவா ராய்ச்சியின்க ணேற்குஞ்சி வப்பொருடான்
சந்ததமு மாரோபந் தானுகி—யெந்தன்பா
லோர்ந்துவப்ப யாவருமே யோதுநா னும்போத
மார்ந்ததெனத் தேர்ந்திடலே யாம்

எங்ஙனமெனின், இதுகாறும் ஆராய்ந்ததில் அந்தக்கரணம் நான்கும் அறியப்படுந் தொழிற்குணமாக முடிந்தன. முடியவே, இத்தொழிற்குணங்கள், யாதின்பாலதெனப்படும்? இவற்றை மேலேயிருந்தறியும் நானென்னுமோ ரறிவின்பாலதன்றோ? அவ்வறிவன்றோ மாறாதிருக்கு மிருப்பென்பது? அங்ஙனமிருக்கு மிருப்பு யாது பொருளெனப்படும்? அஃது சிவப்பொருளெனின், சிவப் பொருளைச் சிவனாகவே கொண்டுணர்வது அறிவெனப்படுமோ? அன்றி அறியாமை யென்னப்படுமோ? அறிவெனப்படுமெனின், அச் சிவப்பொருள் பொருளெனப்படுகின்றதா? அன்றோ? எனச் சற்றாக்குதும். எங்ஙனமெனின், அச்சிவப்பொருள் கர்த்தத்துவ முற்றதா? அன்றி அகர்த்தத்துவ முற்றதா? கர்த்தத்துவ முற்றதெனின், அஃது போலியாயிருக்குங் கர்த்தத்துவமா? அன்றி ஓர் முதலாகவிருக்குங் கர்த்தத்துவமா? முதலாக இருக்குங் கர்த்தத்துவமெனின், கர்த்தத்துவமாகிய அச்சிவப்பொருள்,

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொரு
ளப்படிக் காண்ப தறிவு."

என்கிற சாதாரணுனுபவமா யிருக்குந் தகையதா? அன்றி இவ்வனுபவத்துக் கெதிர்மறை யனுபவமாயிருக்குந் தகையதா? எதிர்மறையாவது, குறள் மகாவாக்கியம்.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்றிருத்தல், சட்பாவ விகாரானுபவ மெதார்த்தமாயிருக்கின்றமையால், அவ்வப்படியே கண்டுகண் டனுபவித்துவருவது பிரத்தியட்சானுபவ முறையாயிருக்க, இதற்கெதிர்மறை யனுபவமு முண்

டோவெனின், அவ்வனுபவ மில்லாதுழி அம்மகாவாக்கியம் வரவேண்டுவதின்று. அவ்வாக்கியானுபவம் நம்முடைய அனுபவத்துக்கு விருத்தமானதா? அன்றி அவ்வாக்கியத்துக்கு நம்முடைய அனுபவம் விருத்தமானதா? அவ்வாக்கியமே விருத்தமானதெனின், அவ் விருத்தமான வாக்கியம் ஆத்மானுபவிகட் கியைந்ததா? அன்றி, உலகானுபவிகட் கியைந்ததா? ஆத்மானுபவிகட் கியைந்ததெனின், அவ்விருத்தமான வாக்கியானுபவத்தை யேலாத உலகானுபவிகள் அறிவுடையோர்களும், ஏற்ற ஆத்மானுபவிகள் அறிவின்மையருமாக வேண்டிவருமே! ஆகலின், உலகானுபவத்துக்கு அவ்வாக்கியம் விருத்தமானதன்று, உலகானுபவமே விருத்தமான தென்க. இவ்விருத்தமான உலகானுபவம் அறிவுக்குடன்பாடன்றே! அறியாமையாகிய சடத்துக்கே உடன்பாடாகின்றது. இதனால் சீவப்பொருளென்பது சடப்பொருளெனப்படுமா? அன்றிச் சித்துப்பொருளெனப்படுமா? சித்துப்பொருளெனப்படுமெனின், அஃது அறியாமை யன்றென்பதாய் முடியும்; முடியுமாயின், அச்சீவப்பொருள் என்ஞான்றும் அறிவென்பதா? அன்றி ஓர் ஞான்று அறிவென்பதா? அஃது அனாதி நித்தியத்துவமாயிருந்து எண்ணரிய பிறவிகளையும் எடுத்தெடுத்து இன்ப துன்பங்களை அனுபவித்து வருகின்றது அனுபவமா யிருத்தலினாலும்,

நன்னூல்.

"உணர்விய லாமுயி ரொன்று மொழித்த
வுடல்முத லனைத்து முயிரல் பொருளே."

எனப் பவணந்தியாருங் கூறியிருக்கின்றமையினாலும் என்ஞான்றும் அறிவுப் பொருள்தானெனின், அதனை ஆராய்வுழி, அறியாமையாய் முடியா திருக்கட்டும். அறிவென்பது அறியாமையாயும் அறியாமை யென்பது அறிவாயும் முடிவது அறியாமை யெனப்படுமன்றோ? அறிவு அறியாமை யெனற்கும் அறியாமை அறிவெனற்கும் இயையாதிருத்தலன்றோ அறிவறியாமைத்துவைதம்? இவற்றால் சீவனென்பது அறிவல்லவே! அன்றியும், சீவன் சீவனென வழங்கப்பட்டு வருவது பொருளல்லவற்றைப் பொருளென் றுணருந் தகையதா? அன்றிப் பொருளைப் பொருளென் றுணருந் தகையதா? பொருளைப் பொருளெனக் கொண்டே உணரு முணர்வு பொருளெனின், அஃது நிகழும் பொருளா? அன்றி நிகழாப் பொருளா? நிகழும் பொருளெனின், வேறொன்றில் நின்று நிகழுப

வனோ? அங்ஙனமன்றி நிகழுபவனோ? அவத்தாத்திரயங்களில் நின்று நிகழுபவனெனின், அவ் வவத்தைகளில் ததாகாரமாய் நின்று நிக ழுபவனோ? அன்றி எதிராகாரமாய் நின்று நிகழுபவனோ? அஃது இயற்கைச் சார்போதனாகலின், தனித்து நிகழுபவனன்று: ஒன் றைச் சார்ந்தே நிகழுபவன் - அதாவது உபாதியையெனின், இத னால் சாக்கிரமுதலிய மூன்றவத்தைக் கண்ணும் தூலமுதலிய உபா திகளைச் சார்ந்தவனென் றாகின்றது. ஆகவே இத்தூல முதலிய உபாதித்திரயங்களைப் பொருள்களெனச் சார்ந்து நிகழுபவனோ? அன் றிக் கற்பனைகளெனச் சார்ந்து நிகழுபவனோ? இம்மூன்றும் ஒவ் வோர் முதலாகலின் பொருள்களென்றே சார்ந்து நிகழுபவனெனின், இவ்வுபாதித் திரயங்களை நான் நானென மருவி நிகழுபவனோ? அன்றி மருவாது நிகழுபவனோ? சார்போதனாகலின் மருவியே நிகழுகின்றவ னெனின், இவ்வுபாதித் திரயங்கள் பொருள்களா? அன்றிக் குணங் களா? தொழில்களா? பொருள்களே யெனின், விகாரப் பொருள் களா? அன்றிச் சுயம்புப் பொருள்களா? சுயம்புப் பொருள்களே யெனின், இவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வோ ருபாதான கார ணத்தை யேலாமலும், பின்னொன்று நாசத்தை யேலாமலும், அதன் பின்னொன்று தத்தம் உபாதானகாரணமா யாகாமலும் இருந்தபடியே யிருக்கவேண்டுமே! அங்ஙனமின்மையால் பொய்ப்பொருள்க ளென் பதற்கு முரணென்னை? இப்பொய்ப் பொருள்களை மெய்ப் பொருள் களாக நானென மருவி நிகழுவதன்றோ சீவனெனப்படுவது? பொய்ப்பொருள்களைப் பொய்ப்பொருள்களென்றே நானென மருவி நிகழுபவனெனின், இவ்வுபாதிகளால் முற்றும் அல்லலுறுவானேன்? அல்லலுறுதற்கு யார் சம்மதிப்பவர்? அன்றியும், இவ்வாறுன இன்பதுன்பானுபவம் பொய்யா யிருக்கவேண்டுமே! உண்மையா யிருக்கின்றதே! கயிற்றின்கண் அரவாகத் தோற்றுதலைப் பொய் யென்றுணர்ந்து பின்னொன்று அதை மெய்போலப் பாவித்துழி, அதனால் பாவிப்பவனுக்கு இன்ப துன்பானுபவம் உண்டாயிருக் குமா? அவ்வின்ப துன்பங்கள் விளைந்ததாகக் கொள்ளினும் அவை அநுபவப்படுமா? படாதன்றோ! அங்ஙனம் இவ்வுபாதித் திரயங் களால் வரும் இன்ப துன்பானுபவம் பொய்யாக உண்டாயிருக்கின் றதா? இல்லையே! உண்மையாக விருக்கின்றதால், இவ்வுபாதிகளை நானென மருவி நிகழுவது பொய்மையாகவன்று. பொய்மையாகிய இவ்வுபாதித்திரயங்களை மெய்ம்மையாகக்கோடல் மயக்கமா? அன்

றித் தெளிவா? மயக்கந்தானெனின், இதற்குமேல் இவற்றை நான் நானென மருவியது இரட்டித்த மயக்கமன்றோ? இவ்விரு மயக்கத்திற்குமேல், இகபர போகத்திற் கியைந்த இச்சாஞானக் கிரியைக ளெழுவது இன்னும் அதிகரித்த மயக்கமன்றோ? இம்மயக்கங்களுக்கு மேல், தன்னை விளக்கிவைக்கும் சத்பிரமாணங்களாகிய பிரபல சுருதிகளைப் பசுநூல் மோகநூல் முதலியனவாகத் தூடித்து வருவது இன்னும் விசேடமாக அதிகரித்த மயக்கமன்றோ? இம்மயக்கங்கள் அறியாமை யெனப்படுமோ? அன்றி அறிவெனப்படுமோ? மிக்க அறியாமையாகலின், இவ்வறியாமை யன்றோ சீவனெனப்படுவது? தனக் கயலாக அனைத்து மிருப்பதாகவும் அவற்றிலொன்றை நானாகவும் மற்றொன்றை எனதாகவும் உணருகின்றதால்,

சசிவர்னபோதம்.

"மெய்மையறி வல்லதயில் வேறறிவ தெல்லாந்
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே."

எனக் கூறியிருக்கின்றது. இஃதிங்ஙன மிருக்கட்டும். இன்னும் சீவப்பொருளைப்பற்றிச் சற்றூகிக்குதும். நானென்கிறது சீவப்பொருளாயின், பரிபாக முதிர்ச்சி வந்த பின்ஞான்று இருவகைச் சமாதியையு மெய்துவதியார்? நாமன்றோ! நாம் அவ்விருவகைச் சமாதியையும் எய்துவது யாதுக்கு? சீவபாவ மகலற்கன்றோ? சீவபாவமாவது மேற்கூறிய உபாதித் திரயங்களை நான் நானென மருவி அல்லலுறு மயக்கம். இங்ஙனமாகிய விபரீதமயக்கமன்றோ போதமெனப்பட்டது? இம்மயக்கமாகிய போதம் நமக்குக் கிழமைப் பொருளா? அன்றி நாமா? இச்சீவபோதம் கிழமையெனப் படுமோ வெனின், என் சீவன் என் சீவனென வழங்கப்படாதிருக்கட்டும். வழங்குவதால், கிழமைப்பொரு ளென்பதற்கு முரணின்று. இன்றாகவே, இஃது பிறிதின்கிழமையா? அன்றித் தற்கிழமையா? தற்கிழமைதானெனின், இச்சீவபாவம் நம்மை விட்டகல மேற்கூறிய இருவகைச் சமாதிக்கண்ணும் திரிலோகத்திலுமில்லாத அரியவுழைப் பெய்துவானேன்? அன்றியும்,

வைராக்கிய தீபம்.

"திரிவித வுலகத் தரிதொரு ஞானி தேர்விடத் தென்றுமோ ரொன்றை
யுரைசெயிற் பிரம வித்தையொத் தரிதோ வென்றுமிவ் வுலகுரைப் பதனு
லரிசொல்கீ தையிலும் பிரமசா தகரின் யார்க்குள வருத்தமென் பதனாற்
பெரியதோர் வருத்த மெனைமறை துணிந்தப் பிரமநா னெனவிருத் தலினே."

என்று கூறியிருக்கின்றது. இங்ஙனம் எய்தும் உழைப்புஷூ உபாதித்திரய நானென்பது இறத்தற்கா? அன்றி இருத்தற்கா? இறத்தற்காகலின், கரணேந்திரியாதிகளுக்கு அகோசரமாய் இலங்கும் தனது அதிட்டான பிரமத்தைப் பலகற்பமும் கண்டுகொண்டு பழகவேண்டுவ தாயிற்றென்க. இதனால் நானென்பது சீவப்பொருளெனப்படுமா? படாதே ஆகலின், நானென்பது யாது பொருளெனத் திடமுற் றிருக்கின்றது? அவத்தாத்திரய சகிதமாகிய அஞ்ஞான திசைக்கண்ணும் அவ்வவத்தாத்திரய ரகித இருவித சமாதியாகிய ஞானதிசைக்கண்ணும், அங்கங்குள்ள இலட்சியானுபவங்களைக் கண்டு கண் டனுபவிப்பது நானென்பதா? அன்றி வேறென்பதா? நானென்பது தானெனின், அந்த நான் எங்ஙனம் சீவப்பொருளெனப்படும்? நானென்னும் அகம்பொருள் உபாதித்திரய நானாக ஆரோபித்துழியன்றோ சாக்கிராவத்தைக்கண் விசுவனாகவும், சொப்பனவத்தைக்கண் தைசதனாகவும், சுழுத்தியவத்தைக்கண் பிராக்ஞனாகவும், அவ்வவற்றிற்கும் இயைந்த இத்தலைப் பெயர்கள் வந்தன? அங்ஙனம் வந்ததிலும் விசுவன் முதலிய ஒவ்வோர் தலைப்பெயருக்கும் இயைந்த பரியாய நாமங்களும் வந்திருக்கின்றன. அவைகளாவன: க-வது, தூலசரீர அபிமானத்தினால் விசுவனென வந்துள்ள அவசரத்தில் சகல தத்துவங்களுடன் கலந்து விவகரிக்கின்றமையால் வியவகாரிகனெனவும், அவித்தையாப் பிரதிபிம்பனாதலால் அந்தக்கரணப் பிரதிபலனனெனவும், சொரூப சமாதிக்கண் விளங்கிய கூடத்த சைதன்னியச் சாயையாதலால் சிதாபாசனெனவும், சகல தத்துவங்களாகப் பரிணமித்தது போலிருத்தலால் விட்சேபனெனவும், அந்தக்கரண சம்பந்தமாக நின்றுணர்தலால் பிரமாத்துருவெனவும், இவையனைத்திற்கும் கர்த்தத்துவ முற்றிருத்தலால் கர்த்திருவெனவும், அனைத்தையும் அனுபவிப்பவனாதலால் போத்திருவெனவும், அனைத்தும் தன்னாலறியப் பெறுகின்றமையால் விஞ்ஞானமயனெனவும், சரீரமுதலியவற்றோடு பந்தித்திருத்தலால் குடும்பியெனவும், தேகத்தையன்றித் தனது எதார்த்த சொரூபம் விளங்காமையால் சரீரியெனவும், நீ யென்கிற விரண்டாம் பதத்திற்கு வாச்சியார்த்தனாதலால் தொம்பத முக்கியார்த்தனெனவும், ஆகிய இவையும் பிறவும் வந்திருக்கின்றன. உ-வது, சூக்குமசரீராபிமானத்தினால் தைசதனென வந்துள்ள அவசரத்தில் சாக்கிராவத்தை லட்சியானுபவ வாசனை பிரதிபலிக்

இன்றமையால் பிராதிபாதிக சீவனெனவும், சாக்கிராவத்தையைக் கற்பித் துணர்வதுபோல் சொப்பனத்தைக் கற்பித் துணருகின்றமையால் சொப்பன கற்பிதனெனவும், ஆகிய இவையும் பிறவும் வந்திருக்கின்றன. ௩-வது, காரண சரீராபிமானத்திஞல் பிராஞ்ஞனென வந்தது யாதுகாரணமெனின், சுழுத்திக்கண் யாதொன்றுந் தோன்ருமையை அறிந்து பின்ஞான்று விழித்தறிவித்தற்கு அச்சுழுத்திக்கண் அறிவுவடிவமாக இருந்ததனுலென்க. இப்பிராக்ஞனெனப்பெயர் வந்துள்ள அவசரத்தில் சுழுத்திக்கண் தனித்திருந்தும் அதனைக் கிஞ்சித்து முணராது மேல் தூலசூக்கும விளைவுக்குத் தான் அங்குரமாயிருத்தலின் காரணவியட்டி சரீராபிமானியெனவும், அச் சுழுத்திக்கண் தான் தனித்திருந்தும் தற்பிரகாசம் மழுங்கி மூடப்பட்டு அம்மூடத்தினின்று தானே காரியப்படுதற் கியைந்திருத்தலால் காரியோபாதிக னெனவும், இன்னும் இதுபோல்வன பிறவும் வந்திருக்கின்றன. ஷை விசுவன் முதலிய தலைப் பெயர்களும் அவ்வப் பெயர்கட்கு இயைந்த பரியாயப் பெயர்களும் வந்து நிகழுவது யாருக்கு? நானென்பதற்கன்ருே? அந்த நான் அவத்தாத்திரய சகிதமாயுள்ள சீவபோத நானு? அன்றிச் சொரூப சமாதிக்கண் விளங்கிய சிவபோத நானு? சிவபோதநான்ரு னெனின், ஷை விசுவன் முதலிய மூன்றினுக்கும் அதீதப்பட்டிருக்கும் இருப்புக்கு அவத்தாத்திரய விலட்சணனெனவும். அவ்விலட்சணத்தில் அறிவே வடிவாய் விளங்கலால் சேதனனெனவும், அகம்புற மென்பவற்றில் அகத்தில் நிறைந்திருக்கின்றதால் அந்தரியாமி எனவும், சிறிது மிச்சையின்றி ஞானுனுபவங்களை அனுபவித்து வருதலால் அனுசந்தாத்திருவெனவும், யாவைக்கும் தானே இருப்புப்பொருளாயிருத்தலால் சுயஞ்சத்தார்த்த னெனவும், கடத்துணை வளைபட்டதுபோலிருக்கிற ஆகாயத்தையொத்துத் தேகத்துணை வளைபட்டது போற் காண்டலால் அவிச்சின்ன சீவனெனவும், காரணகாரிய கற்பனைகளிறந்து விளங்குவதால் பாரமார்த்திக னெனவும், மற்ெருன்ருலன்றித் தானே சுயம்பிரகாசமாய்ப் பிரகாசிக்கின்றதால் துரியனெனவும், யாவைக்கும் தான் முற்றுஞ் சாட்சித்துவமாயிருத்தலால் சான்றின னெனவும், தூல முதலிய சரீரத்திரய சம்பந்த மின்றி யிருத்தலால் பிரத்தியேகாத்மா வெனவும், நீ என்கிற இரண்டாம் பதத்தில் உறுதிப்பொரு ளாதலால் தொம் பத இலட்சியார்த்த னெனவும், இன்னும் இதுபோல்வன பிறவும்.

வந்திருக்கின்றவை சீவபோத நானுக்காக்கும்! சதா நிட்டைகூடிச் சமாதி எய்துவது ஆத்மபோதங் கெட்டு அல்லது சிவபோதங் கெட்டுச் சீவபோதம் ஆதற்காக்கும்! இஃது வியப்பினும் மிக்க வியப்பு!! சோபாதிகமெனவும், நிருபாதிகமெனவும் இரண்டிருக்கின்றன. சோபாதிகமென்பது உபாதிசகிதமாக நிற்றல். நிருபாதிகமென்பது அவ்வுபாதி ரகிதமாக நிற்றல். அவை தூலமுதலிய உபாதிசம்பந்த நானும், அத்தூல முதலிய உபாதிசம்பந்தமின்றி நானுமிருத்தல். அவத்தாத்திரயமற்ற இருவித சமாதிக்கண் நானென்பது அபவாத முற்றுழி இச்சீவபோத முண்டா? சீவபோத வெழுச்சி உபாதித்திரய விலட்சியானுபவ முள்ளஞான்று மன்றோ? இப்போத மகன்ற மேற்படி சமாதிக்கண்ணும் நானென்பதின்றோ? இன்றெனின் நிறனுபவ சுழுத்திக் கண்ணும் நானென்னும் அறிவில்லாமையா அச்சுழுத்திக்கண் மக்கின ஆனந்தத்தை அனுபவித்து விழித்துப் பின்ஞான்று அங்குள்ள அனுபவத்தை வந்துணர்த்துகின்றனர்? இதுபோல் அச்சமாதிக்கண் நானென்பதில்லாமையா? அங்குள்ள சிவ இலட்சியாநந்தத்தை அனுபவித்து அச்சமாதி கலைந்து பின்ஞான் றுணர்த்துகின்றது என்னை?

தத்துவராயர் பாடுதுறை.

"அஞ்ஞான காரிய மனைத்து மறவிட்டு
விஞ்ஞான மானோமென் றுந்தீபற
வெளியாகி நின்றோமென் றுந்தீபற." என்றும்,

நிசாநந்த வுந்தியார்.

"தானயிருந்த தலைமைப் பரம்பொருள்
நான யிருந்தேனென் றுந்தீபற
நன்றாகப் பார்த்திடி லுந்தீபற."

என்றும் கூறியவாற்றாற் காண்க. மேற்படி சுழுத்திக்கண் நானென்பது இல்லையாயின் சமாதிக்கண்ணும் நானென்பதில்லை யெனப்படும். அஞ்ஞானநிசைக்கண் பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மருளானுபவமாகலின், இம்மருள் சீவபோதமென்பதா? அன்றி வேறுபோத மென்பதா? வேறுபோதமு முண்டோவெனின், அவ்வேறுபோதமு மிரண்டெனப்படும். அவை பரமாத்மபோத மெனவும் அந்தராத்மபோத மெனவுமாம். இவற்றுள் பரமாத்மபோதமென்பது மேற்படி சமாதிக்கண் உதயமான சுக இலட்சியானுபவத் தெளிவாம். இத்தெளிவே சிவபோத மெனவும் அல்லது

ஆத்மபோத மெனவும், அந்தராத்ம போதமென்பது மேற்படி சுக இலட்சியானுபவமுமின்றி உபாதித்திரயங்களை நான் நானென்னும் மருளானுபவமுமின்றி மத்தியபோதானுபவ மெனவுமாமென்க. மதத்தர்கள் பரமாத்மா வெனவும், சீவாத்மா வெனவும் இரண்டென வழங்குகின்றார்களே யெனின், நித்தியாநித்திய வத்துவிவேக முதலிய சாதனசதுட்டயம் வாய்ந்த பரிபாக முமூட்சுக்கள் என்ன ஆத்மா வெனப்படுவர்? சீவாத்மா ஆவாரெனின், இத்தூல முதலிய உபாதித்திரயங்களை நான் நானென்றழுந்தி யிருப்பவராகவேண்டும். பரமாத்மா ஆவாரெனின் மேற்படி இருவித சமாதிக்கண்ணும் சிற்பிரகாசமே நானெனத் தெளிந்தவராகவேண்டும். இவ்விரண்டுமெல்லாதவரெனின், அவர்களுமாத்மாக்களன்றோ? ஆமெனின், அவர்கள் என்ன ஆத்மா வெனப்படுவர்? மத்திய கதமாயிருப்பவரன்றோ? ஆகலின், அந்தராத்மாவென்பதற்கு முரணின்றென்க. சீவபோதம் கற்பிதமென்பதற்கும், ஆத்மபோதம் எதார்த்த மென்பதற்கும் உதாரணம்:—

ஞானவாசிட்டம்.

"சீவனெவ் வறிவினாலே தெரிவுறு மதுபதார்த்தந்
தாவுறும் விவிதமான சங்கற்ப விகற்பமுற்று
மேவிய மயக்கந்தன்னால் விரிந்தநீ ரலையாமாபோல்
பூவல யங்களாகிப் பொலிந்தது புகன்றசீவன்." என்றும்,

"சீவனென் கின்றசொல்லும் பொருளுமாய்ச் செறிந்தவான்மா
பாவனை மனனத்தாலே பருத்தெழு மனமதாகும்
மேவரும் பிரமந்தன்னில் வேலையி லலைபோல்வந்து
தாவுறு முள்ளந்தானே நினைந்தவா சகங்கற்பிக்கும்." என்றும்,

"நானெனும் பொருள்காணாதோர் ஞானவா காயங்காணார்
நானெனும் பொருளைக்கண்டோர் ஞானவா காயமாவார்
நானெனு மகங்காரக்கார் ஞானவிண் மதியைமூடி
னானெனாப் பரமவாம்ப னன்மலர் விரியாதன்றே."

என்றும் கூறியவாற்றாற் காண்க. அன்றியும், இருவித சமாதிக்கண்ணும் சிவேசுர சகத்தனைத்தும் தோற்றன் மாத்திரமாக நிகழுமென்பதற் குதாரணம்:—

ரி பு கீ தை.

"தன்னு மாயைய வித்தைக டானிலை தொடரு மீசனுஞ் சீவனுந் தானிலை
பின்ன மின்றிய கண்டம தாகிய பிரம மேயக மென்றுதெ ரிந்திடும்
சின்ன மில்திட மாகிய போதமே சீவன் முத்தனுக் கானவி லக்கண
மென்ன லாநந்தத் தாண்டவ மாடும் மீசன் றன்பரி பூரண ரூபமே."

எனக் கூறியவதனுற் காண்க. ஷை சீவன்முத்தி முதிர்ச்சி யாகிய விதேகமுத்திக்கண் ஷை சீவேசுர செகத்தனைத்தும் தோற் றன் மாத்திரமு மின்றென்பதற் குதாரணம்:—

ஸ்ரீ பு கீ தை.

"தோற்று கின்ற சகபர சீவரின் தொடர்பி யாதொன்றுஞ் சற்றுமி லாமலே
சாற்று வாக்கு மனங்கட் ககோசர சச்சிதானந்தத் தற்பர மாகவே
வேற்று மையின்றி யென்று மிருப்பதே விதேக முத்த னிலக்கண மென்றிட
லேற்று மானந்தத் தாண்டவ மாடுநம் மீசன் றன்பரி பூரண ரூபமே."

என்பதனுற் காண்க. இதுகாறும் கூறிப்போந்ததனுல், நானெ ன்ப்படுவது என்ன பொருளாயிற்று? சீவப்பொருளாயிற்ருே? ஆக வில்லையே! இதற்கென்செய்தும்!! கடப்பொருளானது மட்பொரு ளுக்குத் தான் வேறிடத்ததாக வின்றேனும், அந்த மட்பொருளின் கண் தாெனாரு முதலாக இருப்பதனு லன்ருே, பிடித்தல், எடுத்தல், வைத்தல், சமைத்தல், புசித்தல் முதலிய பற்பல விவகாரானுபவங் கள் நிகழ்கின்றன? இதுபோல், சீவப்பொருளென்பது நானென் னும் பொருளுக்குத் தான் வேறிடத்ததாக இன்றேனும் அந்த நா னென்னும் பொருளின்கண் தாெனாரு முதலாக இருப்பதனு லன்ருே அறிதல், அறியாதிருத்தல், நினைத்தல், மறத்தல், விரும் புதல், வெறுத்தல், கேட்டல், பரிசித்தல், பார்த்தல், ருசித்தல், முகர்தல், வசன தான கமன விசர்க்க ஆநந்த முதலிய பற்பல கிரி யானுபவங்கள் நிகழ்கின்றன வெனின், கடோபாதி யென்பது தொழிற் குணமுந் தோற்றக் குணமுமா? அன்றி ஓர் பொருளா? அஃதோர் பொருள்தானெனின், ஓர் பொருளின்கண் மற்ருேர் பொருள் எங்ஙன மிருக்கும்? அங்ஙன மிருப்பதாகக் கொள்ளினும், அந்தப் பொருளுக்குத் தசபுறங்களுள் எந்தப் புறத்திலாவ திருத் தற் கியையுமன்ருே? அதுபோல், கடப்பொருள் எந்தப் புறத்தி லிருக்கின்றது? எந்தப்புறத்து மில்லையே! தொழிற் குணமாயுந் தோற்றக்குணமாயு மிருக்கின்றதால் அதற் கொருபுறமும் வேண்டு வதின்று. அதுபோல், சீவனென்பது ஓர் பொருளாயின், இச்சீவ னுக்கு ஆதாரமாயுள்ள அவித்தியாந்தக் காரணத்திற்கும் அவ்வவித் தையின் காரியமாகிய உபாதித்திரயம், அவத்தாத்திரய முதலிய வற்றிற்கும் ஆதாரமென்ப தியாது? நானென்பதன்ருே? அந்த நானுக்குப் புறம்பென்பது எங்கே? சமஸ்தமும் கயிற்றரவுபோல் நானென்பதிலாகலின், சீவனென்பது எங்கிருக்கின்றது? நானென்

பதி லிருக்கின்றதெனின், நானென்பதற்குப் புறம்புள்ளதாயின் உள்ளுமிருக்கலாம். அங்ஙனம் இல்லையென்பதற்கு உதாரணம்:—

பாடுதுறை.

"உண்மை வடிவேயென் றாதேடா காள
முட்புறம் பில்லையென் றாதேடா காளந்
திண்மை யுணர்வேயென் றாதேடா காளந்
திசைதிசை தோறுநின் றாதேடா காளம்." என்றும்,

"ஊனே மறிவதென் றாதேடா காள
முணர்வே பிரமமென் றாதேடா காள
நானே யவனுமென் றாதேடா காள
நானுவ தில்லையென் றாதேடா காளம்."

என்றும் கூறியவாற்றாற் காண்க. முன்னொன்று கவியில் நானென்பது அகம்புற மற்றதென்றும், பின்னொன்று கவியில் நானென்பது பிரமசொரூபமாய் விளங்கிய ஞான்று உபாதித்திரய நானுகிய சீவபோதம் அற்றதென்றும் பொருளாயிற்றென்க. இங்ஙனமிருக்க, சீவனென்ப தோர்பொருளா? நானென்பது அகம்புறமுடையதா? இல்லையே! இச்சீவத்துவத்தைப்பற்றி இன்னுஞ் சற்றாகிக்குதும். எங்ஙனமெனின், சீவன் சீவனென வழங்கு மிப்பெயரானது இடுகுறிப்பெயரென்பதா? அன்றிக் காரணப்பெயரென்பதா? இடுகுறிப்பெயரென்பதுதானெனின், எந்த ஓர் முதலுக்கு இப்பெயரிட்டு வழங்குகின்றது? அறிவுக்கெனின், அவ்வறிவு நானென்பதா? அன்றி வேறென்பதா? நானென்பதுதானெனின், நானென்பது இப்பெயரை ஏற்பானேன்? பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்ந்து அனுபவிப்பதாலெனின், அங்ஙனம் உணர்வது அறியாமை யன்றோ? அன்றெனின், பொருளைப் பொருளென் றுணர்வது அறியாமையாக்கும்! அங்ஙனமு மன்றெனின், பொருளல்லவற்றைப் பொருளென் றுணர்வது எற்றுக்கு? அதாவது நானல்லாததை நானென மயங்கி மருவல். அங்ஙன மயங்கி மருவல் அவ்வுபாதி காரணமாகச் சீவிப்பதற்கன்றோ? அங்ஙனம் சீவிப்பது, அறியாமை யெனப்படுமா? அன்றி வேறெனப்படுமா? வேறெனப் படுமெனின், அஃதறிவாக வேண்டுமே! ஆகலின், அவ்வறிவு நானென்ப தாகின்றது. ஷை உபாதி காரணமாகச் சீவிப்பது நானென்பதாயின், இருவிதச் சமாதியு மெய்திய சீவன்முத்தித் திசைக்கண் நானென்ப திருப்பதால், இவ்வஞ் ஞானதிசைக்கண் சீவிப்பது யாது? நானென்பதுதானெனின், இங்கே நானென்பது

எத்துணைத்தாக நின்று சீவிக்கின்றது? உபாதித் துணையாகவெனின், ஆங்கிருவகைச் சமாதிக்கண்ணும் சிவானந்தத்தை இருந்தனுபவிக் கும் ஞான்று எத்துணையது? ஆங்கு நிருபாதிகமும், ஈங்குச் சோபா திகமுமாகின்றனம். உபாதித்துணை நானென்பதாயின், இவ்வுபாதி காரணமாகச் சீவித்த லென்பதும் நானென்கிறதற்கு ஐயமின்று. அந்த நிருபாதிகமாகிற சீவன்முத்தியில் காலதேசவத்து பரிச்சேத ரகித நானும், இச்சீவதிசையில் உபாதித்துணை நானும் இருக் கின்றனம். இவ்விரண்டு நானுள் எந்த நான் அதிட்டான நானெனப் படுவது? எந்தநான் ஆரோபித நானெனப்படுவது? கண்டப்பட்டுச் சீவிக்கின்ற நான் ஆரோபித நானென்பது. கண்டப்பட்டிருத்த லாவது உபாதியாலன்றே? இவ்வுபாதியானது கடோபாதிபோன்று கற்பிதமாயிருத்தலின், இக்கற்பிதங் காரணமாக நானென்பதும், நான் கண்டப்பட்டிருத்தலென்பதும், கற்பிதமன்றே? அன்றியும், இந்தக் கற்பித நான் மூன்றாயிருக்கின்றது. மூன்றாயிருத்தலாவது தூல முதலிய வுபாதித்திரயமாம். சாக்கிராவத்தாத் தூலநான் சொப் பனாவத்தாச் சூக்குமநானினும், சொப்பனாவத்தாச் சூக்கும நான் சாக்கிராவத்தாத் தூலநானினும் இல்லாவாறுபோல், இவ்விரண்ட வத்தாத் தூல சூக்கும நானென்பவை, சுழுத்தியவத்தாக் காரணோ பாதி நானில் இன்றாகின்றன. இம்மூன்றவத்தைகளும் இவ்வவத் தைகட் கியைந்த உபாதித்திரய நானென்பவைகளும் சகடக்கால் போல் மாறிமாறித் தோற்றுகின்றன? இங்ஙனமாகிய இக்கற்பனை கள் எதன்கண் தோன்றி மறைகின்றன? நாமாகிற சிந்தையிலன்றே! அச்சிந்தையன்றே சிதாகாச மெனப்படுவது? அச்சிதாகாசமன்றே அகம்பொருளெனப்படுவது? என்னை?

தத்துவராயர் பாடுதுறை.

"எட்டுத் திசையு நிறைந்தவூ ரெங்களு
ரேகாந்த மாகி யிருக்குமூ ரெங்களூர்
தட்டற்ற யோகிக டங்குமூ ரெங்களூர்
தன்மபா வங்க டவிர்ந்தவூ ரெங்களூர்."

என்பதனாற் காண்க. இங்ஙனமாகிய தீர்ந்த நிலையன்றே முன் ஞான்று அதிட்டான நானென்பது? அவ்வதிட்டான நானைத் தவிர இவ்வாரோபித நான் இல்லாவாறுபோல் இவ்வாரோபித நானென் பதை யன்றி அவ்வதிட்டான நான் இல்லையெனப்படுமோ? இருக்கின் றதால், இஃது மட்பொருளையன்றிக் கடப்பொருளின்றாயும், கடப்

பொருளையன்றி மட்பொரு ளுண்டாயும் இருக்கின்றனபோலாம். இவற்றால் தேர்ந்தது யாதெனின், முற்பொழுதும் பிற்பொழுதும் மட்பொரு ளுண்டாயும் இடைப்பொழுது கடப்பொருள் மட்பொருளையன்றி இருத்தல்போ லிருக்கினும், உண்மையில் இவ்வோர்போதேனும் மட்பொருளையன்றிச் சிறிதேனுமுண்டோ? இன்றாகலின், முப்பொழுதும் உள்ளது மட்பொருளும், அம்முப்பொழுதும் இல்லாதது கடப்பொருளுமாகின்றன. இதுபோல், அவ்வதிட்டான நானென்பதைத் தவிர, ஆரோபித நான் இன்றாயும், இவ்வாரோபித நானைத் தவிர அதிட்டான நான் என்பதுண்டாயும் இருக்கின்றன. இதனால், ஆரோபித நானுக்கு முற்பொழுதும் பிற்பொழுதும் அதிட்டான நானென்பதுண்டாயும், இடைப்பொழுது இவ்வாரோபித நான் அதிட்டான நானென்பதை யன்றி இருத்தல்போ லிருக்கினும், உண்மையில் இவ் வேளைபோதேனும் அதிட்டான நானென்பதையன்றிச் சிறிதேனு முண்டோ? இன்றாகலின், முப்பொழுதுமுள்ளது அதிட்டான நானும், அம்முப்பொழுது மில்லாதது ஆரோபிதநானு மாகின்றன. ஆகவே, என்றுமுள்ளது அதிட்டான நானென்பதே திண்ணமாயிற்றென்க. இதனால் இவ்வஞ்ஞான திசைக்கண் சீவிப்பது அதிட்டான நானென்பதன்று. ஆரோபித நானாகிய அறியாமை யென்றாயிற் றென்க. இதுகாறும் கூறிப்போந்ததால் (அவ்வதிட்டான நானே சித்தாந்த பட்சமாயினும்) இதற்கு மேல் உண்மையில் இவ்வதிட்டான நானும் சித்தாந்தமன்று. எங்ஙனமெனின், முன்றோன்று ஆரோபிதநான் பூர்வபட்சத்திற் கியைந்ததால் அதைப்பற்றிப் பின்றோன்று அதிட்டான நான் சித்தாந்தமாயிற்று. ஆரோபித நான் அதிட்டான நானை நோக்கியதுபோல், அதிட்டானநான் மேலே யிருக்கின்ற தானென்பதை நோக்குழி இவ்வதிட்டான நானும் சித்தாந்தப்படாது பூர்வபட்சமாகின்றதென்க. இவற்றை இன்னுஞ்சற் றாகிக்குதும். எங்ஙனமெனின், நானென்னும் அகம்பொருளுக்கு அதிட்டானத்துவம் இயற்கை யென்போமா? அன்றிச் செயற்கை யென்போமா? இயற்கை யென்போமெனின், இவ் வதிட்டானத்துவம் சிவபோதமாயிற்று. ஆகவே, அவத்தாத்திரய சகிதத்தில் சீவபோதமா யிருப்பதியாது? நானென்னும் அகம்பொருளன்றோ? அகமென்பது சீவபோதமாயின், சமாதிக்கண் சிவபோதமாய் நிற்றல் வேறு அகமா யிருக்கவேண்டும். வேறு நான்றானெனின்,

தத்துவராயர் பாடுதுறை.

"அஞ்ஞான காரிய மனைத்து மறவிட்டு
விஞ்ஞான மானேமென் றுந்தீபற
வெளியாகி நின்றோமென் றுந்தீபற."

எனக் கூறியிருப்பானேன்? இதனால் சீவபோதமாய் நின்ற அவத் தாத்திரய முதலிய கற்பனைகளைக் கழித்து நிருபாதிக சிவபோத மானோ மென்றதாயிற்று. ஆகவே, முன்னான்று சீவபோதமாய் நின்றதும் நானென்பதே, பின்னான்று சிவபோதமாய் நின்றதும் நானென்பதே, இவற்றால், நானென்பது இவ்விரண்டு மெனப் படுமா? அன்றிப் படாதா? இரண்டுமே நானெனின், சீவபோத அஞ்ஞானத்தின் சிவபோத மெய்ஞ்ஞானமும் சிவபோத மெய்ஞ் ஞானத்தில் சீவபோத அஞ்ஞானமும் இன்றாகின்றன. இவற்றையே, ஒன்றிலொன் றில்லையென்னும் அன்னியோன்னியாபாவ மென்பர் சத்துக்கள். இங்ஙனமிருக்கும் இவ்விரண்டினும் நானென்னு மகம் பொருள் உண்டென்பதா? அன்றி இன்றென்பதா? உண்டென்பது தானெனின், இங்ஙனமாகிய நானென்பது ஞானஞ் ஞானமாகிய சிவபோதமுஞ் சீவபோதமுமா? இவ்விரு போதமும் அன்னியோன் னியாபாவத்தை ஏற்கின்றமையால் இவ்விருபோதமும் நானென்ப தன்றெனின், நானென்பதையன்றி இவ்விருபோதமும் முண்டெனப் படுமா? படாதெனின், இவ்விருபோதமும் அன்றெனவும் இன் றெனவு மாகின்றன. ஆகின்றதால், நானென்பது விட்டுவிடாத இலக்கணைப்பொருளாகின்றது. எங்ஙனமெனின், இவ்விருபோதமும் தீர்ந்த அகம்பொருள்கள் எனப்படாமையால் அவ்வகம்பொருளை இவை விட்டதும், அவ்வகம்பொருளையன்றி இவ்விருபோதமும் இன்மையால் அவ்வகம்பொருளை இவை விடாததும், ஆகிய இவ்விரு தன்மையையும் இயற்கையிலேயே ஏற்றி இலங்குவதால் அகமென் பது விட்டுவிடாத் லக்கணைச் சொரூபமாமென்க. விட்டுவிடாத லக்கணை இஃதாயின் விட்ட லக்கணையாவ தெங்ஙனமெனின், தேகங் கடோறும் அவத்தாத்திரயங்களை யுணரும் தர்ம மிருத்தலுக்கு வினைமுதல் ஓர் அகம்பொருளெனக் கருதி அவ்வத்தேகத்தைவிட்டு அவ்வகம்பொருளை லட்சியித்தலாமென்க. விடாதலக்கணை யாதெ னின், அங்ஙனம் வினைமுதலாகக்கொண்ட அகம்பொருள் வாக்கு மனாதீத மாகலின், அவ்வகத்துக் கமைந்திருக்கின்ற சத்து சித்து ஆநந்த முதலிய அனேக குணங்களில் ஓர் குணம் காரணமாக

இருவித சமாதிகளிலும் அறிந்தனுசந்தித்தலாமென்க. இம்மூன்று லக்கணையுள் முடிவாகியது விட்டுவிடாத லக்கணையாம். இவ்விட்டு விடாத லக்கணானுபவத்தை,

சசிவர்ணபோதம்.

"விட்டலக்கணை தனையும்விட்டு விடாதலக்கணை தனையு நீ
விட்டு விட்டு விடாதலக்கணை யால்விளங்குவி ளங்கவே."

என மகாவாக்கியம் வந்திருக்கின்றது. அன்றியும்,

சொரூபசாரம்.

"வாலமதி யூகமதி போன்ஞான வஞ்ஞானக்
காலமுநாங் கண்டு கழித்தோமே—சீலமா
மப்போது நம்மிலே யாரோப மானவெலா
மிப்போது பொய்யான வே."

என எல்லாமாயும் அல்லவுமாயு மிருக்கும் நிலைமையைக் குறிப்பித்த தாமென்க. இதுநிற்க,

சோபாதிகமாக நின்று சீவிக்கிற கர்மம் அறியாமையிலோ? அன்றி அறிவிலோ? அறியாமையிலேயே யெனின், அவ்வறியாமை யிற் சீவிக்கிற முதலெது? நானென்பதுதானெனின், நானென்பது அதிட்டானாரோபங்களைக் கடந்த ஏகனானென முன்னமே முடிபா யிற்றே! எங்ஙனம் சீவித்தலை அது ஏற்கும்? அன்றியும், அதிட் டானவகமே உதித்தல், மரித்தல் முதலிய சீவித்தலை ஏலாதாயின் ஏகனான அவ்வுதித்தல் முதலியவற்றை ஏற்கும்? எவ்வறியாமையில் சீவித்த லியங்குகின்றதோ அவ்வறியாமையே இவற்றிற்கு வினை முதலெனப் பட்டதென்க. புத்தோகம், முத்தோகம், பூரணனந் தோகம், சத்தோகம், சித்தோகம், சாந்தோகம், சுத்தோக முதலி யனவாகிய அனேக ஞான ரசானுபவங்க ளனைத்தும் அறியாமைக் காயின் ஷை உருப்படல், வெளிப்படல், வளர்தல், பூரித்தல், தேய் தல், மரித்தல் முதலிய அஞ்ஞானானுபவங்க ளனைத்தும் அறிவுக் கெனப்படும். அங்ஙனமில்லையே! அறிவிலுண்டாகிவரும் ஞானா னுபவங்கள் அறிவுக்காகலின், அறியாமையி லுண்டாகிவரும் அஞ் ஞானானுபவ மனைத்தும் அறியாமைக் கென்பதற்கு முரணின் றென்க. அறியாமையையன்றிச் சீவத்துவ மென்பதற்கு வேறு முதலுண்டா? இல்லையே? ஆகலின், அறிவையன்றிக் கூடத்தசாட்சி

சைதன்னிய மென்பதற்கு வேறு முதலின்றாமென்க. அறியாமை யாகிற சீவத்துவத்தைச் சீவனென்று உயர்திணை ஆண்பாற் பொருளாக உருவகப்படுத்தி வழங்குவதால், அஃதொரு புருடனெனப் படுமாயின், அஃதோர் முதலெனப்படும், இஃது காலதத்துவத்தைக் காலனென வழங்கி வருவதுபோலாமென்க. உதித்தல், மரித்தல் முதலிய இன்பதுன்பானுபவங்கள் சீவன்பாலதெனச் சத்பிரமாணங்களால் வழங்கிவருவது அறியாமையின்பாலதென்றாயிற்று. ஆகவே, சீவத்துவமென்னும் பெயர் தொழிற்பெயரா? அன்றி வேறு பெயரா? சீவிக்கும் தர்மத்தை யுடையதால் தொழிற்பெயர்தானெனின்? இஃது தொழிற்குண மெனப்பட்டது. இத்தொழிற்குணம், கிழமை யெனப்படுமன்றோ? கிழமையென்பது சுதந்தரமாகிய உரிமை. இவ்வுரிமை பிறிதின்கிழமையா? அன்றித் தற்கிழமையா? தற்கிழமையெனின், இஃதென்ஞான்றும் நம்மைவிட்டகலாச் சுதந்தரமாய் முடியும். முடியவே, ஞானனுட்டானம் பயனின்றிப்போம். அன்றியும், சீவன்முத்தியென வழங்கப்படுவதும் சொல்மாத்திரமெனவு முடியும். முடிவதால், பிறிதின்கிழமை யென்பாமெனின், இக்கிழமை நம்மால் எதுகாறும் நிகழற்பாலது. சமாதி கைகூடுங் காறுமெனின், அதுகாறும் என் சீவனெனவும் என்னுயிரெனவும் என் பிராணனெனவும் வழங்கப்படுமன்றோ? அங்ஙனம் வழங்கப்படும் இப்பின்னத்துவத்திற்கு ஆதாரம் நானென்பதன்றோ? நானென்பதில், கயிறு, கானல், கட்டை முதலியவற்றுள், அரவு, நீர், கள்ளன் முதலியவைகள் ஆரோபிதமாக நிகழுவதுபோல, சீவத்துவத்துக்கும் அச்சீவத்துவத்துக் கியைந்திருக்கின்ற அவத்தாத்திரய முதலியனவாகிய கற்பனைகளுக்கும் ஆதாரம் நானென்பதா மென்க. என்னை,

கைவல்லியம்.

"தூலசூக் குமவஞ் ஞானந் தோன்றுமூன் றவத்தை தாமுங்
காலமோர் மூன்றுஞ் சென்மக் கடலெழுங் கல்லோ லங்கள்
போவவே வந்துவந்து போனவெத் தனையென் பேறு
ஞாலமர் கடவு ளாணை யவைக்கெலாஞ் சாட்சி நீயே." என்றும்,

"பல்கலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி யிவனுமனு பவம்வி டாமற்
பல்மலரின் மதுப்போலச் சச்சிதா னந்தமொன்றாம் பரமார்த் தத்தைப்
பல்பொழுதுங் கண்மூடிச் சமாதியிருந் தான்விழித்துப் பார்த்த போது
பல்வடிவுஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமா னானே."

என்றும் கூறியவாற்றுற்காண்க. சீவனென்பது அங்கப்பொரு ளென்ப தென்னையெனின், அச்சீவப்பொருள் சட்பாவ கற்பனு சையோகத்துவத்தை யன்றித் தனியே ஓர் பொருளன்று; எங்ஙன மெனின், அதிட்டானம், அக்கியானம், அந்தக்கரணம், தேகத்திரயம், பிரதிபிம்பம், அத்தியாசமென்பனவாம். இச்சட்பாவத்துள் அதிட் டானமென்பது நித்திய சத்தாகிய சுயம்பிரகாச சுத்த சைதன்னிய விளக்கமும், அக்கியானமென்பது ௸ சுயம்பிரகாச சைதன்னியத் தின்கண் கயிற்றின்பால் அரவு தடித்தாற்போல், ஒன்றை மற்றென் ருக உணர்தற்கு அங்குரம்போலிருக்கின்ற ௸ மயக்கமாகிய வாரோபிதமும், அந்தக்கரணமென்பது ௸ அங்குரம்போன்ற மயக் கத்தின்க ணிகழும் சங்கற்ப எழுச்சியாகிய வாரோபிதமும், தேகத் திரயமென்பது ௸ சங்கற்பத்தால் உள்ளதுபோல் தடித்துக் காணப்படும் தூல முதலிய உபாதித்திரய வாரோபிதமும், பிரதி பிம்பமென்பது ௸ தூலமுதலிய உபாதித்திரயங்களுள் ஒவ்வோ ருபாதித்துணை நான் நானென் றுபாசவடிவாய் நின்று நிகழுமா ரோபிதமும், அத்தியாசமென்பது வந்தியாபுத்திரனுல் நிகழும் துட்ட நிக்கிரகஞ் சிட்ட பரிபாலனம் முதலிய கிருத்தியங்கள்போல் ௸ ஆபாச உணர்வினுல் நிகழற்பாலனவாகிய அபேட்சித்தல் பகுத் துணர்தல் முதலியனவும், கேட்டல் பார்த்தல் முதலியனவும், வசனதான முதலியனவும், அறிதல் அறியாதிருத்தல் முதலியனவு மாக நிகழற்பாலதாகிய புடைபெயர்ச்சிகளாம். இங்ஙனமிருக்கும் சட்பாவ தர்மங்களுள் எது சீவனெனப்படுவது? பிரதிபிம்ப சைதன்னியமென்பாமெனின், அஃது தனக்குமேல் ஆதாரமாகிய கற்பனுத் தேகத்திரயமுதல் அதிட்டான சைதன்னியம் இறுதியா யுள்ள சட்பாவங்களையுமன்றி, ஓர் முதலாகத் தனித்திருக்கட்டும். அதிட்டான சைதன்னிய மென்பாமெனின், அச்சைதன்னியம், அக்கியானம், அந்தக்கரணம், தேகத்திரயம், அத்தியாசமாகிய இந் நான்கங்கத்தையும் உடையதா யிருக்கவேண்டும், அஃதங்ஙனமின்றி யே! நிரவயவமாகவும் சுயம்பிரகாசமாகவும் இருக்கின்றதாலென்க. அக்கியானமென்பா மெனின், அவ்வக்கியானம் சடத்துவமா யிராம லும் அதிட்டான சைதன்னியத்தின்பால் ஆரோபிதமாயில்லாமலும் தனித்து ஓர்முதலாக விருக்கட்டும். அந்தக்கரண மென்பாமெனின், ௸ அவ்வந்தக்கரணம் அக்கியான சம்பந்தமில்லாமலும் அவாந்தர மான சலனவெழுச்சி யில்லாமலும் தனித்து ஓர் முதலாயிருக்கட் டும். தேகத்திரய மென்பாமெனின், அத்தேகத்திரயம் மூன்றாக

வின், சிவப்பொருள் ஒன்றென வழங்காது மூன்று பொருளென வழங்கட்டும். அத்தியாசமென்பா மெனின், அவ்வத்தியாசம் உபாதித்துணை நானென்னும் ஓர் கற்பனைக்குக் கிழமை யெனப்படாமலும் தொழிற்குண மெனப்படாமலும் தனித்து ஓர் முதலாயிருக்கட்டும். இங்ஙனமிருக்க, சிவனென்பதற்குப் பொருள் எத்தகையதென் றேற்குதும்? இது நிற்க,

தூலமுதல் சொரூபசாட்சிகாறும் ஆராய்ந்தவுழைப்பால் தேர்ந்தது ஞானஞ்ஞான ரகித அகம்பொருளாயினும், அவ்வகம்பொருள் அவத்தாத்திரயக் கற்பனையால் அறியாமையாகிய சீவபோதமுள்ள ஞான்றும் இருவகைச்சமாதி எதார்த்தத்தால் சிவபோதமெனவுற்று ௸ சீவ்போதம் அகன்ற ஞான்று அச்சிவபோதமென்பது தானே தானாகிய தற்போத மெனப்படும். அத்தற்போதத்தின்பால், அதிட்டான மென்னும் சிவபோதமாகிய சிவோகஞானமும், ஆரோப மென்னும் சீவபோதமாகிய சீவோக வஞ்ஞானமும் நிகழினும், இவ்விரண்டும் தானாகிய தற்போதமன்று. இவ்விரண்டுள் சிவோக மென்பதைத் தற்போத மென்பாமெனின், சீவோக மென்பது தற்போதத்தையன்றி வேறாக விருக்கட்டும். வேறாகாமையால், இச்சீவோகத்தை ௸ தற்போதமென்பாமெனின், அத்தறபோதத்தையன்றிச் சிவோகம் வேறாக விருக்கட்டும். அத்தற்போதம் இவ்விரண்டுமென்பாமெனின், அத்தற்போதம் அறிவறியாமைப் பொருளாய் முடியாதிருக்கட்டும்? எங்ஙனமெனின், அத்தற்போதம் ஓர் பாகம் சிவோகமும் ஓர் பாகம் சீவோகமுமாய் இருபாகமுற்றுத் தனக்கென்ப் பொருளின்றிச் சூனியப்பட்டுப்போம். அன்றியும், இவ்விருபோதமும் ஒன்றிலொன்று மாறாதிருக்கட்டும். அவை சிவோக லட்சியானுபவத்தில் சீவோக லட்சியானுபவம் இன்றாயும், சீவோக லட்சியானுபவத்தில் சிவோக லட்சியானுபவம் இன்றாயு முடிகின்றதென்க. இங்ஙனம் முடிவதால் தோட மென்னையெனின், இவ்விரு லட்சியானுபவமும் யாருக்குத்தோன்றி மறைகின்றன? தமக்குத்தாமே யென்னலாமா! என்னலாமெனின், அஞ்ஞானதிசைக்கணுள்ள சுழுத்தி யனுபவம் சாக்கிராவத்தைக்கண் உணரப்படுகிறதுபோல, இருவகைச் சமாதி சிவோகானுபவம் அஞ்ஞானதிசைக்கண் உணரப்படலாமா? ௸ அஞ்ஞானதிசைக்கணுள்ள சாக்கிராவத்தனுபவம் வாசனைப்போலியாகச் சொப்பனவத்தைக்கண் உணரப்படுகிறதுபோல்; இவ்வவத்தாத்திரயம் சீவோகானுபவம்; ௸

சமாதிச் சிவோகானுபவத்தின்கண் போலியனுபவமாக உணரப்படலாமா? அவ்வவ் வவத்தானுபவம் அவ்வவ் வவத்தைமட்டில் உணரப்படாது மற்றோர் அவத்தைக்கண்ணும் உணரப்படுகின்றதே, இவற்றால் அவத்தைகள்தோறும் ஓர் புருடனே மாறாது சாட்சியாயிருக்கின்றாற்போல, ஞானஞ்ஞானமாகிய அவ்வத் திசைக்கணுள்ள அவ்வவ் வனுபவமும் அவ்வத் திசைக்கண்மட்டில் உணரப்படாது மற்றோர் திசைக்கண்ணும் உணரப்படுகின்றது. இவற்றால் இவ்விரு வகைத் திசைக்கண்ணும் ஓர் பெருந்தற்போதமே மாறாது சாட்சியாயிருக்கின்றது. ஆகலின், இவ்விரு போதமும் அத்தற்போதமன்றென்பதாயிற்று. ஆகவே, இவ்விருபோதமும் அத்தற் போதத்தையன்றியேனும் உண்டாயிருக்கவேண்டுமே? வேண்டுந்தானெனின், பொற்பொருளின் பரிசானுபவமின்றிச் சிரத்தின் கிரீடமும் காலின் தண்டையு மில்லாததுபோல், தற்போதத்தின் தொந்தமின்றி வெடி அதிட்டான சிவபோதமும் ஆரோப சீவபோதமும் இன்மையெனப்படலாமா? படுகின்றமையால், இவ்விருபோதமும் தற்போதத்தின் பாலதா? அல்லவா? தற்போதத்தின்பாலதெனின், இவ்விரண்டும் கிழமைகளெனப்படுமா? படாவா? கிழமைகளெனப்படுமெனின், தற்கிழமைகளெனப்படுமா? அன்றிப் பிறிதின்கிழமைக ளெனப்படுமா? பிறிதின்கிழமைகளெனின், இவ்விருபோதமும், தற்போதத்தையன்றி வேறு பொருள் அன்றென முன்னமே முடிந்தாயிற்று. ஆகவே, தற்கிழமைப் பொருள்களென்றாகவேண்டும். ஆகுமாயின், இவ்விரு கிழமையும் தற்போதத்தைவிட் டகலாததாய் முடியும். சிவபோதம் தானாகிய தற்போதத்தைவிட் டகலாததாயினும், சீவபோதமேனும் அகலவேண்டுவதுதானே? இதனாற் சிவபோதம் எங்ஙனம் தற்கிழமை யெனப்படும்? சிவபோதஞானம் அகலாக்கிழமையாகநின்று இச்சீவபோதக் கற்பனையை அகலச்செய்து முடிவில் தானேதானா யிருப்பதாமென்க.

இவ்வாராய்ச்சிக்கண் சீவபோதம் அறிவென்பது பூர்வபக்ஷமுற்று, இதனைக் கிழமையாகக்கொண் டுணரும் ஓர் அதிட்டான போதமே மேலாகிய அறிவென்பதா மென்க.

நான்காவது

சீவபோத ஆராய்ச்சி விளக்கம் முற்றிற்று.

வின், சிவப்பொருள் ஒன்றென வழங்காது மூன்று பொருளென வழங்கட்டும். அத்தியாசமென்பா மெனின், அவ்வத்தியாசம் உபாதித்துணை நானென்னும் ஓர் கற்பனைக்குக் கிழமை யெனப்படாமலும் தொழிற்குண மெனப்படாமலும் தனித்து ஓர் முதலாயிருக்கட்டும். இங்ஙனமிருக்க, சீவனென்பதற்குப் பொருள் எத்தகையதென் றேற்குதும்? இது நிற்க,

தூலமுதல் சொரூபசாட்சிகாறும் ஆராய்ந்தவுழைப்பால் தேர்ந்தது ஞாஞ்ஞான ரகித அகம்பொருளாயினும், அவ்வகம்பொருள் அவத்தாத்திரயக் கற்பனையால் அறியாமையாகிய சீவபோதமுள்ள ஞான்றும் இருவகைச்சமாதி எதார்த்தத்தால் சிவபோதமெனவுற்றுழி சீவ்போதம் அகன்ற ஞான்று அச்சிவபோதமென்பது தானே தானாகிய தற்போத மெனப்படும். அத்தற்போதத்தின்பால், அதிட்டான மென்னும் சிவபோதமாகிய சிவோகஞானமும், ஆரோப மென்னும் சீவபோதமாகிய சீவோக வஞ்ஞானமும் நிகழினும், இவ்விரண்டும் தானாகிய தற்போதமன்று. இவ்விரண்டுள் சிவோக மென்பதைத் தற்போத மென்பாமெனின், சீவோக மென்பது தற்போதத்தையன்றி வேறாக விருக்கட்டும். வேறாகாமையால், இச்சீவோகத்தை ஷுடி தற்போதமென்பாமெனின், அத்தறபோதத்தையன்றிச் சிவோகம் வேறாக விருக்கட்டும். அத்தற்போதம் இவ்விரண்டுமென்பாமெனின், அத்தற்போதம் அறிவறியாமைப் பொருளாய் முடியாதிருக்கட்டும்? எங்ஙனமெனின், அத்தற்போதம் ஓர் பாகம் சிவோகமும் ஓர் பாகம் சீவோகமுமாய் இருபாகமுற்றுத் தனக்கென்ப் பொருளின்றிச் சூனியப்பட்டுப்போம். அன்றியும், இவ்விருபோதமும் ஒன்றிலொன்று மாறாதிருக்கட்டும். அவை சிவோக லட்சியானுபவத்தில் சீவோக லட்சியானுபவம் இன்றாயும், சீவோக லட்சியானுப்வத்தில் சிவோக லட்சியானுபவம் இன்றாயு முடிகின்றதென்க. இங்ஙனம் முடிவதால் தோட மென்னையெனின், இவ்விரு லட்சியானுபவமும் யாருக்குத்தோன்றி மறைகின்றன? தமக்குத்தாமே.யென்னலாமா! என்னலாமெனின், அஞ்ஞானதிசைக் கணுள்ள சுழுத்தி யனுபவம் சாக்கிராவத்தைக்கண் உணரப்படுகிறதுபோல, இருவகைச் சமாதி சிவோகானுபவம் அஞ்ஞானதிசைக் கண் உணரப்படலாமா? ஷுடி அஞ்ஞானதிசைக்கணுள்ள சாக்கிராவத் தானுபவம் வாசனைப்போலியாகச் சொப்பனாவத்தைக்கண் உணரப் படுகிறதுபோல்; இவ் வவத்தாத்திரயம் சீவோகானுபவம்; ஷுடி

சமாதிச் சிவோகானுபவத்தின்கண் போலியனுபவமாக உணரப்படலாமா? அவ்வவ் வவத்தானுபவம் அவ்வவ் வவத்தைமட்டில் உணரப்படாது மற்றோர் அவத்தைக்கண்ணும் உணரப்படுகின்றதே, இவற்றால் அவத்தைகள்தோறும் ஓர் புருடனே மாறாது சாட்சியாயிருக்கின்றாற்போல, ஞானஞ்ஞானமாகிய அவ்வத் திசைக்கணுள்ள அவ்வவ் வனுபவமும் அவ்வத் திசைக்கண்மட்டில் உணரப்படாது மற்றோர் திசைக்கண்ணும் உணரப்படுகின்றது. இவற்றால் இவ்விருவகைத் திசைக்கண்ணும் ஓர் பெருந்தற்போதமே மாறாது சாட்சியாயிருக்கின்றது. ஆகலின், இவ்விரு போதமும் அத்தற்போதமன்றென்பதாயிற்று. ஆகவே, இவ்விருபோதமும் அத்தற் போதத்தையன்றியேனும் உண்டாயிருக்கவேண்டுமே? வேண்டுந்தானெனின், பொற்பொருளின் பரிசானுபவமின்றிச் சிரத்தின் கிரீடமும் காலின் தண்டையு மில்லாததுபோல், தற்போதத்தின் தொந்தமின்றி யவ் அதிட்டான சிவபோதமும் ஆரோப சீவபோதமும் இன்மையெனப்படலாமா? படுகின்றமையால், இவ்விருபோதமும் தற்போதத்தின் பாலதா? அல்லவா? தற்போதத்தின்பாலதெனின், இவ்விரண்டும் கிழமைகளெனப்படுமா? படாவா? கிழமைகளெனப்படுமெனின், தற்கிழமைகளெனப்படுமா? அன்றிப் பிறிதின்கிழமைக ளெனப்படுமா? பிறிதின்கிழமைகளெனின், இவ்விருபோதமும், தற்போதத்தையன்றி வேறு பொருள் அன்றென முன்னமே முடிந்தாயிற்று. ஆகவே, தற்கிழமைப் பொருள்களென்றாகவேண்டும். ஆகுமாயின், இவ்விரு கிழமையும் தற்போதத்தைவிட் டகலாததாய் முடியும். சிவபோதம் தானாகிய தற்போதத்தைவிட் டகலாததாயினும், சீவபோதமேனும் அகலவேண்டுவதுதானே? இதனாற் சிவபோதம் ஞானம் தற்கிழமை யெனப்படும்? சிவபோதஞானம் அகலாக்கிழமையாகநின்று இச்சீவபோதக் கற்பனையை அகலச்செய்து முடிவில் தானேதானா யிருப்பதாமென்க.

இவ்வாராய்ச்சிக்கண் சீவபோதம் அறிவென்பது பூர்வபக்ஷமுற்று, இதனைக் கிழமையாகக்கொண் டுணரும் ஓர் அதிட்டான போதமே மேலாகிய அறிவென்பதா மென்க.

நான்காவது

சீவபோத ஆராய்ச்சி விளக்கம் முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது

கூடஸ்த சைதன்னிய

# இலட்சியார்த்த விளக்கம்.

**வெண்பா.**

இந்தவா ராய்ச்சியினி லென்று மிருப்புளதாச்
சிந்தை வியாபகமே தேர்ந்தொளிரும்—வந்த
பரிபா கிகளாகப் பாங்குடையோர்க் கொன்றுந்
திரமில்லார்க் கொவ்வாதித் தேன்.

எங்ஙனமெனின், முன்றோன்று ஆராய்ந்த ஆராய்ச்சிக்கண் சிவபோதம் அறியாமையாயும், தேரப்பட்டது அறிவாயும் முடிந்தன. முடிந்த இவ்விரண்டில், தேரப்பட்ட அவ்வறிவேனும் நானென்பதற் கியைந்ததா? அன்றி இயையாததா? இயைந்ததெனின், அஃது எத்தகைய தெனப்படும்? வியாபகமாயும், விளக்கமாயும், உபாதான காரணமாயும், நித்தியமாயும், சாட்சியாயு மிருக்கின்ற தன்றோ? நானென்பதற்குப் பொருள் இங்ஙனமாயிருக்கின், அஃது தன்னையறியும் அறிவென்பதற்கு முரணென்ன விருக்கின்றது? இங்ஙனமாகிய தன்னையும் அயலையும் அறிவதே அறிவென்போமெனின், அயலை அறியு மவசரம் அறியாமையாகிய சிதாபாசனும், தன்னை மேற்கூறியவண்ணம் அறிவது அறிவெனவு மாகின்றதே! எங்ஙனம் அயலையும் தன்னையும் அறிவதை அறிவெனப்படும்? சோபாதிகமென்றும் நிருபாதிகமென்றும் இரண்டிருக்கின்றன. இவற்றுள் சோபாதிகமென்பது, ஏகதேசமாக நின்றுணர்வது. நிருபாதிகமென்பது, நிறைவாக நின்றுணர்வது. ஏகதேசமாய் நின்றுணர்வதென்பது, இத்தேகத் துணையாய் நிற்பது. இங்ஙனம் நின்றுணரு மனுபவம் கற்பனையா? அன்றி யதார்த்தமா? சற்றாகிக்குதும். எங்ஙனமெனின், உலகென்பது சமட்டியும், உடலென்பது வியட்டியுமாயிருக்கின்றன. சமட்டியாகிய உலகம் தோன்றியஞான்று

வியட்டியாகிய இவ்வுடலும் தோன்றுவானேன்? அச்சமட்டியாகிய உலகம் தோன்றுஞான்று வியட்டியாகிய இவ்வுடலும் தோன்றுமற் போவானேன்? இவ்வுடல் உலகப்பொருளன்றாயின், அவ்வுலகோடு தோன்றி மறையவேண்டுவதின்று. தோன்றி மறைதலால் இவ்வுடல் உலகப்பொருள் என்பதற்கு முரணின்று. சமட்டியும் வியட்டியும் ஒருங்கே காணப்படுதல் சகலாவத்தையும், ஒருங்கே மறைதல் கேவலாவத்தையு மாகின்றன. இவ்விரண்டவத்தைகளையும் அறிகின்றது யாதெனப்படும்? நாமன்றோ? நாம் எங்கிருந்து இவற்றை அறிகின்றனம்? இவ்வுடலின்கணிருந்து அறிகின்றனமெனின், இவ்வுடல் சதுர்ப்பூதங்களையன்றி ஓர் முதலாயிருக்கட்டுமே? தோற்றல் மாத்திரமாயும் சொல்மாத்திரமாயு மிருக்கின்றதே! தோற்றல் மாத்திரமாகத் தோன்றும் தோற்றத்தில் நின்றறிகின்றனமென்பது, கானலிற்றோன்றும் நீரில் நின்று அருந்துதல் முதலிய பலகிரியைகள் புரிகின்றோமென்பதுபோ லாகின்றது. அக்கானல் நீர் அருந்துதல் முதலிய அனுபவங்கட் கியையாததை இதற்கு ஒப்பிடலாமோவெனின், அனுபவத்துக் கியைந்தது யதார்த்தமாக்கும்! அங்ஙனமாயின், கடபட அனுபவங்களைப்போல் இருக்கவேண்டுமாக்கும்! அக் கடபட அனுபவங்களில் மட்பொருளும் நூற்பொருளும் அவற்றைவிட்டு அகன்றிருக்கின்ற தாக்கும்! அங்ஙனம் நீங்கியில்லையே! அங்ஙனம் நீங்கி இருந்தாலன்றோ அக் கடபடங்கள் அனுபவத்துக் கியையும்? இருப்பது மட்பொருளும் நூற்பொருளுமாகலின், பிடித்தல் எடுத்தல் முதலிய அனுபவங்களுக் கியைகின்றன. கடபடங்களின்றி மட்பொருளும் நூற்பொருளும் அனுபவப் படட்டுமேயெனின், அம் மட்பொருளும் நூற்பொருளுமின்றிக் கடபடங்கள் அனுபவப் படட்டுமே. அன்றியும், மட்பொருளும் நூற்பொருளும், யாவரும் வந்திப்பதற்குத் தேவதாபிம்பமாகவும், திருமங்கிலியத்துக்குச் சரடாகவும் அனுபவப்படும் ஞான்று கடபடங்களுண்டா? இல்லையன்றோ! கடபடங்கள் அனுபவப்படும் ஞான்று மட்பொருளும் நூற்பொருளு மின்றோ? இருக்கின்றதால், அனுபவப்படுதல் எவை? மட்பொருளும் நூற்பொருளுமன்றோ? ஆகலின், கடபடானுபவங்கள் தோற்றல் மாத்திரமும் மட்பொருள் நூற்பொருளானுபவங்கள் எதார்த்தமு மாயிற்றென்க. இம்மட்பொருள் நூற்பொருள் போன்ற மண்ணாதி சதுர்ப்பூதத்தையன்றி உடலென்பது எங்ஙனம் பொருளாயிருக்கின்றது? தோற்றல் மாத்திரமா யிருக்க நாம் இவற்றிலிருந்

தறிவது எங்ஙனங் கூடும்? கூடாமையால், இச்சமட்டி வியட்டித் தோற்றங்களையும், அவை மறைதலையும் எங்கிருந் தறிகின்றனம்? இம்மயக்க மருதழி, நாமிருத்தற் கிடமும் நமது யதார்த்த நிலையும் எங்ஙனம் வெளிப்படும்? இதுநிற்க,

அவத்தாத்திரயங்கள் மாறுகின்றனவா? அன்றி நாம் மாறுகின்றனமா? நாம் மாறுகின்றனமெனின், நாம் மாறுகின்றதை மாருதிருந்து அறிகின்றது யாது? நாமே அறிகின்றனமெனின், நாம் மாறுகின்றனமன்று. நம்பால் மாறுகின்றனவெனின், நம்மையன்றி வியாபகப்பொருளியாது? வேறின்ருகலின், நானென்பது யாதோ அது வியாபகப் பொருளென்பதற்கு முரணின்று. அன்றியும், எது இவ்வவத்தைகளாக மாறுகின்றது? நானென்பதன்று, அறியாமையெனின், அவ்வறியாமை நானென்பதையன்றி இதுகாறும் உண்டெனப்பட்டதா? இல்லையே! இல்லையாயின் அறியாமையாகிய இவ்வவத்தாத்திரயங்களுக்கு உபாதானகாரணமு மியாது? வேறின்ருகலின் நானென்பதே.

அன்றியும், இவ்வவத்தாத்திரயங்கள் மாறினும், நானென்பது எஞ்ஞான்றேனும் மாறினதுண்டா? இன்ருகலின், மாறும் அவத்தாத்திரயங்கள் அநித்தியமாகின்றன. ஆகின்றதால், மாருதிருக்கின்றது நானென்பதாகலின், நானென்பதையன்றி நித்தியமென்பதியாது? வேறின்ருகலின், நானென்பதே நித்தியமென்பதற்கு முரணின்று. அன்றியும், இவ்வவத்தாத்திரயம் விளங்குகின்றது எந்த விளக்கத்தினுலெனப்படும்? சோமசூரியாக்கினி விளக்கத்தினுலெனின், சொப்பனமும் சுழுத்தியும் எவ்விளக்கத்தினுல் விளங்குகின்றன? தற்பிரகாச விளக்கத்தா லன்ருே? அவ்வீரவத்தைக்கண்ணும் நானென்பது ஒளிவடிவாயிருக்க, சாக்கிரமாகிய இவ்வோரவத்தைக்கண்ணு ஒளியின்றி யிருக்கின்றது. இவ்வவத்தைக்கண் நானென்பது ஒளிவடிவாயின், சோமசூரியாக்கினி வேண்டுவதின்றே யெனின்? திரிகால ஞானிகளுக்குச் சோமசூரியாக்கினி உதவியிருக்கட்டுமே? அவர்களுக்குத் தவங் காரணமாகவெனின், அந்தஞானம் தவத்தால்வரினும் விளக்கம் யார்பாலது? அங்கேயும், நானென்பதன்பாலதன்ருே? ஆகலின், நானென்பது விளக்கவடிவமென்பதற்கு முரணின்று. அன்றியும், இவ்வவத்தாத்திரயங்களை ஒருங்கே நித்தியமாயிருந்து அறிந்துகொண்டுவருகின்றமையின் நா

னென்பதையன்றிச் சாட்சியென்ப தியாது? சாட்சியென்பது விலட்சணமாக நின்றுணர்வதே, வேறின்ருகலின், நானென்பது சாட்சிப் பொருளென்பதற்கு முரணின்று. நானென்னும் அறிவு இலக்கியப்பொருளா யிருக்கின்றதால், அதற்கிலக்கணமோ அனந்தமாயிருக்கின்றன. இருக்கினும் இவ்வவத்தாத்திரயங்காரணமாக எடுத்துக் காட்டியது ஷை வியாபகமுதலிய பஞ்ச இலக்கணங்களை யென்க. இவ்விலக்கணங்கள் அகம்பொருளுக் குண்டாகலின், இந்நிலை அகத்தாராய்ச்சி விளக்க மெனப்படுமா? அன்றிப் புறத்தாராய்ச்சி விளக்கமெனப்படுமா? புறத்தாராய்ச்சி விளக்கமன்று. அக விளக்கமாகலின், இவ்விளக்கமே கூடஸ்த சைதன்னிய இலட்சியார்த்த மெனப்படுமன்ருே? கூடமென்பது இரகசியப் பொருளெனப்படுமென்க. இஃதில் இன்னுமையமுளதேற் கூறுதும். எங்ஙனமெனின், நமக்கு முன்ஞான்று காணப்பட்ட காலம் தேசம் வஸ்துக்களை இஞ்ஞான்று உன்னுந்தோறும் தோன்றுகின்றனவா? இல்லையா? தோன்றுகின்றனவெனின், அங்ஙனம் தோன்றுவது முன்ஞான்று காணப்பட்டவைகளா? அன்றி வேருக இருந்து தோற்றுகின்றனவா? முன்ஞான்று காணப்பட்டவைகளே இஞ்ஞான்று தோன்றுகின்றன வெனின், அங்ஙனம் தோன்றுகின்றவைகளுள் ஒன்றை யூகிப்பம். அதாவது:—இப்பர்வதமானது இத்தூலபாவமாக நின்றறியும் நமக்கு, அணிமைக்கண் வந்ததுண்டா? அன்றி அதன் அணிமைக்கண் நாம் போனதுண்டா? இல்லையே! ஆகலின், பர்வதமாகத் தோற்றுவதியாது? முன்ஞான்று காணப்பட்டதைப் போலவே தோற்றுகின்றதெனின், இப்பர்வதத்தைப்போல் அண்டாண்ட சராசரங்களனைத்தும் தோற்றல் மாத்திரமாகக் காணப்படுகின்றனவல்லவா! இவை யனைத்தும் எங்கே காணப்படுகின்றன? நினைவிற் காணப்படுகின்றன வெனின், அந்நினைவு எத்துணைத்தாயிருக்க, இவ் வண்டாண்ட சராசரங்களும் காணப்படுகின்றன? அகண்டமாயிருக்க அதன்கண் காணப்படுகின்றனவெனின், அவ்வகண்டம் வெளியெனப்படுமன்ருே? எங்ஙனமெனின், ஷை பர்வதம் தோற்றுகின்றது, உயரத்திலும், நீட்சியிலும், அகலத்திலும் இத்துணைத்தென இருக்கின்றதல்லவா? இங்ஙனம் இக்கணிதமுற்றிருக்கின்ற இப்பர்வதம் தசபுறமுற் றிருக்கின்றதன்ருே? இத்தச புறங்களிலும், யாதிருக்கின்றது? ஒன்றுமில்லாமையெனின், அவ்வொன்றுமில்லாமையன்ருே வெளியெனப்படுவது? இப்பர்வ

தத்தின் தசப்புறத்துள் ஓர் புறத்திலுள்ள வெளியை, நமதகதிருட்டி யானது நாடிச் செல்லச்செல்லச் சேய்மையுற்றுப் போகுமன்றோ? சேய்மையுற்றுச் சென்றும் அவ்வெளிக்கு முடிவு எட்டுகின்றதா? இல்லையன்றோ? இங்ஙனமே ஒவ்வொருபுறமு மிருக்கின்ற அவ்வெளிக்கு முடிவு எட்டவில்லையன்றோ? எட்டாதுழி, அஃது எல்லையிறந்திருக்கின்ற தன்றோ? இதனால் அவ்வெளியானது கிழக்கு மேற்கு முதலியனவாக வழங்கப்படுகின்றதா? இல்லையன்றோ? அஃது எங்ஙனமெனின், இதுதான் கிழக்குத்திசை யெனச்சுட்டும் இச்சுட்டுக்கு இலட்சியம் எதுவெனப்படும்? அதற்குக் கீழெனவும் மேலெனவும் வழங்கப்படுவது இயைந்ததன்று. அவ்விரண்டும் திக்குகளாகலினென்க. ஷை கிழக்குத்திக்கு என்னும் சுட்டுக்கு இலட்சியம், இவ்வெளியையன்றி யுண்டோ? இன்றாகலின், இங்ஙனமே தசவித திக்குகளுக்கும் இலட்சியம் இவ்வெளியை யன்றி யின்றென்பதாயிற்று. ஆகவே, இவ்வெளியானது எந்தத் திக்குக் கியைந்தது? தசதிக்குக்கும் இயைந்ததெனின், ஓர் திக்கு மற்றோர் திக்கு எனப்படாததுபோல, ஓர் திக்குவெளி மற்றோர் திக்கு வெளியெனப் படாதிருக்கவேண்டுமே? அங்ஙனமில்லையே! எங்கும் ஏகவெளியா யிருக்கின்றதே! எங்ஙனம் ஷை கிழக்கு முதலிய தசவித திக்குகளை யேற்கும்? புறமென்பதை யேலாத இவ்வெளியானது உள் என்பதை ஏற்றற் கியைகின்றதா? இன்றாகலின், உள்ளும் புறமுமற்றிருக்கினும் இடைப்புறமேனும் ஏற்றிருக்க வேண்டுமே! அஃதுமில்லையே! ஏனெனின், நிரந்தரமுற் றிருக்கின்றதா லென்க. அம்முப்புறமும் அற்றிருக்கின்றதாயின் ஷை நினைவாகிய இவ்வெளி ஆதிமத்தியாந்த ரகிதமெனப் படுமன்றோ? இதனை உற்று நோக்குழியன்றோ இஃதுண்மையென்றும் அன்றென்றும் விளங்கும்? அங்ஙனம் நோக்காதுழி, இஃது ஓர் கதைபோலும்! இங்ஙனமாகிய பரிபூரண வியாபகத்திலன்றோ ஷை தோற்றன் மாத்திரமாகிய இப்பர்வதம்போன்ற அண்டாண்ட சராசரங்களும் தோற்றுகின்றன? இங்ஙனம் தோற்றப்பட்டவற்றுள், இப்பர்வதம் தோற்றும்ஞான்று ஏனையநாமரூபங்கள் தோற்றுகின்றனவா? இல்லையன்றோ? மற்றவற்றுள் ஒன்று தோன்றும் ஞான்று இப்பர்வத முண்டா? இல்லையன்றோ? இல்லையெனின், எங்கேபோயிற்று? எங்கும் போகவின்றெனின், நசித்துவிட்டதன்றோ? நசித்துவிட்ட பின்ஞான்று அப்பர்வதம் யாது பொருளாய் முடிகின்றது? இல்லாமற்போய் விடு

கின்றதெனின், இல்லாமையென்பது சூனியமன்றோ? அவ்வாறில்லாமையாகிற சூனியத்திற் காதாரமாவது இவ்வெளியே யன்றோ? அப்பர்வதம் வெளியாய்விடுகின்றதன்றோ? இஃது எதுபோலெனின், உப்பானது அப்பானது போலும், ஆலாங்கட்டி நீரானதுபோலும், அரவு கயிறானதுபோலு மன்றோ? இவ்வுப்பு முதலிய மூன்றும், நீரும் அரவுமாவானேன்? நீரும் கயிறும் அவ்வுப்பாதிகளாக ஆனமையால் மீண்டுமவைகள் தத்தமுபாதான காரணமா யாகின்றன. இவற்றைப்போல், மேடி பர்வதம் தனக்காதாரமாகிய வெளியாவானேன்? அவ்வெளியே பர்வதமாக ஸ்புரித்தமையால், மீண்டும் அஃது தனது உபாதான காரணமாயாகின்றது. அவ்வெளியானது மேடி கயிற்றரவுபோல், பர்வதமாக ஸ்புரிக்காவிடின், மீண்டும் எங்ஙனம் வெளியாகும். இப்பர்வதம்போல் மற்றோர் நாமரூபமும் தோன்றி, மீண்டும் வெளியாகின்றது. இங்ஙனமே அவ்வெளியின்கண் தோன்றும் அண்டாண்ட சராசரங்களும் தோன்றிய ஞான்று தோன்றி மீண்டும் வெளியாகவே முடிகின்றன. சலமானது தனது அகண்ட வியாபகத்தில்தானே ஏகதேசமாய் அலையாதிகளாக ஸ்புரித்து விளங்கி ஒடுங்கித் தானாய் முடிவதுபோல, இவ்வகண்ட வெளியானது, தனது பரிபூரண வியாபகத்தின்கண் தானே ஏகதேசமாய் நான் நீ அவன் அவள் அது என்கிற திணை பாலிடமுதலிய அனந்த நாமரூபங்களாக ஸ்புரித்து விளங்கி ஒடுங்கித் தானாய் முடிந்துவிடுகின்றது. இவையாவும் கண்கூடான அனுபவமன்றோ? இங்ஙனமிருப்பதால், மேடி தோற்றங்களாகிய சர்வத்துக்கும், இவ்வெளியாகிய தான் அகண்ட வியாபகமா யிருப்பதுமன்றி, உபாதான காரணமாயுமிருப்பது சத்தியமன்றோ? அன்றியும் அவ்வெளியாகிய தன்பால் சமட்டியாகவும் வியட்டியாகவும் காணப்படுகின்றவைகள் எதற்கெனப்படும்? ஓரறிவுக்கெனின், அறிவுக்கு ஏன் காணப்படுகின்றன? தம்மை அறிகின்றதற்குக் காணப்படுகின்றனவெனின், இத்தோற்றங்களாகிய தம்மையறியுமறிவு எங்கிருக்கின்றது? இத் தூலசரீரத்தில் நின்றறிகின்றதெனின், இத்தூலசரீரம் முன்ஞான்றாராய்வில் சதுர்ப்பூதாம்சங்களையன்றி ஓர் முதலெனப்பட்டதா? இல்லையே? இல்லாதுழி, மீண்டும் இத்தூலதனுவை ஓர் முதலெனக் கொண்டது அவ்வாராய்ச்சி நெறிக்கணில்லாத அறியாமையினாலன்றோ? இவ்வறியாமையை மிக்க ஆப்தமாகத்தழுவி யிருக்குஞான்றும் நமது யதார்த்த வடிவம் கிஞ்சித்தும் வெளிப்படாதே! இதுநிற்க,

இஞ்ஞான்று காணப்படுகின்ற இப்பர்வதத்தை அறிகின்றது அறிவாகலின் அவ்வறிவு உருவம் அருவம் உருவாருவமாகிய மூன்றில் எந்த சொரூபமாக நின்றறிகின்றது? அருவமாக நின்றறிகின்றதெனின், அருவமென்பது இப்பர்வத முதலிய சர்வ தோற்றங்களுக்கும் ஆதாரமாகிய இவ்வெளியையன்றி இன்றெனவருமே! வரின், அவ்வாதார வெளியே இப்பர்வதத்தை அறிகின்றதெனவருமே! வரின், அவ்வெளியானது தன்னை யறிகின்றதெனவருமே! அங்ஙனமன்றி உருவமாக நின்றறிகின்றதெனின், தோன்றுகிற இப்பர்வதம் உருவப்பொருளாகவேண்டும். உருவப்பொருளாயின், கட்புலன் முதலிய ஐம்பொறிகளுக்கும் தோன்றி அனுபவப்படவேண்டும். அனுபவப்படுகிறதற்கு நாம் இந்நகரத்தைவிட்டு அதன் அணிமைக்கண் போயிருக்கவேண்டும். அங்ஙனமின்றெனின், பர்வதம் தன் கானகத்தைவிட்டு நமக்கு அணிமைக்கண் வந்திருக்கவேண்டும். இங்ஙனமு மின்றெனின், எங்ஙனம் உருவவடிவமாக நின்றறிகின்றதெனக் கோடல்? உருவாருவ வடிவாக நின்றறிகின்றதெனின், இஞ்ஞான்று தோற்றும் பர்வதம் உருவாருவமாகலின், நாம் உருவாருவமாக நின்றறிகின்றதென்பது பொருந்தும். பொருந்தவே, உருவாருவ வடிவமாக நின்றறிகின்ற அறிவு, எங்கிருப்பது? இப்பர்வதத்துக் காதாரமாகிய வெளியின்கண்ணெனின், இப்பர்வதம் சதுர்வித பக்கங்களுள், ஓர் பக்கம் தோன்றுகின்ற தன்றோ? அங்ஙனம் தோன்றுகின்றது, எந்தப் பக்கமெனப்படும்? கீழண்டைப் பாரிசம் தோன்றுகின்றதெனின், அப்பாரிசத்தை அறிகிறவறிவு, எப்பாரிசத்தில் நிற்கின்றதெனப்படும்? அக்கீழண்டைப் பாரிசத்திலெனின், அப்பாரிசத்தில் அணிமைக்கண்ணுகவேனும், அன்றிச் சேய்மைக்கண்ணுகவேனும் நின்றறிகின்றதன்றோ? அங்ஙன மறிகின்ற அறிவுக்குச் சொரூபம், உருவாருவ வடிவந்தானே? ஆமெனின், அவ்வடிவம் பர்வதம்போன்ற உருவாருவமாகலின், தோற்றுகின்ற இப்பர்வதம் ஓர் முதலாகவேண்டும். அங்ஙனம் முதலாயின் இவ்வுருவாருவ வடிவும் ஓர் முதலாகலாம். எங்ஙனமெனின், இஞ்ஞான்று இப்பர்வதத்தை அறியுமறிவுக்கு வடிவம் உருவாருவமாயின், சாக்கிரமாகிய இந்நனவில் காணப்படுகின்ற இவ்விருட்சத்தை யறிகின்றது எது? அப்பர்வதத்தை அறிந்தவறிவன்றோ. இவ்விருட்சம் உருவமா? அன்றி வேறா? உருவமாகலின், இவ்வுருவத்தை யறிகின்ற அறிவும் உருவமாக விருக்கின்றது. நாமரூபங்

களை இங்ஙனவில் அறியும் ஞான்று உருவபாவமாயும், அகத்தில் அதாவது நினைவின்கண் ஷெடிநாமரூபங்களை உருவாருவமாக அறியும் ஞான்று உருவாருவ பாவமாயும் நின்றறிகின்றது. இவ்விரிடத்தும் அறிகின்ற வறிவுக்குச் சொரூபம் எங்ஙனமிருக்கின்றது? இவ்விரண்டுமா யிருக்கின்றதெனின், தான் உருவமாயிருந்து விருட்சத்தை அறியும்ஞான்று உருவாருவ பேதமும், தான் உருவாருவமாயிருந்து பர்வதத்தை அறியும் ஞான்று உருவபேதமும் இன்றிப்போகின்றன. இங்ஙனம் ஒன்றிலொன்றில்லாமற் போகின்றதால், அன்னியோன்னியா பாவமென்ப ரறிஞர்கள். இங்ஙனமிருப்பதால், ஷெடிபர்வதத்தை அணிமையாகவும் சேய்மையாகவும் அறிவதுபோற் காண்பது தனது உருவாருவபேதபாவத்தா லன்றோ? உருவாருவ வடிவம் தானன்றாயின், தான் இப்பர்வதத்தை அறிவது எங்கிருந்தெனப்படும்? ஆதாரமாகிய அவ்வெளியின்கணெனின், அவ்வெளிக்கண் இப்பர்வதம்போன்ற நாமரூபங்கள் எங்கெங்கே எவ்வெஞ்ஞான்று ஸ்புரித்துக் காணப்படுகின்றனவோ, அங்கங்கே அவ்வஞ்ஞான்று அறிகின்றது. அங்ஙனம் அறிகின்ற அறிவு உருவாருவ பாவம்போல் ஆரோபிதமாக நின்றமையால் ஒவ்வோர் நாமரூபத்தையும் ஒவ்வோர் பாரிசத்தில் நின்றறிகின்றதாய்த் தோற்றுகின்றதேயன்றி, உண்மையில் அங்ஙன மில்லவேயில்லை. இல்லையேனும், அறிவது உண்மையாகலின் எங்கிருந் தறிகின்றது? அவ்வியாபகத்தில் எங்கெங்கே தோற்றுகின்றதோ, அங்கங்கே யிருந்தறிகின்றது. தோன்றாத ஞான்றும் தான் இருந்தே அத்தோன்றாமையையும் அறிந்துகொண்டிருக்கின்றது. இதனால் அறிவென்பது அவ்வெளி முழுதும் நிறைவென்பதாயிற்று. ஆகவே, அவ்வெளியையன்றி அறிவென்ப துண்டா? இன்மையால், அவ்வெளியே தன் பாற்றோற்றுவன யாவையும் தானேயறிகின்றது. இதனால் அவ்வெளியானது உணர்வெளி யெனவும், அறிவானது நிறையுணர்வெனவு மாகின்றது. இவ்வுணர்வெளியின்கண் தோற்றும் இப்பர்வத முதலிய சராசரங்களும் விளங்குவது யாதினாலெனப்படும். அதாவது விளக்கமெனப்படுவது, இச்சராசரங்களை விளக்குதற்கு அவ்வெளிக்கண் சோமசூரியாக்கினி யென்பவை யில்லையே! இல்லாமையால், எந்த விளக்கத்தால் இவற்றாதி தோற்றங்களும் விளங்கப்படுகின்றன? தற்பிரகாசமாகிய விளக்கத்தா லென்பதற்கு முரணின்றென்க. நாம் விளக்கவடிவமாயிருக்க அவ்விளக்கம் விளங்காத

தென்னையெனின், அஃது விளங்காஞான்று முண்டோ? சதோதய மாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றதே! உருவம் உருவாருவ மாகிய சராசரங்களாகப் பார்க்கும் பார்வையே அவ்விளக்கம் விளங் காததுபோலிருத்தற்குக் காரணமன்றி வேறன்றென்க. சராசரங்கள் தோற்றுவதும் அவற்றைப் பார்க்கும் பார்வையு மில்லாஞான்றே னும் அதாவது சுழுத்தியவத்தை யெனப்படுவது. அவ்விளக்கம் விளங்கப்படலாமேயெனின், அவ்வுருக்களை அறிந்துகொண்டிருக் கும் ஞான்று ஒருங்கே அவ்வுருக்கள் மறைந்துவிடுவதால், அம் மறைப்பாகிய பாழே ஆங்கு அந்த நாட்டத்துக்குப் பலனாகவிருக் கின்றது. அப்பாழாகிய பலனில் அறிவுவிளக்க மெங்ஙனம்தோன் றும்? உருக்கள்தோன்றும் ஞான்றே, அவ்வுருக்களை மித்தையா னுபவமாக்கித் தன்னை எட்டியுணர்ந்துழியன்றே அம்மாறாவிளக்கம் தெரியும். அங்ஙனம் அவ்வுழைப்பின்றி உருக்களையே பலனாக நாடும்ஞான்று உருக்களாகத்தோன்றும் விர்த்திகள் இடையிடையே அயர்வுறுமன்றே? அவ்வயர்வு உருக்களைப் பலனாக நாடிய நாட்டத் துக்கு யாதாய் முடியும்? பாழாய் முடியுமன்றே? இதற்கு ஓரனுபவ திருட்டாந்தம் கூறுதும். எங்ஙனமெனின், இரவில் பலரும் சூழ்ந்து மிக்க வியப்புறும் ஓர் அரிய நாடக மேடைக்கணின்று நடனமாடி வரும் பலவேடங்களும் விளங்குவது யாதினாலெனப்படும்? சுடர் பகல்வத்தி முதலிய ஒளிவியாபகத்தினாலன்றே? அவ்வொளி வியா பகத்திற் றோற்றும் நாநாவிதங்களும், மிக்க பலனாக அதாவது இன் புருவாகத் தோற்றுவானேன்? பலனாகப் பார்ப்பதனாலன்றே? அங் ஙனம் பலனாகப் பார்க்கும் ஞான்று அப்பலன் அனைத்தும் ஒருங்கே கணத்தில் மாறியக்கண் ௸ பார்வைக்குப் பாழே பலனாகத்தோன் றுமா? அன்றி அப்பலனாகிய வேடங்களை விளக்கிவைத்த ௸ சுடர் முதலிய ஒளி பலனாகத் தோன்றுமா? பாழே பலனாகத் தோன்று மன்றே? ௸ நாடக நடிக்கும் ஞான்று அவ்வேடங்களைப் பலனாக நாடிய நாட்டத்தைவிட்டு அவ்வேடங்களை விளக்கும் ஒளி வியாபகத் தை நாடிக்கொண்டிருக்கின் வேடங்கள் மாறியஞான்றும் மாறாஞான் றும் அந்நாட்டத்துக்குப் பலன் அவ்விளக்கத்தையன்றி வேறுபலன் உண்டெனப்படுமோ? இதுபோல், இச்சகலாவத்தைக்கண் பலனாகத் தோன்றும் காலம் தேசம் வத்துக்களை நியதி களைந்து களைந்து செல்லின், முடிவிலிருப்பது வியாபக விளக்கமாகலின், அவ்விளக் கத்தை விடாதுழி, ௸ காலம் தேசம் வத்துக்கள் மாறியஞான்

றும் மாறுஞான்றும் நாட்டத்திற்குப்பலன் அவ்வொளியையன்றி வேறோர்பலன் உண்டெனப்படுமோ? படாததால், அவ்வியாபக விளக்கத்தைவிடாது நாடிக்கொண்டிருப்பது மிக்க அவசியமாமென்க.

இஃதன்றியும், உயிராகிய ஒவ்வோர் போதத்துக்கும் நாட்டத்திரயம் உள்ளன. அவையாவன, ஏகதேச விகார நாட்டமென்றும், ஏகதேச சுயம்பு நாட்டமென்றும், அகண்ட சுயம்பு நாட்டமென்றுமாம். அவற்றுள் தோற்றல் மாத்திரமாக நிகழும் அலையாதிகளை நாடுங்காறும் ஏகதேச விகார நாட்டமும், இவ்வலையாதிகட்கு உபாதானமாயிருப்பது யாதெனத் தூலமதியால் நாடாது சூக்குமமதியால் நாடுழி இருந்து வெளிப்படுதல் நீர்ப்பொருளாகலின் அந்நீர் சுயம்புப் பொருளாயினும், ஷெடி அலையாதி நாட்டம் தவிர்ந்த அவசரம் நீர்ப்பொருள் ஏகதேசமாகத் தோன்றுமல்லவா? ஏகதேசமாகத் தோன்றுவ தென்னெனின், அலையாதியும் அவ்வலையாதியை ஓர் முதலென நாடி இருந்த நாட்டமும் ஏகதேசக் கண்டத்துவமாகலின், இக்கண்டத்துவ நாட்டம் அகன்ற அவசரம் அந்நாட்டம் அகண்டமாயுள்ள நீர்ப்பொருளைக் கண்டத்துவமாக நாடுமன்றோ? ஆகலின், அந்நாட்டம் கண்டத்துவமென்பதற்கு முரணென்னை? இதனால் ஷெடி ஏகதேச சுயம்பு நாட்டமும், அந்நீர்ப்பொருளை ஏகதேசமாக நாடிய நாட்டம் முதிர முதிர அந்நீர்ப்பொருள் ஆகாரப்படுதற்கு இடனாகுமன்றோ? அவ்வாகாரமும் முதிர முதிர நீர்ப்பொருளானது எத்துணைத்தாக விரிந்திருக்கின்றதோ அதாவது அகண்டமெனப்படுவது, அத்துணைத்தாக வியாபிக்குமன்றோ? அங்ஙனம் வியாபித்தலே அகண்ட நாட்டமுமாமென்க. இவற்றைப்போல், சொல் மாத்திரமாயும், தோற்றல் மாத்திரமாயும் தூலமுதலிய உபாதித்திரயங்களை நாடுங்காறும், ஏகதேச விகார நாட்டமும், இவ்வுபாதித்திரயங்களுக்கு உபாதானகாரணமா யிருப்பது யாதெனத் தூலமதியை நீக்கிச் சூக்கும மதியால் இவ்வுபாதித் திரயங்களைக் காரணகாரிய நெறித்தாக ஆராய்ந்து சென்றுழி இருந்து வெளிப்படுதல் அறிவாகலின், அதாவது ஞானமாகலின் அந்த ஞானம் சுயம்புப் பொருளாயினும், ஷெடி உபாதித்திரய பஞ்சகோச நாட்டம் தவிர்ந்த அவ்வவசரம், ஷெடி ஞானமானது அகண்டத்துவ மாயினும் ஏகதேசமாகத் தோன்றுமல்லவா? ஏகதேசமாகத் தோன்றுவதென்னெனின், உபாதித்திரய பஞ்சகோசங்களும், இப்பஞ்ச

கோசங்களை ஓர் முதலென நாடி இருந்த நாட்டமும் ஏகதேச கண்டத் துவமாகலின், இக்கண்டத்துவ நாட்டம் அகன்ற அவசரம் அந்நாட்டம், பஞ்சகோசங்களுக்கும் ஆதார வியாபகமாயுள்ள ஞான ஞானத்தைக் கண்டத்துவமாக நாடுமன்றோ? இதனால், அந்நாட்டம் கண்டத்துவ மென்பதற்கு முரணென்னை? இவ்வேகதேச சுயம்பு நாட்டமும், அந்த ஞானமாகிய போதப்பொருளை ஏகதேசமாக நாடிய நாட்டம் முதிரமுதிர அந்த ஞானகாரப்படுதற்கு இடனாகுமன்றோ? அவ்வாகாரமும் முதிர முதிர அந்த ஞானம் எத்துணைத்தாக விருக்கின்றதோ, அதாவது அகண்டபூரண மெனப்படுவது, அத்துணைத்தாக வியாபிக்குமன்றோ? அங்ஙனம் வியாபித்தலே அகண்டபூரண நாட்டமாமென்க. இவற்றின்கண் இன்னும் ஐயமுளதேல் கூறுதும்.

கடோபாதி தோற்றமுள்ள ஞான்று எங்குமாயுள்ள மகாகாசமானது, அக்கடத்துணை வளைபட்டதுபோ விருக்குமன்றோ? அவ்வேகதேச கடவடிவை நாடி இருந்தநாட்டம் நீடித்த பழக்கமாகலின், அவ்வேகதேச நாட்டம் தவிர்ந்து அதனுள் வளைபட்டதுபோலிருக்கும் வெளியில் விழுஞான்று, ஏகதேசமாக விழுமா? அன்றிப் பூரணமாக விழுமா? அந்நாட்டம் பூரணமாக விழுகிறதற்குப் பழக்க முதிர்ந்தாலன்றோ? ஏகதேசமாக முன்ஞான்று பழகியதால் பின்ஞான்றும் ஏகதேசமாக நாடவேண்டிவரும். இதுபோல் உபாதித்திரய ஏகதேச நாட்டம் தவிர்ந்து சிதாகாசத்தைக்கண்டு சிலஞான்று பழகுங்காறும் அந்நாட்டம் ஏகதேசப்பட்டிருக்குமன்றோ? உபாதி நாட்டம் தவிர்ந்தபோதே பூரணநாட்டம் வாய்க்குமே யெனின், பல்ஞான்றும் ஞானப்பியாசம்செய்து தெளியவேண்டு மென்பானேன்? என்னை?

ஞானவாசிட்டம்.

"ஊனமிலா ஞானநூல் விசாரத் தாலே
யுயர்வீடு நண்ணுமென லுண்மை யன்றோ
தானறியு மனுபூதி ஞான நன்னூல்
சற்குருவிம் மூவகையுந் தம்மிலொத்தே
யானவகை யியற்றில்விடா தான்மாத் தோன்று
மற்பவறி வினர்கற்ற வரிய மெய்நூ
லீன்முறு மடமைதரு மிதுபோன் மற்ற
வெந்தநூல் கலுமடமை யியற்று தன்றே." என்றும்,

வைராக்கிய தீபம்.

"திரிவித வுலகத் தரிதொரு ஞானித் தேர்விடத் தென்றுமோ ரொன்றை
யுரைசெயிற் பிரம வித்தையொத் தரிதோ வென்றுமிவ் வுலகுரைப் பதனு
லரிசொல்கீ தையிலும் பிரமசா தகரி ஞர்க்குள வருத்தமென் பதனுற்
பெரியதோர் வருத்த மெனமறை துணிந்தப் பிரமநா னெனவிருத் தலினே."

என்றும் கூறியவாற்ருற் காண்க.

வியாபக விளக்க இலட்சியார்த்த நாட்டம் வந்தும், அந்நாட்டம் பரிபூரணமாக நிலைக்குங்காறும், அஞ்ஞானம் சந்தேகம் விபரீதம் என்னும் இம்மூன்றும் வந்துவந்து தாக்குமன்ருே? தாக்குந்தோறும் அவற்றைக் கெடுத்தற்குக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும் இம்மும்முயற்சியும் விடாது பன்ஞான்றும் நிகழவேண்டுவது திண்ணமாகலின், அஃது பூரண வியாபக நாட்டம் எளிதில் வாராதென்க. இது நிற்க, இவ்வியாபக விளக்கம் தூலமுதல் அவித்தைகாறும் உள்ள வியட்டி தத்துவக் குழாங்க ளனைத்தினையும் அன்மையெனவும், இன்மையெனவும், பொருள்படுமாறு காரண காரிய நெறித்தாக ஆராய்ந்து சென்ற முடிவில் நின்று சதோதயமாய்ப் பிரகாசிக்கின்றமையால், நீ என்னும் தொம்பத இலட்சியார்த்த கூடஸ்த னெனப்படுமா? அன்றி வேறெனப்படுமா? கூடஸ்த னெனப்படுமெனின், இவ்விளக்கத்திற்குக் கூடஸ்த னென்பானேன்? அஃது தூலமுதல் அவித்தைகாறும் சூக்குமம் சூக்குமமாக ஆராய்ந்து ஆராய்ந்து உட்சென்ற முடிவில் அதிசூக்குமமாய் வெளிப்பட்டு விரிந்த இரகசியப் பொருளாகலினு லென்க. இது அவத்தாத்திரய விலட்சணமாகலின், பிரத்தியகாத்ம சொருபமு மெனப்படும். இப் பிரத்தியகாத்ம சொருபம், ஒவ்வொருவர்து உள்ளத்தை யன்றி இன்றெனப்படுமோ? படாததால்,

உத்தமவாதநூல்.

"உள்ளஞ் சுயஞ்சோதி யொவ்வொரு வர்க்குமெனி
னுள்ளபடி காணும்வகை யோராதே—கள்ளமதக்
கற்பனைய தாக்கியதைக் காணுவதோ ஙம்புலமை
சொற்கடங்கார்க் கேதுயர்ந்தோர் சொல்."

என்றருளி யிருக்கின்றது. அவ்வவ் வுள்ளத்தின் கண்ணும் காலம் தேசம் வத்துக்களாக விடாது உதிக்கின்றதும் விளங்குகின்றதும் மறைகின்றதும் மறைந்தவை மீண்டும் அவ்வுள்ளமாகின்றதுமா யிருக்கின்றதால்,

ஞானவாசிட்டம்.

"எழுதுவோனு மெழுதிடமு மெதிர்காண்பொருளு மிலதாகி
வழுவிலாத விண்ணிடையே வந்துதோன்று மோவியந்தான்
பழுதின்மேவுந் தனைத்தானே பாராகிற்கும் பலபொறியு
நழுவுதுயிலி னுலன்றி நனவான்மேவுங் கனவொக்கும்."

என்றும் அருளி இருக்கின்றது. சிந்தையானது வியாபக வடிவென்பதற்கு உதாரணம்,

ஞானவாசிட்டம்.

"தானுகு மிகநொய்தா மாகாயத்திற்
சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானேகோட்டு
மானுத வுலகமெலாந் தனதுசோதி
யாதலினு லதற்குவே றயலொன்றில்லை
நீநானுஞ் சகபேத வடிவந்தானு
நிற்கின்ற வதன்வடிவாய் நீங்காதென்று
நானுவாம் பொருட்புணர்வா னடந்ததாகு
நடக்கவிட மிலாமையினு னடவாதாகும்." என்றும்,

பாடுதுறை.

"பற்றற்று நின்றோமென் றாதேடா காளம்
பார்ப்பறப் பார்த்தோமென் றாதேடா காள
முற்றவு ணர்வேயென் றாதேடா காள
முள்ளொளி யானோமென் றாதேடா காளம்." என்றும்,

"அஞ்ஞான காரிய மனைத்து மறவிட்டு
விஞ்ஞான மானோமென் றுந்தீபற
வெளியாகி நின்றோமென் றுந்தீபற."

என்றும் கூறியவாற்றுற் காண்க.

உபாதி சகிதமாக நின்று நிகழும் எண்ணரிய உயிர்களது உள்ளமானது அதாவது தத்தம் சிந்தையானது வியாபகமாகவும் உபாதானமாகவும் விளக்கமாகவும் நித்தியமாகவும் சாட்சியாகவு மிருக்கின்றது சத்தியமான அனுபவமாயிருக்க, அவ்வொவ்வோருயிரும் நான் நானென்பதற்குப் பொருள் இந்தையன்றி யாதிருக்கின்றது? உயிர்கள் பலவாயினும் அவைகளுக்கு நானென்னும் இவ்வகம்பொருள் ஒன்றாயிருக்கின்றதன்றோ? இவ்வொன்றையன்றோ எவ்வுயிரும் நான் நானென வழங்குகின்றன. அங்ஙனம் வழங்கும் இவ்வகம்பொருள் எவ்வுயிர்க்கும் பொருத்தமுற் றிருக்கின்றதாலன்றோ,

ஞானவாசிட்டம்.

"அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந் தனவரத முரைப்ப தாகி
நிகழொளியா யான்மதத் துவமான சொருபத்தை நினைத்தல் செய்வார்
திகழிதய குகையுறையுந் தேவதையை விட்டயலே தெய்வந் தேடன்
மிகவரிய கவுத்துவத்தை யெறிந்துசிறு மணிதேடும் வேட்கை போலாம்."

என்றும்,

"தீவினையெல் லாமறுத்து மங்கலமெல் லாமுதவுந் தேவபூசை
யாவதெனக் கேட்டலுமே யருள்செய்வான் றெய்வந்தா னியாதென் றேற்
கேவலமே யரியல்ல வரனல்ல பூதவுடற் கிடைத்த தல்ல
வோவுமன முன் றடியு முடியுமிலாச் செயப்படா வுணர்வே தெய்வம்." என்றும்,

அருளி யிருக்கின்றது. அன்றியும், ஒவ்வோருயிரும் இவ்வகம் பொருளை அபரோட்சமாகக்கொண்டு பல கற்பமும் பூசித்து அது வாக வேண்டுவது அவசியமிருக்கின்றதால்,

ஞானவாசிட்டம்.

"தேகமுதற் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்களிலத் தெய்வமுண்டோ
பாகமறப் பணிமையற வடிமுடிவற் றுளவுணர்வே பரமபோத
மாகலினு லதுதெய்வ மருச்சித்தற் குரித்தாகு மறிவிலாத
மூகருக்கு வடிவுமுத லருச்சனையே யியல்பென்று மொழியுமன்றே."

என்றும் அருளியிருக்கின்றது.

சுருதி உத்தி அனுபவங்களால் அகம்பொருள் இங்ஙனமிருக்க, நாம் ஒவ்வொருவரும் எக்கிருத்தியங்களையும் எப்போகங்களையும் அனுபவித்தற்கு நான் நானென இவ்வாபாச போதங்க ளெழுந்தோ றும் அவ்வப்போத நாட்டங்கள் அதிட்டான நானென்னும் ஆதார அப்பெரும்போதத்தில் விழவேண்டுமா? அன்றித் தூலமுதலிய இவ்வுபாதித்திரயங்கள் மேல்வந்து விழவேண்டுமா? அவ்வாதாரப் பெரும் போதத்திலன்றோ வந்து விழவேண்டும். அங்ஙனம் விழும் இந்நாட்டம் அபரோட்சத்தில் இது நான் இது நானெனவும், பரோட் சத்தில் அது நான் அது நானெனவு மாகலின், அபரோட்சமாக விழுந்து பழகுபவரை அவர்போன்றார் மக்கடாமே ஆறறிவுயிரே என்றருளி யிருக்கின்றனர். அன்றியும்,

குறள்.

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற."

எனவும் மகாவாக்கியம் பிறந்திருக்கின்றது. இவற்ருல் அபரோட்ச மாக அப்பியாசிப்பவர்கள் மனிதரெனப் படுவரெனின், அவத்தாத் திரயங் கடந்து பரோட்சமாக அப்பியாசிப்பவர்கள் என்னவெனப் படுவர்? போலிமனித ரெனப்படுவரன்ரே? இவ்வப்பியாசிகளே போலி மனிதரெனின், அவத்தாத்திரயங்களில் கைப்புருமலும் அயர்வுருமலும் பரோட்ச அப்பியாசத்துக்குக் கிஞ்சித்தும் இணங் காமலும் கல்விகேள்விகளிலேயே முற்றும் மிதந்திருப்பவர்கள் என்ன வெனப்படுவரோ தெரிகிலம்? ஆகலின் ஒவ்வொருவரும் நாமரூபங் கள் நான் எனதாகத் தோன்றுந்தோறும் இவற்றை நான் என தன்றென அகற்றியகற்றி ஷை ஆதாரப் பெரும் போதத்தில் அப ரோட்சமாக விழாவிடினும், பரோட்சமாகவேனும் தத்தம் நாட்டம் விழுந்தழுந்த வேண்டுவதே திண்ணமாயின்! இவ்வாராய்ச்சிக்கண் இதனினும் கூறவேண்டுவது யாமறிகிலமென்க.

முன்ஞான்று விடயமுதல் இஞ்ஞான்று இருப்பாகத் தேர்ந்த இச்சாட்சிகாறும் விரிந்துவந்த ஆராய்ச்சியைத் தொகுத்து யூகித்தல் எங்ஙனமெனின், சத்தமுதலிய ஐந்து விடயங்களும் எதற்குத் தோற்றுகின்றதென ஆராய்ந்துழி, அவ்வைந்து விடயங்களையும் பிறிதின் கிழமைகளாகக் கொண்டுணர்ந்துவரும் ஐம்பொறிகளெனத் தேர்ந்தன. அதனுல், அவ்வைம்பொறிகளும் அறிவாயிற்று. ஆக வே, பின்ஞான்று அவ்வைம்பொறிகளையும் ஆராய்ந்துழி, அவைகள் அறியாமையாய் முடிந்தன. அதன் பின்ஞான்று அறிவென்ப தியா தென ஆராய்ந்து சென்றுழி, ஷை பொறிகளைப் பிறிதின் கிழமை களாகக்கொண்டு உணர்ந்துவரும் அந்தக்கரணங்களெனத்தேர்ந்தன. அதனுல், அவ்வந்தக்கரணங்கள் அறிவாயிற்று. ஆகவே பின் ஞான்று அவ்வந்தக்கரணங்களை ஆராய்ந்துழி அவைகள் அறியாமை யாய் முடிந்தன. அதன் பின்ஞான்று அறிவென்ப தியாதென ஆராய்ந்து சென்றுழி ஷை அந்தக்கரணங்களைப் பிறிதின் கிழமை களாகக் கொண்டுணர்ந்து வரும் சீவபோதமெனத் தேர்ந்தது. அத னுல் அச்சீவபோதம் அறிவாயிற்று. ஆகவே, பின்ஞான்று அச்சீவ போதத்தை ஆராய்ந்துழி அஃது அறியாமையாய் முடிந்தது. அதன் பின்ஞான்று அறிவென்ப தியாதென ஆராய்ந்து சென்றுழி ஷை சீவபோதத்தைப் பிறிதின் கிழமையாகக் கொண்டுணர்ந்துவரும் ஓர் சாட்சிபோதமெனத் தேர்ந்தது. அதனுல் அச்சாட்சிபோதம் அறி வாயிற்று. ஆகவே, பின்ஞான்று அப்போதத்தை ஆராய்ந்துழி,

ஒளியை விளக்குதற்கு வேறோர் ஒளி இல்லாவாறுபோல், ஷை சாட்சியைவிளக்கி உணர்தற்கு வேறோர் உணர்வு கிஞ்சித்துமின்றித் தான் மாத்திரமாக நின்று ஷை விடயமுதல் சீவபோதமாகிய அவித்தைகாறுமாக நிகழும் அறிவறியாமை அடுக்குப் பேதங்களை ஒருங்கே தோய்ந்தும் தோயாதுமாய் அவை அனைத்திற்கும் சாட்சியாய் நின்று தன்னைச் சிற்பிரகாசமாயுணரும் உணர்வுவடிவே ஷை அறிவறியாமை ரகித அகம்பொருளாகவே முடிந்ததென்க. இதனால் என்ன ஆயிற்றெனின், அறிவுக்குமேல் அறிவிருக்கின்றதென்னும் ஆகம பட்சத்தைப் பூர்வபட்சமாக்கி, ஷை விடய முதல் அவித்தைகாறுமாக நிகழும் அறிவறியாமை அனைத்துள் ஒன்றேனும் தானன்றெனவும், தன்னையன்றி அவற்றுள் ஒன்றேனுமின்றெனவுமாகித் தானே தானாயிற்றென்க. தானே தானாயிருத்தல் இயற்கையாயின், இடைஞான்று அறிவறியாமைப் பேதம் வந்ததென்னை யெனின், இஃது கயிற்றின்கண் அரவென்பது வந்ததென்னையென வினவுவதுபோலாமென்க. ஷை விடயமுதல் சாட்சிகாறுமுள்ளனவற்றிற் குதாரணம்.

உபநிடதம்.

"சத்தமுத லனைத்தனையும் பொறிகளறி யும்பொறிக டம்மைத் தானு
யொத்தகர ணமறியுங் கரணத்தை யறியுமுயி ருயிரைத் தானு
நித்தியமா யிருந்தறியுஞ் சாட்சியகண் டாகார நீங்கி மேலா
யித்தனையும் பகுத்தறியு மறிவுவடி வாயிருப்ப தியல்ப தாமே." என்றும்,

"விடயமறிந் திடும்பொறிகள் விடய மாமோ
மிக்கபொறி யறிகரணம் பொறிக ளாமோ
வடைய்வறி சீவனந்தக் கரண மாமோ
வதனையறிந் திடுஞ்சாட்சி சீவ னாமோ
தடையறவொன் றினையறியு மொன்று மேலாஞ்
சாட்சியையொன் றுவறியத் தருமோ தானு
யிடையறநின் றிலகுமெனி னதனைக் காண்டற்
கேதுண்டா மதுவாகி யிருந்து காணே."

எனக் கூறியவாற்றாற் காண்க.

ஐந்தாவது
கூடஸ்த சைதன்னிய இலட்சியார்த்த விளக்கம்
முற்றிற்று.





உ

திருச்சிற்றம்பலம்.

ஆ று வ து

# துவைதசிதாரோப ஆராய்ச்சி விளக்கம்.

வெ ண் ப ா.

"இந்தவா ராய்ச்சியினி லேய்ந்திலகுஞ் சித்திரண்டென்
றந்தமின்றிச் சாதிக்கு மாகமந்தா—னந்த
வறிவிரண்டுங் கற்பனைக ளாகிமே லொன்றே
யறிவென்னத் தேர்ந்திடுமே யாங்கு."

முன்ஞான்று இருப்பது ஓர் அறிவெனக் கூறியது உண்மையா யிருக்க, ஒழுவிலொடுக்க முதலிய அரிய நூல்களில்,

காணு மறிவுங் காட்டறிவு மாமவற்றைக்
காணக் கழலுங் கழற்றியிலே—நாணி
நமைத்திரும்பிப் பாராதே நான்றானென் றேதே
யமிழ்த்துகர கம்போனிற் பாய்."

எனக்கூறியிருப்பா னேனெனின் அங்ஙனம் கூறியிருக்கின்ற தைப்பற்றி நன்குவிளக்குதும். எங்ஙனமெனின், அறிவென்பதற்கு மேல், வேறே ஓர் அறிவுண்டென்பது, முதலறிவு அறியுமறிவும், மேலறிவு அறிவிக்குமறிவும் ஆகின்றன. முதலறிவை யறிவித்தற்கு மேலறிவு ஒன்றிருப்பதுபோல, அம்மேலறிவை யறிவித்தற்கு மேல றிவொன் றிருக்கவேண்டுமன்றோ? மேலறிவை அறிவித்தற்கு மேலறிவொன்றில்லையெனின், முதலறிவை அறிவித்தற்கு மேலறி வொன்று இல்லையெனப் படாதோ? படாதெனின், முதலறிவுக்கு மாத்திரம் எங்ஙனம் மேலறிவு உண்டெனப்படும்! அறிவென்பது, தனக்குச் சுசாதிகமும் விசாதிகமும் சுகதபேதமுமிருக்கச் சம்மதித்த தாயின், அஃது அறியாமையெனப்படும்! இங்ஙனமிருக்க ஈரறிவென் பதில் எது அறிவெனப்படும்? எது அறியாமை யெனப்படும்? முதலறிவு அறியாமையும் மேலறிவு அறிவுமெனப் படுமெனின்; சிற்றறிவு பேரறிவு பேதமின்றாகின்றன. இருக்கின்றதால் ஒன்றறி வாயும் ஒன்றறியாமையாயும் எங்ஙனம் ஏற்கப்படும்? முன்ஞான்று சுசாதி விசாதி சுகதபேதம் மூன்றையும் ஏலாததே அறிவெனச்

சம்மதித்திருக்க, பின்னொன்று முதலறிவாகிற அறியாமையிருக்கச் சம்மதித்த தென்னை? அவ்வறியாமை மேலறிவுக்கு விசாதிகமன்றோ? அன்றியும் சிற்றறிவு பேரறிவென்பதில் சிற்றறிவாவது முண்டன்றோ? அச்சிற்றறிவு சுசாதி பேதமன்றோ? இச்சுசாதிபேதம் பிரமன்முதல் பிபீலிகம் இறுவாயுள்ள எண்ணரிய கோடாகோடிகட்கும் மிஞ்சியிருக்கின்றனவன்றோ? அன்றியும், பாஞ்சபூத பவுதிக முதலியனவாகத் தோன்றும் இப்பிரபஞ்சம் விசாதிபேதங்களன்றோ? முதலறிவு அறியாமையென்னின், இம்முதலறிவு எண்ணரியதாயிருக்கின்றமையின், விசாதிபேதம் அனந்த பேதங்களாயும், அங்ஙனமின்றி அம்முதலறிவு சிற்றறிவென்னின், அனந்த சுசாதிபேதங்களாயும் முடிகின்றன. முடிவதால் எங்ஙனம் மேலறிவென்றது அறிவெனப்படும்? முதலறிவு அறிவாயின், மேலறிவாகிற சுசாதி பேதமும் பிரபஞ்சமாகிற விசாதிபேதங்களும் இருக்கலாமா? அன்றி, மேலறிவு அறிவாயின் முதலறிவாகிற சுசாதிபேதங்களும் பிரபஞ்சமாகிற விசாதிபேதங்களும் இருக்கலாமா? வத்துவெனப்படுவது ஒப்பும் உயர்வும் தாழ்வு மற்றதன்றோ? இத்துணைத் தோடங்களிருக்க, அறிவுக்கு மேலறிவுண்டெனச் சம்மதித்து அறிவுக்கு மேலறிவு அறிவுக்கு மேலறிவெனச் சென்று சென்று ஈறின்றி அனவத்தாத் தோடமெய்துமே? இதற்கென்செய்தும்! இத்துணைக் கட்டங்களையும் நன்குணர்க.

சுசாதிமுதலிய பேதங்களுக்குத் திட்டாந்தமாவது:—மரத்துக்குத் தன்போன்ற மரம் வேறுயிருத்தல் சுசாதியும், அம்மரத்துக்குக் கல் முதலியவை மாறுயிருத்தல் விசாதியும், அம்மரத்தின்கண் தளிர் இலை சாகை முதலியனவாய் விட்டு நீங்காது அடங்கியிருத்தல் சுவகத பேதங்களுமா மென்க. இவ்வாறே தாட்டாந்தமாவது அறிவென்பதற்கு மேலாகவேனும் தாழ்வாகவேனும் சமமாகவேனும் தனக்கொப்பாக வேறறிவு ஒன்றுகவேனும் பலவாகவேனும் இருக்குமாயின் சுசாதியும், அவ்வறிவுக்கு அறியாமையும் பிரபஞ்சமும் வேறுயிருக்குமாயின் விசாதியும், அவ்வறிவு தான் சகுணமுற்றிருக்குமாயின் அஃது சுவகதபேதமுமாமென்க. இச்சுசாதி முதலிய மூன்று பேதங்களும் அறிவென்பதற் கின்றுகலின்,

ௐ சிவஞானபோதம்.

“மெய்ம்மையறி வல்லதயில் வேறறிவ தெல்லாந்
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே.” என்றும்,

ஞானவாசிட்டம்.

"பொருகடலிற் றிரைமுதலாப் பிறந்த வெல்லாம்
புனலாகி விளங்காமற் புழுதி யாமோ
வொருபொருளாம் பிரமமாத் திரமேயல்லா
லுபயமெனுங் கற்பனைப்பே ரொன்றுமில்லை
யெரியிடத்திற் சூடுமாத் திரமே யல்லா
லிரண்டுண்டோ வவ்வகைபோ லென்று மொன்றுஞ்
சரியைகிரி யாயோகப் பதத்தின் முற்றிச்
சாதனங்க ணிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும்."

என்றுங் கூறியிருக்கின்றன.

ஓர் அறிவென்பதே சுவகதாதிபேத மிறந்திருக்கின்றதாயின், இரண்டாவதறிவு எங்ஙன மிருக்கும்? வேறாக ஓரறிவே யிருத்தற்கு ஏதுவில்லையாயின், எண்ணரிய அறிவென்பது இருத்தற்கு எங்ஙன மிடந்தரும்? இதனால் ஈரறிவென வழங்குவது விவர்த்தமென்க. இதுநிற்க, ஈரறிவென்பதைப்பற்றி இன்னுஞ் சற்றாகிக்குதும். முதலறிவு அறியுமறிவு மேலறிவு அறிவிக்கும் அறிவன்றோ? அறியுமறிவு பொருளல்லவற்றைப் பொருளெனவும் பொருளைப் பொருளெனவு முணர்தல். அவையாவன:—தானல்லாததைத் தானெனவும் தனதல்லாததைத் தனதெனவும், தானெனலைத் தானெனவும் தனதெனலைத் தனதெனவும் கோடல். இவ்விரண்டியக்கமும் யார் பாலது? முதலறிவாகிய உயிரின்பாலதெனின், இவ்வுயிருக்குமேல் வேறாகவோர் அறிவிருப்பது யாதுக்கு? முதலறிவுக்கு அறிவித்தற் கெனின், அவ்வறிவு அறிவிக்காதுழி, உயிரென்பது எங்ஙனம் தானே அறியும்? இவற்றால், மேலறிவு ஏவுதற்கர்த்தா கீழறிவு இயற்றுதற் கர்த்தாவாகின்றதன்றோ? ஏவுதற் கர்த்தா கருத்துப்படி இயற்றுதற் கர்த்தா நடக்குதல் யாதுக்கு? இவ்வியற்றுதற் கர்த்தாவி னியக்கம் பிறப்பிறப் பெய்துதற்கும், அவை யகல வீடெய்துதற்கு மெனின், இவ்விருவகைப் பயனையும் இந்தக் கர்த்தா அருந்துகிற தற்கு அந்தக் கர்த்தா இவ்விருவித வேலையையும், அவையாவன:— பொருளல்லவற்றைப் பொருளென்றும் பொருளைப் பொருளென்றும் உணரும் கிருத்தியங்களையும் செய்வித்துக்கொண்டு வருவதாக்கும்! இங்ஙனம் மேலொன்று செய்வித்துக்கொண்டு வருவதைக் கண்டுபிடித்த அதனாலாக்கும் காணுமறிவு நீ காட்டறிவு நாமெனத் திருவாய்மலர்ந்தருளியது!

மேலும் பொருளல்லவற்றைப் பொருளென் றுணருமாறு உணர்த்துந் திரோபாவ சத்தியினால் மயக்குவித்தலும், பொருளைப் பொருளென் றுணருமாறு உணர்த்தும் அநுக்கிரக சத்தியினால் தெளிவித்தலுமாயின், உயிருக்குத் தனக்கென்று என்ன கர்த்தத் துவ மிருக்கின்றது? சிறிதேனு மில்லையே! உயிர் இங்ஙன மகர்த்தத் துவமா யிருப்பதற்குத் தானோ மேலறிவொன்றிருக்கின்றது? "சும் மாவிருந்த தாரையை யூதிக்கெடுத்தானாண்டி" என்னும் பழமொழிக் கிணங்க, அநாதியாயுள்ள மாயைக்கண் அநாதியாக வாளாவிருந்த உயிரை வெளியி லிழுத்துவிட்டு இத்தனை கோலஞ் செய்துகொண்டு இன்னும் வருகின்றதென்பது பொருத்தமாக விருக்கின்றதா? அவ் விறைவன் தனது காருணியத்தால் இழுத்துச் செய்வித்ததேயன்றி விவர்த்தமாக வல்லவேயெனின், இக்கருணை உயிரின்மேல் இடையில் வைத்தற்கு ஏதுவென்னை? அன்றியும், இக்கருணை வைத்திருத்தற்கு முன்னான்று இவ்வுயிர் என்ன நன்மை செய்தது? அங்ஙனம் அஃது மாயைக்கண் தான் செய்வதற்குத் தனக்கு உபாதிசகித மில்லையே! இல்லாவிடினும், எவ்விதத்தினாலோ நன்மை செய்து விட்டதாகவே ஏற்போமெனின், அவ்வினை இறைவனது அநுக்கிரக சத்தியிற் சேர்ந் ததன்றோ? இதனால் அக்கருணை இடையில் வந்ததன்று. அக்கருணை இறைவனுக்கு அநாதியே இருக்கின்றதெனின், அவ் வியற்கைக் கருணை உயிரைப்பற்றியதன்றோ? அங்ஙனம் பற்றியிருக்குநான்று அநாதியிலேயே உயிர் வீடெய்தியிருக்க வேண்டுமே! இன்மையால் அக்கருணை இயற்கையுமன்று செயற்கையுமன்று. இவற்றாற் கருணை யென வழங்குவது விவர்த்தமென் றாயிற்றென்க. இது நிற்க, ஈரறிவென வழங்குவது உளதாயின் அது சுருதிக்கொத்ததா? அன்றி ஒவ்வாததா? ஒத்ததெனின், அற்பசுருதிக்கொத்ததா? அன் றிப் பிரபல சுருதிக்கொத்ததா? பிரபல சுருதிக் கொத்ததெனின்,

தாயுமானவர்.

> "சந்ததமு மெனதுசெய லினதுசெய லியானெனுந்
> தன்மைநினை யன்றி யில்லாத் தன்மையால் வேறலேன்
> வேதாந்த சித்தாந்த சமரச சுபாவமிதுவே." என்றும்,

திருவாசகம்.

> "வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
> வூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்." என்றும்,

சுந்தரமூர்த்திசுவாமிகள்.

"ஊனுயி ரானுயுட லானுயுல கானுய்
வானுய்நில னுய்கட லானுய்." என்றும்,

வைராக்கிய சதகம்.

"புகல ரும்பரப் பிரம்மாங் கடறனிற்
புணர்பரைத் திரையீசன்
சகமொ டாருயி ரெனு நுரை யாதிக
டந்துமாற் றிடுமென்றே
பகரு நான்மறை யெனின திலெதையெதைப்
பற்றுவாம் விடுகிற்பாம்
சுகசொ ரூபமே யனைத்து மென்றகற்றுதி
துவித்பா வனை நெஞ்சே." என்றும்,

இதுவுமது.

"செய்யு நந்தொழி லெந்தொழி லியாமுமச்
சிவனது வடிவென்றே
யைய மற்றுணராதியா னெனுஞ் செருக்கடைந்து
நாடொறு நெஞ்சே, நைவதென்னை நீ." என்றும்,

குறள்.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு." என்றும்,

இங்ஙனம் அநேக நூல்களும் இறைவனையன்றி உயிரின்றெனவும், வேருகத் தோன்றினும் ஓர் முதலன்றெனவும், இங்ஙனமிருக்கும் உயிர் அவ்விறைவனு மன்றெனவும் கூறியிருக்கின்றவை அற்ப சுருதிகளாக்கும்! அன்றியும், ஈரறிவென்பது உள்தெனச் சம்மதித்த வெடி சுருதிகள் இவ்வுலகானுபவத்துக் கியைந்திருக்கின்றதே யெனின், ஈரறிவென்பது கற்பிதமென்ற சுருதிக ளனுபவத்துக் கியையாததாக்கும்! இரண்டறிவெனக் கூறும் சுருதிகள் அநுபவத்துக் கொவ்வியதோடு யுக்திக்கும் ஒத்திருக்கவேண்டுமன்றோ? அவ் யுக்திப் பிரமாணத்தைப்பற்றிச் சற்றாகிக்குதும். எங்ஙனமெனின், ஈரறிவெனச் சம்மதித்தது வியட்டி சமட்டி உபாதி குணம் தொழில் களாலன்றோ? வியட்டி உபாதி குணம் தொழில்களென்பவை தனித் தனியாயிருக்கின்ற தாலகுக்கும் காரணங்கள் உபாதிகளும், கிஞ்சிக் ஞத்துவம் குணமும், இராகாதி சேட்டைகள் தொழில்களுமாம். சமட்டி உபாதி குணம் தொழில்களென்பவை வெடி யாவும் ஒருங்கு

கூடியிருக்கின்ற தூலசூக்கும காரணங்கள் உபாதிகளும், சர்வக்ஞத்துவ முதலியவை குணங்களும், சிருட்டியாதிகள் தொழில்களுமாம். இவைகள் எவ்வனமெனின், தனிமரம் வியட்டியென்பதும் பலமரங்களின் சேர்க்கை சமட்டி யென்பதுமாம். தனித்தனியாயுள்ள வியட்டி உபாதி குணம் தொழிலுக்குப் பிரமன் முதல் பிபீலிக மிறுதியாக ஒவ்வோர் வியட்டி சித்துப்பொருள் இருக்குமாறுபோல், சர்வமாயுள்ள சமட்டி உபாதி குணம் தொழிலுக்குச் சமட்டிச் சித்துப்பொரு ளொன்றிருக்க வேண்டுமன்றோ? அச்சமட்டியாகிய சித்துப்பொருள் ஈசரனெனவும், பேரறிவெனவும், ஆண்டானெனவும் பொருள் படுகின்றது. வியட்டியாகிய சித்துப்பொருள் சீவனெனவும் சிற்றறிவெனவும் அடிமையெனவும் பொருள்படுகின்றது. ஷை வியட்டி சமட்டியாகிய உபாதி குணம் தொழில்கள் ஈரறிவாகிய முதல்களுக்கா? அன்றி ஈரறிவாகிய முதல்கள் உபாதி குணம் தொழில்களுக்கா? உபாதி குணம் தொழில்களுக்கே ஈரறிவுகளுமெனின், ஆழிக்கு விரலென்றாற்போ லாகின்றது. அங்ஙனமாயின், ஆழியானது கைவிரலைக்கோடல் யாதுக்கு? ஆழியாகியதான் விரலால் அலங்காரமா யிருத்தற்காக்கும்! இங்ஙனமே, ஷை இருவித உபாதி குணம் தொழில்களும் அவ்வீரறிவையுங்கொண்டு யாது செய்கின்றன? பந்தமுத்திக்கியைந்த சாதனங்களை இயற்றி அப்பந்தமுத்தியை எய்துதற்காக்கும்? இவைகள் கிஞ்சித்தும் பொருத்தமா யிருக்கின்றனவா? இல்லையே! விரலுக்கு ஆழியென்றாற் பொருந்தும். எங்ஙனமெனின், விரலானது ஆழியைக்கொண்டு தான் அலங்காரமாதற் கியைகின்றது. இதுபோல், ஈரறிவுக்கும் உபாதி குணம் தொழில்களாகலின் அவ்வவ் வுபாதியாதிகளால் சிற்றறிவு பந்த முத்திகளை எய்துதற்கும் பேரறிவு அப்பந்த முத்திகளை ஈதற்கும் பொருந்துகின்றன. அன்றியும், ஆழியென்பது விரலுக்காயினும், இவ்வாழி விரலெனப் படாவாறுபோல, ஷை இருவித உபாதி குணம் தொழில்கள் ஈரறிவுகட்காயினும் அவ்வுபாதியாதிகள் ஈரறிவெனப் படாவன்றோ? இவற்றால் அறிவுவேறும் அறியப்படும் உபாதியாதிகள் வேறுமாகின்றன.

ஆகவே இருவித உபாதி குணம் தொழில்களையும் நீக்குழி, அறிவு இரண்டென்னும் பேதமிருக்கக் காட்டுதற் கியையுமோ? ஈரறிவெனக் கொண்டது உபாதி குணம் தொழில் நோக்கத்திலேயா? அன்றி அறிவு நோக்கத்திலேயா? அறிவு நோக்கத்திலேயேயெனின்,

ஆகாய திருட்டியில் ஆகாய மிரண்டுபட் டிருக்குமாயின் அறிவு திருட்டியில் அறிவு இரண்டென்பதற்கு முரணின்று. கடோபாதி மேகோபாதிகள் திருட்டியில் ஆகாயம் இரண்டுபட்டதுபோ லிருப்பினும் இரண்டெனப்படுமா? படாதன்றே? அதுபோல், வியட்டி சமட்டி உபாதி குணம் தொழில் திருட்டிகளில் இரண்டுபட்டதுபோ லிருப்பதால் இரண்டாயிற்றா? இல்லையே! இஃதிங்ஙனம் நிற்க.

இஃது உயிர் பலவன்றெனல்.

உயிர் ஒன்றென்பதா? அன்றிப் பலவென்பதா? பலவென்பதுதானெனின், யாதினு லேற்றற்பாலது? உயிர்களினுலேயே ஏற்றதெனின், உயிரைக்கண்டுழி ஏற்றற்பாலதா? அன்றிக் காணுதுழி ஏற்றற்பாலதா? கண்டுழியே ஏற்றதெனின், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி மூர்ச்சை மரணமாகிய இவ்வஞ்ஞானவத்தைகள் ஐந்துள் எந்த அவத்தையிற் கண்டேற்றது? அன்றியும், ஞானவத்தைகளாகிய துரியம் துரியாதீதம் இரண்டில் எந்த அவத்தையிற் கண்டேற்றது? ஷெ அஞ்ஞானவத்தையிற் கண்டது தூல முதலிய உபாதித்திரயங்களையன்றி இல்லையே! ஞானவத்தைகளிலோ காலதேசவத்து பரிச்சேத ரகித சுயம்பிரகாசத்தையன்றி இல்லையே! ஆகலின், உயிரைக்கண்டு பலவென் றேற்றதன்று. அன்றியும், உயிரைப் பலவென் றேற்றது ஒவ்வொன்றும் எத்துணை எத்துணையாக ஏற்றது? உடற்றுணையாக ஏற்றதெனின், மூவித உடலுள் எந்த உடற்றுணையாக ஏற்றது? தூலவுடற்றுணையாக ஏற்றதெனின், இத்தூலவுடலெத் துணையது? இஃது பருவத்துக்கு ஓரளவா யிருக்கின்றதே? அப் பருவ பேதங்களில் இஃதெப்பருவத் துணையது?

திருவாசகம்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்."

என்று திருவாய்மலர்ந்தருளியதை ஏற்கற்பாலதாகலின், இப்பல பிறவிகளுள் எப்பிறவித்துணை யென்பது? அவ்வப் பிறவியும் ஒவ்வோர் பருவத்துணையா யிருக்கின்றதே! அவற்றுள் அவ்வவ்வுடல் எத்துணை யெனப்படும்? உடற்றுணை எத்துணை எத்துணைத்தாயினும்

உயிர்கள் அணுத்துணைத்தாகலின் அவ்வவ் உடல்களுள் ஏகதேச மாக நின்று இச்சாஞானக் கிரியைகள் இயற்றி இயற்றி வருகின்றன. அங்ஙனம் இயற்றி வருகின்றது ஓர் அறை வீட்டின்கண் ஏகதேச மாயிருக்கும் ஓர் சிறிய தீபமானது அவ்வீடு முழுதும் பொருள்களை விளக்குவதுபோலா மெனின், அவ்வறை வீட்டுத் தீபம் தனக்கணி மைக்கண் ஒளி மிகுதியாயும் சேய்மைக்கண் மழுக்கமாயும் இடைக் கண் சமமாயும் விளங்குகின்றது.

அதுபோல் உபாதிகள்தோறும் ஏகதேச மேகதேசமாக நிற்கும் உயிர்களின் உணர்வு தத்தமக்கு அணிமைக்கண் மிகுதியாயும் சேய் மைக்கண் மழுக்கமாயும் இடைக்கண் சமமாயுமிருந்து விளங்கவேண் டுமே! அங்ஙனமில்லையே! பரிசவுணர்வில்லாத இடமும் உண்டோ! தேகமுழுதும் வியாபித்து நின்றுணர்வது ஒருபடித்தா யிருக்கின்ற தே? உடலிருப்புப் பரிசவுணர்வின்கணன்றோ? எங்கெங்கே பரிச வுணர்ச்சியின்றோ அங்கங்கே அவ்வத்தேக மிருக்கட்டும். அன்றி யும் உயிர்கள் அணுத்தன்மை யென்பது இயற்கை யெனப்படுவதா? அன்றிச் செயற்கையெனப்படுவதா? செயற்கை யெனப்படுவதெ னின், உயிர்கட் கியற்கையது யாதெனப்படும்? வியாபகத்துவமெ னின், அவ்வியாபகம் இடையில் அணுத்தன்மையாக வேண்டுவ தின்று. அன்றியும், அவ்வியாபகம் அணுத்தன்மை யானதாகவே வைத்துக்கொள்வம். அணுத்தன்மைக்கு முன்ஞான்றிருந்த வியா பகங் கெட்டு அணுத்தன்மையாயிற்றோ? அன்றிக் கெடாதாயிற்றோ? கெட்டேயாயிற்றெனின், மீண்டும் வியாபகமாகா திருக்கவேண்டும்! மீண்டும் வியாபக மாகாதாயின், பரத்தோடு கலந் தேகமாதற்குக் கூடாதே! வியாபகங் கெடாமலே அணுத்தன்மை யாயிற்றெனின், வியாபக மிருந்தவா றிருக்கின் அஃதெங்ஙனம் அணுத்தன்மை பெறும்? கயிறானது அரவுத்தன்மை பெற்றதுபோலாகும்! இடைக் கண் அணுத்தன்மை வந்ததென் றேற்கின், அவ்விடைக்கண் வியா பகத்துவம் இன்றென்பதாகிப் பின்ஞான்று பரத்தோடு கலக்காத தோடம் வாய்க்குமெனக்கருதி அவ்வணுத்தன்மை இயற்கையதென் றேற்கினும், பரிபாக முதிர்ச்சி வந்த பின்ஞான்று பரத்தோடு கலத் தலை யேலாததுடன் கிஞ்சிக்ஞத்துவமும் இயற்கைய தெனப்படும். அஃதியற்கையதாயின், திரிகால ஞானமாகிற சர்வக்ஞத்துவம் இடைக்கண் வாராதிருக்கவேண்டுமே! அந்த ஞானம் தவத்தால் வருகின்றதெனின், தவத்தாலேனும் இடைக்கண் வருகின்றதால் கிஞ்சிக்ஞத்துவம் இயற்கை யென்பானென்? இது நிற்க.

உயிரென்பது அருவப்பொருளா? அன்றி உருவப்பொருளா? அருவப்பொருளெனின், அருவம் உருவ உபாதிக்குட் கட்டுப் படுவது முண்டா? படுவதுண்டெனின், அருவமாகிய இவ்வெளி யானது எந்த உருவ வுபாதிக்குட் கட்டுப்பட்டது? இவ்வெளி சட அருவமாதலிற் கட்டுப்படுதற் கியையாது, உயிர் சித்துருவமாகலிற் கட்டுப்படுதற் கியையுமெனின், அவத்தாத்திரயம் உபாதித்திரயம் அபிமானத்திரயம் முதலியவைகள் எதன்பால் மாறி மாறிக் காணப் பட்டுக்கொண்டு வருகின்றன? எங்ஙனமெனின், தூலபாவந் தோன் றிய ஞான்று விசுவனென்கிற அபிமானியும் சாக்கிராவத்தையுந் தோன்றுகின்றன. அம்மூன்றும் தோன்றுஞான்றும் ஏனைய சூக்கு மோபாதியும் தைசதனென்னும் அபிமானியும் சொப்பனவத்தையும் காரணோபாதியும் பிராக்ஞனென்னும் அபிமானியும் சுழுத்தியவத் தையும் இன்று. அச்சூக்குமோபாதி முதலியவைகள் தோன்றும் ஞான்றும் ஷை தூலம் விசுவன் சாக்கிரம் இம்மூன்றும் இன்று. இவையனைத்தும் எங்கே உளதாயு மிலதாயும் தோன்றிமறைகின்றன? இங்ஙனம்தோன்றி மறையு மனைத்தும் சங்கற்பமாகிற நினைவெழுச்சிக ளன்றோ? இவ்வெழுச்சிகள் நானென்பதி லன்றோ? அந்த நானென் பது ஷை தோன்றி மறைபவைகட்குச் சாட்சி சைதன்னியமன்றோ? இங்கே ஓர் வியட்டி உபாதி குணந் தொழில்களுக் காதாரம் நானென் னும் சாட்சி சைதன்னியம் ஒன்றிருப்பதுபோல ஆங்காங்கும் எண் ணரிய வியட்டி உபாதி குணம் தொழில்களுக்கும் ஆதார சாட்சி சைதன்னியங்களும் எண்ணரிதா யிருக்குமன்றோ? அவ்வவ் வாதார சாட்சி சைதன்னிய மனைத்தும் ஒன்றெனப்பட்டதா? அன்றிப் பல வெனப்பட்டதா? பலவெனப்பட்டதெனின், ஒரு நானென்னும்போ தாதாரத்திற்கு எல்லை எத்துணையென்று ஏற்கப்பட்டது? கடோ பாதிக ளனைத்தும் அகன்றுழி, அவ்வக் கடங்கடோறும் துண்டு துண்டாக முன்ஞான்று காணப்பட்ட வெளியென்பது பலவாயிருக் கட்டுமே! நானென்பது பலவாயிருக்க ஆங்காங்கும் அவத்தாத் திரய முதலியனவாகத் தோன்றும் விகார திருட்டிக ளகன்றுழி, அவ்வவ் வவத்தாத்திரயங்கள் தோறும் தனித்தனி வெவ்வேறாக முன்ஞான்று காணப்பட்ட நானென்னும் ஆதாரமென்பது பலவா யிருக்கின்றதா? ஓர் வகுப்பாகிய அலையாதிகட்கு எந்தச் சலப்பொருள் ஆதாரத்துவமா யிருக்கின்றதோ அந்தச் சலப்பொருள் ஒன்றேயன் றோ பல வகுப்பாகிய அலையாதிகட்கும் ஆதாரமாகியது? பலவகுப்பு அலையாதிகள் எழுச்சியினுற் சலாதாரம் பலவாகுமா? ஆகாதன்றோ?

அலையாதிகளாகிய ஆதேயங்களோடு சலாதாரமும் ஒருங்கே விளங்குவதால் இச்சலாதாரமானது ஏகத்துவ மென்பதற்கு இழுக்கின்று. ஆங்காங்கும் சலப்பொருள் விளங்காமலும் அதனைப் பாராமலும் நின்று அலையாதிகளையே திருட்டித்துக்கொண் டிருக்கில் இச்சலாதாரம் பலவாகத்தானே மயங்கிக்கொண் டிருக்கவேண்டியது? மயங்கினும் மயங்காவிடினும் இச்சலாதாரம் எஞ்ஞான்றேனும் பலவென்பதற் கியையுமா?

இதுபோல், ஓர் வகுப்பாகிய அவத்தாந்திரய முதலிய கற்பனைகட்கு, எந்த நானென்னும் போதம் ஆதாரத்துவமாயிருக்கின்றதோ அந்தப் போதாதார மொன்றேயன்றோ பலவகுப்பாகிய அவத்தாந்திரய முதலியவைகட்கும் ஆதாரமாகியது? பலவகுப்பாகிய அவத்தாத்திரய முதலியவைகளின் எழுச்சியினால் அந்தப் போதாதாரம் பலவாகுமா? ஆகாதன்றோ! அவத்தாத்திரய முதலிய ஆதேயங்களோடு அந்தப் போதாதாரம் சற்றும் விளங்காமையினால் அவ்வாதாரம் பலவாயிருப்பதுபோல் இழுக்குற்றது. ஆங்காங்கும் அந்தப் போதமானது விளங்கவும் அதைக் காணவும் நின்று இவ்வவத்தாத்திரய முதலியவைகளைத் திருட்டிக்கா திருந்திடில் அந்தப் போதாதாரம் பலவென மயங்கவேண்டி வருமோ? மயங்கினும் மயங்காவிடினும் அந்தப் போதாதாரம் பலவெனப்படுமோ? படாதன்றோ? அந்தப் போதாதாரம் ஏகமெனப்படுவது கற்பனைகளாகிய அவத்தாத்திரய முதலியவற்று லாகலின், ஆரோபமுமாமென்க. இங்ஙனமிருப்பதால் பலவென்பது எஞ்ஞான்றும் இன்றென்ப தாயிற்று.

அன்றியும் நானென்னும் போதப்பொருள் பலவாயின் இருவித சமாதிக்கண் ஏகமா யிருப்பானேன்? அதனால் அந்த நானென்னும் போதப்பொருள் ஏகமாயின் ஈங்குப் பலவாயிருப்பானேன்? ஆங்கு ஏகமாயும், ஈங்கு அனேகமாயும் இருப்பது யாதுகாரணம் பற்றி? நிருபாதிகமானஞான்று ஏகமாயும், சோபாதிகமானஞான்று அனேகமாயும் இருக்கின்றதெனின், சோபாதிகமாகிய அஞ்ஞானதிசைக்கண் போதம் அனேகமென்பது அனுமான அளவையினாலாமே! போதமானது தன்னைப் பிரத்தியட்சமாகக் கண்டு அனுபவிக்கப் படுவது சமாதிகளாகிய ஞானதிசையி லன்றோ? அந்த ஞானதிசைக்கண் அப்போதம் பலவாயிருக்கட்டுமே! இதனால் அஞ்ஞானதிசைக்கண் ஏகமா யிருக்கட்டுமே! அங்ஙனமில்லையே! பலவென்பது அஞ்

ஞான திசைக்கண்ணும், ஏகமென்பது ஞானதிசைக்கண்ணு மாகின்றன. இத்திசைக்கண் பலவென்பது அவத்தாத்திரய முதலிய கற்பனைகளாலாகலின் இக்கற்பனைகளைக்கொண்டு போத ஆதாரம் பலவெனக் கணிப்பது தோற்ற அனுமானமன்றோ? ஆகலின், போதம் பல ஆதார பேதங்களாக நிற்றல் ஆதேயமாகிய ஆரோபமும், அப்போதம் ஏகமாக நிற்றல் ஆதாரமாகிய அதிட்டானமு மாயிற்று. ஆகவே, தனித்தனி ஆதாரச்சாட்சி சைதன்னியங்கட்குமேல் சர்வாதாரச்சாட்சி சைதன்னியமே போதமெனப்பட்டிருத்தலின் வியட்டி சமட்டி அவத்தாத்திரயசகித ஆரோபச்சிற்றறிவு பேரறிவென்பவை எஞ்ஞான்றும் இன்றென்ப தாயிற்றென்க. இவற்றிற்கு உதாரணம்:—

கைவல்லிய நவநீதம்.

"அறிவுக்கு மறிவுசெய்யு மறிவுவே றுண்டென்றெண்ணு
மறிவற்ற குதர்க்கமூடர்க் கனுவத்தை பலமாத்தீரும்." என்றும்,

வேதாந்த சூளாமணி.

"சீவனுடை சன்கூடத் தன்பிரம மென்னச்
சித்துநான் காங்கடநீர்க் கதுவுறும்வெண் மீன்வான்
றாவுபனி நீர்விம்ப வனுமிதா காசஞ்
சொற்கடா விச்சின்ன காசமொடு மாவான்
மேவுமிமை யவற்றினுக்குத் திட்டாந்த முறையாம்."

என்றுங் கூறியவாற்றாற் காண்க.

ஆறுவது
துவைத சிதாரோப விளக்கம்
முற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.

## ஏழாவது

# துவைத இன்பாரோப ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

இந்தவா ராய்ச்சிக்க ணின்ப மிரண்டென்னல்
சந்ததமும் போலிகளாத் தாளுகு—மந்தமிலாத்
தாஞனந் தப்பொருடான் றங்கிடுமே திண்ணமதா
யேளுகு மீங்கிதனுக் கேச்சு.

எங்ஙனமெனின், போதமென்ப தொன்றுயின், அப்போதத்தை மற்றோர் போதம் அணைந்துருவழி அப்போத ஆனந்தம் எங்ஙனம் வெளிப்பட்டு மணமுறும்? ஓர் பெண்பால் தனக்கியைந்திருக்கும் நாயகனின்றித் தன்னைத்தானே தழுவி யணைந்து சுகிக்கக் கூடுமா? கூடாவழி, அவளது ஆனந்தம் எங்ஙனம் வெளிப்பட்டு மணமுறும்? இகத்திலேனும் பரத்திலேனும் இரண்டுபடாவழி இன்ப வெழுச்சி என்பது கிஞ்சித்தேனும் உண்டாகுமா? உண்டாகாதாகவின், போதமென்பது இரண்டுபட்டே யிருக்கவேண்டுமெனின், தவமென்பதும் இரண்டெனப்படும். அவை காமியத்தவமெனவும் நிட்காமியத்தவமெனவுமாம். இவ்விரண்டுள் காமியத் தவமாவது தனக்கெனப்பொருள் கிஞ்சித்துமின்றி, அத்தியாசமாய் வந்துவந் தடுக்கும் தத்தம் உடல்களை நான் நானெனவும் அவ்வவ்வுடலைச் சார்ந்து வரற்பாலனவாகிய பெண்டீர்முதலிய உயிர்ச்சார்பு பொருட்சார்புகள் அனைத்தையும் எனதெனவும் ஐயமுருது சத்தியமாகவே கர்த்தத்துவம் போக்தத்துவமுற்று நிகழ்ந்துவரும். இவற்றுல் உண்டாம் இராகாதி துற்குணங்களையும் மதுமாம்சாதிகளை அருந்தும் துராசாரங்களையும் தடுத்து இத்தேக போக விர்த்திக்கே விரதம், நோன்பு, தவம், மகம் முதலிய அனேக சற்கிருத்தியங்களையும் இடைவிடா தொழுகி வருதலா மென்க.

நிட்காமியத்தவமாவது ஷை சற்கிருத்தியங்களைத் தத்தம் உடலுக்கும் வறிய குடும்பத்திற்கும் செய்துகொண்டு வருவது பயனற்றதென நமது பிறவிகள்தோறும் நம்மைவிட் டகலாதுநின்று கொடுத்தற்கியைந்தனவாகிய இத்தனுகரண புவன போகங்களை நாம் பந்திக்

காது வாளாநிற்கும் சுழுத்திக்கண்ணும் விடாது பாதுகாத்துக் கொண்டு வருவது ஒப்பற்ற அவ்விறைவனாகலின், அவனையன்றி நமக்கென்று என்ன உரிமையிருக்கின்றது? எல்லா உரிமையும் அவனுடையதாகலின், அவன் ஆண்டானெனவும் நாம் உரிமையற்றிருக்கின்றோமாகலின் அடிமையெனவும், உள்ளபடியே கொண்டு, மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்றினையும் அவ்வீசுரார்ப்பணமாகவே செய்து செய்து அகமமதைகள் குன்றியிருத்தலாமென்க. இவ்விரண்டினுக்கும் உதாரணம்:—

வேதாந்த சூளாமணி.

"உடம்பினையும் வருகுடும்பந் தனையும்யா னெனதென்
றுளன்கரும காண்டி எலாக் கிரியையுமீ சற்கே
திடம்பெறநின் றுக்குமவ னேபத்தி காண்டி."

எனக் கூறியிருக்கின்றதை யுணர்க.

தற்சுதந்தரமுற்றும் தற்சுதந்தரமற்றும் நிகழ்த்தும் ஷை இரு கிருத்தியங்களாலும் வரற்பாலது யாது? இன்பமெனின், அவ்வின்பம் இருமை யுற்றதா? அன்றி ஒருமை யுற்றதா? இருமை யுற்றதெனின், அவ்வின்பம் இருமை யுறுவானேன்? கிருத்தியம் கர்த்தத்துவமாயும் அகர்த்தத்துவமாயும் இருமையுற்றதா லெனின், அவ்விரண்டின்பமும் எவற்றின்பாலது? இகபரத்தின் பாலதெனின், இகபரமாவது செகமும் சிவமுமாகின்றன. செகத்தின்பாலது சிற்றின்பமும் சிவத்தின்பாலது பேரின்பமுமாம். ஆயினும், சிற்றின்பம் செகத்திற் கியற்கையதும் பேரின்பம் சிவத்திற் கியற்கையதுமாம். உயிர்கள் தமது காமியத்தவத்தாற் செகத்தின் சிற்றின்பத்தையும், நிட்காமியத் தவத்தாற் பரத்தின் பேரின்பத்தையும் பெறுகின்றன. அத்தவத்தைப் புரியாவுழி அவ்வவ்வின்பத்திற் செல்ல வேண்டுவதின்று. செல்லாவுழி அவ்விரண்டின்பமும் அதனதன் ஆதாரத்தில் நின்றும் பயனுறாது, அவ்விரண்டின்பமும் செகத்தின்பாலதும் அச்செகத்திற் கியற்கையதும், பரத்தின் பாலதும் அப்பரத்திற் கியற்கையதுமாயின், அவ்விரண்டி லொன்றிலேனும் உயிர்களுக்கு என்ன சுதந்தரமிருக்கின்றது? அதாவது சொந்தமல்லாமை யன்றோ! இவற்றால் அவ்விரண்டின்பமும் உயிர்கட் கியற்கையன்று செயற்கையே! அன்றியும், உயிர்கள் உலகப்பொருளாயின் உலகச்சிற்றின்பம் உயிர்களுக்கியற்கை யெனப்படும். அங்ஙனமன்றி உயிர்கள் பரம்பொருளா

யின் அப்பரப்பேரின்பம் உயிர்களுக்கியற்கையெனப்படும். இவ்வுலகும் அப்பரமும் உயிர்களன்றாகலின் இச்சிற்றின்பத்திற்கும் அப்பேரின் பத்திற்கும் உயிர்களாகிய தாம் வேறெனப்படுவதே திண்ணமென்க.

இரண்டின்பத்திற்கும் தாம் வேறாகில் இவ்வுயிர்கள் எந்த இன் பத்தில் ஆறுதலுற்று நிலைத்திருக்கும்? பேரின்பத்தில் நிலைத்திருக்கு மெனின், அவ்வின்பமும் இச்சிற்றின்பத்தைப்போல் உயிர்களுக்கு இரவலுற்றிருத்தலால் எங்ஙனம் அதில் நிலைத்திருக்கும்? சிற்றின் பம் நிலைக்காது மாறுவது இழிந்தோர்க்குங் கண்கூடாயிருக்கின்றது. பேரின்பம் இதுபோலின்றி என்றும் மாறாத்தகைத்தா யிருக்கின்ற தேயெனின், அவ்வின்பம் மாறாதிருப்பதெனை யாதினால் ஏற்கற்பா லது? அனுமான அளவையாலும் ஆகம அளவையாலுமெனின், அனுமான அளவையாலேற்றது, இகமென்பது ஒன்றிருத்தலைப் பற்றி மேலே பரமென்பது ஒன்றிருக்கவேண்டுமெனவும், இவ் விகத்தின்கண் சிற்றின்பமொன்றிருப்பதுபற்றி அப்பரத்தின்கண் பேரின்பமொன்றிருக்க வேண்டுமெனவும், இச்சிற்றின்பம் கணத் தில் மாறத்தகுவதாயிருப்பதுபற்றி அப்பேரின்பம் அங்ஙனமின்றி நீடித்து மாறாதிருக்கவேண்டுமெனவும், நம்பிக்கையுற்றிருக்கும் பட் சமாய் முடிகின்றன. இதனால் அனுமான அளவை பயனுறாதென்க.

ஆகம அளவையாற் பயனுறாதோவெனின், அவ்வாகம அள வை யுத்திக் கொத்ததா? அன்றி ஒவ்வாததா? யுக்திக்கொத்ததெ னின், இதுகாறும் யுத்தியாலாராய்ந்து வருகின்றமையால் இஃது முடிவு பெறுமளவும் ஆகமவளவை இனி வேண்டுவதின்று. இச்சிற் றின்பம் காமியத்தவத்தால் வாய்க்கற்பாலதால், உயிர்களுக்கு இரவல் சுகமா? அன்றிச் சொந்தச் சுகமா? சொந்தச் சுகமெனின், இச்சிற் றின்பம் உலகுக்கு இரவல் சுகமாக்கும்! இவ்வண்ணமே, அப்பேரின் பமும் உயிர்களுக்குச் சொந்தச் சுகமாயும் பரத்திற்கு இரவல் சுகமாயு மாகின்றதே! உலகானந்தம் உலகுக்கும் பரமானந்தம் பரத்துக்கும் இயற்கையென முன்னமே சித்தாந்தமாயிற்று. எங்ஙனம் இரண் டின்பமும் உயிர்களுக்குச் சொந்தமெனப்படும்? படுமெனின், உயிர் கள் உலகத்திலும் பரத்திலுஞ் சென்று கலக்க இருதவத்திலும் முயலுவானேன்? தத்தம் இன்பத்தை உலகின்கண்ணும் பரத்தின் கண்ணும் முன்னொன்றே ஏற்றியிருக்கின்றதாக்கும்! பின்னொன்று அவ்வின்பத்தை யனுபவிக்க இருதவத்தையும் வேண்டுவது! இது விந்தையினும் விந்தை! இது நிற்க.

உலகவின்பம் உலகத்தைவிட்டும் பரத்தினின்பம் பரத்தை விட்டும் மாறுந்தகையனவா? அல்லவே! இங்ஙனமிருக்க, உயிர்களுக்கு முன்ஞான்றில்லாத இருவித இன்பமும் இருவகைத் தவத்தால் பின்ஞான்று வாய்க்குமாயின், அவ்வின்பங்கள் எங்ஙனம் உயிர்களுக்கு மாறாது நிலைத்திருக்கும்? இயற்கையின்பம் எஞ்ஞான்றும் மாறுதற்கிடனின்று. பெருந்தவத்தால் வரினும் செயற்கை இன்பம் மாறுந் தகுதியதே! அஃது அயலின்பமாகலி னென்க. உயிர்களுக்கு இன்பம் இயற்கையதெனின், இடைக்கண் மாறவேண்டுவதின்று. அங்ஙனமின்றிச் செயற்கையதெனின், எஞ்ஞான்றும் மாறாதிருக்கின்றதெனக் கூறவேண்டுவதின்று. சிற்றின்பம் பந்தநிலையதென்றும், பேரின்பம் முத்திநிலையதென்றும் சத்பிரமாணங்கள் கோட்டிக்கின்றதேயெனின், யுத்தியினால் முடிவுபெறுங்காறும் ஆகம அளவை வேண்டுவ தின்றென முன்னமே ஏற்கப்பட்டிருக்கின்றோமாகலின், இஞ்ஞான்று அஃது வேண்டுவ தின்று. அப்பேரின்பத்தை ஒவ்வோருயிரும் பெறுவது முழுதுமா? அன்றித் தத்தமக்கும் கூடுமானதா? முழுதுமேயெனின், ஒருயிர் அவ்வின்பத்தைக் கொண்டுழி மற்றோருயிருக் கில்லாமற் போகின்றது. அங்ஙனம் இல்லாமற் போகுமாயின், இன்னும் எண்ணரிய உயிர்களும் பின்ஞான்று என்செய்யும்? அவ்வின்பத்தை ஒருயிர் முழுதும் கிரகிப்பதென்பது - அகண்டமான கடல்நீர் முழுவதும் ஓர் கிருமியானது குடித்ததுபோலாமென்க.

அவ்வின்பத்தைத் தத்தம் அளவுக்குத் தக்க்வாறு பெற்றுக் கொள்ளுகின்றதெனின், இதுகாறும் நிட்காமியத்தவ உயிர்கள் த்த்தம் அளவுக்குத் தக்கவாறு அனுபவிக்க அவ்வின்பத்தைப் பங்கிட்டுக்கொண்டு வந்திருந்தால் அவ்வின்பம் எத்துணை குறைந்திருக்கவேண்டும். இனியும் நிட்காமியத்தவம் இயற்றி இயற்றி அனுபவிக்கப் பங்கிட்டுக்கொள்வார்களாயின், இதுகாறும் குறைந்துபோனது போக நின்றவின்பம் முற்றும் இல்லாமற் போய் விடுமே? போகுமாயின், இனி வரப்போகிற உயிர்களுக் கென் செய்வது? இங்ஙனம் அப்பரத்திற்கு இன்பமென்பது இல்லாமற்போயின், பரமென்பது துக்கவடிவமாகிறதாய் முடியும். முடியவே, உயிர்கள் தத்தம் அளவுக்குத்தக்கவாறு பங்கிட்டுக்கொள்ளப்பட்ட இன்பங்கள் இரவலின்பமாயும் முடிகின்றன. முடியவே, முத்தியென்பது இங்ஙனந்தா னிருக்குமாக்கும்! கடல் நீரை முகில்களாலும், ஏனையவைகளாலும் எத்துணை கிரகித்தாலும்

குறையாததுபோல் அவ்வின்பம் குறையாமலே யிருக்குமெனின், அந்த நீர் எவற்றாற் கிரகிக்கப்படுகின்றதோ? அவற்றாற் சிறுகச் சிறுக வெளிப்பட்ட பின்னொன்று மீண்டும் அக்கடலின்பால் வந்து வந்து சேராமல், வெளிப்பட்டவை வெளிப்பட்டுக்கொண்டே யிருக்கின், முடிவில் கடலென்னுஞ் சமுத்திரத்தில் நீரொன்பது ஓர் திவலையேனு மிருக்குமா? இராததுபோல், அப்பேரின்பம் உயிர்களால் தத்தம் அளவின்படியே சிறிது சிறிதாக வெளிப்பட்டுவிட்டது மீண்டும் அப்பரத்திற் சேராமல் உயிர்களிடத்தில் தங்கிவிடுமாயின், அப்பரத்துக்கென்று என்ன இன்பம் கிஞ்சித்தேனு மிருக்கின்றது? இன்றாகுமாயின், பரமென்பது முடிவில் இன்பமற்றதாகின்றது.

ஆகவே, அப்பரம் துக்கவடிவமெனப்படும். ஷை கடலின்கண் வந்து சேராதுழி, முன்னொன்று அந்நீர் சிறுகச் சிறுக எவற்றாலெடுக்க வெளிப்பட்டதோ அவற்றிற்குப் பின்னொன்று அந்நீர் பயனின்றிப் போகுமன்றோ? அதுபோல், பரத்தின்கணின்று வெளிப்பட்ட இன்பமானது மீண்டும் அப்பரத்தின்கண் வந்து சேராதுழி முன்னொன்று அவ்வின்பம் எவ்வுயிர்களால் சிறுகச்சிறுக எடுக்க வெளிப்பட்டதோ அவ்வுயிர்களுக்குப் பின்னொன்று அவ்வின்பம் பயனின்றிப்போம். போகவே, உயிர்களுக்குச் சிறிதுஞ் சுகமென்பதின்றி முன்போலவே துக்கவடிவாகிவிடும். இதனால் உயிர்கள் முற்பொழுதும் பிற்பொழுதும் இன்பமுற்றனவாயும், இடைப்பொழுது துக்கமுற்றனவாயும் முடிகின்றன. இதுபோல் பரமானது முற்பொழுதும் பிற்பொழுதும் துக்கமுற்றதாயும், இடைப்பொழுது இன்பமுற்றதாயு மாகின்றது.

இதனால் பரமானது ஒருபோது துக்கமுற்றதாயும் உயிர்கள் அவ்வொருபோது இன்பமுற்றனவாயு மாகின்றன. ஆகின்றதால், உயிர்களுக்குத் தோடம் வந்தாலும் அது ஓர் பெரிதன்று! பரத்திற்குத் தோடம் வரலாமா? இதற்கென் செய்தும்? முற்பொழுதும் பிற்பொழுதும் துக்கவடிவாயுள்ள உயிர்கள் காமியத்தவ முதிர்ச்சியால் பெரிதும் துக்கமயமாகிய சிற்றின்பத்திற்சென்று தாக்குவனவும், நிட்காமியத்தவ முதிர்ச்சியால் ஷை முற்பொழுதும் பிற்பொழுதும் பெரிதும் இன்ப வடிவாயுள்ள பரமாகிய பேரின்பத்திற் சென்று தாக்குவனவுமாய் முடியும். முடியவே, உயிர்கள் எவ்வின்ப

வசத்தன்? சிற்றின்ப வசத்தனவெனின், நிட்காமியத்தவம் இவ் வுயிர்கட்கு வேண்டுவதின்று; பேரின்ப வசத்தனவெனின், அப் பேரின்பம் உயிர்களுக்கு முற்பொழுதும் பிற்பொழுதும் உளதாயும் இடைப்பொழுது தவத்துணையாய் வாராமலு மிருக்கட்டும். உயிர் கள் எவ்வின்ப வசத்தனவோ அவ்வின்பம் அவ்வுயிர்கட்கு இயற்கை யதா யிருக்கவேண்டுமன்றோ? இயற்கையாகிய இன்பம் முற்பொழு தும் பிற்பொழுது மில்லாதிருக்குமா? அன்றியும், ஓர் அரிய தவத் தாலேனும் அவ்வின்பம் அன்னியமாய் நின்று பெறப்படுமா? அங் ஙனம் பெறப்படுவதால் அவ்வின்பம் அன்னிய மென்பதற்கு முர ணின்று. அன்றியும், இச்சிற்றின்பத்தைத் தூலநானாகநின்று அனு பவிப்பதுபோல் அப்பேரின்பத்தை என்னநானாக நின் றனுபவிப்பது? சிவாகாரமாய் நின்று அனுபவிப்பதெனின், அச்சிவாகாரப்படுங்கா றும் அவ்வின்பம் அன்னியமன்றோ? இவ்வாகாரப்பட்டுழி அஃதன் னியமாயும் அவ்வாகாரப்பட்டுழி இஃதன்னியமாயு மாகின்றன.

ஆதலால், இவ்விரண் டாகாரங்களும் தாமன்றென்பதாயிற்று. ஆகவே, அவ்வவற்று வுண்டாகும் இரண்டின்பமும் அன்னியமென் பதற்கு முரணின்று. இன்றாகலின், உயிர்கள் என்ன ஆகாரவடிவின வெனப்படும்? சடசித்தாகார வடிவினவெனின், அவை ஒன்றால் தாம் அறியப்படுந் தகையன வாகலின் சடமெனவும், ஒன்றைத் தாம் அறியுந் தகையனவாகலின் சித்தெனவு மாகின்றன. ஆகின்றதால், சடசித்தாகிற இவ்விரு குணங்களும் எந்தக்குணியுடைய தெனப் படும்? அன்றியும், இவ்வுயிர்கள் பாசத்தை நோக்கச் சத்தும் பரத்தை நோக்க அசத்துமெனக் கோடலும் அங்ஙனமே. அதாவது ஓர் குணியின் குணங்களாகலினென்க. இவ்விரு குணங்கட்கும் குணிப் பொருள் யாதெனப்படும்.

இதுநிற்க, மணியின்கண் வசப்பட்ட ஓர் அயக்கோலானது அம்மணி அசைவினால் தான் அம்மணியின் ஓர் பாரிசத்திலேனும் நிலைக்காது இருபாரிசத்திலும் மொத்துண்ணுவதுபோல், இன்ப வசப்பட்ட உயிர்களானவை ஷை இருவகைத் தவத்தாற் சிறிது பெரிதென இரண்டாகவரற்பாலனவாகிய அவ்வின்பங்களில் நின்று, தாம் ஓரின்பத்திலேனும் நிலைக்காது இரண்டின்பத்திலும் மொத் துண்டுகொண் டிருக்கின்றனவாயின், உயிர்கள் எந்த வின்பவச முற்றன? இரண்டின்பமும் தவத்துணையாக வாகலினென்க.

உயிர்கள் இருதவத்திலும் செல்லாது நிற்கின், இரண்டின்பத்திலும் மொத்துண்ணுதலின்றி நடுவு நிலையதாய் வாளா இருத்தற்கியையுமன்றோ? அங்ஙனம் இயைந்திருத்தலே சாலுமான சுகப்பேறெனின், ஷெ இருவகைத் தவத்தையும் புரியாது வாளா இருத்தலென்பது-இருதவத்திலுஞ் செல்லாது நிற்பது மாத்திரமா? அன்றித் தேகபோகத்தை நுகராது நீங்கி யிருப்பதுமா? போகத்தை நுகராது நீங்கியிருப்பதுந்தா னெனின், இத்தேகபோக மென்பது இருப்புண்டெனச் சம்மதித்துத் தாம் நீங்கியிருப்பதா? அன்றி இருப்பன்றெனச் சம்மதித்துத் தாம் நீங்கியிருப்பதா? அவை இருப்புண்டெனச் சம்மதித்து நீங்கி யிருப்பதெனின், அது இருவகைத் தவத்துள் ஒன்றாகின்றது. அது எத்தவமெனின், நிட்காமியத் தவமென்க.

இப்போகம் இன்றெனச் சம்மதித்து நீங்குவது யாதெனப்படுமெனின், அதுதான் இவ்விருவகைத் தவமுங் கடந்த விவேகத்துவமென்க. அது விவேகத்துவமாயின் இவைகள் அவிவேகத்துவமாமேயெனின், கர்மோபாசனா காண்டத்திற்குமேல் ஞானகாண்டம் யாதுக்கிருக்கின்றது? இவ்விருதவமும் பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மருளாகலினென்க.

இதுநிற்க, காமியத்தவத்துணை சிற்றின்பத்திலும் நிட்காமியத்தவத்துணை பேரின்பத்திலும் மொத்துண்டுகொண் டிருக்கின்றதாயின், எவ்வின்பத்தில் நிலைத்திருக்கின்றது? இவ்விரண்டின்பமும் அயலின்பமாகலின் இரவற் சுகமெனப்படுமன்றோ? இரவற் சுகம் எதுகாறும் பயனுறும்? தவத்தின் வலித்துணைகாறுமன்றோ? சிற்றின்பம் காமியத்தவத்தின் வலித்துணையாயினும், பேரின்பம் சிவாகாரமான ஞான்றன்றோ? அங்ஙனமிருக்க, அஃதும் தவத்தின் வலித்துணையென்ப தென்னையெனின், சிற்றின்பம் எவ்வாகாரமான ஞான்று வாய்க்கற்பாலது? விடயாகாரமான ஞான்றன்றோ? அதாவது? தூல சூக்கும சரீரம். இத்தூல சூக்கும விடயவடிவம் உயிர்களாகிய நமது இயற்கைச் சொரூபமா? அன்றாகலின், விடய சிற்றின்பம் நமக்கிடைக்கண் வந்து வந்து மாறுகின்றது. இங்ஙனமே, சிவவடிவமும் நாமன்றாகலின், நாம் அச்சிவாகாரமானஞான்று அப்பேரின்பம் நமக்கு இடைக்கண் வந்துவந்து மாறுமன்றோ? விடயாகாரம் நாமாயின், சிவாகாரமும் நாமாகலாம்; இவ்விரண்டில் ஒன்று நாமாயின், மற்றொன்று யார்வடிவ மென்பப்படும்? அஃதும் தவத்துணை

நாமன்றோ? இங்ஙனம் இவ்விருவடிவமும் நாமன்றாயின், இவ்விரு வடிவும் காரணமாக வரற்பாலனவாகிய இவ்விரண்டின்பமும் நமக்குச் சொந்தமா? சொந்தமானாலன்றோ நிலைத்திருக்கும்? அதிலும் இரு சுகமும் எங்ஙனம் நிலைத்திருக்கும்? இவ்விரண்டும் அயலின்பமாக லின், துக்கம் கட்டம் எத்துணையோ அத்துணைக்கு இரவலாக வந்தமைகின்றன. அன்னிய சுகத்தை இரவலாகப் பெற்றுப் பின்னொன்று கைவிட்டுப் போவானேனென்று இவ்விரு தவத்திலுஞ் செல்லாது விட்டுவிடின் சுகதாகம் நசிப்புறுதற்கு மார்க்க மெங்ஙனம்? அத்தாகமானது இன்பம் முன்னொன்றில்லாதது இடைஒன்று வாய்ப்பதும், வாய்த்த இடைஒன்றுள்ளது பின்னொன்று மாறுதலுமாகிய இவ்வேறுபாடின்றி இயற்கையா யிருக்கவேண்டு மென்பது. தமக்கு இயற்கை யின்பத்தைத் தாம் அபேட்சிப்பது ஏனெனின், ஆங்காங்குமுள்ளனவாகிய உயிர்களுக்குக் கயிற்றரவுபோல் நானென்பது வேறுபட்டதுபோலத் தோற்றும் தோற்றரவு சிறிதுமின்றி,

சொருபசாரம்.

"எல்லாரு நானா யிருந்துரைப்பா ராகிறமை
யல்லாம லீச னளவுமலர்—சொல்லாலே
பெற்றமகன் றம்பி பிதாப்பே ருரைத்தொருவர்க்
குற்றவுடல் வேறாகு மோ."

என்றருளிய ஆன்றோர் தெளிவைத் தாம் கைப்பற்றி நானாக நிற்கில், அவ்வபேட்சை யின்றாமென்க.

அயல் நானாய் மருளுவானேனெனின், கயிற்றரவு திட்டாந்தம் கூறினது யாதுக்கு? இங்ஙனம் கேட்பதற்கல்லவே? மருண்டதுபோல் தோற்றினதா லென்க. மருண்டதுபோலும் பின்னொன்று தெருண்டதுபோலுமே யன்றித் தம்மை நோக்குழி அவ்வுண்மையில் இல்லவேயில்லை. ஐயவெழுச்சிக்கு என்செய்வதெனின், தன்னை நோக்காத்காறும் இவ்வையம் அகலாதென்பதே திண்ணமென்க. இதற்கு உதாரணம்:—

ஞானவாசிட்டம்.

"பேதமுறு புந்தியே மாயை யாகும்
பெரிதுவருந் தியுமிதனைப் போக்கல் வேண்டும்
போதமுறு பேற்றினா லன்றி மாயைப்
பொருநதியின் கரைதோன்றாப் புகலத் தோன்றி

வேதமறு மப்பத்மே யிறவா வீடா
யிம்மாயைப் பிறப்பிடமே தென்னல் வேண்டாஞ்
சேதமுறக் கொல்வழியே தென்று தேர்வாய்
சிதைவுற்று விதனியல்பு தெரியு மன்றே.''

எனக் கூறியதனுற் காண்க.

இஃதிங்ஙனமிருக்க, முன்ஞான்று இருவகைத் தவத்தாலும் வாய்க்கற்பாலனவாகிய இருவகை இன்பமும் நிலையற்றனவாகலின் இந்நிலையாமைக்கு விடாது பாடுபடுதற்கன்றோ கர்மோபாசன இரு காண்டமும் வந்திருக்கின்றன? வந்திருக்கினும் அவ்வ இன்பம் மாறுதிருக்கவேண்டுமென அபேட்சித்திருக்கும் இவ்விடாத அபேட்சையைத் தடுத்தற் கியைந்ததன்று. ஆகலின், தடுத்தற் கியைந்தது மூன்றுவது ஞானகாண்டமென்ப தொன்றே! எங்ஙனமெனின், இக் காண்டம் முன்ஞான்று மனமென்ப தலையாமையையும், பின்ஞான்று சஞ்சலமென்ப தணுகாமையையும், அதன் பின்ஞான்று உள்ளத்தில் நிலைத்திலங்கிய களிப்பு மாறுமையையும், கடைஞான்று தானே தானுக நிற்றலையும் செய்வித்தற் கியைந்தது: இதற்கு உதாரணம்:—

சொருபசாரம்.

"எச்சாத் திரம்வேண்டு மெச்சா தனைவேண்டும்
பிச்சாட்டல் லோகெடுவாய் பேதையர்க்குப்—புச்சாண்டிக்
காட்டுவார் போலவறுங் கற்பனைய தாக்கியுல
காட்டுவார் தம்மைக்கா ணுர்.'' என்றும்,

உத்தமவாதநூல்.

"ஆரா வியற்கை யவாநீக்கற் கொன்றுகேள்
தீராச் சகமுழுதுஞ் சித்தாக்கிற்—சாராதே
சித்து சடத்துவிதந் தீருவதான் மாப்புலவீ
ரித்தையொத்த முத்திநிலை யில்.'' என்றும்,

கைவல்லிய நவநீதம்.

"சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதி ருந்தா
லெத்தனை யெண்ணி னுலு மேதுசெய் தாலு மென்ன
நித்திரை தெளிந்த பின்னர் நிற்கின்ற கனவைப் போல
வத்தனை யும்பொய் தானே யானந்த வடிவா னானே.'' என்றும்,

தத்துவராயர் பாடுதுறை.

"அன்னிய மில்லையென் றாதேடா காள
மானந்த மானேமென் றாதேடா காளந்

துன்னு சுடரேயென் றூதேடா காளஞ்
சோதியுட் சோதியென் றூதேடா காளம்.'' என்றும்,

"என்னுளே யாவையுங் கண்டிட லாவதும்
யாவையு ளென்னையுங் கண்டிட லாவது
மன்னியங் கண்டிலோ மென்றிட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ.'' என்றும்,

குறள்.

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.''

என்றும் கூறியவாற்றூற் காண்க.

இவ்விளக்கத்தில் இதுகாறும் கூறிப்போந்ததில் துவைதானந்த மென்பது கிஞ்சித்தும் பொருள்படாது முற்றுங் கற்பனைகளாயும், அயலிறந்து தானே தானாகநிற்கும் நிரதிசயானந்தமே எஞ்ஞான்றும் இருப்பாயுந் தேர்ந்ததென்க.

ஏழாவது

துவைத இன்பாரோப ஆராய்ச்சி விளக்கம்

முற்றிற்று.





உ

திருச்சிற்றம்பலம்.

# அகம்புற ஆராய்ச்சி விளக்கம்.

இவ்விரண்டாராய்ச்சியில்

இஃது

## புறத்து ஆராய்ச்சி விளக்கம்.

இவ்வாராய்ச்சிக்கண்

முதலாவது

## தேகமென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

*இந்தவா ராய்ச்சியின்க ணிவ்வடிவ மாந்தனக்கு*
*வந்துநிகழ் தேகமெனு மன்பெயர்தா—னெந்தவிதத்*
*தும்மனர்த்த மாகியே தோன்றுமுறுப் பாகுமனைத்*
*தும்மிருப்ப தாகுமே தோய்ந்து.*

எங்ஙனமெனின், இத் தூலதேகம் தோற்றும் நிலைமையை யுடையதா? அன்றி அறியும் நிலைமையை யுடையதா? தோற்றும் நிலைமையையே யுடையதெனின், முன்னொன்றும் பின்னொன்று மிருந்து தோற்றுகின்றதா? அங்ஙனமின்றி இடையொன்று மாத்திரம் தோற்றுகின்றதா? முன்னொன்றும் பின்னொன்றும் இருந்தே இஞ்ஞான்றும் தோற்றுகின்றதெனின்! இங்ஙனந் தோற்றுகின்றது ஓர் முதலாக இருந்தா? அன்றிக் கற்பனையாகவா? ஓர் முதலாகவே யிருந்து தோற்றுகின்றதெனின், இதனால் இத்தேகத்தைத் தேகமென்றுணர்வது அறிவெனப்படுமா? அன்றி அறியாமை யெனப்படுமா? அறிவெனவே படுமெனின், ஒன்று கூறுதும். அஃதென்னெனின், தேகம் தேகம் என வழங்கப்பட்டு வரும் இப் பெயரானது அர்த்தப்பெய ரெனப்படுமா? அன்றி அனர்த்தப்பெய ரெனப்படுமா? அர்த்தப்பெய ரெனப்படுமெனின், பொருட்பெயர் இடப்பெயர் காலப்பெயர் சினைப்பெயர் குணப்பெயர் தொழிற்பெய

ரென்று வழங்கப்படும் இவ்வறுவகைப் பெயர்களுள் தேகமென வழங்கப்பட்டு வரும் இப்பெயரானது பொருட்பெயரென்றுகின்றது. ஆகவே, இஃது ஒருபொருள்குறித்த பல பெயர்களுள் ஒன்றென் பதா? அன்றிப் பலபொருள் குறித்த ஒரு பெயரென்பதா? பல பொருள் குறித்த ஒருபெய ரென்பது நாகமென்னும் பெயர். அது ஆகாயம் குரங்கு புன்னைமரம் தூசு மலை பாம்பு யானை முதலியன வாகிய பல பொருளை விளக்கும் ஒருபெயராகின்றது. தேகமென் னும் பெயர் ஆக்கை சரீரம் உடம்பு மெய் முதலியனவாக வழங்கப் படும் பெயர்களோடு தொந்தமுற்று வழங்கப்படுகின்றது. இப்பல பெயரும் ஒருபொருளை விளக்கும் பல பெயர்களுள் ஒன்றென்ப தாயிற்று.

ஆகவே, தேகமென்னும் இப்பெயர் எந்தப் பொருளை விளக்க வந்தது? வடிவமாயுள்ள ரூபத்தையெனின், வடிவங்களாயுள்ள எவ் வெவ் ரூபங்களும் தேகமுதலியனவாக வழங்கப்பட்டுவரும் தொந் தப் பெயர்களையே ஏற்று வேறே எப்பெயரையும் ஏலாதிருக்க வேண்டுமே? அங்ஙனம் ஏற்கவில்லையெனின், வடிவாயுள்ள ரூப மென்னற்க. தேகமென்னும் பெயரை யேற்கும் பொருள் யாதோ அதனை இஃதெனச் சுட்டி யுணர்த்த வேண்டுமன்றோ? ஏனெனின், சுட்டி யுணர்த்துதற் கியையாதது சூனியமும், சுட்டி யுணர்த்துதற் கியைவது நாமரூபமு மாகலினென்க. என்னை,

சசிவர்ணபோதம்.

“அறியாப் பொருள்கா ரணமா யைகுறித்
தறியும் பொருள்கா ரியமா முலகிந்
நெறியாற் றிகழ்நான் மறையந் தமெலா
நீயன் றெனவோ துகிரந் தரமே.”

என்றருளியதை யுணர்க.

பொருட்பெயர்கள் பொருள்களை விளக்க வந்திருக்கின்றமை யால், அங்ஙனம் இத்தேகமென்னும் பெயரும் எந்தப் பொருளை விளக்க வந்திருக்கின்றதோ? அவ்வுளவைத் தெரிவதற் கெங்ஙனம் கூடும்? இதுதான் தேகமென வழங்கப்படும் பெயரை ஏற்றற்பால தெனின், இதுதான் தேகமெனச் சுட்டிக்காட்டிய இந்தச் சுட்டா ணது அவயவமாகிய உறுப்பின்மேல் விழுந்ததே? தேகமென வழங் கப்படும் பெயருக்குப் பொருள் யாதென வினவப் பல வுறுப்புகளுள் ஒன்றைச்சுட்டி யுணர்த்தல் முறைமையல்லவே? இன்றொன்று சுட்

டியதற்கியைந்த உறுப்புக்குப் பெயர் மார்பென்கிறதாக வழங்கப் படுகின்றதே! இங்ஙனமே ஒவ்வோருறுப்புக்கும் இயைந்த பெயர்கள் வழங்கப்பட்டு வருகின்றனவே! உறுப்புக்களாவன:—

திருவரங்கக் கலம்பகம்.

"குழல்நுதல் புருவம் விலோசனங் காது நாசிவாய் நகைமுகங் கண்டங்
குலவுதோள் முன்கை யங்கைமெல் விரல்கள் கூருகிர் கொங்கைகண் வயிறு
விழைதரு முரோமம் வரையிடை யுந்தி விரும்புமல் குல்தொடை முழந்தாள்
மிளிர்கணைக் கால்கள் புறவடி பரடு மென்குதி விரல்நகந் தாளே."

என முப்பத்திரண்டு பேதங்களா யிருக்கின்றனவென்க.

இவற்றுள், எந்த உறுப்புத் தேகமெனும் பெயர் கோடற்பாலது? அவ்வவ் வுறுப்பும் தத்தமக் கியைந்த பற்பல பரியாயப் பெயர்களை ஏற்கப்பட் டிருக்கின்றதால் தேகமென்னும் பெயரை ஏற்றிலங்கும் பொருள் யாது? அதனை நன்குணரவேண்டுமே! இவ்வகை யுறுப்புக்களின் சேர்க்கை யெழுச்சியே தேகமென்கிற பெயர்க்குப் பொருளாமெனின், அஃது விகாரமெனப்படுமா? அன்றிச் சுயம்பெனப் படுமா? சுயம்பெனப்படுமெனின், சேர்க்கை யென்பதற் கியையா திருக்கவேண்டுமே! சேர்க்கையுற் றிருத்தலினால் விகாரமெனப் படுமோவெனின், ஒன்றன் கூட்டம் பலவினீட்டம் திரிபினுக்க மென்னும் இந்த முத்தர்மமும் யாதெனப்படும்? விகாரமெனப் படுமன்றோ? அவை ஓரினப்பொருள்கள் ஒன்றோடொன்று சேர்ந்து ஓர் முதல்போற் காண்டல் ஒன்றன்கூட்ட விகாரம். அது நெல்லம் பார முதலியன போலாம். பல இனப்பொருள்கள் ஒன்றோடொன்று சேர்ந்து ஓர் முதல்போற் காண்டல் பலவினீட்ட விகாரம். அது நால்வகைச் சேனைகள் ஒருங்குற்ற சைன்னியமென்பது போலாம். ஒன்று திரிந்து அதாவது ஒன்றுகெட்டு மற்றொன்றாக இருத்தல் திரிதல் விகாரம். அது பாலென்பது கெட்டுத் தயிராதல் போலாம். இம்முத்தர்மத்துள் தேகமென்னும் பெயரை ஏற்கற்பாலது என்ன விகாரமெனப்படுவது? பலவினீட்ட விகாரமன்றோ? இதனாற் பொருளெனப்படுவ தெங்ஙனங் கூடும்?

அன்றியும், உறுப்புக்க ளொன்றோடொன்று சேர்க்கையுற்ற ஞான்றும், அச்சேர்க்கை கலைந்த ஞான்றும் இருப்பது யாதெனப் படும்? உறுப்புக்களெனப்படு மன்றோ? தேகமென்கிற பெயருக்குப் பொருளென்ப தெங்கே? காணேமே! இருக்கின்றது உறுப்புக்களாகலின், இவ்வுறுப்புக்களை விட்டு இவற்றின் சேர்க்கையை ஓர் முத

லெனவும், தேகமென்கின்ற பெயருக்கியைந்ததெனவும் மயங்கிய மயக்கத்தை அறியாது முன்னர்த்தேகத்தைத் தேகமென் றுணரும் இம்மயக்கத்தை அறிவெனக் கூறியது அறியாமை யெனப்படுமன் றோ? அன்றியும், தேகமென்பது ஓர் ஞான்றுள்ளதா? அதாவது இடைஞான் றென்பது. இவ்விடைஞான்றோடு முன்ஞான்றும் பின் ஞான்று முள்ளதா? இடைஞான் றென்பது உறுப்புக்கள் சேர்ந்திருக் கும் ஞான்றென்க. இவ்விடைஞான் றுள்ளதெனின், முன்ஞான்றும் பின்ஞான்றுமுள்ள உறுப்புக்களில் கிஞ்சித்தேனு முண்டா? இல்லை யன்றோ? ஏனெனின், ஓர் பொருளுள்ள விடத்தில் அஞ்ஞான்றே மற்றோர் பொருள் எங்ஙன மிருக்கும்? இராதே! அதுபோல், இஞ் ஞான்று தேக இருப்பில் இதற்கு மாறான உறுப்புக்கள் இராதிருக்க வேண்டுமன்றோ? இருக்கின்றதால், அவ்வுறுப்புக்களன்றித் தேக மென்பதற்குப் பொருளெங்கே? இருக்கின்றதேயெனின், இஞ்ஞான் றுள்ளது முன்ஞான்றும் பின்ஞான்றுமுள்ள உறுப்புக்களின் இருப் பில் உண்டெனப்பட்டதா? இஞ்ஞான்று உண்டென்பதற்கு அங்ஙன மில்லையே! இதற்கென்செய்தும்!

அன்றியும், பொருளென்பது ஓர்ஞான் றுள்ளதாயின், ஏனைய இருஞான்றும் ஏனிருக்கப்படாது? அதுபோல், தேகமெனப்படுவது இஞ்ஞான் றுள்ளதாயின், முன்ஞான்றும் பின்ஞான்றும் ஏன் இல்லை யெனப் படவேண்டும்? இஞ்ஞான்றே இன்றாகலின், முன்ஞான்றும் பின்ஞான்றும் இல்லையென்பதாயிற்று. ஆகவே, முப்பொழுதும் இன்மை யெனற்கியைந்த தேகமென்பது எப்பொழுதும் எங்ஙனம் இருப்பெனற் கியையும்? இயையா திருக்கின்றமையின், இத்திண்ணம் நோக்கி இதற்குப் பிராக்கபாவம் பிரத்தொம்சாபாவம் அன்னி யோன்னியாபாவம் அத்தியந்தாபாவமெனக் கூறியிருக்கின்றனர். இந்நாற்பொழுதும் இன்மையெனப்படும் தேகமாகிய தோற்றத்தை உண்டென உணர்வது அறிவெனப்படுமா? படாமையின், அறி யாமை யென்பதற்கு முரணின்றென்க. இத்தேக ஆராய்ச்சியிற் றோர்ந்தது யாதெனின், இப்புறத்து ஆராய்ச்சிக்கண் முதலடுக்கா யுள்ள அறிவறியாமைப் பேதமும், இவற்றிற்குமேல் உறுதிப் பொருள்களாய் நின்ற அவயவக் குழாங்களுமா மென்க.

முதலாவது
தேகமென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம்
முற்றிற்று.

உ
திருச்சிற்றம்பலம்.

# இரண்டாவது

## அவயவமென்னும் சத்தார்த்த

# ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

இந்தவா ராய்ச்சியின்க ணேய்ந்த வவயவப்பே
ரெந்தவிதத் தும்மனர்த்த மெய்தியே—தொந்தமுறத்
தோன்றியமாம் சாதிகளே தோயு மிருப்புளதா
யூன்றி யுணர்வோர்க் குறும்.

எங்ஙனமெனின், தேக ஆராய்ச்சி யுழைப்பில் இருப்பாக நின்றது அவயவங்கள். இங்ஙனம் நிற்கும் அவயவங்களை இருப்பென்றுணராது இருப்பின்றித் தோற்றன் மாத்திரமாகக் காணும் தேகமென்பதை ஓர்முதலெனக் கண்டுணர்ந்து வருகின்றது மிக்க அறியாமையன்றோ? இஃதறியாமை யாயினும், அவயவங்களையேனும் இஞ்ஞான்று இருப்பென்றுணர்வது அறிவெனப்படுமா? அன்றி அறியாமை யெனப்படுமா? அறிவெனப் படுமெனின், இவ்வுறுப்புக்கள் ஒன்று மற்றொன் றெனப்படாது, வெவ்வேறு பேதமுற் றிருக்கின்றனவா? அன்றி ஓரினப்பொருள்களாகவே அபேதமுற் றிருக்கின்றனவா? வெவ்வேறாகவே பேதமுற் றிருக்கின்றனவெனின், தோற்றத்தாற் பேதமுற் றிருக்கின்றனவா? அன்றி அர்த்தத்தாற் பேதமுற்றிருக்கின்றனவா? அர்த்தத்தாற் பேதமுற் றிருக்கின்றன வெனின், சிரமென்கிற உறுப்புக்கும், பதமென்கிற உறுப்புக்கும் என்ன அர்த்தம் பேதித்திருக்கின்றது? பேதமாகத்தானே இருந்து தோற்றுகின்றனவெனின், எது இவ்வளவு பேதங்களாகத் தோற்றுகின்றது? இவ்வளவு தோற்றங்களும் வடிவின் பேதங்களா? அன்றி வேறு பேதங்களா? வடிவின் பேதங்களெல்லாம் தோற்ற பேதங்களாக முடியுமாகலின், வடிவின் பேதங்களன்று; பொருட் பேதங்களாமெனின், சிரமென்பது ஓர் பொருளும் பதமென்பது மற்றோர் பொருளுமா யிருக்கின்றனவா? சிறிதுமில்லையே! இவ்விரண் டுறுப்பும் மாமிசாதிப் பொருள்களாக இருக்கின்றனவே! எங்ஙனம் இவ்விரண்டுறுப்பும் பொருளாற் பேதித்திருக்கின்றன?

இங்ஙனமே ஏனைய ஒவ்வொருறுப்பும் மாமிசாதிப் பொருள்களாகவே இருக்கின்றமையின், அவயவமாகிற இவ்வுறுப்புக்களனைத்தும் பொருளாற் பேதித்ததன்றாம். பொருளாற் பேதித்த தன்றாயின், பின்னர் யாதினாற் பேதித்திருக்கின்றன? சொரூபங்களாலெனின், சொரூபங்களெல்லாம் பல்வகை வடிவுப் பொருள்களாகலின், தோற்றன் மாத்திரமென்பதற் கியைந்திருக்கின்றன. இயையவே, எல்லா உறுப்புக்களும் மாமிசாதிகளாகிய ஓரினப்பொருள்களாகின்றன. ஒருறுப்பின்பொருள் மற்றோருறுப்பின் பொருட்கியையாது பேதித்திருப்பதுமுண்டா? இல்லையே! அன்றியும், இவ்வுறுப்புக்கள் விகற்பமுறுதற்கு முன்ஞான்றும் இவ்விகற்பங்கள் மாறிவிடும் பின்ஞான்றும் உள்ளது யாது? மாமிசாதிகளெனின், அம்மாமிசாதிகளிருப்பில் இவ்வுறுப்புக்களுண்டா? இன்றெனின், அஞ்ஞான்றிருப்பது யாது? மாமிசாதிகளேயெனின், உறுப்புக்கள் எஞ்ஞான்றுள்ளது? இடைஞான்றுள்ளதெனின், அதாவது, இஞ்ஞான்றெனப்படுவது, முன்ஞான்றும் பின்ஞான்றும் உறுப்புக்களில்லாமைபோல் இஞ்ஞான்றுள்ள உறுப்புக்களில் மாமிசாதிகளுண்டெனப் படுகின்றனவா? அன்றி இன்றெனப் படுகின்றனவா? இன்றெனப் படுகின்றனவெனின், அவைகள் ஏன் இன்றெனப்படும்? ஓர் பொருள் உள்ளவிடத்தில் அஞ்ஞான்றே மற்றோர் பொருள் எங்ஙனமிருக்கும்? இராதன்றோ? அதுபோல், மாமிசாதிகளிருப்பில் மற்றோர் பொருள்களாகிய உறுப்புக்கள் இருத்தற்கியையுமா? இயையுமாயின், இஞ்ஞான்றுள்ள உறுப்புக்களிருக்குமிடத்தில் மாமிசாதிப் பொருள்களிருக்கலாம். ஆங்கு உறுப்புக்கள் இன்மையால் ஈங்கு மாமிசாதிகள் இன்றென்பதே துணிபாமெனின், உறுப்புக்களாகிற வடிவம் மாறியவிடத்துள்ள மாமிசாதிகள் முன்னிருந்தவைகளா? அதாவது-இவ்வுறுப்புக்கள் விகற்பமுறுதற்கு முன்ஞான்றெனப்படுவது. அன்றி, நூதனமாக உண்டானவைகளா? நூதனமாகவே உண்டானவைகளெனின், முன்ஞான்றில்லாதது பின்ஞான்று நூதனமாக உண்டாகுமாயின், இஞ்ஞான்றுள்ளது பின்ஞான்றில்லாமற்போகுமன்றோ? போகுமாயின், உறுதிப்பொருளென்பதின்றிப் போகுமே! இஃது விந்தையினும் விந்தையாக்கும்!

இவ்வுறுப்புக்கள் மாறிவிடும் பின்ஞான்றுள்ள மாமிசாதிகள் முன்ஞான்றுள்ளவைகளேயன்றி வேறன்று. முன்ஞான்றும் பின்ஞான்றுமுள்ள மாமிசாதிகள் இஞ்ஞான்றெங்கேபோயின? அவை

கள் இருந்தபடி யிருக்கின்றனவே! அங்ஙனமிருக்கும் மாமிசாதிகள் உறுப்புக்களாகிய வடிவபேதங்களால் மறைபட்டதுபோற் காணப் படுகின்றனவேயன்றி இல்லாமற் போயிற்றோ? உறுப்புக்களாகிய வடிவங்களை ஒவ்வோர் முதலென்றுணரும் நாட்ட தோடத்தால் மாமிசாதிக ளிருந்தும் தோன்றாததேயன்றி, அவை இல்லாமற் போயினவன்று. இஞ்ஞான்றே உறுப்புக்களை நாடும் திருட்டி நீங் கின், மாமிசாதிகள் உண்டென்பதற்கு முரணின்றாம். இன்றாகவே, உறுப்புக்களனைத்தும் தோற்றபேதங்களாயிற்று. ஒவ்வோர் தோற் றத்தின்கண்ணும் இருக்கும் இருப்புக்களைவிட்டு இத்தோற்றங்களை ஒவ்வோர் முதலென உணர்ந்துவருவது அறியாமை யெனப்படு வதா? அன்றி அறிவெனப்படுவதா? சற்றும் அறிவென்பதற் கிடனின்று. அறியாமை யாகலின், இவ்வறியாமையே இவ்வாராய்ச் சியில் பொருளல்லவாகப் பூர்வபட்சமாயிற்று. ஆகவே, இவ்வவயவ ஆராய்ச்சிக்கண் தேர்ந்தது யாதெனின், இரண்டாவது அடுக்கா யுள்ள அறிவறியாமைப் பேதமும், இவற்றிற்குமேல் உறுதிப் பொருள்களாக நின்ற மாமிசாதிகளுமா மென்க.

இரண்டாவது

அவயவமென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம்.

முற்றிற்று.





உ

திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது

மாமிசாதியென்னும் சத்தார்த்த

# ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

இந்தவா ராய்ச்சிக்க ணிம்மாமி சாதிகட்பேர்
தந்தமக் கானபொருள் சற்றுமிலா—தெந்த
விதத்தினுமண் ணென்பதே மெய்மையிருப் பாகு
மதித்திடுதற் கென்றோ மனம்.

எங்ஙனமெனின், இதுகாறும் அவயவ ஆராய்ச்சியிற் றேர்ந்த மாமிசாதிகளை விட்டு அவயவங்களுள் ஒவ்வொன்றையும் ஒவ்வோர் முதலெனக்கொண்டு வருகிறது மிக்க அறியாமையாயினும், இஞ் ஞான் றிருப்பெனத் தேரப்பெற்ற மாமிசாதிகளை ஒவ்வோர் முத லெனக்கண் டுணர்வது அறிவெனப்படுமா? அன்றி அறியாமை யெனப்படுமா? அறிவென்றே ஏற்கப்படுமெனின், இம்மாமிசாதிகள் அந்தத்தை ஏற்கப்படுவனவா? அன்றி ஏற்கப்படாதனவா? ஏற்கப் படாதனவெனின், ஆதியற்றனவாக வேண்டுமே! இவைகள் அந்தத் தை ஏற்பதாற் றோடமென்னை யெனின், அவ்வந்தத்தில் இம்மாமி சாதிகள் யாதுபொரு ளாகின்றன? மட்பொரு ளாகின்றனவெனின், அங்ஙன முடிவானேன்? இம்மாமிசாதிகளுக்குச் சுபாவமெனின், அலை திவலை நுரை குமிழிகள் தத்தம் அந்தத்தில் தாம் கடற்புன லாய் முடிவது சுபாவ மெனப்படுமே! படுமெனின், புனலென்பது விகாரமாயும் ஷை அலையாதிகள் அப்புனலாக விகாரப்படுகிறதற்கு ஒவ்வோர் முதலாயும் இருக்கவேண்டும். எங்ஙனமெனின், பாலென் பது முன்ஞான்றே இருந்து பின்ஞான்று தயிராக விகாரப்படுந் தகைமைபோல், அலையாதிகள் ஷை புனலாகிய சலத்திற்கு முன் ஞான்றே இருந்து பின்ஞான்று சலமாக விகாரப்படுவதாக்கும்! இவ் வாறே மாமிசாதிகள் மட்பொருளுக்கு முன்ஞான்றே இருந்து பின் ஞான்று மட்பொருளாக விகாரப்படுவதாக்கும்! இஃது விந்தையினும் விந்தை! ஏனெனின், முன்ஞான்று மாமிசாதிகள் தத்தம் அந்தத்தில் மட்பொருளாய் முடிவது சுபாவமென்றதனா லென்க.

சலமே அலையாதிகளாக விகாரப்பட்டமையா லன்றோ மீண்டும் அவை சலமாகின்றன? அதுபோல், மட்பொருளானது மாமிசாதிகளாக விகாரப்பட்டமையால் மீண்டும் அவைகள் மட்பொருளாதற்கியைகின்றன. அன்றியும், மாமிசாதிகளாகிற இவ்வுடல் மட்பொருள் வசப்பட்டுழி நீடித்தும், அங்ஙனமின்றி அக்கினிவசப்பட்டுழி விரைந்தும், மட்பொருளாய் விளங்குவது பழைய மட்பொருளா? அன்றிப் புதிய மட்பொருளா? புதிய மட்பொருளெனின், முன்ஞான்றில்லாத மட்பொருள் பின்ஞான்று நூதனமாய் உண்டானதாகின்றது. ஆகவே, இல்லது வாராது உள்ளது போகாதென நீடித்து வழங்கப்பட்டு வரும் இப்பழமொழிக்கு இல்லது உண்டாகுமென்கிற இப்புதுமொழி முரணுகின்றதே! இம்மொழி எங்குக் கிடைத்ததோ? எளிதிற் கிடைத்ததாக்கும். இஃது மிக்க விந்தை! அன்றியும், இல்லது நூதனமாய் உண்டாகுமாயின் உள்ளதென்று வழங்கப்படுவது போகவேண்டுமன்றோ? அதாவது அழிவை ஏற்கற்பாலது. மாமிசாதிகள் இஞ்ஞான்றுள்ள பொருள்களாகவே இருந்து பின்ஞான்று அழிவை ஏற்கும் அனுபவம் கண்கூடாயிருக்கின்றமையால், முன்ஞான்றில்லாத பொருள் நூதனமா யுண்டாகு மென்பதற்கு முரணுண்டோவெனின், உள்ளது போகுமாயின் உறுதிப்பொருளென்பது எஞ்ஞான்று மில்லாமற்போமே!

எங்ஙனமெனின், உள்ளதென்பது நாற்பொழுது முற்றதா? அன்றி ஓர்பொழு தற்றதா? நாற்பொழுது முற்றதெனின், இல்லதென்பது எத்தனைபொழு தற்றதாக ஏற்கவேண்டும்? அஃதும் நாற்பொழுது முற்றதாக ஏற்கவேண்டு மன்றோ? நாற்பொழுதுமில்லாதது ஓர் பொழுதில் எங்ஙனம் நூதனமாய் உண்டாதற் கியையும்? இயையாதாயின், அந்நாற்பொழுதும் மாறுதது ஓர் பொழுதிலேனும் எங்ஙனம் அழிவை ஏற்கும்? இவற்றாலன்றோ உள்ளது போகாது இல்லது வாராதென்னும் ஆன்றோர் மொழி வழங்கப்பட்டு வருகின்றது? இஃது ஏற்கற்பாலதா? அன்றித் தள்ளற்பாலதா? தள்ளற்பாலதெனின், யாதினுல் தள்ளற்பாலது? மாமிசாதிகள் உண்மைப் பொருள்களா யிருந்தழிகின்றதால் முன்ஞான்றில்லாதது பின்ஞான்றுண்டாவதற்கு ஐயமின்றாதலினு லெனின், இங்ஙனங் கூறியதால் உள்ளது அழியுமென்றாகின்றது. அங்ஙனமாயின், மாமிசாதிகள் குணபேதங்களாயிருந் தழிகின்றனவா? அன்றிப் பொருட்பேதங்களாயிருந் தழிகின்றனவா? பொருட்பேதங்களாய் இருந்தே அழிகின்

றனவெனின், இம்மாமிசாதிகள் இடைஞான் றுள்ளனவா? அன்றி, முன்ஞான்றும் பின்ஞான்று முள்ளனவா? முற்பொழுதும் பிற்பொழுதுமின்றாயினும் இடைப்பொழுதேனு முண்டன்றோவெனின், ஓர்பொழுதுள்ளது பொருளா யிருக்குமா? இராதே! இருக்கின்றதேயெனின், இம்மாமிசாதியுடல் அக்கினி வசப்பட்டுழி அவ்வக்கினி இதனை மட்பொரு ளாக்குகின்றதெனக் கூறுவது தூலயுத்தியினாற் கணிக்கற்பாலது. அக்கினி கிட்டினஞான்று இம்மாமிசாதிகள் நாற்றம் தைலம் புகை முதலியனவாகப் பிரிகின்றன. அங்ஙனம் பிரிந்த அக்கணமே சாம்பரென்னும் மட்பொருள் விளங்குகின்றது. அங்ஙனம் விளங்கும் மட்பொருளானது, கெடி நாற்றம் தைலம் புகை முதலிய வடிவாயுள்ள இம்மாமிசாதி தர்மங்களால் மறைபட்டதுபோ லிருந்தஞான்று இத்தர்மங்களால் வேறு பொருள்கள்போற் றோற்றுகின்றன. இத்தோற்றங்களைத் தோற்றமெனக் கிஞ்சித்து முணராது ஒவ்வோர் முதலென மயங்கினதால், இத்தர்மங்கள் பிரிந்துழி இயற்கையா யிருந்த மட்பொருள் வெளிப்பட்டது. நூதனமாக உண்டானதுபோ லிருக்கின்றது மாத்திரமேயன்றி வாஸ்தவத்தில் நூதனமாக உண்டானதா? அல்லவே! இம்மாமிசாதிகள் விகற்பமுறுதற்கு முற்பொழுதும், இவ்விகற்பங்கள் மாறிய பிற்பொழுதும் இவைகள் உள்ளனபோற் காணப்படும் இடைப்பொழுது மின்றி இம் முப்பொழுதும் மட்பொருள் உண்டென்ப தாயிற்றெனக.

இம்மாமிசாதிகள் முற்பொழுதும் பிற்பொழுதும் இன்றெனினும் இடைப்பொழுதேனும் உள்ளனவன்றோவெனின், முற்பொழுதும் பிற்பொழுதுமுள்ள மட்பொருளிருக்கு மிருப்பில் இல்லாமைபோல் இடைப்பொழுது மாமிசாதி யிருப்பில் மட்பொருள் இன்றெனப்படுமா? அன்றி உண்டெனப்படுமா? முற்பொழுதும் பிற்பொழுதும் நின்ற முறைமைபோல் இன்றெனப் படுமெனின், முற்பொழுதும் பிற்பொழுதுமிருந்த மட்பொருள் இடைஞான் றெங்கே போயிற்றெனப்படும்? முற்பொழுதிருந்த மட்பொருளானது மாமிசாதிகளாகக் காரியப்பட்டுழி எந்தப் பொருளிருக்க வேண்டியது? காரியப்பட்ட மாமிசாதிகள்தானே இருக்கவேண்டியது? ஆகலின், மாமிசாதிகளே இருந்து விளங்குகின்றமையால் விளங்குமிந்த இடைஞான்றில் மட்பொரு ளெங்ஙன மிருக்குமெனின், இம்மாமிசாதிகள் ஒழிந்த பின்ஞான்று நூதனமாக மட்பொருள் உண்டாகவேண்டுமே! இஃதுலன்றோ உள்ளது போகாது இல்லது வாராதென்னும் இ...

பழமொழி வழங்கப்பட்டு வருகின்றது. அன்றியும், மாமிசாதிகள் கெட்டு மட்பொரு ளாயிற்றெனின், அது பரிணமபட்சம்-அதாவது பாலென்பது கெட்டுத் தயிராவதுபோலாம். இதனால் மாமிசாதிகள் முற்பொருளும், மண்ணென்பது பிற்பொருளு மாகின்றன. இஃது வியப்பினும் வியப்பு! அன்றியும், இடைஞான்று மட்பொருளென்ப தில்லையேல் மாமிசாதிகளாகத் தோற்றுவது முற்பொழுதிருந்த மட்பொருள் கெட்டுவிட்டதனுலென முன்னமே தீர்ப்பாயினமையின், பிற்பொழுது மாமிசாதிகள் கெட்டுழி மட்பொருளன்றி மற்றொன்றாகவன்றோ ஆகவேண்டியது? அங்ஙனமின்றி மட்பொருளாவானேன்? இதனால் மட்பொருள் கெட்டு மாமிசாதிக ளாகின்றதன்று, கெடாமலே குணபேதங்களாய்த் தோற்றுகின்ற தன்றோ? தோற்றுவதால், முற்பொழுதும் பிற்பொழுதும் மாமிசாதிக ளில்லாமை போல், இடைஞான்றும் மாமிசாதிகளிருப்பில் மட்பொருளில்லாமற் போயினவன்று, உள்ளவாறிருக்கின்றதே! இருக்கின்றதால் இவ்விருப்பில் மாமிசாதிகளென்பது இன்றுமென்க.

இடைஞான்றும், மாமிசாதிக ளின்றென்பதாயின், முற்பொழுதும் பிற்பொழுதுமுள்ள மண்ணிருப்பில் இவைகள் தோன்றாதது போல், இப்பொழுதும் இவைகள் தோன்றாதிருக்கவேண்டுமன்றோ? அங்ஙனமின்றித் தோன்றுகின்றதேயெனின், தோன்றுகின்றதால் ஒவ்வொன்றையும் பொருளாக மயங்குகின்றதா? இல்லாதது தோன்றுமாவெனின், கயிற்றின்கண் அரவு தோன்றாதிருக்கட்டும். தோன்றுகின்றதேயெனின், தோன்றுகின்றதால் பொருளெனக் கோடற்பாலதா? கோடற்பாலதெனின், யாதினுற் கோடற்பாலது? அரவை நிதானித்துழி அஃது தோன்றவில்லை. இம்மாமிசாதிகள் அங்ஙனமல்லவே. முப்பொழுதும் இல்லையெனத் தெளிந்தஞான்றும் தோன்றுகின்றனவே! எங்ஙனம் இவைகள் பொய்ப்பொருளெனப்படுமெனின், இதனால் நிதானித்த ஞான்றும் தோற்றுமாயின், அஃது எதார்த்தமெனப்படுமாக்கும்! அங்ஙனமாயின் கானல்நீர், இல்லாததெனத் தெளிந்தஞான்றும் தோற்றுகின்றதால் உண்மைப்பொரு ளெனற்பாலதா? அதுபோல் இம்மாமிசாதிகள் இல்லாததெனத் தெளிந்த ஞான்றும் தோற்றுகின்றதால் உண்மைப்பொருளென் றேற்கின்றதாக்கும்! அக்கானல்நீர் அங்ஙனம் தோற்றினும், அருந்துதற்குப் பயனின்று. இம்மாமிசாதிகள் அங்ஙனமல்லவே, அனுபவித்தற்கியைகின்றதே! எங்ஙனம் பொய்ப்பொரு ளென்பதெனின், இதனால்

தோற்றுகின்றன வெல்லாம் அனுபவத்துக் கியையுமாயின் எதார்ந்த மென்பதாக்கும்! அங்ஙனமாயின் சன்னிதோடம் வந்தஞான்று நூதனமான விகார வடிவங்கள் தோன்றி மிக்க இடுக்கண்கள் செய்த தாய் அவற்றிற்குத் தான் சகிக்காது கூக்குரலிட்டுக் களைத்துப் போவதனுலும், கனவின்கண் நான் நீ அவன் அவள் அதுவாக நாம ரூபங்கள் தோன்ற அவற்ருல் மிக்க இன்பதுன்பங்களை அனுபவிப் பதனுலும் அவ்விரீடத் தோற்றங்களும் எதார்த்த மெனற்பாலதா? அல்லவே! அங்ஙனம் இம்மாமிசாதிகள் நமது மயக்கங் காரணமாக அனுபவப்படின் உண்மையாக்கும்! அன்றியும்,

அந்தச் சன்னிதோடத்திலும் கனவு தோடத்திலும் வாய்க்கும் நாமரூபானுபவங்கள் உயிர் உபாதிசகிதஞான்றன்ருே? அவைபோல் இம்மாமிசாதியுடல் எந்தவுபாதி சகிதங் காரணமாக அனுபவப்படு வது? சூக்குமோபாதி சகிதங் காரணமாகவெனின், அஃது கரணேந் திரியமன்றி யுண்டா? இல்லையே! அக்கரணேந்திரியமாகிய சூக்குமோ பாதி இச்சாக்கிராவத்தையில் மாத்திரந்தானே இருக்கின்றன? கன வின்கண்ணு மிருக்கின்றனவே! அங்கும் இருக்கின்றமையால், அக்க னவில் இம்மாமிசாதிகள் அனுபவப் படவில்லையே! அக்கனவிற் ருேன் றும் நாமரூபங்கள் அனுபவப்படுவதற்கு நாம் எந்த உபாதி சகிதமாக நிற்கின்ருேம்? அக்கனவிற் ருேற்றும் தோற்றங்களுள் ஒன்ருயிருக் கின்றனம். அதுபோல், இச்சாக்கிராவத்தாக் காட்சிகளாகிய தூல நாமரூபங்கள் அனுபவப்படுவதற்கு நாம் எந்த உபாதி சகிதமாக நிற்கின்ருேம்? இவ்வவத்தைக்கண் தோன்றுகின்ற தூலதோற்றங் களுள் ஒன்ருய் இருக்கின்றனமன்ருே? அக்கனவின் தோற்றங்கள் அனுபவப்படுதற் கியைந்த சூக்குமோபாதி வினைமுதலாக நின்ருற் போல, இந்நனவின் தோற்றங்கள் அனுபவப்படுதற் கியைந்த இத் தூலோபாதி வினைமுதலாக நிற்கின்றது. அவ்வுபாதிக்கு அனுபவப் பட்டு வருவது அத்தோற்றங்கள். அதுபோல், இவ்வுபாதிக்கு அனு பவப்பட்டு வருகின்றது இத்தோற்றங்கள். இங்ஙனமே, அக்கனவின் சூக்குமோபாதி எதற்கு அனுபவப்பட்டுவருகின்றது? நானென்ப தற்கெனின், நானென்பது சுழுத்திக்கண்ணும் உண்டா யிருத்த லால், அச்சூக்குமோபாதி நானென்பதற்கு அனுபவப்படட்டும். கரணேந்திரியமாகிய சூக்குமோபாதியே நானென்பதற்கு அனுப வப்படாதுழி, இத்தூலோபாதியா நானென்பதற்கு அனுபவப் படுகின்றது? இங்ஙனமிருக்க.

மாமிசாதிகள் அநுபவப்படும் பொருளென்பது மிகவும் விந்தையாக்கும். மாமிசாதி வடிவம் நானென்பதற்கு அநுபவப்பட்டதன்றாயினும், கரணேந்திரியமாகிய சூக்குமோபாதிக்கேனும் அநுபவப்பட்டு வருவதில்லையா வெனின்? அவ்வுபாதியும் நமக்கநுபவப்பட்டதன்றென முன்னான்றே சுழுத்தி யவத்தையைக் குறிப்பித்தாயிற்றே! அதையே மீண்டும் மீண்டும் சொல்வதிற் பயனின்று. அக்கரணேந்திரிய சூக்குமோபாதியானது முன்னான்றே ஐம்பொறி ஆராய்ச்சி யுழைப்பிலும், அந்தக்கரண ஆராய்ச்சி யுழைப்பிலும் தமக்கெனப்பொருள் சற்றுமில்லை யென்றும், முற்றும் அறியாமை மயமென்றும் முடிந்தாயிற்று. ஆகவே, மாமிசாதி மயமாகிய இத்தேகம் எதற்கநுபவப்பட்டு வருகின்றது? அன்றியும், இம்மாமிசாதி தேகம் அநுபவப்பட்டு வருகின்றது நானென்பதற்காயின், நானென்பது இருக்கும் சுழுத்திக்கண் நானுக்கு அநுபவப்படாவிடினும் நானென்பதுள்ள இருவகைச் சமாதிக்கண்ணேனும் அநுபவப்படுவதுண்டா? அங்ஙனமு மில்லையே! எங்ஙனந்தான் ஐயமகன்றிருக்கின்றது? இத்தேகாநுபவம் சமாதிக்கண் நானென்பதற்கன்றாயினும், அவத்தாத்திரயசகித சீவனென்கிற நானுக்கேனும் அநுபவப்படுகின்ற தல்லவா வெனின், அச்சீவனாகிய நானென்பது தொழிற்குணமாயும், அறியாமையாயும், அவ்வறியாமை ஆரோபமாயும் முன்னான்றே முடிந்தாயிற்றே! இதனால் எங்கே அநுபவப்பட்டு வருகிறதாகச் சம்மதிப்பது? அன்றியும், சீவாந்தக்கரணேந்திரியங்கள் அருவத்தன்மையா? அன்றி உருவத்தன்மையா? அருவத்தன்மையா மெனின், அருவத்திற்கு உருவாநுபவம் எங்ஙனம் கூடும்? அருவத்தை உருவம் பரிசிப்பதுமுண்டா? உண்டெனின், பரிசிப்பதுபோலன்றி உண்மையாயல்லவே! மேலும், முன்னான்றுள்ளதாயிருந்த தேகாநுபவம் அவயவங்களை யன்றியும், பின்னான்றுள்ளதாயிருந்த அவயவாநுபவம் மாமிசாதிகளை யன்றியும் உண்டாயிருக்குமாயின், இம்மாமிசாதிக ளநுபவம் மட்பொருளையன்றி உண்டாயிருக்கலா மென்க.

மாமிசாதிகள் மட்பொருளையன்றி இன்றெனப்படுமோவெனின், அவயவங்களையன்றித் தேகமென வழங்கும் சொரூபமும் மாமிசாதிகளையன்றி அவயவமென வழங்கும் சொரூபங்களும் உண்டாயிருக்குமாயின், மட்பொருளையன்றி இம்மாமிசாதி சொரூபம் உண்டா

யிருக்கு மென்க. மாமிசாதிகள் மட்பொருளையன்றி இன்றென்பதா யின், இவைகளை மட்பொருளென்று கோடற்கு இழுக்கென்னை யெனின், மட்பொருளென்பது மாமிசாதி சொரூபமாகத்தானே இருக்கும்? ஆகாதென்பதற்கு மட்பொருளையன்றி இன்றென்பானேனெனின், மாமிசாதி சொரூபம் மாறிவிடுஞான்று மட்பொருளென்பதில்லாதிருக்கட்டுமே! அங்ஙன மில்லாமையால் தோடமென்னை யெனின், அவைக ளில்லாஞான்றிருப்பது யாது? மட்பொருளையன்றி வேறுசொரூப மில்லையே! இன்றாகலின், எங்ஙனம் இவைகள் மட்பொருளென்னப்படும்? படாதுழி நாம் எவ்வண்ணமாகத் துணிந்திருக்கின்றது? அன்றியும், மாமிசாதிகள் தோற்றுங்காறும் இவற்றை விடாதுணர்ந்துகொண் டிருப்பமேயெனின், அதுகாறும் இவைகள் மட்பரிசமின்றித் தனித்தனி ஒவ்வோர் முதலா யிருக்கட்டுமே! மட்பொருள் பரிசங்காரணமாகத் தோற்றுந்தன்மை கயிறு கானல் முதலியவற்றுள் அரவு நீர் முதலியனவை தோற்றுந்தகைமைபோ லாகலின், அரவு நீர் முதலிய திட்டாந்தங்களை ஏற்பதற்கு முரணென்னை? இன்றாகலின், இதுகாறும் ஆராய்ந்து தேர்ந்ததால் இம்மாமிசாதி சொரூபங்களில் சத்தாயிருப்பது மட்பொரு ளென்பதாயிற்று. ஆகவே, மட்பொருளைவிட்டுத் தோற்றன் மாத்திரமாயுள்ள மாமிசாதிகளை ஒவ்வோர் முதலென்றுணர்வது அறியாமை யென்பதா? அன்றி அறிவென்பதா? மிக்க அறியாமை யாகலின், இவ்வறியாமை பூர்வபட்சமாயிற் றென்க.

அன்றியும், மட்கடத்தை மட்பொருளாகவும் பொற்குடத்தைப் பொற்பொருளாகவும் நூற்படத்தை நூற்பொருளாகவு முணர்வது போல், மண்ணுடலை மட்பொருளெனப் பாராது யாதாகப்பார்த்தின்புறுதற்கு நம்மை நாம் உயர்திணை யெனக்கொண்டிருக்கின்றனம்? மாமிசாதிகளை ஒவ்வோர் முதலெனக்கொண் டிருத்தற்கோ?

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்."

என்க் குறள் மகாவாக்கியம் வந்திருக்கின்றது. மண்ணுடலை மண்ணாகப் பார்த்து இன்புறாத அவிவேகிகட்கன்றோ?

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்."

என இவ்வாக்கியமும் வந்திருக்கின்றது. நாம் அவ்வாக்கியப்படி நில்லாதுழி எங்ஙனம் அவ்வாக்கியங்கள் மணம்பெறும்? மட்பொருளை யன்றி மாமிசாதிகள் உண்டாயும் மாமிசாதிகளையன்றி மட்பொருள் இன்றாயும் இருக்குமாயின், மண்ணுடலை மாமிசாதிகளாகவே பார்த்துக்கொண் டிருக்கலாம். மட்பொருளையன்றி இம்மாமிசாதிகள் முப்பொழுதும் இன்றாகலின் அவற்றை மட்பொருளாகப் பார்ப்பதற்கு முரணென்னை? அன்றியும், சடமாகிற அக்கினியானது தன்பாலடுத்த இவ்வுடலாகிற மாமிசாதி தர்மங்களைப் பிரித்து, உள்ள மட்பொருளை விளக்கிவைப்பதுபோல், அவ்வக்கினி வசப்படுங்காறும் நம்மை யடுத்திருக்கின்றமையால், நமதறிவாக்கினியினால் இத்தர்மங்களைப் பிரித்துக்கொண்டே யிருப்பமாயின், மட்பொருளென்பது விளங்கிக் கொண்டே யிருக்குமன்றோ? சடமான அக்கினிக்கு இருக்கின்ற யோக்கியதை நமதறிவாக்கினிக்கு இல்லையே! நமதறிவு அறிவெனப் பட்டாலன்றோ இச்சிறிய வுழைப்பையேனு மெய்துவம்? அவ்வறிவு அறியாமையாகலின் இச்சிறியவுழைப்பையும் எய்தாதிருக்கின்றனம். அவ்வக்கினியானது இம்மாமிசாதிகளைப் பிரிக்கவுங் கூடும், அதனால் இவை பிரியவுங் கூடும். இவ்வாறே நாம் பிரிக்கவும் இவை பிரியவுங் கூடுமோவெனின், அக்கினி பிரிக்கப் பிரிபடுவது தூலலட்சியபாவமும், நாம்பிரிக்கப் பிரிபடுவது சூக்குமலட்சிய பாவமுமாம். இவை இங்ஙனமிருக்க,

நாம் சூக்குமலட்சிய பாவமாகப் பிரித்து உணர்தற்குக் குறுக்கே யாது கெடுதியிருக்கின்றது? ஒன்றுமில்லையே! அங்ஙனம் பிரித்தல் அக்கினிக்குச் சுபாவம், நாம் பிரித்தல் நமக்குச் சுபாவ மல்லவே யெனின், மட்பொருளை மாமிசாதிகளாகப் பார்ப்பது மாத்திரம் நமக்குச் சுபாவமாக்கும்! நமது சுபாவம் மாமிசாதிகளாகப் பார்க்கின்றதாயின்,

குறள்.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொரு
ளப்படிக் காண்ப தறிவு."

என்னுது அக்குறள் செய்தவர்க்கு இவ்வளவு தெரியாததால்,

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

எனக் கூறினார். இங்ஙனங் கூறிவிட்டமையால், அவ்வாக்கியம் மருள் வாக்கியமாக்கும்! நாம் ஒன்றை மற்றொன்றாக வுணர்வது சுபாவமாயின், உள்ளதை உள்ளதாக உணர்வது எஞ்ஞான்றோ? ஒன்றை மற்றொன்றாக வுணர்வது எதுவோ அதுவன்றோ பிற்பொழுது உள்ளதை உள்ளதாக உணரவேண்டிய கடமை? அங்ஙனம் உணராவிடின், பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் விபரீதபுத்தி எங்ஙனம் அகலும்? இம்மாமிசாதிகளைப் பிரித்து உணருகிறதற்கே கூடாதுழி நானென்பதல்லாதவற்றை நானென்பதாக உணரும் மயக்கம் எங்ஙனம் அகன்று நானாகநிற்பது? எனதல்லாததை எனதென்கிற மயக்கமே இத்துணை வலுவுற்றிருக்கின், நானென்பதல்லாததை நானென்பதாகக் கொண்டிருக்கும் மயக்கம் எத்துணை வலுவுற்றிருக்கலாம்!

அன்றியும், நமக்கு எவ்வெப்பொருள் எனது எனதெனப் பந்தித்தற்கு இயைந்தனவோ, அவ்வக் கற்பனைகளா நாம் புரியுங் காமியத்தவத்திற்குச் சிற்றின்பத்தையும் நிட்காமியத் தவத்திற்குப் பேரின்பத்தையும் தாற்பாலன?

> "யாதெனின் யாதெனி னீங்கியா னோத
> லதனி னதனி னிலன்."

என ஷை குறள் மகாவாக்கியங் கூறியிருப்பதென்னை? அகத்தின்கண் முடிவுகாறும் புறத்தின்கண் முடிவுகாறும் சுத்தாசுத்தமாயும் அதிட்டானாரோபமாயு முள்ளனவற்றுள், ஒவ்வொன்றையும் யானெனதென மயங்குவதில் நின்றகன்றுழி, அச்சுத்தா சுத்தங்களால் வாற்பாலனவாகிய இறப்புப் பிறப்புக் கற்பனைகளின்றி இருப்பானென்பதன்றோ அம்மகா வாக்கியத்தின் அபிப்பிராயம்?

> "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
> குயர்ந்த வுலகம் புகும்."

என்று கூறியிருக்கின்ற இம்மகாவாக்கியமும் பொருளைப் பொருளென்று உணர்ந்து இன்புறுதற்கன்றோ? அங்ஙனம் நாம் உணர்ந்து இன்புறாவிடின், ஷை மகா வாக்கியம் எங்ஙனம் மணம்பெறும்? பெறாதே! மட்பொருளை மட்பொருளாகப் பாராதுழி, இம்மாமிசாதி யுடலால் வரும் எண்ணரிய மயக்க பேதங்களனைத்தும் எங்ஙனம் அகன்று நாம் வதையற் றிருத்தற்கு இயையும்?

சர்வமதசித்தாந்த விளக்க வினவிடை.

*"மறந்திடின் மண்ணை மறப்பே யுடலாம்*
*மறக்கி னறிவை மறப்பே—பிறிதாகத்*
*தோற்று மனர்த்தமதாஞ் சொல்வழக்கா லென்னபயன்*
*தோற்றளவும் வேண்டுந் துணிவு."*

*என்பதில், அறிவை யறிவாக நாடாக்காறும் அங்ஙனம் நாடாத மறதியே அவ்வறிவுக்கு அயலாகச் சீவேசுரசகத் கற்பனைகளாக விடாது தோற்றிக்கொண்டிருக்கு மென்பதற்கு மட்பொருளை மறந்த மறதியே மாமிசாதியுடற் கற்பனு பேதங்களாகத் திருட்டியைவிட் டகலாது தோற்றிக்கொண்டிருக்கின்ற இவ்விபரீதத்தை உவமான மாகக் கூறியிருக்கின்றதென்க. இம்மாமிசாதி யுடற்பேதம் மறை யாக்காறும், மட்பொருளாகப் பார்ப்பது எத்திறத்தாராலும் கூடா தெனின், இவ்வுலகின்கண் யாரேனும் கடவுடிவைத் தமது அறி வினல் மட்பொருளென்று உணர்வாராயின், அவர் அவிவேகி யாக் கும்! இதனல் ஷெ மகாவாக்கியங்களும் மருள் வாக்கியங்களாக்கும்! அவ்வாக்கியமும் அவ்வாக்கியானுபவிகளும் அங்ஙனம் இருந்தா விருக்கட்டும். ஓர் சிறிய திருட்டாந்தம் சற்றூகிக்குதும்.*

*எங்ஙனமெனின், சில கருவண்டுகளால் உருண்டு செல்லும் மல வுருட்சிக்கண், நமது திருட்டிபட்ட அக்கணமே அருவருப் புண்டா தற்கு ஏதுவென்னை? அவ்வுருட்சி மட்கவசம் உற்றிருக்கின்றதே! அம்மட்கவசத்தில் யாருக்கும் அருவருப்பு உண்டாகாதே? அவ் வருவருப்பு உண்டாதற்கு நமதுதிருட்டி அம்மட்கவசமட்டில் நிற் கின்றதா? அன்றி ஊடுருவிச் செல்கின்றதா? அத்திருட்டி ஊடுரு விச் செல்கின்றதால், உள்ளிருக்கு மலத்தில் திருட்டி தாக்குகின் றது. தாக்குகின்றதால், அம்மலம் திருட்டிக்குத் தோற்றுகின்றது. தோற்றவே அருவருப்பு உண்டாகின்றது. கவசத்தைத் திருட்டிக் காது உள்மலத்தைத் திருட்டிப்பதுபோல, அவனவளதுவாகத் தோற்றும் மாமிசாதி சேர்க்கைக்கு, மேலே கவசமாயிருக்கின்ற சருமத்தைத் திருட்டிக்குந் திருட்டியை நீக்கி, மூடப்பட்டிருக்கின்ற உள் மாமிசாதிகளை நாடுழி, அருவ்ருப்புத் தோன்றுமல்லவா? அங் ஙனம், அவை தோன்றுந் தோறும் மோகாதிகட்கிடம் உண்டா குமா? ஆகாதன்றே? இவ்விரண்டு திருட்டாந்தங்களைப்போல், மாமி சாதித் தோற்றங்களை நாடுந்திருட்டி நீங்கி, இம்மாமிசாதியில் அவ்வி*

யத்தமாயிருக்கும் மட்பொருளைத் திருட்டிக்கின், அம்மட்பொருள் நமது திருட்டிக்குக் கண்கூடாகாதோ? ஆகுமே! நாம் திருட்டிக்காத குற்றமன்றி வேறு குற்றம் என்ன இருக்கின்றது? ஷை திருட்டாந் தத்தில் மலவுருட்சிக்கும் மாமிசாதி சேர்க்கைக்கும் நிரையே மட் பொருளும் சருமப்பொருளும் புறக்கவசமாக மாத்திரம் இருக்கின் றன. இங்கே மட்பொருளை மறைத்திருக்கின்ற மாமிசாதிகளாகிய உடலானது அம்மட் பொருளுக்கு அகப்புறக் கவசமா யிருக்கின் றது. இருக்கும் இக்கவச திருட்டியை நீக்கி, இவற்றுள் அவ்வியத் தமா யிருக்கும் மட்பொருளைத் திருட்டிக்கின் அஃதன்றி யாது விளங்கும்? அம்மட்பொருளே விளங்குமன்றோ? ஆகலின், இவ்வ ரிய உழைப்பை உழைப்பினர்பால் பல்ஞான்றும் பழகிப் பின்பு பிட்சையாகப்பெற்று எய்தாதுழி, இதற்குமேல் ஆராயவேண்டிய வற்றை யாராய்ந்து தெளிந்து இன்புறுதல் எங்ஙனங்கூடும்? இவ்வு ழைப்பைப்போன்ற அனந்த உழைப்புக்கள் இருக்கின்றதனாலன்றோ,

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்."

எனக்குறள் மகாவாக்கியம் வந்திருக்கின்றது. ஷை திருட்டாந்தங் களில் மட்கவசத்துள் மறைந்திருக்கும் மலமும் சருமக்கவசத்துள் மறைந்திருக்கும் மாமிசாதிகளும் அவ்வக்கவசமெனப்படாமல் விலட் சணமாக இருக்கின்றமையால், அம்மட்கவச திருட்டியும், சருமதிருட் டியுமாறிய அக்கணமே வெளிப்படுகின்றன. அங்ஙனம் வெளிப் பட்டவற்றை உணர்தற்கும் இயைகின்றன.

தாட்டாந்தத்தில் மாமிசாதிகள் அங்ஙனமல்லவே! இம்மாமி சாதிகளுள் மட்பொருள் அவ்வியத்தமா யிருக்கினும் கவசமாகிய மாமிசாதிப் பொருள்கள் மாறியஞான்றல்லவோ வெளிப்படுதற்கு இயையும்? பின்ஞான்று நாம் உணர்தற்கும் இயைவும். இங்ஙன மிருக்க, மாமிசாதி உடலிருக்குஞான்றே எங்ஙனம் மட்பொருளை உணர்வதெனின், ஷை திருட்டாந்தத்தில் மட்கவசமட்டிலும் சரும மட்டிலும் நின்று அவ்வப்பொருளாக உணர்வது என்னமதி யெனப் படும்? தூலமதி யெனப்படுமன்றோ? பின்னர் அவ்விருவித கவச திருட்டிகளையும் நீக்கி, மலவுருட்சியை மலவுருட்சியாகவும், மாமிசா திகளை மாமிசாதிகளாகவும் உணர்வது என்னமதி யெனப்படும்? சூக் குமமதி யெனப்படுமன்றோ? இவ்வண்ணமே தாட்டாந்தத்தில் மாமி

சாதி யுடற்கற்பனைத் திருட்டியை நீக்கி, மட்பொருளை மட்பொரு ளெனக்கண்டு உணர்வது என்னமதி யெனப்படும்? இது ஷை சூக்கும மதிக்கு மிக்க சூக்குமமதி யெனப்படுமன்றோ? ஒவ்வோர் பொரு ளும் இவ்வண்ணமே புறக்கவசங்களையும், உட்புறக் கவசங்களையும் பெற்றிலங்குவதால் அவ்வக் கவசங்களையும் ஆங்காங்கும் நமதறிவி னால் நீக்கி நீக்கி அவ்வியத்தப் பொருள்களையே உணரும் உணர்வை யன்றோ ஆன்றோர்கள் மெய்யுணர்வெனக் கூறியிருக்கின்றனர். அங்ஙனம் உணரவேண்டுவ தென்னை? எவ்வெப் பொருள் எவ் வெவ்வண்ண மிருக்கின்றதோ அவ்வப்பொருளை அவ்வவ்வண்ணம் உணருவது அறிவுக் கியற்கையன்றோ வெனின்,

குறள்.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொரு
ளப்படிக் காண்ப தறிவு." என்னாது

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்பானேன் மகாவாக்கியம்? அன்றியும்,

"உலகெது நாமாரென்ன வுற்றுநின் றுணருமட்டுங்
கலகமார் பிறவிமோகங் கங்குல்போன் மூடிநிற்கும்."

என ஞானவாசிட்ட முதலிய பெருநூல்களுங் கூறியிருப்பானேன்? எந்த உயிர் உலகை யுணராதது? எவ்வுயிருமாகலின், உலகை உற்று ணர வேண்டுவ தென்னவெனின்? உயிர்கள் எவ்வா றுணருகின்ற னர்? பொருளல்லவற்றைப் பொருளாகவன்றோ? அங்ஙனம் உணர் வது கயிற்றை அரவாகவும் கானலை நீராகவும் கிளிஞ்சிலை வெள்ளி யாகவும் உணர்வது போலாம். அன்றியும், கயிற்றை அரவாக உணர் வது அறிவாயினும் அங்ஙனம் உணரும் அவசரத்தில் அவ்வறிவு என்னவெனப்படும்? அறிவெனப்படுமெனின், அங்ஙனம் உணர் வதில் எய்ப்புத்தோன்றிக் கயிற்றைக் கயிறென்றுணரும் அவசரத் தில் அவ்வறிவு என்னவெனப்படும்? அஃதும் அறிவென்பாமெனின், கயிற்றை அரவெனவும் கயிற்றைக் கயிறெனவும் உணர்த லிரண்டும் அறிவாயின் அறியாமை யென்பது எவ்வா றிருக்கின்றது? ஒன்றை மற்றொன்றாக உணர்தல் அறியாமையும் உள்ளதை உள்ளதாக உணர் தல் அறிவுமாகின்றதன்றோ? அன்றெனின், பொருளல்லவற்றைப் பொருளென் றுணருமருளென்பானேன்?

ஆகலின், எவ்வெப்பொருள் எவ்வெவ்வண்ண மிருக்கினும் அதாவது மேற்கூறிய புறக்கவசம், உட்புறக் கவசங்களை யுற்றிருக்கினும் அவ்வக்கவச திருட்டியை நீக்கி, அவ்வப்பொருளை உணர்வதன்றோ மெய்யுணர்வெனற் பாலது? இவ்வறிவுடைமை உடையவரன்றோ நல்லாரெனப்படுவர்! இங்ஙனமல்லாதார் யாரெனப்பட்டவரோ அறிகிலம். இம்மட்பொருளை விட்டு இதனிடத்தில் தோற்றன் மாத்திரமாக நிகழக்காணும் மாமிசாதிகளை யுணரும் மயக்கத்தை முன்ஞான்றறிவென்றது இஞ்ஞான்றறியாமையென்றே சித்தாந்தமாயிற்றென்க. இந்த மாமிசாதி ஆராய்ச்சிக்கண் தேர்ந்தது யாதெனின், மூன்றுவது அடுக்காயுள்ள அறிவறியாமைப் பேதமும், இவற்றிற்குமேல் உறுதிப்பொருளாய் நின்ற மட்பொருளுமாமென்க.

மூன்றுவது

மாமிசாதியென்னும் சத்தார்த்த

ஆராய்ச்சி விளக்கம்

முற்றிற்று.





உ
திருச்சிற்றம்பலம்.

## நான்காவது

## மண்ணின் மகத்தென்னும் சந்நார்த்த

# ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

*இந்தவா ராய்ச்சிக்க ணிம்மண் மகத்தெனவே*
*வந்துநிக ழும்பெயர்தான் வாய்ப்பின்றிச்—சந்ததமுந்*
*தாலவணு வேயிருப்பாத் தோன்றுமே மாலின்றிச்*
*சீலமதி யோருவப்பர் சென்று.*

எங்ஙனமெனின், இதுகாறும் மாமிசாதிகளை ஆராய்ந்த ஆராய்ச்சிக்கண் தேர்ந்தது மட்பொருளாகலின், இம் மட்பொருளை ஓர் முதலெனக்கொண் டுணர்ந்துவரும் உணர்வு அறிவெனப் படுகின்றதா? அன்றி அறியாமை யெனப்படுகின்றதா? மக்கள் முதலிய அறுவகைப் பவுதிகங்களுக்கும் அதிட்டான மாகலின் இவ்வதிட்டானத்தை முதலென் றுணர்வது அறிவெனப்படாது, அறியாமை யெனப்படுமோ வெனின், இம் மட்பொருளாகிய உருவம் எவ்வளவாயிருக்கின்றது? மகத்தளவா யிருக்கின்றதெனின், மகத்தளவென்பது, ஆசியா முதலிய ஐந்து கண்டமாகப் பெற்றுள்ள பிருதிவு அண்டமாயிற்று. ஆகவே, இப்பெரிய மகத்துருவம் பொருளா குணமா தொழிலா? பொருள்தானெனின், சுயம்புப் பொருளா விகாரப் பொருளா? சுயம்புப் பொருள்தானெனின், விகாரப்பொருளென்பது எத்தகையதா யிருக்கின்றது? ஒன்றன் கூட்டமாகவும் பலவின் ஈட்டமாகவும் திரிபின் ஆக்கமாகவு மிருக்கின்றதாமெனின், இம்மகத் துருவம் பொருளாக இருக்கின் எஞ்ஞான்றும் சிதைவு அற்றிருக்க வேண்டுமே! சிதைகின்றதால் இம்மகத்துருவம் இன்றாமோவெனின், இருப்பு இன்மைகளைப்பற்றிச் சற்றூகிக்குதும். எங்ஙனமெனின், இம்மகத்துருவம் கலைதலை யேற்பது எத்துணை யெத்துணையாக எனப்படும்? அணுத்துணை யணுத்துணையாக எனப்படுமெனின், அவ்வவ்வணுவும் எத்துணை யெத்துணை யெனப்படும்? சிறுசாளரத்தில் விழுந்திலங்கும் கதிரின் கிரணத்தில் தோற்றுவ

தாகிய அதிநுட்ப உருவமெனின், அத்துணையாகிய பலநுட்பங்கள் ஒன்ருேடொன்று சேர்ந்த சேர்க்கையன்ருே இப்பெரிய மகத்துருவ மாகக் காணப்படுகின்றது? இங்ஙனம் காணப்படுவது கற்பிதமெனப்படுமா? எதார்த்த மெனப்படுமா? எதார்த்த மெனப்படுமெனின், இவ்வெதார்த்தம் ஷை அணுக்களின் சேர்க்கைக்கு முன்ஞான்றுற்றதா? பின்ஞான் றுற்றதா? பின்ஞான்றே யுற்றதெனின், பின்ஞான்றிருத்தல் எதுகாறும்? அவ்வணுக்கள் கலையுங்காறு மெனின், முற்பொழுதும் பிற்பொழுது மின்றி இடைப்பொழுது மாத்திரமிருக்கவேண்டிய தாகின்றது. அதாவது அணுக்கள் சேர்ந்திருக்குங்காறு மென்க.

இதனுல், முற்பொழுதும் பிற்பொழுது மில்லாத இம்மகத்துருவம் என்னவெனப்படும்? பொய்ப்பொருளெனப் படுகின்றதன்ருே? சுயம்புப்பொரு ளென்பதற்குப் பொருத்த மெங்கே? அவ்வணுக்கள் ஒன்ருேடொன்று சேர்க்கையுற் றிருக்குங்காறேனும் மகத்துருவம் பொருளா யிருக்கின்றதென உலகில் அறிவுடையோரும் கண்கூடாக அனுபவித்துக்கொண்டு வர, எங்ஙனம் இப்பூமியை இன்மைப்பொரு ளென்பதெனின்? மட்பொரு ளென்கிற இப்பெரிய வுருவம் ஷை மூவித விகாரங்களுள் ஒன்றன்கூட்ட விகாரத்திற்கு இயையா திருக்கட்டுமே! அன்றியும், அவ்வணுக்கள் ஒன்ருேடொன்று சேர்ந்திருக்குங்காறும் எவை யிருக்கின்றன? சேர்ந்திருக்கும் அணுக்களன்ருே? அவ்வணுக்கள் கலைந்த ஞான்றும் எவை யிருக்கின்றன? அவ்வணுக்களே யன்ருே? அவைகள், ஒன்ருேடொன்று சேர்க்கையுறு ஞான்று இருப்பாக உள்ளவை அவ்வணுக்களே யன்றி வேறு பொருளுண்டோ? இன்மையால், அவ்வணுக்களன்ருே பொருளெனப் படுபவை? படுவதால், மகத்தென்பதற்குப் பொருளெங்கே? தொழிற் குணமும் தோற்றக் குணமும் அன்ருே பொருள்போ லிருக்கின்றன? திருட்டாந்தத்தில் நெல்லம்பார மென்புழி ஓரினங்கள் சேர்க்கையுற்று மகத்துருவாகக் கூடும் ஒன்றன் கூட்டவிகாரம். இவ்விகாரம் தோற்றல்மாத்திர மன்ருே? உண்மையன்றே! உண்மையெனின், சுயம்பாயிருப்ப தெல்லாம் விகாரங்களாயும் பொருளல்லவை யெல்லாம் சுயம்புகளாயு மிருக்கின்றதாக்கும்! இஃது விந்தை!

முப்பொழுதும் இருப்பாயுள்ளது நெற்கள், ஓர்ஞான்றிருப்பது அம்பாரம். அவ்வம்பாரம் ஒன்றன்கூட்ட விகாரமன்ருே? அவ்

விகாரம் தொழிலும், பண்புமாகின்றதே? அவற்றால் அஃது பொருளெனப்படுமோ? தொழிலென்பது நெற்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருத்தல். பண்பென்பது அச்சேர்க்கை பெரிதாகக் காணப்படுந் தர்மம். ஆகலின், தொழிற்குணமும், தோற்றக்குணமும் ஆயிற்று. அதுபோல், இம்மகத்தாகிற மண்ணுருவம் அணுக்களின் சேர்க்கைக்கு முற்பொழுதும் அவை கலந்த பிற்பொழுது மின்றிச் சேர்க்கையுற்றிருக்குங்காலும் தோற்றுவது தோற்றன்மாத்திரமே யன்றி வேறுபொருள் இன்றாகலின், இஃது தொழிலும், பண்புமென்பதற்கு முரணின்று மென்க. அன்றியும், இம்மகத்துருவம் விகற்புறுதற்கு முன்ஞான்றும் இவ்விகற்பமாறிய பின்ஞான்றும் உள்ளவை எப்பொருள்கள்? அணுக்களன்றோ? அவ்வணுக்க ளிருப்பில் இவ்விகற்பமாகிய மகத்துருவ முண்டா? இல்லையே! இம்மகத்துருவம் எஞ்ஞான்றிருக்கின்றது? இடைஞான் றிருக்கின்றதெனின், அதாவது:—இஞ்ஞான் றெனப்பட்டது. முன்ஞான்றும் பின்ஞான்றுமுள்ள அணுக்களிருப்பில் இம்மகத்துருவம் இல்லாவகைபோல், இடைஞான்றுள்ள இம்மகத்துருவ இருப்பில் அவ்வணுக்களுண்டாயிருக்குமா? கண்கூடா யிருக்கின்றதே யெனின், முன்ஞான்றும் பின்ஞான்றுமுள்ள அணுக்க ளிருப்பில் இம்மகத்துருவம் இருக்கவேண்டும். இல்லையே! இங்ஙன மிருக்க, அணுக்கள் இடைஞான்றி லெங்ஙன மிருக்கும்? இருக்கின்றதா லன்றோ தோற்றுகின்றதெனின், ஓர்பொரு ளிருக்குஞ்ஞான்றில் அப்பொருட்கண் ஏனைய பொரு ளெங்ஙன மிருக்கும்? இருந்தால் அப்பொருட் கியைந்த தசபுறங்களுள் ஓர்புறத்தி லிருக்குமல்லவா? அதுபோல், எந்த முதலுக் கியைந்த தசபுறங்களுள் எந்தப் புறத்தில் இம்மகத்துருவம் இருப்பதாக ஏற்பது? இருக்கின்றவை அணுக்கள்தாமே! அவ்வணுக்களுள் எந்த அணுவினது எந்தப் புறத்தில் மகத்துருவ மிருக்கின்றது? அணுவினது ஓர்புறத்திலேனுந் தசபுறத்திலேனு மிருக்குமா? மகத்துருவம் ஓர் பொருளாக இல்லையே! முப்பொழுது மிருக்கின்றவை அணுக்களாயின், அம் முப்பொழுது மில்லாதது மகத்துருவ மென்பதற்கு முரணென்னை?

அன்றியும், முற்பொழுதும், பிற்பொழுதும் அணுக்களாகப் பார்ப்பதுபோல் இடைப்பொழுதும் அவ்வணுக்களையன்றி வேறில்லாமையின், அணுக்களாகவே திருட்டி விடாதிருக்கின், மகத்துருவத் தோற்றமென்பது எங்கே? அணுக்களை யணுக்களென நாடாது

தோற்றன்மாத்திரமா யுள்ள மகத்தென்னும் கற்பனையை ஓர் முத லெனக்கொண்டு உணர்வதுதானோ தெளிவெனற்பாலது? இவ்வவி வேகத்தை யன்றோ பொருளல்லவற்றைப் பொருளென் றுணரு மரு ளெனக் கூறியிருக்கின்றது? இவ்வரிய வாக்கிய ரசத்தை மறந்து, நம்மை உயர்திணையென மயங்கி மகிழ்ந்து நிகழ்வதென்னோ? இதனை நன்குற்றுணர்க. முன்னுான்று மட்பொருளின்கண் உண்மையா யுள்ள அணுக்களைவிட்டு மகத்துருவத்தை முதலென் றுணர்வதை அறிவென்பது பூர்வபட்சமாகி இஃதொன்று அஃதறியாமை யென் பதே சித்தாந்தமாயிற் றென்க. இம்மட்பொரு ளாராய்ச்சியில் தேர்ந்தவை எவையெனின், நான்காவது அடுக்காயுள்ள அறிவறி யாமைப் பேதமும் இவற்றிற்குமேல் உறுதிப் பொருளாய் நின்ற தூல அணுக்குழாங்களுமா மென்க.

நான்காவது

மண்ணின் மகத்தென்னும் சத்தார்ந்த

ஆராய்ச்சி விளக்கம்.

முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது

மண்ணின் தூலவணுவென்னும் சத்தார்த்த

# ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

இந்தவா ராய்ச்சியின்க ணித்தூல மென்னுமணு
வந்த பெயரனர்த்தம் வாய்மையின்றிச்—சந்ததமுந்
தேர்ந்ததுதான் சூக்குமமாச் செல்லு மணுவிருப்பா
மோர்ந்தவர்க்கே யிவ்வுறுதி உன்.

எங்ஙனமெனின், இதுகாறும் மட்பொருளாராய்ச்சியில் இருப்பாகத் தேரப்பட்டவை அதிநுட்பங்க ளாயினும், அவைகளென்ன நுட்பங்களெனப்படும்? தூலவணு நுட்பங்களெனின், இவைகளுள் ஒவ்வொன்றையும் ஒவ்வோர் முதலென்றுணரும் உணர்வு அறிவெனப்படுமா? அன்றி அறியாமையெனப்படுமா? அறிவெனப்படுமெனின், அவ்வணுக்கள் ஒவ்வொன்றும் பொருளெனப்படுமா? அன்றி வேறெனப்படுமா? பொருளெனப்படுமெனின், இதனால் சுயம்பெனப்படுமா? அன்றி விகாரமெனப்படுமா? சுயம்பெனப் படுமெனின், அவ்வொவ்வொன்றும் ஷை மகத்துருவம்போல் ஒன்றன் கூட்டமன்றி இருக்கட்டுமே? எங்ஙனமெனின், அவ்வணுக்களுள் ஒவ்வொன்றையும் பூதக்கண்ணாடியைக்கொண்டு உணரும் ஞான்று சற்றேறக்குறைய அவ்வணுக்கள் ஆயிரஞ் சேர்ந்த பருமன் எத்துணைத்தோ அத்துணைத்தாத் தோன்றுமல்லவா? அங்ஙனந் தோன்றும் அவற்றுள் ஒன்றை யூகிக்குதும். கடுங்காரமாயுள்ள ஓர் வேதியைப் பரிசிக்கச் செய்யின், அவ்வோரணுவுங் கணக்கின்றிய அதிநுட்பங்களாய்ப் பிரிந்து விடுகின்றது.

அங்ஙனம் பிரியுங்காறும், அம்முதலணு என்ன அணுவெனப்படும்? பூதக்கண்ணாடியைப் பெருத கட்புலனுக்கு நுட்பத்திற்கும் அதிநுட்பமா யெட்டுவதாகலின் தூலவணு வெனப்படுமன்றோ? அனந்தமாய்ப் பிரிதற்கியைந்த இஃது தூலவணுவாயின், இத்தூலவணுவில் நின்றும் பிரிந்தஞான்று தோன்றும் ஒவ்வொன்றும் என்ன

அணுவெனப்படும்? இவைகள் பூதக்கண்ணுடியைக்கொண்டு உணர் தற்கே அதி நொய்தாயிருக்கும் பொருள்களாயின், அக்கண்ணுடி யின்றி உணருங் கட்புலனுக்கு உண்டெனப்படுமா? படாதாகலின், அவ்வொவ்வொன்றும் நொய்ய அணுவென்பதற்கு ஐயமென்னை? அந்த நொய்ய அணுக்கள் அனந்தங்கள் சேர்ந்த சேர்க்கைகளன்றோ ஷை ஒவ்வோர் தூல அணுவும்? இங்ஙனமிருக்க அது அந்த நொய்ய அணுக்களின் சேர்க்கைக்கு முற்பொழுதுண்டா? அன்றி அச்சேர்க் கை கலைந்துவிடும் பிற்பொழுதேனு முண்டா? இன்றெனின், இவை கள் எஞ்ஞான்று உள்ளவை? இடைஞான்று உள்ளவையெனின் அதாவது:—இஞ்ஞான்று என்பது. இவ்விடைஞான்று உள்ள இத் தூல அணு முற்பொழுதும் பிற்பொழுதும் ஏன் இன்று? ஷை நொய்ய அணுக்களின் சேர்க்கை இன்மைகலினெனின், அச்சேர்க்கை யென்பது தொழிலல்லவா? அவ்வத்தொழில்களன்றோ தூல அணுக் களென்பது? அன்றெனின், அவ்வச்சேர்க்கைச் சம்பந்தமின்றி அவ் வத்தூல அணுவும் ஒவ்வோர் முதலாக இருக்கட்டுமே? இருக்கின்றதே யெனின், அங்ஙனஞ் சேர்ந்திருக்கின்ற அவ்வவ் நொய்ய அணுக் களைப் பிரித்துக் காட்டலாமே! அங்ஙனங் காட்டக்கூடாதெனின், இருப்பவை நொய்ய அணுக்களன்றோ? அவ்வணுக்களுள் ஒவ்வொன் றும் இத்தூல அணுவெனப்படுமா? படாதெனின், ஏன்படாது? இத்தூல அணு பூதக்கண்ணுடியின்றிய கட்புலனுக்குத்தோன்றும் ஆரோப அணுவாயும், அவ்வணு பூதக்கண்ணுடிகொண்ட கட்புல னுக்குத் தோன்றும் அதிட்டான அணுவாயும், மகத்தணுப்போல் பேதித்திருக்கின்றதாலெனின், அவ்வதிட்டான அணுக்கள் அனந் தஞ் சேர்ந்திருக்கும் ஞான்றன்றோ தூல அணுவெனப்படுவது? ஒவ்வோர் தூல அணுவும் சேர்க்கையினுல் தொழிற்குணமும், அத் தொழில் பல்வகை வடிவு பேதங்களுள் ஒன்ருகத் தோன்றுவதால் தோற்றக்குணமு மாகின்றது.

அன்றியும், இத்தூல அணுக்களாக விகற்புறுதற்கு முற்பொழு தும், இஃது மாறிய பிற்பொழுதும் உள்ளது யாதுபொருள்? ஷை அதிட்டான நொய்ய அணுக்களன்றோ? அந்த நொய்ய அணுக்கள் இருப்பில் இவ்விகற்பமாகிய தூல அணுக்களுண்டா? இல்லையே! இத்தூல அணுக்கள் எஞ்ஞான் றிருக்கின்றன? இடைஞான்றிருக் கின்றனவன்றோ? முற்பொழுதும், பிற்பொழுதுமுள்ள அவ்வதிட் டான நொய்ய அணுக்களிருப்பில் இத்தூல அணுவில்லாவகைபோல்

இடைப்பொழு திருக்கின்றதாகச் சம்மதிக்கப்பட்ட தூல அணுவில் அந்த நொய்ய அணுவிருக்குமா? இருக்கின்றதேயெனின், முற்பொழுதும், பிற்பொழுதுமுள்ள அந்த நொய்ய அணுக்களிருப்பில் இத்தூல அணுக்கள் இருக்கவேண்டுமே! ஓர்பொரு ளிருக்கும் ஞான்று அப்பொருளில் மற்ருேர்பொருள் எங்ஙன மிருக்கும்? அதுபோல், நொய்ய அணுக்க ளிருப்பில் அதற்கு மாருன தூல அணு எங்ஙன மிருக்கும்? இராதே! இருப்பது தோற்றன்மாத்திரமாகவன்ருே? இத்தோற்றன் மாத்திரமான கற்பனுத் தூல அணுக்களைத் தொழிலும் பண்புமெனக் கழித்து, முப்பொழுதுமுள்ள அந்த நொய்ய அணுக்களை விடாது திருட்டித்திருக்கில், தூல அணுவென்பது தோன்றுமா? ஓர் ஞான்று தோன்றினும், ஓர் முதலாக இருக்குமா? இராதன்ருே? ஆகலின்,

> "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என மகாவாக்கியம் வெளிவந்திருக்கின்றது. இதனை நன்கு உற்றுணர்க. முப்பொழுதும் மாருதிருக்கும் இருப்பாகிய நொய்ய அதிட்டான அணுக்களைவிட்டு வெறுந் தோற்றல் மாத்திரமாகிய தூல அணுக்களை ஒவ்வோர் முதலென மயங்கி உணரும் உணர்வை முன்ஞான்று அறிவென்றது பூர்வபட்சமாகி இஞ்ஞான்று அஃதறியாமையென்பதே சித்தாந்த மாயிற்றெனக. இத்தூல அணுவாராய்ச்சியில் தேர்ந்தவை எவையெனின், ஐந்தாவது அடுக்காயுள்ள அறிவறியாமைப் பேதமும் இவற்றிற்குமேல் உறுதிப் பொருள்களாய் நின்ற அதிட்டான நொய்ய அணுக்களுமா மென்க.

ஐந்தாவது

மண்ணின் தூலவணுவென்னும் சத்தார்த்த

ஆராய்ச்சி விளக்கம்

முற்றிற்று.





உ

திருச்சிற்றம்பலம்.

ஆறாவது

மண்ணின் சூக்கும அணுவென்னும்

# சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

*இந்த்வா ராய்ச்சியினி விச்சூக் குமமென்னும்*
*வந்த பெயரானர்த்த மன்னியே—பந்தித்தற்*
*கென்றென்றுங் காரணமா யீங்குபர மாணுவென*
*லொன்று மிருப்பெனவே ஓர்.*

எங்ஙனமெனின், இதுகாறும் மண்ணினது தூல அணுவை ஆராய்ந்த ஆராய்ச்சிக்கண் பொருளாகத் தேரப்பட்டவை நொய்ய அணுக்களாயினும், அவ்வணுக்களுள் ஒவ்வொன்றும் என்ன அணுவெனப்படும்? கண்ணுடியைப் பெறாத கட்புலனுக்குத் தோன்றாத அதி நொய்மையாகலின், சூக்கும அணுவெனப் படுமெனின், அச்சூக்கும அணுக்களுள் ஒவ்வொன்றையும் பொருளாக உணரும் உணர்வு அறிவெனப்படுமா? அன்றி அறியாமை யெனப்படுமா? அறிவெனப்படுமெனின், அவ்வணுக்கள் ஒவ்வொன்றும் இருப்பெனப் பட்டதா? அன்றி இன்றெனப்பட்டதா? இருப்பெனப் பட்டதெனின், பொருளாக இருப்பெனப் பட்டதா? தோற்றமாக இருப்பெனப் பட்டதா? பொருளாகவே இருப்பெனப்பட்டதெனின், அவ்விருப்புச் சுயம்பாகவா? அன்றி விகாரமாகவா? சுயம்பாகவே யெனின், ஷை தூல அணுக்களைப்போல் மூவித விகாரங்களுள் ஒன்றாகிய ஒன்றன்கூட்ட விகாரமென்பதற்கு இயையா திருக்கட்டும்.

இவ்வொவ்வொன்றும் கண்ணுடியின்றிய கட்புலனுக்குத் தோன்றாத நுட்பங்க ளாகலின், விகாரமெனப் படுமோவெனின், ஷை கண்ணுடியைக்கொண்டு உணர்தற்குந் தோன்றாது செல்லத்தக்கனவா? அன்றி நிலைத்திருக்கத்தக்கனவா? நிலைத்திருக்கத் தக்கன வெனின், கண்ணுடியைக்கொண்டு உணரும் கட்புலனுக்குத் தோன்

ருத அணுக்களென்பவை எஞ்ஞான்றும் எங்கணு மில்லையெனப் படுமே? இல்லையெனப்படுமெனின், இச்சூக்கும அணுவுக்குமேல் இத்தகையதெனக் கணித்தற்கரிய இன்னும் நுட்ப அணுக்கள் உண் டெனப்படாதிருக்க வேண்டுமே! கட்புலனுக்குத் தோன்றும் தூல அணுக்கள் சில வேதிகளால் ஷை கட்புலனுக்குத் தோன்றாது உடைந்துவிடுவதுபோல், அக்கட்புலனுக்குத் தோன்றாத இச்சூக்கும அணுக்கள் ஒவ்வொன்றும் கலைதற்கு இயைந்த வேதிகள் பரிசிக்கின், அனந்தமாய்க் கலைந்து, ஷை கருவியைக்கொண்ட கட்புலனுக்குந் தோன்றாதுபோகின்றன. அங்ஙனமே அவ்வணுக்களையும் உடைத்து விடுதற்கு இயைந்த வேதிகள் பரிசிக்கின், பிற்பொழுது எவ்விதக் கருவிகளைக்கொண்டு உணரினும் எட்டுதற்கு இயையுமா? அங்ஙனம், எட்டுதற்குத் தோன்றா அணுக்களன்றோ திரமான இருப்பெனப்பட்ட வை! அத்திரமான அணுக்கள் பலவாகலின், அப்பல அணுக்களும் ஒன்றோடொன்று சேர்ந்த எழுச்சியே கருவியைக்கொண்ட கட்புல னுக்குத் தோன்றும் சூக்கும அணுக்களென்பன. அவ்வொவ்வொரு சூக்கும அணுவும் கணித்தற்கரிய அணுக்களின் சேர்க்கையாகலின், ஓர் முதல்போற் றோன்றும் தொழிற்குணமும், தோற்றக்குணமு மாகின்றன. எங்ஙனம் இச்சூக்கும அணு சுயம்பெனவும், ஓர் முத லெனவும்படும்? படாததாயின் ஷை தோற்றாத அணுக்களன்றோ முப்பொழுதும் உள்ள சத்தெனவும், இச்சூக்கும அணுக்கள் ஓர் ஞான்று தோற்றும் தோற்றமாகலின் அசத்தெனவும் படுகின்றன! இங்ஙனம் படுவதால், சூக்கும அணுக்களாகத் தோன்றுந்தோறும் ஒவ்வொன்றையும் நாட்டமானது கணித்தற்கரிய அணுக்களாக ஏன் நாடவில்லை? அங்ஙனம் தோன்றாத அணுக்கள் ஒன்றோடொன்று சேர்ந்த ஞான்றும் இருப்பவை அவ்வணுக்களன்றோ? அவ்வணுக் களை விடாது திருட்டிக்கின் இச்சூக்கும அணுத் தோன்றுமா? ஓர் ஞான்று தோன்றினும், முதலெனப்படுமா? படாதன்றோ!

அன்றியும், இச்சூக்கும அணுக்களாக விகற்புறுதற்கு முற் பொழுதும் இவ்விகற்பங்கள் மாறிவிடும் பிற்பொழுதும் உள்ளன யாவை? கருவியைக்கொண்ட கட்புலனுக்கு இத்துணைத்தெனத் தோன்றாத அணுக்களன்றோ? அவ்வணுக்களிருப்பில் இச்சூக்கும அணுக்களுண்டா? இல்லையே! இல்லையெனின், இவைகள் எஞ் ஞான் றிருக்கின்றன? இடைஞான் றிருக்கின்றனவெனின், முற் பொழுதும், பிற்பொழுதுமுள்ள அத்தோன்றா வணுக்களிருப்பில்

இச்சூக்கும அணுக்க ளில்லாத் தகைமைபோல், இவ்விடைஞான்றுள்ள சூக்கும அணுக்க ளிருப்பில் அத்தோன்ற அணுக்க ளிருக்குமா? இருக்கின்றதேயெனின், முற்பொழுதும், பிற்பொழுதுமுள்ள அவ்வணுக்க ளிருப்பில் இவ்வணுக்க ளுண்டாயிருக்கவேண்டும். அங்ஙனமுண்டா? இல்லையே! இங்ஙனமிருக்க, அவ்வணுக்கள் இவ்வணுக்களில் எங்ஙன மிருக்கும்? ஓர்பொருளிருக்கும் ஞான்று அப்பொருட்கண் ஏனைய பொருள் எங்ஙன மிருக்கும்? இருப்பதானல், அப்பொருட் கியைந்த தசபுறங்களுள் ஓர் புறத்திலிருக்கும். அத்தோன்ற அணுக்கள் இச்சூக்கும அணுக்களுக்கு இயைந்த தசபுறத்துள் எந்தப்புறத்தில் இருக்கின்றன? இவ்வணுக்கள் ஓர் பொருளானலன்றோ அங்ஙனமிருக்கும்! முன்பினிடை யென்கிற முப்பொழுதில் ஓர்ஞான்றேனும் இச்சூக்கும அணுக்கள் முதலாகவுண்டா? இல்லையே! இருப்பதுபோற் றோற்றும் தோற்றன்மாத்திரமே யன்றி வேறன்றே! இஞ்ஞான்றிருக்கும் சூக்கும அணுக்கள் ஒவ்வோர் முதலாயின், இவைகள் மாறுவானேன்? மாறிய பின்ஞான்று அவ்வணுக்க ளிருப்பா யிருப்பானேன்? அவ்வணுக்கள் இஞ்ஞான்றேது? முன்ஞான்றும் இடைஞான்றும் இருந்தவைகளா? அன்றி நூதனமாக உண்டானவைகளா? நூதனமாக ஓர் பொருளும் உண்டாகாதே! உண்டாகுமெனின், இல்லது வாராதென்னும் ஆட்சேபம் இருக்கின்றதே! முற்பொழுதும், பிற்பொழுதும் இல்லாதது இடைப்பொழுதில் உண்டாகுமாயின், அம்முற்பொழுதும், பிற்பொழுது முள்ளது இடைப்பொழுதில் ஒழிந்துவிட வேண்டுமன்றோ? இவை பொருத்தமின்று.

இங்ஙன மிருத்தலின், அவ்வணுக்கள் எஞ்ஞான்றும் மாறாத நித்தியத்துவமும், இவ்வணுக்கள் அநித்தியத்துவமும் உடையவை ஆகின்றன. இங்ஙனமாக நிச்சயித்திருக்கும் விவேகத்தை யன்றோ நித்தியாநித்திய வத்து விவேக மெனப்படுவது? இவ்விவேகம் பொருளெனற் கியையாத சூக்கும அணுக்களைப் பொருளென்றுணரலாமா? பொருளென்று உணர்வதால் விவேகமெனப்படுமோ? விவேகமென்பது சூக்குமத்திற்குஞ் சூக்குமமாகப் பொருளை உணர்வதாகலின், இச்சூக்கும அணுக்களை ஓர் முதலென் றுணரும் உணர்வை முன்ஞான்று அறிவென்றது பூர்வபட்சமாகி, இஞ்ஞான்று அறியாமையெனச் சித்தாந்த மாயிற்றென்க. இத்தூல அணு ஆராய்ச்சியில் தேர்ந்தவை எவையெனின், ஆறுவது அடுக்காயுள்ள அறிவறியாமைப் பேதமும், இவற்றிற்கு மேல் உறுதிப் பொருள்களாயுள்ள அதிட்டானமாகிய தோன்ற அணுக்களுமாமென்க.

6-வது மண்ணின் சூக்கும அணுவென்னும் சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம் முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது

மண்ணின் பரமாணுவென்னும்

# சத்தார்த்த ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

*இந்தவா ராய்ச்சியின்க ணேய்ந்தபர மாணுவென*
*லெந்தவிதத் தும்மனர்த்த மெய்தியே—இந்தவெளிப்*
*பாவமதா நின்றிலங்கப் பக்குவிகட் காகுமே*
*பாவித்தற் கேதுருக்கள் பாழ்.*

எங்ஙனமெனின், இதுகாறும் மட்பொருளினது சூக்கும அணுவை ஆராய்ந்த ஆராய்ச்சியில் தேரப்பட்டவை கருவியைப் பெற்ற கட்புலனால் இத்துணையதெனக் கணித்தற்கரிய அணுக்களாகலின், அவ்வணுக்கள் என்ன அணுக்க ளெனப்படும்? அவ்வரிய அணுக்கள் எவற்றினுக்கும் அதிட்டான காரணத்துவ மாகலின், பரமாணுவுக்கும் பரமாணுக்களென்பாமெனின், அவற்றுள் ஒவ்வொன்றையும் பொருளென்று உணரும் உணர்வு அதிட்டான அறிவெனப்படுமா? அன்றிக் கற்பித அறிவெனப்படுமா? கற்பிதமாவது பொருளல்லவற்றைப் பொருளென்று உணரும் ஆரோப அறிவென்க. அப்பரமாணுக்களை உணர்வது அதிட்டான அறிவெனப்படுமெனின், இதனால் அப்பரமாணுக்கள் ஒவ்வொன்றும் சத்துப்பொருளென்று ஆகின்றன.

ஆகின்றதால் அவ்வணுக்கள் திரிசியப் பொருள்களா? அன்றி அதிரிசியப் பொருள்களா? அவைகள் திரிசியப் பொருள்களாயின் அதிசூக்குமமாகிய கருவிகளைக்கொண்டு உணரும் கட்புலனுக்கு எட்டுமல்லவா? எட்டாமையால் அவைகள் அதிரிசியப் பொருள்களெனின், அவ்வதிரிசியப் பொருள்களென என்ன அளவையால் ஏற்கப்படுவன? அனுமான அளவையால் ஏற்கப்படுவனவெனின், அவைகள் தோற்ற அனுமான அளவையா? அன்றி எதார்த்த அனுமான அளவையா? எதார்த்த அனுமான அளவையாமெனின்,

அனுமான மென்பதற்கு இலக்கணமாவது பிரத்தியட்சமாயுள்ள சத்துப் பொருளைக்கொண்டு அப்பிரத்தியட்சமா யிருக்குஞ் சத்துப் பொருள் ஒன்று உண்டெனக் கோடலன்றோ ? அஃது ஓர் மலையின்கண் பிரத்தியட்சமாகக் காணப்படும் உண்மையாயுள்ள புகையைக் கொண்டு அப்பிரத்தியட்சமா யிருக்கும் அக்கினியொன்று உண்டெனக் கோடல்போலாம். இது எதார்த்த அனுமானந்தான்! ஷை மலையின்கண் நின்றெழுவது வெண்மேகங்களாயின், அவ்வெழுச்சியைப் புகையென மயங்கி அம்மலையில் அக்கினி உளதாகக் கோடல் என்ன அனுமான மெனப்படும்? இஃது தோற்ற அனுமானமன்றோ!

இவ்வாறே ஷை பரமாணுக்க ளென்பதை மேலே அதிரிசியமா யிருக்கின்றனவென இங்கே எந்தப் பிரத்தியட்ச உண்மைப் பொருளைக்கொண்டு கணித்தது? மண்ணினது ஷை மகத்துருவ முதல் அதாவது இப்பூமி முதல் சூக்கும அணுக்கள்காறுமுள்ள பெரிது சிறிதாகிய பேதங்களைக்கொண்டு கணித்ததெனின், இங்ஙனமாகிய பெரிது சிறிதான பேதங்கள் சொல்மாத்திரமெனவும் ஆரோபமெனவும் முன்னொன்றே முடிந்திருக்கின்றனவே! இவற்றைக்கொண்டு மேலே முடிவாகிய பரமாணுக் குழாங்கள் உண்டெனக்கோடல் தோற்ற அனுமான அளவை யெனப்படுமன்றோ? பிரத்தியட்சமாகிய மகத்தணுப்பேதங்கள் அதிட்டானப் பரமாணுக்களின் சேர்க்கையா யிருக்கின்றமையின், இச்சேர்க்கையைக் கொண்டு அனுமானிப்பதால் தோடமென்னையெனின், இம்மகத்தணுச் சேர்க்கைகள் பொருளின்றித் தோற்றல் மாத்திரமெனத் தெளிந்துழி இவற்றை நாடுந்திருட்டியானது நீங்குமல்லவா? இது நீங்கிய ஞான்று இவ்வணு மகத்துத் தோற்றங்கள் உண்டாயிருக்குமா? இராதன்றோ? இங்ஙனம் இந்நிலையில் நிற்கில் மேலே அதிட்டான அணுக்கள் உண்டெனப்படுமா? படாதன்றோ! உண்டெனக் கோடல் நம்பாவனையேயன்றிக் கிஞ்சித்தும் எதார்த்தம் அன்றென்க.

இதனால் பரமாணுக்கள் இன்றென்னலாமோ வெனின், அதற்குக் கற்பனைகளைக்கொண்டு கணிப்பானேன்? அங்ஙனம் கணிப்பதனால் முதலின்றேவெனின்; பொய்யைக்கொண்டு கணிக்கப்படுவதும் பொய்யாகுமன்றோ? அங்ஙனமாயின் பொய்யாகிய உலகைக் கொண்டு மெய்யாகிய ஆன்மா ஒன்று உண்டெனக் கோடலும் பொய்யாக வேண்டுமே யெனின், ஆன்மாவாகிய நானென்னும்

பொருள் அனுமானிக்கப் படுவதுதானே? அனுமானிக்கும் பொரு ளாயின் இருவகை நிட்டை எய்துவது யாதுக்கு? பிரத்தியட்சமாதற் கன்றோ? அன்றியும், அவத்தாத்திரயம் உபாதித்திரயம் முதலியன வாக விளங்குவது யாது? நானென்பதல்லவோ? அங்ஙனமே ஷெடி சமாதிகளில் சுயம்பிரகாசமாக விளங்குவது யாது? அஃதும் நானென் பதன்றோ! ஈரிடத்தும் நானென்பது விளங்குகின்றதே! அஃது விளங்காத காலமுமுண்டோ? இல்லையே! பரமாணுக்கள் உண்டென் பது எஞ்ஞான்றேனும் விளங்கினதுண்டா? கிஞ்சித் ஞான்றும் இல்லையே! முற்றும் அனுமானிக்கப்படும் கற்பனைக ளாயிற்றே! நானென்பது அங்ஙனம் அல்லவே! எஞ்ஞான்றும் அதிட்டானமா யும், ஆரோபமாயும் விளங்குகின்றதே! அவை சமாதிக்கண் வியா பக விளக்க உணர்வாயும், அச்சமாதி கலைந்தஞான்று அவத்தாத்திரய விகாரமாயுமென்க. நானென்பது ஞான அஞ்ஞானமாக விளங்கு கின்றதாயின், இப்பொய்யுலகைக்கொண்டு ஆத்ம நிச்சயம் செய்வா னேனெனின், “தேகமே ஆத்மா போகமே முத்தி, கண்டதேகாட்சி கொண்டதேகோலம்” எனக்கிடக்கும் நாத்திக அனுபவத்தை அகற்றுதற்கு அங்ஙனம் கூறியதே அன்றி அஃது எதார்த்தம் அன்றென்க.

இதனால், ஷெடி பரமாணுக்கள் இல்லையெனப் படுமோவெனின், சேர்க்கையாயுள்ள மகத்தணுப் பேதங்கள் திருட்டியில் தாக்காது நிற்றற்குச் சற்றும் திறமையின்றி வெறுஞ் சொல்மாத்திரமாக இவற் றைக் கற்பனைகள் எனக்கூறி அகத்துள் மெய்யெனக் கொண்டிருப் பதே முதல்மயக்கமாயின், இம்மயக்கம் காரணமாக மேலே அனு மானித்துப் பொருள்கோடல் இரட்டித்த மயக்கமன்றோ? முதல் மயக்கைக் களைந்துவிட்டால் இதைப்பற்றி வந்த இரட்டித்த மயக்கம் எங்ஙனந் தலைகாட்டும்? ஆகலின் இதனை நன்கு உற்றுணர்க. மரத் தினது சாகை தளிர் இலை முதலியவைகளை அசைப்பிக்கும் காற்று னது கட்பொறிக்கு எட்டாமையின் அஃது இன்றென்னலாமோ? இதுபோல் சேர்க்கையாயுள்ள மகத்தணுப்பேதங்கள் தோற்றல்மாத் திரமாகவேனும் இருக்க இவற்றிற்குமேல் அப்பிரத்தியட்ச உபா தான காரணமான பரமாணுக்கள் ஏன் இன்றாகுமெனின், காற்றென் பது கட்பொறிக்கு அப்பிரத்தியட்சமாயினும் மரத்தினது இலை முத லியவைகள் அசையினும் அசையாவிடினும் பரிசானுபவம் காரண மாக ஏற்று அனுபவிக்கும் அனுபவங்களால் இருக்க ஏற்கற்பாலதே.

இதுபோல், சேர்க்கைகளாயுள்ள மகத்தணுப்பேதங்கள் இல்லா தொன்று பரமாணுக்கள் உளவென்பதற்கு என்ன அநுபவம் இருக்கின்றது? கிஞ்சித்தும் இல்லையே! இல்லாதிருக்க உளவெனக் கோடல் சேர்க்கைகளாகிய கற்பனைகள் காரணமாகவன்றோ? இவற்றால் பரமாணுக்கள் உளவாகவழங்குவது விவர்த்தவாதமே அன்றி வேறன்றென்க. இதுநிற்க, சேர்க்கைகளாகிய மகத்தணுப்பேதங்கள் தோற்றல்மாத்திர மென்று ஏற்புழி, இத்தோற்றங்களை நாடுந் திருட்டியை மாற்றவேண்டுமா? அன்றி விடாது உணர்ந்துகொண்டிருக்க வேண்டுமா? எனெனின், இக்கற்பனைகட்கு மேல் அதிட்டான பரமாணுக்கள் இருக்கின்றதாகக் கொண்டதனாலென்க. அங்ஙனம் அப்பரமாணுக்கள் இருப்பெனக்கொண்டுழி, அவற்றை நாடாது இக்கற்பனைகளை முதலென நாடிக்கொண்டிருப்பது தானோ விவேக மெனற்பாலது? இக்கற்பனைகளை ஒவ்வோர் முதலாக நாடிக்கொண்டிருந்ததற்கு மேல் முடிவாகப் பரமாணுக்கள் உளவென வழங்குவானேன்? அங்ஙனம் வழங்குவது விவேகமாயின், இம்மகத்தணுக் கற்பனைகளை நாடுவது அவிவேக மெனப்படுமே! அன்றி, இவற்றை நாடுவது விவேகமாயின், மேல் பரமாணுவாதஞ் செய்தல் அவிவேகமெனப் படுமே! விவேகமென்பது பொருளைப் பொருளென்று உணர்வதன்றோ? இத்தோற்றங்களைக் கிஞ்சித்தும் நாடாது மேல் இருக்கின்றதாக நிச்சயித்துக்கொண்ட அப்பரமாணுக்களை விடாது திருட்டிக்க வேண்டுமே!

அன்றியும், மகத்தணுப் பேதங்களை ஆராய்ச்சிசெய்த திடத்தால் இவற்றைக் கற்பனைகளெனக் கண்ணுற்று வந்தாலும், தேகப்போகதாகஞ் சிறிதும் அறாதுழி, அஃது திடபாவம் நாளுக்குநாள் தளர்ச்சியுற்று முன்போலவே இவற்றை ஒவ்வோர் முதலாக நாடவேண்டிவருமே! வரின், நமது கருத்தின்வண்ணம் கொண்ட அஃது பரமாணுக்களை அப்பொழுதேனும் எட்டவேண்டுமன்றோ? எட்டாதுழி, கற்பனைகளாகிய இவ்விபரீதத் தோற்றங்கள் எங்ஙனம் நமது திருட்டியை விட்டகலும்? அகலாதாகலின்,

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்க் குறள் மகாவாக்கியங் கூறியிருக்கின்றதே! இவ்வாக்கியத்தை யேனும் கண்ணுறவேண்டுவது அவசியமன்றோ? எட்டப்படுவதை யேனும் [illegible] கட்டுற்று எட்டலாம், எட்டப்படாததை [illegible]

எட்டப்புகுவது விவர்த்தமன்றோ? இதுபோல், ஷெ பரமாணுக்கள் எட்டப்படுவனவன்றே எனின், அவ்வணுக்கள் தமக்குத்தாமே உள்ளவெனப்பட்டனவா? அன்றி வேறொன்றினுக்கு உள்ளவெனப் பட்டனவா? தமக்குத்தாமே உள்ளவெனப் பட்டனவெனின், அவ் வொவ்வோ ரணுவும் தன்னைத்தானே அறிந்துகொண் டிருக்க வேண்டும். அங்ஙன மில்லாமையின், வேறொன்றுக்கே உள்ளதெ னப்பட்டன. மேலும், கட்பொறிக்கு உள்ளவெனப் பட்டனவா? அன்றிக் கருத்தினுக்கு உள்ளவெனப் பட்டனவா? கருத்தினுக்கே உள்ளவெனப்பட்டன எனின் கிரிசியமெனப்பட்டனவா? அன்றி அதிரிசியமெனப் பட்டனவா? திரிசியமென்பது நாமரூபமும், அதி ரிசியமென்பது சூனியமும் ஆகின்றன. அவ்வணுக்கள் சூனியப் பொருளாகுமா? சூனியமென்பது ஒன்றுமில்லாமையன்றோ? அதா வது மனம் வாக்குக் காயம் இம்மூன்றினுக்கும் படாததென்க.

அணுக்கள் இங்ஙனம் கூறியதுபோலன்று, ஷெ மனம் முத லிய திரிகரணங்களுக்கும் எட்டும் பொருள்களா யிருக்கின்றனவே! காயத்திற்கு எங்ஙனம் எட்டும் பொருள்களெனின், மகத்தணுப் பேதங்களாகச் சேர்க்கையுற்றுக் காயத்திற்கு அனுபவப்படுவன யாவை? அவ்வணுக்களன்றோ? அவைகள் சேர்க்கையுற்ற ஞான்று காயத்திற்கும், சேர்க்கை யுறுஞான்று கருத்திற்கும் வாக்குக்கும் அனுபவப்படுகின்றன. அன்றியும், புறக்காட்சி யெனவும் அகக் காட்சியெனவும் இருவகையின. இவற்றுள், புறக்காட்சி யென்பது இத்தூல வடிவம். அகக்காட்சி யென்பது சூக்குமம் சாயை பாவனை முதலியன. இவ்விதக்காட்சிப் பேதங்களுள் அவ்வணுக்கள் எவ்வ யெனப்படும்? தூல வடிவங்களெனின், கட்புலன் பூதக்கண்ணாடி யைப் பெற்றுணரும் ஞான்றும், பெறாதுணரும் ஞான்றும் தோற்றுந் திரிசியங்க ளெனப்படும். சூக்கும வடிவங்களெனின், கருத்திற்கு அதிருட்பங்களாக மதிக்கப்பட்டன வெனப்படும். சாயைகளெனின், அவை ஒன்றின தெனப்படும். அன்றியும், அவை தோற்றன்மாத் திர மெனவும்படும். பாவனைகளெனின், பாவிப்பானை யன்றி இன் றெனப்படும். இத்தன்மைத்தெனக் கணிக்கப்படாதவையெனின், சூனியப்பொரு ளெனப்படும். படுவதுமன்றி, அச்சூனியம் பல நுட் பங்க ளெனப்படுமா? அது சேர்க்கையுற்று மகத்தணுவாகிய உருவ பேதங்க ளாகுமா? இங்ஙனமிருக்கப் பரமாணுக்கள் என வழங்குவா னேன்? அதி நுட்பப் பொருள்களெனக் கணிக்கப்பட்டிருக்கின்ற

தே! அங்ஙனம் பொருள்படாமலா அவற்றை நுட்பப் பொருள்களெனக் கருதினது? அங்ஙனம் கருதினது கருத்தன்றோ! எதனால் அவை நுட்பப் பொருள்களென மதிக்கப்பட்டனவோ அதனால் அந்த நுட்பப்பொருள்களை எட்டுதற்கு முரணென்னை? இங்ஙனமிருக்க,

அவைகள் எட்டப்படாவென்றது என்னை? கட்புலனுக்கு எட்டும் பொருள்கள் அக்கட்புலனாலும் அதன் காரணமாகிய கருத்தினாலும் எட்டப்படும். கருத்தினுக்கு எட்டுவது கட்புலனாலெட்டப்படாமல் கருத்தினுக்கே கூடும். முற்பொழுது காணப்பட்ட நாமரூபங்களைப்போல் இப்பொழுது உன்னுந்தோறும் அவைகளாக அகத்தில் தோற்றும் நாமரூபங்களைக் கண்டுணர்வது கட்பொறியல்லவே! கருத்தன்றோ? அங்ஙனமே, ஜடபரமாணுக்களை உணர்தற்கு இயைந்தது கட்புலனோ? அல்லவே! கருத்தாகலின் இனியேனும் கருத்தறிதற்கு முரணென்னை? அப்பரமாணுக்கள் எத்துணை எத்துணையெனப் பொருள் பட்டனவோ அத்துணை அத்துணையென உணரவேண்டுமே! ஏனெனின், அவைகள் அதி நுட்பமாக இருக்கின்றன வெனக் கருத்து மதித்ததனாலென்க. ஆகலின், இப்போது அத்துணையதெனக் கண்ணுறுதற்கு முரணென்னை? முற்பொழுதே கருத்தினால் மதிக்கப்பட் டிருக்கின்றதாகலின், இப்பொழுது அத்துணை அத்துணையாக இக்கருத்து நிற்றற்கு மாறில்லையே? கருத்தானது எத்துணை எத்துணையதென மதித்ததோ அத்துணை அத்துணையாகப் பல்ஞான்றும் பழகப்பழக அத்துணை அத்துணையாக நின்று விடுமன்றோ? அங்ஙனம் நிற்குங்காறும், இச்சா ஞானக்கிரியை எழுதற்கு இடமுண்டாமோ? அவற்றால் இன்பதுன்பத் தாக்குகள் சிறிதேனும் உண்டாமோ? அன்றியும் சுகாகாரமாயும் நிற்றற்கு இயையுமன்றோ? அச்சுகம்போன்ற சுகம் மகத்தனுப் பேதங்களிலுண்டோ? இதனை எந்த அறிஞர்கள் ஏலார்? பொருளைப் பொருளென்று உணரவேண்டுமென விதித்திருக்கின்றதே! இதனையேனும் நாடவேண்டுவதில்லையா? இப்பரமாணுவுக்கு மேலுறும் ஆராய்ச்சிக்கண் செல்லாவிடினும், இந்நெறியிலேனும் நிற்கின் கரணேந்திரியங்கள் சேட்டைகளற்றிருத்தற்கு முரணின்றென்க.

கருத்தானது தான் சித்துப்பொருள் ஜடபரமாணுக்கள் சடப்பொருள், இங்ஙனமிருக்கக் கருத்துப் பரமாணுத்துணையாக நிற்குமோவெனின்,

உத்தம வாதநூல்.

"சிந்தைசக மென்றல்ல சிந்தை சகமானீர்
சிந்தையடி வாக்கரைக்கத் தேர்கிலீர்—சிந்தை
சுயஞ்சோதி லேசமன்றோ தோலாப் புலவீர்
வயப்படுமி னல்லார்பால் வந்து."

மன்றுருளி யிருக்கின்றதில், நமது ஒவ்வொரு சிந்தையும் சுழுத்தி யவத்தை நீங்கலாக ஏனைய ஈரவத்தைக் கண்ணும் நான் நீ அவன் அவள் அது வாகிற நாமரூப ஆகாரமா யிருக்கின்றதா? அன்றிச் சுழுத்திக்கண் உள்ள சூனியவாகார மாகவேனும், அஃதுமின்றிச் சமாதிக்கண் உள்ள சின்மாத்திராகார மாகவேனும் இருக்கின்றதா? நாமரூப ஆகாரமாகவே இருக்கின்றதெனின், ஒவ்வொரு நாமரூப மும் அணுக்கள் சேர்க்கையா? அன்றிச் சுயம்பா? சேர்க்கைகளா மெனின், சேர்க்கையுற்றுக் காணப்படும் ஒவ்வொரு நாமரூபமும் மகத்தெனப் படுமன்றோ? இம்மகத்தாகாரமாக இல்லாத சிந்தை யென்பது இவ்விரவத்தைக் கண்ணும் உண்டோ? இல்லையே! ஒவ் வொரு சிந்தையும் சாக்கிராவத்தைக்கண் உள்ள நாமரூபங்களை அறிந்துகொண் டிருக்கின்றது மாத்திரமேயன்றி, எங்ஙனம் அதன் அதன் ஆகாரமாக இருக்கின்றதெனின், சொப்பனத்தின்கண் சாக் கிராவத்தா நாமரூபங்களைப்போல் தோற்றுவது யாது? இவ்வவத்தா நாமரூபங்கள் அச்சொப்பனத்தின்கண் வருவதுண்டா? இல்லையே! சாக்கிராவத்தைக்கண் எவ்வெச்சிந்தை நாமரூப ஆகாரப்பட்டு அழுந் தினதோ அவ்வச் சிந்தையும் சொப்பனத்தின்கண் அவ்வவ் நாம ரூபங்களாகத் தோற்றுகின்றது.

எங்கு இவற்றின் ஆகாரம் ஆகாதுழி, ஆங்கு இவற்றைப்போல் எங்ஙனம் தோன்றும்? இவ்வவத்தையில் ஒருயிருக்கு நான் என தாகத் தோன்றும் நாமரூபங்கள் மற்றோர் அவத்தையில் மற்றோ ருயிருக்கு நான் எனதாக ஏன் தோன்றவில்லை? எவ்வெவ் வுயிருக்கு எவ்வெத் தேகபோகங்கள் நான் எனதாகத் தோற்றுகின்றனவோ அவ்வவ் வுயிருக்கும் அவ்வத்தேக போகங்களே நான் எனதாகத் தோற்றுகின்றன. ஒவ்வோ ருயிரும் சாக்கிராவத்தைக் கண்ணுந்த அவ்வவ் நாமரூபமாக ஆகின்றதும், சொப்பனத்தின்கண் அவ்வவ் நாம ரூபங்களாகத் தோற்றுகின்றதும், மகத்தாகாரமாக நின்று விடுத்தா? அன்றி வேறுகாரமாக நின்றவிடத்தா? மகத்தாகாரமாக நின்றுவிடுத்தெனின், சிந்தையானது மகத்தாகாரமாகவே நிற்பதற்

குத்தானே அடிமைப்பட் டிருக்கின்றது? இம்மகத்தாகாரமாக நிற்பதற்கு அடிமைப்பட் டிருப்பதுபோல் ஷெடி பரமாணுக்களின் ஆகாரப்பட அடிமைப்பட் டிருக்கக் கூடாதோ? யாவும் பழக்கங் காரணந்தானே? அன்றியும்,

ஒவ்வொருவரும் எவற்றின் காரணமாக என்ஞான்றும் சுகித்துக்கொண்டு வருகின்றனர்? ஷெடி பரமாணுக்களானவை சேர்க்கையுற்றிருக்கின்ற மகத்தணுப்பேதங்களின் காரணமாகவன்றோ? அங்ஙனம் நாம் சுகித்தற்கு இயைந்தெழும் பிரியமானது நமது பிரியமா? அன்றி அவ்வம் மகத்தணுப் பேதங்களின் பிரியமா? அவ்வவ்வணுமகத் பேதங்களின் பிரியமெனின், அணுமகத்தாகிற ஒவ்வோர் நாமரூபமும் அப்போதைக் கப்போது அப்பிரியமாகத் தோன்றுவானேன்? அவைகள் அப்பிரிய வடிவங்கள் அல்லவே! நாம் இவைகள் மேல் வெறுப்புற்றதனால் இவைகள் அப்பிரியமாகத் தோற்றுகின்றனவெனின், இவைகளையன்றி நமக்குப் பிரியமென்பது வேறாகக் கிஞ்சித்தும் இல்லாதிருக்க, இப்பிரிய வடிவங்களில் நாம் வெறுப்புறுவானேன்? நாம் சற்றேனும் விருப்பு அற்றவர்களா? அல்லவே! இஃதன்றியும், எவ்வெந் நாமரூபம் பிரியவடிவாகத் தோற்றுகின்றதோ அவ்வந் நாமரூபமும் மீண்டும் அப்பிரிய வடிவாகத் தோற்றுவானேன்? ஏனையர்கள் அவற்றை வெறுப்புற்றதாலெனின், நாம் விருப்புற்றதனால் பிரியவடிவாகத் தோற்றுகின்றதாக்கும்! நமக்கு அப்பிரியவடிவாகத் தோற்றும் ஞான்றில் ஏனையர்க்குப் பிரிய வடிவாகத் தோற்றுவானேன்? அவ்வேனையர்கள் அவற்றின்மேல் விருப்புற்றதால் அங்ஙனம் தோற்றுகின்றதெனின், நாம் வெறுப்புற்றோமாயின் அப்பிரியமாகத் தோற்றுகின்றதாக்கும்!

இங்ஙனமே எதெதன்மேல் எவ்வெவ்வுயிர் பிரியம் வைக்கின்றதோ அததுவும் அவ்வவ்வுயிர்க்குப் பிரிய வடிவாயும் எதெதன்மேல் எவ்வெவ்வுயிர் பிரியம் வைக்கின்றது இல்லையோ அததுவும் அப்பிரியவடிவாயும் தோற்றுகின்றதல்லவா? ஆகலின். நமது பிரியத்தை எதெதன்மேல் ஏற்றி ஏற்றிப் பிரியமாகப் பார்க்கின்றோமோ அததுவும் பிரியமாகக் காணப்படுகின்றன. அங்ஙனம் நமது பிரியத்தை ஏற்றாது பார்க்குஞ்ஞான்று அப்பிரிய வடிவாகக் காணப்படுகின்றன. கற்பனைகளாயுள்ள மகத்தணுப் பேதங்களை ஒவ்வோர் முதலெண மயங்கி, அவற்றின்மேல் தற்பிரியத்தை ஏற்றி ஏற்றிச் சுகிப்பதுபோல் எதார்த்தமென்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்ற பரமாணுக்களின்

மேல் நமது தற்பிரியத்தை ஏற்றி ஏற்றிச் சுகிக்கலாகாதா? கற்பனைக ளின் மேல் ஏற்றி அநுபவித்தலே மிக்க சுகமாக இருக்கின், எதார்த் தங்களின் மேல் ஏற்றி அநுபவித்தல் எத்துணைச் சுகமெனப்படும்? கற்பனைகளை ஒவ்வோர் முதலெனக்கொண்டு உணர்தல் மயக்கமென் பதா? அன்றித் தெளிவென்பதா? மயக்கமென்பது தானெனின், அக்கற்பனைகளின்மேல் தற்பிரியத்தை ஏற்றி ஏற்றிச் சுகித்தல் இரட் டித்த மயக்கமன்றோ? பொருளல்லாத மகத்தணுக்களின்மேல் ஏற்றி ஏற்றிச் சுகித்துக்கொண்டு வருவதைப்பார்க்கிலும், பொருளாகச் சம்மதிக்கப்பட்டிருக்கின்ற பரமாணுக்களின்மேல் ஏற்றி ஏற்றிச் சுகித்துக்கொண்டு வருவது எத்துணைச் சுகமும் விவேகமுமெனப் படும்? இம்மட்டிலேனும் பொருளைப் பொருளென்று உணர்ந்து சுகிக்காவிடில், இதற்குமேல் பரமாணுக்களைக் கற்பனைகளாக்கும் ஆராய்ச்சியிற் செல்லுதற்கு எங்ஙனம் வழிவிடும்? பரமாணுக்களுங் கற்பனைகளாகுமோ எனின், அப்பரமாணுக்களுள் ஒன்றை நன்கு ஊகிக்குதும்! எங்ஙனம் எனின்,

அவ்வணு பொருளென்பதா? அன்றித் தொழிலும் குணமும் என்பதா? பொருளென்பதுதானெனின், சுயம்புப்பொருளென்பதா? அன்றி விகாரப்பொருளென்பதா? சுயம்புப் பொருள்தானெனின், ஏகதேசப்பட்டிருக்கும் பொருளா? அதாவது கண்டப்பட்டிருத்த லென்பது-அன்றி நிறைந்திருக்கும் பொருளா? ஏகதேசப்பட்டிருக் கும் பொருள்தானெனின், அஃது புறம் உற்றிருக்கும் பொருளா? அன்றிப் புறம் அற்றிருக்கும் பொருளா? புறம் உற்றிருக்கும் பொரு ளெனின், தசபுறமும் உற்றிருக்கும் பொருளா? அன்றி இரண் டொருபுறம் உற்றிருக்கும் பொருளா? தசபுறமும் உற்றிருக்கின்ற பொருளெனின், அத்தசபுறமும் யாது சூழ்ந்திருக்கின்றது? ஒன்றும் இல்லையெனின், யாதொன்றும் இல்லாமையன்றோ சூனியமாகிற வெளிப்பொருள் என்பது? அங்ஙனம் சூழ்ந்து விளங்கும் வெளி என்பது வியாபகமுற் றிருக்கின்றதா? அன்றி ஏகதேசம் உற்றிருக் கின்றதா? வியாபகமுற்றே யிருக்கின்றதெனின், அவ்வியாபகம் நிறைவு உற்றதெனப் பொருள்படுகின்றது! அன்றியும் அவ்வியாபகம் உட்புறம் அற்றிருக்கின்றதா? அன்றி உட்புறம் உற்றிருக்கின்றதா? அவ்வியாபகம் மேல் கீழ் முதலியனவாக வழங்கும் பத்துத் திக்குகள் என்னும் பேதங்கள் இறந்திருக்கின்றதால் புறமும், நீக்கம் என்பது இல்லாது நிறைந்தும் உற்றிருக்கின்றதால் உள்ளும் அற்றிருக்கின்ற

தென்னின், உட்புறம் அற்றிருக்கும் வெளியின்கண் உள்ள பரமாணு
வாகிய நுட்பப்பொருள் புறம் உற்றிருப்பதுபோல் உள்ளும் இடை
யும் உற்றிருக்கவேண்டுமே!

அவ்வணு நுட்பம் சுயம்புப் பொருளாக இருக்கின்றமையால்,
உள் என்பதும் இடை என்பதும் எங்ஙனம் உற்றிருக்குமெனின்,
இவற்றால் வெளியென்பது நிறைவு அற்றதாக இருக்கவேண்டுமே!
வெளியென்பது ஓர் பொருளானலன்றே, அவ்வெளியைப்பற்றி
நாம் விவகரிக்கலாமெனின், அஃதே அணுவென்பது நிகழுந்தன்மை
யதா? அன்றி நிகழாத் தன்மையதா? நிகழுந் தன்மையதெனின்,
அஃது எங்கிருந்து நிகழப்படுகின்றது? தானே நிகழப்படுவது
எனின், எதனால் நிகழுவது எனக் கேட்கின் அன்றே தானே நிகழு
வது எனக் கூறவேண்டும்? அதற்குமேலே வருகின்ற ஆட்சேபத்தை
விளக்கலாம். இஞ்ஞான்றெழுந்த கேள்வி அங்ஙனம் அல்லவே?
அவ்வணு எங்கிருந்து நிகழுகின்றது என்பதுதானே அக்கேள்வி.
அங்ஙனம் நிகழுவதற்கு ஓர் இடம் வேண்டுவது இன்றேயெனின்,
இடம் அற்றிருக்கின்றது ஏகதேசப்பொருள் அன்று, உள்புறம்
இடை யென்பவை அற்றிருக்கும் நிறைந்த பொருளெனப்படும்.
வெளியானது ஓர் பொருள் அல்லவே! அதனை இடப்பொருளாகக்
கோடற்கெனின், அதனை அன்றி வேறு எதனை இடமாகக்கொண்டு
நிகழுகின்றது? வேறே இடமென்பது இன்றென்றுணர்க. இதுநிற்க,
அஃதே அணு உள்ளும் இடையும் அற்றிருப்பதாயின், அதைச்சூழ்ந்த
வெளிப்பொருள் நிறைவு அற்றிருக்கவேண்டுமே என்பதற்கு என்
செய்வது? உள்ளும் இடையும் அற்றிருக்கும் சுயம்பு அணுப்பொரு
ளாகலால் அதைச் சூழ்ந்திருக்கும் நிறைவு அற்றிருக்க வேண்டு
மென்பது என்னையெனின்,

உள் புறம் இடை என்பவற்றை ஏலாத ஓர் நிறைவில் புறம் உற்
றிருக்கின்ற மற்றோர்பொருள் இருக்கின்றதாயின், அப்பொருளென்
றிருக்கின்ற மற்றோர்பொருள் இருக்கின்றதாயின், அப்பொருளென்
பது தொழிலுங் குணமுமாக இருக்குமா? அன்றிச் சுயம்புப்பொரு
ளாக இருக்குமா? சுயம்பாகவே இருக்குமெனின், உள்ளும் புறமும்
இடையும் அற்றிருக்கும் நிறைவு தனக்கு எதிர்மறையாக இருக்கும்
வேறு பொருட்டுணைக்கு எங்ஙனம் இடந்தரும்? அவ்வணு நுட்பத்
திற்கு இணைந்த அணு நுட்ப நீர்ப்பொருள் வந்து தன்னைப் பரிசிக்
கின், அந்நீரானது அதன்கண் சென்று முழுதும் வியாபிக்கு
மன்றோ? அந்நீர் வியாபித்தற்குத் தான் இடங்கொடுக்குமன்றோ?

அங்ஙனம் தான் இடங்கொடுத்தற்குத் தன்பால் யாதிருக்கின்றது? தன்பால் வேறொன்று மின்றித் தானே இருக்கின்றதெனின், தத்தம் பால் வேறொன் றிருப்பதனாலன்றோ மக்த்தணு முதலிய பேதங்களுள் ஒவ்வொன்றும் தன்பால் தன்பால் என வழங்கப்பட்டு வருகின்றது! அவைகள் உள்ளிலும் இடையிலும் இடம் இருப்பதனாலன்றோ நீர்ப் பொருளை ஒவ்வொன்றுந் தன்பால் ஏற்கப்படுகின்றது! ஏங்ஙன மெனின்,

நீர்ப்பொருளானது மட்பொருளைப்போல் பரமாணுத் துணையா யினும் இவ்விரண்டணுவுக்கும் மிக்க பேதமிருக்கின்றன. அவற் றுள் மட்பொருள் கடினத்துவமாகிய அணு. நீர்ப்பொருள் நெகிழ்ச் சித்துவமாகிய அணு. கடின அணுத்துவம் தன்னினத்தோடும் தான் சேர்ந்திருக்கு ஞான்று இரண்டணுவும் ஒன்றுபடாது வேறு பட்டே இருக்கும். இங்ஙனமிருக்கு மிவ்விரண் டணுக்களும் ஒன் றோடொன்று சேர்தல் பிறவினையா லன்றித் தத்தம் வினையினு லன்று. ஷை நெகிழ்ச்சி அணு தன்னினத்தோடும் தான் சேர்ந்த அஞ்ஞான்றே இரண்டென்பதின்றி ஏகமாகிவிடும். இவ்விரண்டும் சேர்ந்து ஏகமாதல் பிறவினையாலின்றித் தத்தம் வினையினு லாகும். இவ்வணு இதர அணுவோடு சேரின், அதாவது மட்பொருளணு வோடு சேரின் அஞ்ஞான்று ஒன்றுக்கொன்று விருத்தமான இவ்விரண்டணுவு மெவ்வாறிருக்கும்? இரண்டு மண்ணணுக்கள் சேர்ந்திருப்பதுபோலவா? அன்றி இதற்கு மாறாகவா? மாறாக அன் றெனின், நீர்ப்பொரு ளணுவுக்கு நெகிழ்ச்சித்துவ மிருப்பது யாதுக்கு? அந்த நெகிழ்ச்சித்துவம் மற்றொன்றில் வியாபிப்பதற் கன்றோ தனக்கியற்கையா யிருக்கின்றது! அன்றியும் மட்பொருள் நீர்ப்பொருளால் கலைகின்றதா? அன்றி நீர்ப்பொருள் மட்பொரு ளால் கலைகின்றதா? மட்பொருள் நீர்ப்பொருளால் கலைகின்றதாயி னும் மட்பொருளும் நீர்ப்பொருளும் தத்தம் அம்சங்கள் ஒன்றோ டொன்று சேர்ந்தஞான்று அவ்வச் சேர்க்கைகளுக்கு இடையிடையே வெளிப்பொரு ளிருக்கின்றமையால் அவ்வவ்விடைகள் தோறும் நீர்ப்பொருளானது அணு அணுவாகச் சென்றுசென்று வியாபிக் கின்றதே யன்றி முடிவான பரமாணுவில் சென்று வியாபிக்கின்ற தன்றெனின், கடினத்துவமென்பது செயற்கை யுற்றதா? அன்றி இயற்கையாகவே உற்றிருக்கின்றதா? இயற்கையாகவே உற்றிருக் கின்ற கடினமெனின், இயற்கைக் கடினத்துவ [illegible]

பிளவுபட்டிருக்க வேண்டுமே! வெளிப்பொருள் நிரந்தரத்துவமென முன்னமே தீர்ப்பாயிற்றே! வெளியுள்ள இடமெல்லாம் இதர வத்துக்கள் சென்று வியாபித்தற்கு விருத்தமென்னை? எவ்விதக் கடினமாயினும் அருவத்தன்மைபெற்று நிகழும் காற்றென்பது செல்லாதது முண்டோ? அஃது செல்லுழி அதுகாரணமாக நெருப்பென்பதும், அவ்விரண்டின் காரணமாக நீரென்பதும் செல்லுமல்லவா? அவைகள் அங்ஙனம் செல்லுதற்கு இடந்தராத அணுவு முண்டோ? இதனால் இயற்கைக் கடினத்துவ மாயினும் சேர்க்கையுறாத அணுவுமின்மையின் அவ்வச் சேர்க்கைகட்கு இடைஇடையே வெளிப்பொருளிருக்கின்றது. இருக்கின்ற அவ்வவ்விடைகள்தோறும் சலப்பொருளானது அவ்வவ்விடங்கட்குத் தக்க சொரூபமுற்றுச் செல்லுகின்றதற்கு விருத்தமென்னை? அன்றியும் நீர்ப்பொருளின் குளிர்மை அந்நீர்த் துணையே யன்றிக் கிஞ்சித்தும் புறமுற்றதன்று. இங்ஙனமாகிய நீர்ப்பொருளை எவ்விதமான கடினப் பொருளையுங் குழித்த அக்குழியின்கண் பரிசிக்கச் செய்யின் அந்நீர்ப்பரிசம் அக்குழியில் தாக்கிப் புறம் புகுவானேன்? தான் நெகிழ்ச்சிப் பொருளாகலின் அக்கடினத்தின்கண் வியாபிக்கின்றது. இந்நீர்ப் பொருளை உட்கொண்டிருந்த ஓர் கடத்தைப் புடைத்துப் பார்க்குஞான்று உடைந்த அவ்வோட்டின் முழுதும் ஈரமிருப்பானேன்? இருக்கின்றதால் அவ்வோடு முழுதும் யாது பொருளிருக்கின்றது? வெளிப்பொருளன்றே? அவ்வெளியானது நிறைவுற்றில்லாத இதரவத்துக்களு முண்டோ? இல்லையே! இங்ஙனமிருக்க, ஒவ்வோர் மட்பொருளணுவையும் சுயம்பாகிய கெட்டிப் பொருளென மயங்கிக் கூறுவதென்னை? அன்றியும், ஒவ்வோரணுவையும் அக்கினி பரிசிக்குமாயின், அவ் வவற்றின்கண்ணும் உட்டணசத்தி செல்லாதாக்கும்! இஃது மிக்க விந்தை!

உட்டணசத்தியை யேலாத அணுக்களும் உண்டோ? அச்சத்தி அருவமாயிற்றே! அருவசத்தி செல்லுதற்கேனும் இடந்தரத்தக்கவையன்றே? அச்சத்தி அருவமாகலின் அவ்வணுக்களிற் செல்லுதற்குக் கூடும். உருவமாகிய நீர்ப்பொருளானது சென்று வியாபித்தற்குக் கூடாதேயெனின், அருவ சத்தியேனுஞ் சென்று வியாபித்தற்கு இடங்கொடுத்திருக்கின்றதன்றே? இதனால் ஒவ்வோரணுக்கண்ணும் முற்றும் இடம் இருக்கின்றதே! ஒவ்வோரணுவினுள்ளும் வெளியானது கண்டப்படுதற்கு இயையுமா? இயையாதே! இயையுமாயின், இதனால் இவ்வணுக்கள் முதலற்றுள எனப்படும்; வெளி இன்ற

னம் இயையாமையின் அவ்வணுக்கள் முதலன்றென்க. இங்ஙன மிருக்க, ஒவ்வொருவரும் பூரணமாக இருக்கும் வெளியை லட்சியார்த்தமாக நாடவேண்டுமன்றோ? அங்ஙனம் நாடுழி, அணுக்களென்பது இல்லையெனப்படுமா? அன்றி உண்டெனப்படுமா? உண்டெனப்படும் எனின், வெளிப்பொருள் இல்லாத இடத்தில் இருக்கவேண்டுமே! அங்ஙனம் இன்றெனின், தோற்றல் மாத்திரமாக இருக்கவேண்டுமே! அங்ஙனமும் இன்றெனின், வெளியானது அவ்வவ்வணுக்களின் பரிமாணத்துணை இடை இடையே இன்றாக்வேண்டுமே! அங்ஙனமும் இன்றெனின், அவ்வவ் வணுப்பரிமாணமுழுதும் வெளியன்றோ இருக்கின்றது? அணுக்கள் தோற்றுகின்றதே யெனின், அவ்வவ்வணுவும் தத்தம் இடத்தை விட்டகன்றுழி, அந்தந்த இடத்தும் வெளிப்பொருள் உண்டென்பதா? அன்றி இன்றென்பதா? உண்டென்பதாமெனின், அந்தந்த இடத்தும் முன்ஞான்று இல்லாத வெளிப்பொருள் இஞ்ஞான்று எங்கிருந்து வந்தது?

முன்ஞான்றே இருந்துதானெனின், அணுப்பொருள்கள் என்பதேது? இருக்கின்றதே எனின், வெளிப்பொருள் முன்ஞான்று இருந்து அன்றென்வருமே! ஆகலின், வெளிப்பொருள் முன்ஞான்றில்லாததுமன்று, பின்ஞான்று வந்ததுமன்று, எஞ்ஞான்றும் இருந்தபடி இருக்கின்றதே! இங்ஙனமிருக்கும் வெளிநிறைவில் அணுநுட்பங்கள் எங்ஙனம் இருந்து நிகழும்? இருந்துதானே நிகழுகின்றன வெனின், அவை பொருளாக நிகழுகின்றதன்று, ஏனெனின், வெளிப்பொருள் இல்லாத இடமென்பது கிஞ்சித்தும் இன்றாகலி னென்க. வெளிப்பொருள் இல்லாத இடமென்பது இன்றாயினும், அணுக்கள் இன்றாமோ வெனின், அகம்புறம் அற்றிருக்கும் இவ்வெளிக்கண் தோற்றல் மாத்திரமாகவா? அன்றிப் பொருளாகவா? பொருளாக அன்று, முன்ஞான்றே வெளிப்பொருளைத் தத்தம்பால் நிறைவாக ஏலாத ஓர்பொருளும் இன்றென்பதாயிற்றே! ஆகவே, மெய்போல் தோற்றும் அணுக்கள் தொழிற் குணங்களா? அன்றித் தோற்றக்குணங்களா? தொழிற்குணங்களாமெனின், ஒன்றன்கூட்டத் தடிப்புக்களாகவேனும், அன்றிப் பலவின்கூட்டத் தடிப்புக்களாக வேனும், அஃதுமன்றித் திரிபிணைக்கத் தடிப்புக்களாகவேனும் இருக்கவேண்டுமே! ஒன்றன்கூட்டத் தடிப்புக்களாமெனின், ஒவ்வோர் பரமாணுவுக்கும் மேல் மிக்க நொய்தாகிய அணுக்கள் அனந்தம் இருக்கவேண்டிவரும். இவ்வாறே மிக்க நொய்தாகிய அவ்வணுக்களும் சியம்

பெனப்படாது. சேர்க்கைகளாகச் சென்றுகொண்டே அனவத்தாத்தோட மெய்திப்போம். அங்ஙனம் அனவத்தாத்தோட மெய்தினும், முடிவில் தனக்கெனச் சொரூபம் இல்லாதிருக்குமோவெனின், முற்றும் அனவத்தாத்தோடமென்பது இன்றாகுமாயின், அங்ஙனமே ஏற்குதும். இதனால் ஒன்றன்கூட்டத் தடிப்புக்களன்று, பலவின் கூட்டத் தடிப்புக்களாமெனின், நீர், நெருப்பு, காற்றாகிய முப்பொருள்களும், இப்பரமாணுத் துணையாகவே இருந்து, ஒன்றோடொன்றுசேர்ந்த விகாரமாக முடியும்.

அன்றியும், மட்பொருளாகிய இப்பரமாணுக்களே வழக்குமயமாயிருக்க, ஏனைய நீர் முதலிய முப்பொரு ளணுக்களும் வழக்கற்றவைகளா யிருக்குமோ? ஆகலின், பலவின் கூட்டத் தடிப்புக்களும் அன்று; திரிபினுக்கத் தடிப்பாமெனின், இப்பரமாணுக்களுக்கு மேல் ஓர் முதலிருந்து திரிந்திருக்கவேண்டும். அம்முதல் அழிந்து திரிந்ததுபோல் இவ்வணுக்களுந் திரிந்து, வேறு விகாரங்களாகுமன்றோ? அவ்விகாரங்களும் திரிந்து வேறு விகாரங்களாயும், அவைகளும் திரிந்து வேறு விகாரங்களாயும் இங்ஙனம் இருக்குமாயின், இப்பரமாணுக்கள் என்ன வெனப்படும்? ஷை மூவிதத் தொழிற் குணமும் அன்றெனின், தோற்றக் குணங்க ளெனவருமே! வரின், அவ்வணுத் தோற்றங்கள் எந்த முதலினது எனவருமே! வருமாயின், அம்முதல் ஆரம்பப் பட்சமாகத் தோற்றுகின்றதா? அன்றி விவர்த்தப் பட்சமாகத் தோற்றுகின்றதா? எனவருமே!. வரின், ஆரம்பப் பட்சமாகவே தோற்றுகின்றதெனின், அது மட்கடம், பொற்பணி, நூற்படம், நீர்த்தரங்கம் என்பவை போலாம். ஆயினும், நீர்த்தரங்கம் போன்றதாகக் கொள்வோமெனின், அதாவது சலப்பொரு ளொன்றே அலை திவலை நுரை குமிழிகளாக விகற்புறல். விகற்புற்றது மீண்டும் அவ்வலையாதிகளி னுருவழிந்து நீர்ப்பொருளாவதுபோல், அப்பரமாணுக்க ளழிந்து மேலே ஒருபாதான காரணமாய் முடியவேண்டுமே! இதனால், இருப்பது குணியாகிய காரணமெனவும், இருப்பில்லாதவை அறியாமையால் சுயம்பெனத் தோரப்பட்ட பரமாணுக்களெனவும் வருமே! நீரானது அலையாதிகளாக்காரியப்படுதற்குத் துணைக்காரணம் காற்றோன் றிருப்பதுபோல், முற்பொழுது எந்த முதல் அணுக்களாகக் காரியப்பட்டதற்கு எது துணைக்காரண மெனப்படுவது? ஏனைய நீர் முதலிய முப்பூதங்களே துணையாமெனின், அம்முப்பூதங்களையும் தனித்தனியாக ஆராய்

வுழி, இம்மட்பொருள்போலவே முற்றும் வழக்குமயமா யிருக்கின்றனவே! அவைகள் பொருள்களானலன்றோ அங்ஙனம் ஏற்றற்கியையும்? அன்றியும், அணுக்களாகக் காரியப்பட்டது எந்த முதலோ அந்த முதல் இதுகாறும் இன்னதெனப் பொருள்படவுமில்லையே! எங்ஙனம் ஓர் முதல் காரியப்பட்டதென் றேற்பது? மட்கடம் முதலியவைபோல விவர்த்தப் பட்சமாகத் தோற்றுகின்றதெனின், கயிற்றின்கண் அரவுபோல் ஆகின்ற தெனவரும். வரவே, கயிற்றைப்போல் இருக்கின்ற முதலெது? அந்தமுதல் தான் காரியப்படாமல் தன்பாலெங்ஙனம் அணுக்களாகத் தோற்றும்? ஓர் முதலிருந்துதானே அதன்பாற் கயிற்றரவுபோலேனும் தோற்றவேண்டும்! இதுநிற்க, அப்பரமாணுக்களுள் ஒவ்வோர் நுட்பமும்,

"பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்
அறுசுவை யூறெட் டுயிரல் பொருட்குணம்"

என நன்னூலார் கூறியிருக்கின்றபடி, ஒவ்வோரணுவும் பல்வகை வடிவுகட்கு இயைந்தனவா? அன்றி இயையாதனவா? வடிவங்கட்கு இயைந்த தன்றெனவெனின், வடிவற்றது சூனியமாகவேண்டுமே! சூனியமெனக் கொள்வோமெனின், அணுநுட்பமென வழங்கப்படா திருக்கவேண்டும். தோன்றுகின்றதால், அவ்வவ் வணுவுக்கு மியைந்த உருட்சி நீட்சி குட்டை தட்டை முதலியனவாகிய வடிவப் பொருள்க ளென்றுகின்றன. அங்ஙனமாகின்ற அவ்வொவ்வோரணுவும், பிருதிவி அம்சங்களாகலின், அவ்வவ் வடிவங்கட்கு இயைந்த கந்த பேதங்களும், சுவைப் பேதங்களும், பரிச பேதங்களும், வர்ண பேதங்களும், சத்த பேதங்களும் இயல்பா யிருக்குமன்றோ? இவ்வைவகைப் பேதங்களும் குணபேதங்க ளென்பவையன்றோ? இக் குணபேதங்களுக்குக் குணிப்பொருளாகிய ஓர் முதல் இருக்கின்றதன்றோ? இருக்கும் அம்முதலன்றோ மண்ணெனப்பட்டு வழங்கிவருகின்றது? அம்முதலாகிய மண்ணின் காரியநெறித்தாகச் செல்லுழி, மகத்துக்கு மகத்தாகவும், அவையாவன—இதுகாறுங் கூறிப்போந்த முதல்விகாரப் பரமாணுக்களும், அதன் பின்னர் அப்பரமாணுக்கள் ஒன்றோடொன்று சேர்ந்து காணப்படும் இரண்டாம் விகாரச் சூக்கும அணுக்களும், அதன் பின்னர் அச்சூக்கும அணுக்கள் ஒன்றோடொன்று சேர்ந்து காணப்படும் மூன்றும் விகாரத் தூல அணுக்களும், அதன் பின்னர் அத்தூல அணுக்கள் ஒன்றோடொன்று சேர்ந்து காணப்படும் நான்காம் விகாரப் பிருதிவி யண்டமுமா யிருக்கின்றன.

மீண்டும் இம்மகத் பரிமாணத்திலிருந்து காரண நெறித்தாகச் செல்லுழி, ஒவ்வோர் காரியபேதங்களும் கலந்து கலந்து மேல்மேல் காரணங்காரணமாகச் சென்று சென்று ஈற்றில் காரியகாரண பேதங் கள் கடந்து தானுயிருக்கின்றது ஷை மட்பொரு ளென்பதன்றே? மண்ணென வழங்கப்படும் பெயர்க்குப் பொருள்-காரணங்களுக் கெல்லாம் காரணமாகத் தோற்றும் ஷை முதல் விகாரப் பரமாணுக் களா? அன்றிக் காரியங்களுக்கெல்லாம் காரியமாகத் தோற்றும் நான் காம் விகார இம்மகத்வடிவமா? மேலும், இவ்விரண்டில் ஒன்றெனப் படாமல் இவ்விரண்டுமாக இருக்கின்றதா? இரண்டில் ஒன்றெனப் படுகின்றதெனின், அதாவது-காரணங்களுக்கெல்லாம் முடிவான காரணப் பரமாணுக்களா யிருப்பது. அங்ஙனமாயின், காரியங்களுக் கெல்லாம் முடிவான காரியமாகிய இம்மகத்தா யிருப்பது யாது? மட்பொருளன்றி வேறு பொருளெனப்படும். அங்ஙனமின்றி முடி வான காரியமாகிய இம்மகத்துருவம் என்பாமெனின், முடிவான காரணமாகிய ஷை அணுக்களாயிருப்பது யாது? காரணகாரியமென் னும் இவ்விரண்டுமாகவே இருக்கின்ற தென்பாமெனின், காரண மாகிய மட்பொருளொன்றும், காரியமாகிய மட்பொருளொன்றுமாக இரண்டு மண்ணிருக்கவேண்டுமே! அன்றியும், ஷை முடிவாகிய காரண அணுக்களுக்கும் முடிவாகிய காரிய இம்மகத்திற்கும் இடைக் கண் பெரிது சிறிது பேதங்களாகத் தோற்றுவன அனைத்தும் யாவை?

அவைகளும் மட்பொரு ளென்பாமெனின், எத்தனை மட்பொரு ளெனப்படுமோ தெரிகிலம்! எஞ்ஞான்றும் எங்குமிருக்கும் மட் பொருளென்பது ஒன்றன்றே? அணுமகத்தாய்ப் பல குணபேதங் கள் காரணமாகப் பல மண்ணென்பதா? அன்றிக் குணிகாரணமாகப் பல மண்ணென்பதா? குணியாகிய மட்பொருள் பலவா யிராவிடில் குணபேதம் பலவாயிருக்குமாவெனின், மகத்தணுவாகிய குண பேதங்களை நீக்கி இரண்டாகவேனும், பலவாகவேனும் இருக்கக் காட் டும். அங்ஙனங் காட்டக் கூடாதெனின், அணுமகத்தாகிற குண பேதங்கள் மட்பொரு ளெனப்படுமா? படாதே! இதற்கு யாது செய் கின்றது? இவ்விரு தர்மத்தையும் நீக்கிக் காட்டக்கூடாதாயின், முற் பொழுது குணிப்பொருள் உண்டென்பதென்னை? அணுமகத்தைக் குணிப்பொருளாக மயங்கினதிலாக்கும்! இவ்விரு குணங்களுள் ஒன்று பிறிதின்கிழமையாயும், மற்றொன்று தற்கிழமையாயு மிருக் கின்றமையால், பிறிதின்கிழமையாகிய சேர்க்கையுற் றிருக்கும் மகத்

தனுப் பேதங்களைப் பிரித்தாலும் பிரிக்கலாம்; தற்கிழமையாயுள்ள பரமாணுத்தன்மையைப் பிரித்துக் குணியைக் காட்டக்கூடாதே யெனின், பிரித்துணர்ந்து காட்டவேண்டுமென்பது-அக்குண பேதங்களை நாடும் நாட்டத்தைப் பிரித்து, முதலைக்கண் டுணர்த்துகின்றதே யன்றி, அக்குணங்களைப் பிரிக்கின்றதன்று.

குணபேதங்களைப் பிரித்து முதலைக் காண்பது, குணபேதமாகிய கடோபாதிகள் பிரியுமாறு அவற்றை யழித்து மட்பொருளைப் பார்ப்பது தூலமதியும், அங்ஙனம் குணபேதங்களாகிய கடோபாதிகளை நசிக்காது அவ்வுபாதிகளை நாடுந் திருட்டியை நீக்கி முதலை நாடுவது சூக்கும மதியும் ஆகின்றன. இதுபோல் அப்பரமாணுக்களாகிய குணபேதங்களை நீக்கி யுணர்வதன்று; அக்குணபேதங்களை நாடுந் திருட்டியை நீக்கி உணருகின்றதென்க. முதலை எட்டும் முறைமை இங்ஙனமிருப்பதால், மகத்தணு நாட்டம் விட்டு நிட்டைகூட வேண்டுமன்றோ? நிட்டையாவது பொருளல்லவற்றைப் பொருளென் றுணர்தலாகிய உன்னுதலும், அவ்வுன்னுத லொடுங்குதலுமாகிய இவ்விரண்டு மின்றி நிலைத்திருத்தல். அங்ஙனம் நிலைத்திருந்தாலன்றோ குணியாகிய மட்பொருளைப் பின்ஞான்றேனும் எட்டுதற்கியையு மென்க. இதுகாறும் இங்ஙனமிருந்து அம்முதலை எட்டின தில்லையே யெனின், எட்டுங்காறும் மகத்தணுவாகிய குணபேதங்கள் ஒவ்வோர் முதலெனப்பட் டிருக்கட்டுமே! அவைகள் முதலெனப்படாவெனின், முதலை எட்டுவதுதானென்றோ? எங்ஙனம் ஊகித்தாலும் அம்முதல் எட்டவில்லையே யெனின், அஃது எளிதில் எட்டுவதோ? எளிதில் எட்டுவது தொழிலும் பண்புமாகிய அணுமகத் பேதங்களன்றோ? முன்ஞான்று மகத்துருவத் திருட்டியில் தூல அணுக்கள் எளிதில் எட்டினவோ? அங்ஙனமே தூல அணுக்கள் திருட்டியில் சூக்கும அணுக்களும், சூக்கும அணுக்கள் திருட்டியில் பரமாணுக்களும் எளிதில் எட்டினவோ? சூக்கும அணுக்களும், தூல அணுக்களும் ஒருவாறு எளிதில் எட்டினவாயினும் இப்பரமாணுக்களை எட்டுவதற்கு எத்துணைக்கட்ட மெய்தியது? இதற்கு நீடித்த ஞான்று அகன்றதன்றோ? இங்ஙன மிருக்க,

மண்ணாகிய குணிப்பொருள் எளிதில் எட்டுவது முண்டோ? ஒவ்வோர் பூதங்கட்கும் பொருள் மகத்துருவ மென்றுணர்ந்து வருகின்றது தூலமதியினாலாகலின், எவ்வுயிர்க்கும் எளிதாயிருக்

கின்றது. அவ்வம் மகத்துருவமும் கலையாளுன்றே, அவ்வம் மகத்துருவத்திற்கு நேர்காரணமாகிய தூல அணுக்களை எட்டுவது தூல மதியாலல்லவே! தூலமதியென்பது-அபுத்தி பூர்வகமாயிற்றே? அதாவது-வாலமதி யென்க. சூக்குமமதியா லுணர்வதாகலின், தூல அணுவுக்குமேல் சூக்கும அணுக்களை எட்டுவதும், அதற்குமேல் காரணமாகிய பரமாணுக்களை எட்டுவதும் சூக்கும மதியினுலாகலின் இதற்கு எத்துணைக் கட்டந்தரும்? அவ்வப்பூதத்தின் அணுக்களையே எட்டுதல் மிகவுங் கட்டமாயிருக்க அவ்வப்பூதமாகிய குணியை எட்டுதற்கு எத்துணைக் கட்டமென்பம்! இத்துணைக் கட்டங்களும் வாலமதியில் கிஞ்சித்தேனுமில்லையே! எத்துணைக்கட்டமும் ஊகமதியிலாகலின், வாலமதி அகன்றுழி மண்ணுகிய குணிப்பொருளை எட்டியுணர்வது எளிதன்றென்க. இங்ஙன மிருக்க, எத்துணைக் கட்டமுற்றேனும் அவ்வப் பூதக்குணிகளை எட்டவேண்டுவதை விட்டுத்தோற்றல்மாத்திரக் கற்பனைகளாக விளங்கும் அவ்வம் மகத்துருவங்களை ஒவ்வோர் முதலாக உணர்ந்தின்புறுதற்கோ மக்களியாக்கையைப் பெற்றுவந்தது? தெய்வத்தன்மைபொருந்திய திருவள்ளுவரும் இந்த மக்களியாக்கையை நம்பியன்றே,

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணுப் பிறப்பு." என்றும்,

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு." என்றும்,

"இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு." என்றும்,

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி."

என்றும், இவைபோல்வன பிறவு மரியதாய்க் கூறியிருக்கின்றனர்.

இங்ஙனம் கூறிய நெறிக்கணில்லாது, இவற்றிற்கு மாருக நிற்றலோ விவேகமெனற்பாலது? ஒன்றை மற்றொன்ருக உணர்ந்து வரும் அவிவேகமன்ரே அனந்த அரிய வித்தைகட்கும் வினைமுதலாயிருக்கின்றது? இதனால், அறிவுடைமை யென்பதெங்கே? இன்ருகவின், அறியாமை யுடைமையே பயனுமென்க. இதுகாறும் நாம் வாளர்போயினும் இனியேனும் குணியைக் குணியென நாடாதுழி அதற்குமேலும் லட்சியார்த்தானுபவப் பிரிவுகள் எங்ஙனம் வாய்க்

கும்? இந்த ஓர் பூதத்தை ஆராய்ந்து குணியை எட்டுதற்கே இத்துணைக் கட்டமிருக்கின் ஏனைய முப்பூதப் பொருள்களையும் ஆராய்ந்து குணிகளை எட்டுதற்கு எத்துணைக்கட்ட மிருக்கலாம்! அதன் பின்னர், இந்நாற்பூதக் குணிகளையு மொன்றுபடுத்தற்கு எத்துணைக் கட்ட மிருக்கலாம்! நமக்கு நம்மாலும் பிறராலும் அறிவுடையோரென்கிற நற்சிறப்பு வந்திருக்கின்றமையால், இவ்வுழைப்பை எய்த வேண்டுமே! அன்றியும்,

> "விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
> கற்றாரோ டேனை யவர்."

என்றருளிய ஷெடி குறள் மகாவாக்கியத்திற்கு நாம் சம்மதித்திருக்கின்றனமே! இச்சம்மதத்தை நோக்கியேனும், நாம் உழைக்கவேண்டுமே! நாம் இங்ஙனம் உழைக்கவேண்டிய உழைப்பைவிட்டு, முற்றும் அயலேட்டுப் பராக்கில் இறுமாந்து வாளா கழித்துவரின் மனமென்பது அலையாதிருத்தற்கும், சஞ்சலமென்பது அணுகா திருத்தற்கும், அகத்துவப்பு மாறாதிருத்தற்கும், தானே தானாயிருத்தற்கும் எங்ஙனம் கூடும்? இந்நான்கு அருஞ்செல்வம் வாய்த்தற்கன்றோ உழைக்கவேண்டியது? பொருளல்லவற்றைப் பொருளென மயங்கின்றே முதல்பராக்காயின், இதை அகலாத இருப்பாகக்கொண்டு கிஞ்சித்தும் இதற்கு விருத்தமின்றி முற்றும் உறவாயிருக்கின் கிஞ்சித்தும் பயனுறாதென்க. இப்பரமாணு ஆராய்ச்சிக்கண் தேர்ந்தவை எவையெனின், ஏழாவது அடுக்காயுள்ள அறிவறியாமைப் பேதமும் இவற்றிற்குமேல் உறுதிப்பொருளாயுள்ள அதிட்டானமாகிய மண்ணென்கிற குணிப்பொருளுமா மென்க.

ஏழாவது

மண்ணின் பரமாணுவென்னும் சத்தார்த்த

ஆராய்ச்சி விளக்கம்

முற்றிற்று.





உ

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது

# அருவபாவ ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

இந்தவா ராய்ச்சியின்க ணிவ்வருவ பாவமெனல்
சந்ததமு மீதுமுண்மைத் தானன்று—மெந்தவிதத்
துஞ்சதுர்ப்பூ தங்களுக்கும் சொல்லுங் குணிகளையே
யெஞ்சலின்றி நோக்கமுறு மே.

எங்ஙனமெனின், இதுகாறும் பரமாணு ஆராய்ச்சியில் இருப்பாகத் தோரப்பட்டது மட்குணியாகிய அருவப் பொருளாயினும், அவ்வருவப்பொருளை உணரும் உணர்வு அறிவெனப்படுமா? அன்றி அறியாமை யெனப்படுமா? அறிவெனப் படுமெனின், அம்மட்குணியாகிய அருவம் ஷை பரமாணுக்களுக்கு இடமாயிருக்கும் இப்பூத அருவமா? அன்றி வேறு அருவமா? பூத அருவந்தானெனின், இஃது மட்பொருளெனப்படுமா? படாதே! மண் முதலிய சதுர்ப்பூத அணுமகத்துக்களுக்கும் இடப்பொருளாயிற்றே! ஆகலின், இஃதன்று அக்குணிப்பொருள். இப்பூத அருவப்பொருளையன்றி வேறு பொருள் ஒன்றுளதெனப்படவில்லையே! இருந்தாலன்றோ அதனை எட்டலாமெனின், எட்டப்படாமையால் அம்முதல் இல்லையென்னலாமோ? ஷை பரமாணுவென்பது உருவ பேதங்களுக்கெல்லாம் அதிசூக்கும உருவமாயிருப்பதுபோல், மண்ணாகிய குணிப்பொருளானது அருவத்திற்கும் அதிசூக்கும அருவமாகலின், அதனை எட்டும் சிந்தையானது எந்த பாவம் உற்றிருந்தால் அஃது எட்டுதற் கியையும்? உருவமாகிய மகத்தணுப்பாவம் அற்றிருக்க வேண்டுமன்றோ? அதாவது—இப்பூதமாகிய அருவபாவமாக நிலைத்திருத்தல்.

நாம் அருவபாவமா யிருக்கவேண்டு மென்பது இதுகாறும் கேட்ட தில்லையே! எங்ஙனம் அருவபாவப் பட்டிருத்த லெனின், சதுர்ப்பூதாணுக்களும் தோற்றல் மாத்திரமாயும், சொல்மாத்திரமாயுமிருக்கின்றனவே! நாம் எந்தபாவமா யிருக்கின்றது? சதுர்ப்பூதாம்சங்களின் சேர்க்கையாகிய இத்தேகபாவமா யிருக்கின்றதா? அன்றி

இத்தேகத்தைப் போன்றதாக நினைவின்கண்ணும், கனவின்கண்ணும் தோற்றுகின்ற சாயவடிவபாவமா யிருக்கின்றதா? பரமாணுபாவமா யிருக்கினும் அக்குணிப்பொருளை எட்டுதற் கியையாதாயின், அப் பரமாணுக்களின் சேர்க்கைகளாகிக் கற்பனை உருவபாவமாக நின்ற விடத்தா அஃது எட்டுதற் கியையும்? அக்குணிப் பொருளுக்கு நேர் அடுத்த விகாரம் யாது? சதுர்ப்பூதப் பரமாணுக்களா? அல்லவே! அல்லாதுழி, அப்பரமாணுக்கள் சேர்க்கைகளாகிற சூக்கும அணு விகாரங்களா அடுத்த விகாரங்கள்? அவைகளு மல்லவே! அல்லா துழி, ஏனைய தூல அணுக்களும் அவற்றின் சேர்க்கையுமாகிய இம் மகத்துருவமா அடுத்த விகாரம்? இவைகளுமல்லவே! அல்லாதுழி, அப்பரமாணுக்களுக்கு ஆதாரமா யிருக்கும் இப்பூத அருவமன்றோ! இப்பூத அருவத்தைக் கடந்தன்றோ ஹை குணிப்பொருளை எட்டுதற் கியையும்? இப்பூத அருவத்தைக் கடக்கின்றதாயின், இவ் வருவபாவமாய் நின்று நிலத்தாலன்றோ பின்னொன்று இவ்வருவபா வத்தில் தனக்கெய்ப்பும் கைப்பும் விளைந்து, கடந்திருக்கக்கூடும்! அருவமென்பது சூனியத்துவமாயிற்றே! அச்சூனியபாவம் நாமாகி விட்டால் சூனியம் ஒன்றுமில்லாமையன்றோ! ஒன்றுமில்லாததாகிற நாமென்பது அக்குணியை எங்ஙனம் எட்டுவது? எட்டுதற்கு எட் டும் ஆள் இல்லாமற் போகுமேயெனின்,

இஞ்ஞான்று நாம் எந்த பாவமா யிருக்கின்றோம்? தூல பாவமா யிருக்கின்றோமல்லவா? இத்தூல சரீரம் சதுர்ப் பூதாம்சச் சையோக எழுச்சியன்றோ? இவ்வெழுச்சிக்கு முன்னொன்றும் பின்னொன்றும் அச்சதுர்ப்பூதாம்சங்க ளிருக்கின்றனபோல் இஞ்ஞான்றிருப்பது யாதெனப்படும்? அப்பூதாம்சங்களை அன்றி வேறு பொருளுண்டோ? இல்லையே! இல்லாதுழி, நாம் இவ்வெழுச்சி பாவமா யிருக்கின் றனமா? அன்றி அப்பூதாம்சபாவமா யிருக்கின்றனமா? இவ்வெ ழுச்சி பாவமாயிருக்கின்றோ மெனின், இவ்வெழுச்சி தோற்றல் மாத் திரமேயன்றி வேறல்லவே! இப்பாவமா யிருக்கின்ற நாமென்பது இதனால் கற்பனையென்பதற்கு முரணென்னை? இன்றாகவின், ஹை குணிப்பொருளை எட்டுதற்கு இக்கற்பனை பாவ முற்றிருப்பதனால் கற்பனையாகி விட்டோமா? ஆய்விட்டோ மெனின், சொப்பன வத்தைக்கண் சாயாவடிவ பாவமாகுவது யாது? அஃதும் நாமன் றோ? அதனால், நாம் அப்பாவமாகி விட்டோமா? ஆய்விட்டோ மாயின், ஈங்கு இப்பாவமாய் விட்டோமென்பது உண்மையன்று,

ஏனெனின், எப்பாவமுற்று இருக்கின்றேமோ அப்பாவமாகவே நில்லாது மீண்டும் மற்றோர் பாவமாகின்றனம். அந்தந்த அவசரத்தில் அந்தந்த பாவமாக இருக்கின்றனமே அன்றி, மீண்டும் மீளாத அவ்வப்பாவமாகி விட்டோமன்று. உருவ பேதங்களை அறிய வேண்டுமாயின், அஞ்ஞான்று நாம் எந்தபாவம் உற்றிருக்கவேண்டுவது? உருவபாவம் உற்றிருக்கவேண்டுவது அவசியமன்றோ? ஆகலின், இஞ்ஞான்று உருவாகாரமாக நின்று உருவபேதங்களை அறிந்து சுகிக்கின்றனம். இவ்வாறே, சொப்பனவத்தைக்கண் உருவாருவ பேதங்களை அறிகின்றதற்கு உருவாருவ பாவமாக இருக்கின்றனம். நாம் உருவாருவபாவமாக நிற்கின் தூலமாகிய உருவபேதங்கள் தோற்றுமா? நாம் உருவபாவமாக நிற்கின் உருவாருவ பேதங்கள் தோற்றுமா? அன்றியும், சுழுத்திக்கண் தோற்றுகின்றது உருவமா? அன்றி உருவாருவமா? இரண்டுமல்லவே! சூனியமல்லவோ? அச்சூனியத்தை யறிகின்றது நாமாகலின், அங்கே நாம் எந்த பாவமா யிருக்கின்றனம்? சூனிய பாவமா யிருக்கின்றனமன்றோ? அங்கே, நாம் சூனியபாவமாக இல்லாது உருவமாகவேனும், உருவாருவமாகவேனும் பாவ முற்றிருக்கின், அச்சூனியத்துவம் தோற்றுமா? நாம் எவ்வெவ்வண்ணம் பொருளை அறியவேண்டுமோ அவ்வவ்வண்ணமாகப் பாவமுற் றிருந்தாலன்றோ அவ்வப்பொருளும் தோன்றும்? இவற்றைப்போல், அருவமாகிய ஷை குணிப்பொருள் விளங்குதற்கு நாம் அருவபாவ முற்றிருக்க வேண்டுவதன்றோ? ஆகலின், உருவ பாவமாக நிற்கு ஞான்றும் அப்பொருள் சற்றும் எட்டாதென்க.

ஷை குணிப்பொருளாகிய அருவத்திற்கும், இப்பூத அருவத்திற்கும் பேதம் இருக்கின்றன. அவையாவன—இப்பூத அருவம் பொருளின்மையும், அக்குணி அருவம் பொருளுண்மையுமாயிருப்பது. பொருளின்றிய அருவபாவமுற்றிருக்கின், பொருளாகிய அருவமானது எங்ஙனம் விளங்குமெனின், உருவபாவத்தில் உருவாருவம் எட்டாததாயினும் எட்டுவதுமுண்டு. எங்ஙனமெனின், நனவு நினைவு கனவு சுழுத்தி என்னும் இந்நான்கவத்தையுள் நனவாகிய இச்சாக்கிராவத்தைக்கண் நாம் உருவபாவமா யிருக்கும் ஞான்று கனவின்கணுள்ள உருவாருவபேதம் தோற்றுதாயினும், இந்நனவை விடாத ஷை நினைவின்க ணுள்ள உருவாருவ பேதம் தோற்றுதல் போல், நாம் பொருளின்றிய அருவபாவம் உற்றுழிப் பொருளாகிய அருவநிலை தோன்றுமென்பதற்கு முரணின்றென்க.

சுழுத்திக்கண் நாம் அருவபாவமாகவேண்டு மென்னுங் கருத்தும், அக்கருத்திற்கியைந்த முயற்சியுமின்றி உருவபாவமாகநின்று முக்கிய ஒழுக்கத்திலிருக்குஞான்றும் அச்சுழுத்தி பாவம் தானே வருகின்றது. இங்ஙனமின்கண் அருவபாவம் ஆதற் கியைந்த அபேட்சையும், அவ்வபேட்சைக் கியைந்த முயற்சியு மில்லாதுழி, எங்ஙனம் அருவபாவம் வாய்க்கும்? ஒவ்வோருயிரும் உருவபாவத் தளர்ச்சிக்கு உடன்படவில்லையே யெனின், ஷ்டி குணிப்பொருளை எஞ்ஞான் றெட்டுகின்றது? இப்பிறப்பின்கண்ணே யன்றோ ஆகவேண்டும்? முற்பிறப்பின்கண் எட்டியிருந்தால் இப்பிறப்பின்கண் ஏமாந்திருக்க வேண்டுவதின்று. இங்ஙனமே, மேற்பிறப்பின்கண் ஏமாந்து போகாததற்கு இப்பிறப்பின் கண்ணே எட்டவேண்டுமே! எட்டுதற்கு இவ்வுருவபாவம் நாளுக்குநாள் சிறுகச் சிறுகத் தளரவேண்டுமே! தளருகிறதற்கு எந்தபாவம் நாளுக்கு நாள் முதிரவேண்டும்? அருவபாவமன்றோ? இவ்வருவபாவத்தில் ஒருவருக்கும் அபேட்சையில்லாமை யாதுக்கு? உருவபோகம் தளராதிருக்க வேண்டுமென்பதற் கன்றோ? உருவபாவமும், இப்பாவத்தாலுறும் போகமும் முற்றும் கற்பனைகளா யிருக்கின்றனவே! கற்பனையாகிய உருவபாவத்தில் நின்று சுகிப்பதைப் பார்க்கினும் அருவபாவத்தில் நின்று சுகிப்பது மிக்க அரியசுகமன்றோ? அவ்வருவபாவத்தில் நின்று சுகிப்பதினும் ஷ்டி குணிப்பொருளைக்கண்டு சுகிப்பது எத்துணை அரியசுகமெனப்படும்? இத்துணை நயமிருக்க, எங்ஙனம் அருவபாவத்தை விட்டு ஏமாந்திருக்கின்றது? மேலும், நாம் உருவபாவமா யிருப்பதற்குத்தானே மாறாது அடிமைப்பட் டிருக்கின்றனம்? இங்ஙனம் ஏமாந்திருப்பதனால் அருவபாவம் உற்றிருப்பதற்கு அடிமைப்பட இல்லையாக்கும்! உருவம் நசித்துப்போயின ஞான்றன்றோ நாம் அருவபாவம் உற்றிருத்தற்கியையு மெனின், முன்ஞான்று பிருதிவி அண்ட ஆராய்ச்சிக்கண், இவ்வண்டமாகிய மகத்துருவம் அழிந்து போயின பின் தூல அணுக் கூட்டங்களையும், அதன் பின்ஞான்று அத்தூல அணுவாராய்ச்சிக்கண், அத்தூல அணுக்கள் அழிந்துபோயினபின் சூக்கும அணுக்களையும், அதன் பின்ஞான்று சூக்கும அணுவாராய்ச்சிக்கண் அச்சூக்கும அணுக்கள் அழிந்து போயினபின் பரமாணுக்களையும் அறிந்தோ மாக்கும்! எதனை ஆராய்கின்றோமோ அது அழிந்துபோயின பின்ஞான்றுதான் அதன் உபாதானத்தை நாடுவதாக்கும்! மட்பொருளை நாடுவதற்குக் கடவுருவம் அழிந்துபோகுங்காறும் எதிர்பார்த்துக்கொண் டிருக்கவேண்டுவ தாக்கும்! பொற்

பொருளை நாடுவதற்குப் பணியுருவம் அழிந்துபோகுங்காறும் எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டுவதாக்கும்! இங்ஙனமே நாம் அருவபாவமாதற்கு உருவமாகிற அண்டாண்ட சராசர உருவங்க ளனைத்தும் அழிந்துபோகுங்காறும் எதிர்பார்த்துக்கொண் டிருப்பதாக்கும்! தீபாபாவமே இருளென்றாற்போல உருவபாவ அபாவமே அருவபாவமாகின்றது இயல்பன்றோ? அடையவேண்டிய பயனனைத்தையும் அடைந்தாக வேண்டியது பிறவி மாறுதற்கு முன்னோன்றேயாயிருக்க உருவமாறிய பின்னொன்று அருவபாவமாதற்கு முயலுவது? இஃது விந்தையினும் விந்தை! ஆகலின், இது முறையன்றென்க.

நாம் உருவபாவத்தில் நின்றே மிகவும் வருந்தி முயன்று அருவபாவமாய் நிற்கின், பிராரத்துவ போகத்தை எங்ஙனம் அனுபவித்துக் கழிக்கின்றது? கூடாதேயெனின், உருவபாவத்திலுள்ள சிசுத்தன்மையில் நாம் எந்த பாவமுற்று ஷை பிராரத்துவ போகத்தை அனுபவித்துக் கழித்தனம்? உருவபாவமுற்றே கழித்துக்கொண்டு வந்தோமெனின், அச்சிசுவை உயிர்ப்போடு ஒருயரமுள்ள மேடைக்கண் கிடத்திக் கீழே விழுந்துவிடுதற்குத் திடீரென்று புரட்டிவிட்டஞான்று மன நடுக்கமும் அதனோடு தேக நடுக்கமும் கிஞ்சித்தேனுமுண்டெனப்படுமா? உண்டெனப்படு மெனின், அச்சிசுத்தன்மை மாறிய ஞான்றே யன்றிக் கிஞ்சித்தேனும் அத்தன்மை மாறுஞான்றன்று. அச்சிசுத்தன்மை நாளுக்குநாள் சிறுகச் சிறுக மாறிவருந்தோறும் இத்தேகத்தோடு இதுநான் இது நானெனப் பழகப்பழக இவ்வுருவபாவம் நாளுக்கு நாள் சிறுகச்சிறுகப் பெருகிவரு மன்றோ? ஷை பெருகியவாறு புத்திபூர்வகமாகக் குறைந்துகொண்டே வரின், அருவபாவம் சிறுகச் சிறுக வளர்ந்துகொண்டே வரும். அங்ஙனம் வருந்தோறும் பிராரத்துவப் புசிப்பு அவ்வவ் வளர்ச்சிக்குத் தக்க வாறு நடவாதோ? இங்ஙனம் வளர்ந்து நிலைத்தஞான்றும் நடவாதென்பதற் கையமென்னை? அருவபாவத்தில் உருவதிருட்டியும் அதுவா உன்னுதலுமிராதே! எங்ஙனம் போக்குவரத்துப் புடைபெயுர்ச்சிக ளியங்குமெனின், நனவிற்சுழுத்தி யென்னும் ஓரனுபவ நிலை யாதுக்கிருக்கின்றது? அதாவது, சாக்கிர சுழுத்தியென்க. அச்சுழுத்தி இருமை யுடையன. அவை தனதகத்தும், புறத்தும் கயிற்றரவு முதலியனபோற் காணப்படுவனவாகிய ஏவேசுர சகத் கற்பனைகளைச் சின்மாத்திரமாக, அதாவது தற்பிரகாசமாக ஆகுமாறு கரைத்துக் கொண்டே, இறத்தல் பிறத்தல் முதலிய பிராரத்துவ

கன்மத்தைப் புசிக்குமன்றோ, இவ்வுலகானுபவம் முழுவதும் சாக்கிர அவத்தையா யிருக்குமா? அன்றிச் சுழுத்தி அவத்தையா யிருக்குமா? அவ்வனுபூதியில் முழுதும் சாக்கிர அவத்தையாகவே இருக்குமெனின், அஃது மனோவிகற்ப மெனப்படுமே! முழுதும் சுழுத்தி அவத்தையா யிருக்குமெனின், அஃது ஒன்றுந் தோன்றாத மக்கின மெனப்படுமே! இங்ஙனமிருப்பதால், அஃது எந்த நிலையதெனப் படுமெனின், சகல கற்பனைகளுந் தோற்றியுந் தோற்றாதுமா யிருக்கும் நிலையதெனப்படு மென்க. என்னை?

கைவல்லிய நவநீதம்.

"கற்பனை வந்த வாறு காட்டினேங் காண்ப வெல்லாஞ்
சொற்பனம் போல வெண்ணித் துணிந்தவன் ஞானி யாவான்." என்றும்,

தத்துவராயர் பாடுதுறை.

"போதத்தை யுணராதே பொல்லாத மாயையால்
பேதத்தை யுணர்ந்தோமென் றுந்தீபற
பேதமும் பிரமமென் றுந்தீபற." என்றும்,

"தோற்றா வாகத் துணிந்தவூ ரெங்களூர்
சோகமோ கங்க டறந்தவூ ரெங்களூ
ராற்ற லுடையார்க் கடைந்தவூ ரெங்களூ
ரானந்த மாயே யிருக்குமூ ரெங்களூர்."

என்றும் இருப்பதனாற்காண்க. ஷை மற்றொரு நனவிற் சுழுத்தியாவது, எந்த நிலை நானெனப்படுகின்றதோ அந்த நிலையை இது நான் இது நானெனப் பலகற்பமுங் கண்டுகண் டின்புறுதற்கு, அவத்தாத்திரய கற்பனுபாவங்கள் கடந்து, எது நான் எது நானென மேலே தன்னை நோக்கிக்கொண்டிருக்கும் அப்பியாசத்தில், முன்னோன்று தான் களையப்பட்ட அவத்தாத்திரய பாவங்கள் நான் எனது நான் எனது என முன்போலவே வந்து வந்து தாக்குந்தோறும், அவைகள் நான் எனது அன்றெனத் தடுத்துக்கொண்டே அகநோக்கிற் பழகு ஞான்றுள்ள அவ்வவசர நிலை முழுவதும் சுழுத்தியெனப்படுமா? அன்றிச் சாக்கிரமெனப்படுமா? சுழுத்தியெனப்படுமெனின், சாக்கிரசொப்பனக் கற்பனைகள் தோன்றாதிருக்கவேண்டுமே! சாக்கிரமெனப் படுமெனின், அகநோக்க மில்லாதிருக்கவேண்டுமே! இரண்டுமா யிருக்கின்றதெனின், அதுதான் சாக்கிர சுழுத்தி யெனப்படுவது. ஷை சுழுத்தி ஞானுபவத்திலுள்ளதும், இச்சுழுத்தி அஞ்ஞானுபவத்திலுள்ளதுமாமென்க. இச்சுழுத்திக் குதாரணம்:—

சசிவர்னபோதம்.

"வினவிற் பரத்தையறி வுறுதற் கவத்தைபுலன்
வினைமாறியே
நனவிற் சுழுத்திநிலை வரினப் பொருட்டிகழு
நலனுகவே."

எனக் கூறியவாற்ருற் காண்க.

இஃதிங்ஙனமிருக்க, நாம் அருவபாவமாகப் பழகிக்கொண்டு வருதல் சுழுத்தியெனப்படுமா? அன்றிச் சாக்கிரமெனப்படுமா? இரண்டுமன்றெனின், இவ்விரண்டையுமன்றி வேறு எந்த நிலைய தெனப்படும்? வேறின்ருகலின், சாக்கிர சுழுத்தி யெனப்படுமன்ருே? படுவதால், நாம் அருவபாவ மாதற்குப் பழகவேண்டுமே! ஆங்காங்கும் நான் நானெனன்பதற்குச் சொந்த நிலை உருவமா? அன்றி அருவமா? உருவமும் நம்மாலறியப்படுவது; அருவமும் நம்மாலறியப்படுவது. இதனுல், இவ்விரண்டும் சடப்பொரு ளென்பதற்கு விருத்தமென்னை, அன்றியும், இவ்விரண்டும் இங்ஙனமாயினும், இவற்றுள் எது மெய்ம்மை யெனப்படுவது? எது பொய்ம்மை யெனப்படுவது? உருவம் மெய்ம்மை யெனப்படுவதெனின், அருவமாகிய இப்பூதவெளிக்கு வேறிடத்ததாயும், இவ்வெளியைத் தன்பால் தான் ஏலாததாயும் இருக்கட்டுமே! ஏற்பதனுல் விருத்தமென்னையெனின், அகம்புற மேலாத ஓர் நிறைவில் இருப்பது பொருளாகுமா? ஆகாதன்ருே! ஆகாததால், அது தோற்றல் மாத்திரக் கற்பனையென்பதற்கு முரணென்னை? இன்ருகலின், அருவப்பொருள் இவ்வுருவத்திற்கு எதார்த்தமன்ருே? இங்ஙனம் எதார்த்தமாயினும், நானென்பதற்குப் பொருளா? அல்லவே! இரண்டும் நானென்ப தல்லாதுழி, இவ்விரண்டிற்கும் நாம் வேறுபட்டிருக்கவேண்டு மன்ருே? இங்ஙனமிருக்க, நாம் உருவபாவமா யிருப்பானேன்? இருப்பதால், அருவபாவமாயும் நாமிருக்கின் இடுக்கணென்னை? தாபத்திரயாக்கினி தகித்தல் உருவபாவத்திலேயா? அன்றி அருவபாவத்திலேயா? அருவபாவத்தில் யாதோரிடுக்கணும் இல்லையே! இங்ஙனமிருக்க, நாம் யோசிக்காதிருப்பதென்னை? நாம் அருவப்படுவானேன்? உருவபாவமாகவே நின்று கேசரி பூசரி முதலிய முத்திரை நெறிக்கண் சென்று அங்குள்ள இன்பத்தை நுகர்ந்து நுகர்ந்து பதைப்பற் றிருக்கலாமேயெனின், அம்முத்திரைகளிற் சென்று பதைப்பற விருக்கினும், அந்நிலை கலையுஞன்று,

கிரைக்கறி சமைத்தாயிற்ற பெண்ணே? என அக்கீரைக்கறிப்பாவம் வந்துற்றற்போல, நானென்பதற்குப் பாவம் யாதென்படும்? இவ்வுருவபாவமன்றித் தற்பாவமென்பது கிஞ்சித்தேனுமுண்டா? இல்லையே! தற்பாவமாவது,

தத்துவராயர் பாடுதுறை.

" போகாத மாயையைப் போக்கிட லாவதும்
புண்ணிய பாவம் புறத்திட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. "

என்றருளிய போதமாமென்க.

ஷை முத்திரை நெறிகளிற்சென்று பதைப்பற்றிருப்பது தற்பாவமென்பது கிஞ்சித்துமின்றி முன்போலவே மீண்டும் உருவபாவமாக வருவதற்கா? அவை தக்க நெறிகளல்லவே! அவ்வனுபூதிடத்தால், இவ்வுருவபாவமாதற்குக் கூடுமோ வெனின், அந்நிலை கலந்து வந்துழி எந்தபாவமுற்றிருக்கின்றது? அவ்வனுபூதிபாவமுற்றிருக்கின்றதெனின், தற்பாவமென்பது அந்தச் சுகானுபூதியா? அன்றி இந்த உருவானுபூதியா? அச்சுகானுபூதிதா னெனின், அச்சுகானுபூதி தன்னைத்தவிர இன்றெனவருமே! வருவதால் இவ்வுருவானுபூதி தன்னைத்தவிர உண்டெனவருமே! தானென்பது மெய்யுணர்வன்றே? மெய்யுணர்வாயின்,

சசிவர்னபோதம்.

" மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாந்
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே."

என்றிருக்கின்றதால், தனக்கு அகம்புறமுளதுபோ லிருப்பவற்றுள், காணப்படுவன அனைத்தும் கற்பனைக ளாகவேண்டுமே! அங்ஙனமானாலன்றே? தான் மெய்யுணர் வென்றதற்கும், தற்போதமென்றதற்கு மியையும்! இங்ஙனமியைவதால், ஷை சுகபாவ அனுபூதி யென்றதும், இவ்வுருவபாவ அனுபூதி யென்றதும் கற்பனைகளெனப்படுமே! படாதெனின், இவ்வுருவபாவத்தையன்றி அகம்புறமிருக்கட்டும். இவ்வுருவ பாவமே முழுக்கற்பனையாயின், இவற்றால் வந்திருக்கும் அகம்புறமிரண்டும் கற்பனைக ளெனப்படாவோ? இவ்வகம்புறக் கற்பனைகளிற் காணப்படுவனவாகிய சர்வமும் கற்பனைக

என்றோ? ஆகலின், நாமரூபங்களையேனும் கற்பனைகளென ஞாயம் சோதனை பொருத்த முகத்தா லாராய்ந்து தெளிந்த அத்தெளிவினால், அகமுகநெறிக்கண் சென்று அனுபூதிப்பட்டு, பின்னொன்று அவ்வனுபூதி கலைந்து புறமுகநெறிக்கண் வந்துழி, இவ்வுருவபாவமாதற்கியையுமோ? அங்ஙனம் கற்பனைகளெனத் தெளியாது சத்தெனக் கொண்டிருக்கின், ஷை அனுபூதி கலைந்த ஞான்று, தான் எந்தபாவமா யிருத்தற் கியையும்? முன்போல உருவபாவமா யிருத்தற் கியையுமன்றோ? உருவபாவத்தில் பழகி வந்ததுபோல் அருவபாவத்தில் பலஞான்றும் பழகிப் பின்ஞான்று அனுபூதிப்படின், அவ்வனுபூதி கலைந்தஞான்று தான் எப்பாவ முற்றிருத்தற் கியையும்? அவ்வருவபாவமாக வன்றோ இருத்தற் கியையும்? அவ்வருவபாவமும் கற்பனையென நன்கு ஆராய்ந்து தெளிந்து அகநெறிக்கண் அனுபூதிப்படின், மீண்டும் அஃது கலைந்தஞான்று எப்பாவ முற்றிருத்தற் கியையும்? உருவபாவமும், உருவாருவ பாவமும், அருவபாவமும் யாவுங் கற்பனைகளெனத் தெளிந்திருக்கின்றதால், தற்பாவமா யிருத்தற் கியையுமே! முன்ஞான்று இவ்வுருவபாவம்,

வைராக்கிய சதகம்.

"பொன்னை யுந்துகி லையும்பிரித் திடின்வெறும்
புழுமலக் கூடல்லாற்
பின்னை யுண்டுகொல் கண்டுநீ மயங்குதல்
பிராந்தி."

என்றருளியபடி இதன்கண் முற்றும் விரக்தியுற்று ஷை முத்திரைகளில் நீடித்தழுந்தியிருக்கினும் அந்த முத்திரை அனுபவமானது,

தத்துவராயர் பாடுதுறை.

"அறிவிட் டறியாமைப் போக்குமூ ரெங்களூ
ரன்னிய மொன்றுமி லாதவூ ரெங்களூர்
குறியிட்டி தென்னவொண் ணாதவூ ரெங்களூர்
கோசங்க ளைந்துங் குலைந்தவூ ரெங்களூர்."

என்றருளியபடி தெளிந்திருக்கும் அனுபவமா? அல்லவே! மீண்டும், இப்புறமுக நெறிக்கண் வந்தும் அவ்வகமுக நெறிக்கணுள்ள சுக போதை [illegible] இருப்பதனால், இவ்வுருவபாவம் குன்றியிருப்பது மாத்திரமேயன்றி, உருவபாவம் [illegible] எங்ஙனமெனின், [illegible]

தமா யெழுந்த விஸ்மரணையாகிய சங்கற்பத்தைச் சதுர்ஞான்றும் மித்தையென ஆராய்ந்து தேர்ந்ததுண்டா? இல்லையே! தேர்ந்திருந்தாலன்றோ இம்மித்தைச் சொரூபங்க னைத்தும் எதற்குக் காணப்படுகின்றனவென அம்முதலை ஆராயவேண்டிவரும்! வரின், பின்ஞான்று நானென்னும் அகம்பொருளை யன்றி இன்றெனவரும். அதன் பின்ஞான்று, எது நான் எது நானென எட்டப் பழகும் பரோட்சக்கியானம் நாளுக்கு நாள் முதிர்ந்து வருமன்றோ? அது முதிரமுதிர முடிவில் அவ்வகம்பொருள் அபரோட்சானுபவப் படுமன்றோ? அங்ஙனந் தெளிந்த பின்ஞான்று,

தத்துவராயர் பாடுதுறை.

"அன்னிய மில்லையென் றாதேடா காள
மானந்த மானோமென் றாதேடா காளந்
துன்னுசுட ரேயென் றாதேடா காளஞ்
சோதியுட் சோதியென் றாதேடா காளம்."

என்கிற இத்திடபாவம் அவ்வனுபூதியில் எழுமன்றோ? இங்ஙனமிருக்க, ஷை முத்திரையாகிய அனுபவத்திற் குன்றியிருந்தால் அகம்புறமிறந்து தானே தானாக நிலைக்கச்செய்யுமோ? எச்சாத்திரங் கற்கினும் எத்தவம் புரியினும் எய்தவேண்டிய பயன் யாதெனின், மனமென்பது அயல் இன்றெனத் தான் அலைவற்றிருத்தலும், பின்ஞான்று சகலகேவல சஞ்சலமனுகா திருத்தலும், அதன் பின்ஞான்றுள்ளக்களிப்புக் கண்மூ மாறாதிருத்தலும், ஈற்றில் அயலாகாது தானேதானா யிருத்தலுமென்க. இச்சதுர்விதானுபவங்களும் மனநாசத்துக்கு ஏதுக்களெனப்படும். அந்த நாசம் இருமையன: அவை, முன்ஞான்று சொரூபநாசமும், பின்ஞான்று அருவநாசமுமாம். சொரூபநாசமாவது: சீவேசுரசகத் கற்பனைகளைத் தற்பிரகாசமாகக் கரைத்தல், அருவநாசமாவது: அவை கரைந்தது என்கிறவாசனையும், அவ்வனுபூதியில் சிறுகச் சிறுகத் தானே நழுவி விடுதலென்க.

இதுநிற்க, ஷை முத்திரைகளாகிய அனுபவங்களானவை, மனமென்பது நிலையுறாது மீண்டு மீண்டும் விடயாகாரமாதற்கு, ஆங்கு ஒடுங்கியிருத்தற் கியைந்தனவேயன்றி, ஷை மனநாச முதலியனவாகிய சதுர்விதானுபவங்களுக் கியைந்தன அல்லவே! இச்சதுர்விதானுபவங்களும் வாய்த்தற் கியைந்த அத்திபாரம் யாதெனின், வெளியாகிய அருவ பாவமாமென்க. இவ்வருவபாவமானது நாளுக்கு

நாள் முதிர முதிர வடி குணிப்பொருளை யெட்டிப்பிடித்துப் பின்ஞான்று அதுவாதற்கியையு மாகலின், தானல்லாத உருவத்தைத் தானெனப் பாவப்பட்டிருத்தல்போல், தானல்லாத இவ்வருவத்தைத் தானெனப் பாவப்பட்டிருத்தற்குக் கைப்பென்னை? இன்றாகலின், அருவபாவமாதற்கு நாமரூப பேதங்களைக் கணமு மாறாது கலைக்குங் காறும் கலைத்தலையும், முடிவில் கரைக்குஞான்று கரைத்தலையும் செய்யவேண்டியது அவசியமாமென்க. உருவபாவத்தைக் கலைத்தலாவது—சதுர்ப்பூத கற்பனுபாவங்களுள் ஒவ்வொன்றும் ஒன்றன் கூட்டமாகவும் பலவின் ஈட்டமாகவும் சேர்ந்திருக்கும் சேர்க்கை எதுகாறுமோ அதுகாறும் கலைத்துக்கொண்டே யிருத்தலும், கரைத்தலாவது—கலைவுக்கிடமின்றித் தோற்றல் மாத்திர பாவமாயிருக்குஞான்று அத்தோற்றங்கட்கு உபாதான காரணமா யாக்குதலுமென்க. என்னை?

### பிரத்தியட்சானுபூதி விளக்கம்.

" உழைப்பின் வகையறி யாரய லென்ப ருலகதனை
உழைப்பு தனதறி யாமை கெடுத்திடற் குற்றசெயல்
உழைப்பெது வென்னி லுலகனு வாக்கி யுலைவதறல்
உழைப்பெது காறெனிற் றனுகு மட்டென் றுணருமினே." என்றும்,

" உருவள வாத்தனைக் காணு மளவு முலகுருவாம்
உருவள வாத்தனைக் காணு மளவு முலகுண்மையாம்
உருவள வாத்தனைக் காணு மளவு முறவுளவாம்
உருவள வல்லவென் றுன்ன வெவையு மொழிந்திடுமே." என்றும்,

" அருவாத் தனையுன்ன வங்குட ரேன்று மடிக்கடிக்கு
அருவாத் தனையுன்னி யற்று ரெவரக மல்லலற்றார்
அருவாத் தனையுனும் வல்லா ரிலையெங்கு மாய்ந்திடுங்கால்
அருவோ சடமசத் தாகா தனதுரு வற்பமுமே." என்றும்,

### உபநிடதம்.

" ஐயமின்றித் தெய்வவுருத் தியானித்தா லதுவா
மருவுருவைத் தியானித்தா லட்டமூர்த் தியுமாம்
பொய்யையிரண் டையுந்தவிர்ந்து தானுகி யிருந்தாற்
பூரணமாஞ் சிவனெதிற் பொருந்துமது வாமான்
மெய்யுறு மனம்விடயத் தாசையுற்றே யதுவாய்
மரணசன னமும்விளைந்த வாறதென்றே யுணர்ந்து
மெய்யறிவே தானுகப் பாவித்தா லதுவா
விளங்குவர்யா வருஞ்செனியா வீட்டையுமெய் துவரே." என்றும்,

கைவல்லிய நவநீதம்.

“ சடமதாகிய தியானமெய் யாகிய
சர்வமுத் தியைநல்குந்
திடமதானதெப் படியெனி லவரவர்
தியானமே பிறப்பாகு
முடல மாசையாற் றியானிக்கிற் றியானித்த
வுடல்களா குவர்மைந்தா
தொடர்ப வங்கெடச் சொருபமே தியானிக்கிற்
சொருபமா குவர்மெய்யே.”

என்றுங் கூறியவாற்றாற் காண்க. இதுகாறுங் கூறிப்போந்ததனால், எவரெவர் எதை எதை விடாது சிந்திக்கின்றார்களோ அவரவர் அது அது பாவமுற்றிருப்பார்க ளென்பதாம். இவற்றில் ஐயம் உளதேல், நனவின்கண் நாம் எது எதுவாகச் சிந்தனையால் பாவப்பட்டுவருகின்றனமோ அது அதுவாக நினைவின்கண்ணும், கனவின்கண்ணும் தோற்றிக்கொண்டு வருவதே போதுமான சான்றென்க. அன்றியும் எஞ்ஞான்றும் உருவபாவத்திலுள்ள மாறாத அல்லலையும், அருவபாவத்திலுள்ள மாறாத அமைதியையும் குறிப்பித்து மிருக்கின்றதென்க.

எட்டாவது
அருவபாவ ஆராய்ச்சி விளக்கம்
முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது

# மண்முதலிய சதுர்ப்பூத குணிப்பொருள்

# ஆராய்ச்சி விளக்கம்.

வெண்பா.

*இந்தவா ராய்ச்சியின்க ணிச்சதுர்பூ தக்குணிதா*
*னந்தமிலாச் சிற்பொருளென் றாகியே—யெந்தவிதத்*
*தும்முழைத்துக் காணிலது சொல்லற் கெளிதன்றே*
*நம்பிக்கை யல்லதது நான்.*

பிராரத்துவத்தை நுகர்ந்து கழித்து வருகிறதற்கு உருவபாவம் எய்தியிருப்பதுபோல் ஷை பரமாணு ஆராய்ச்சிக்கண் தேர்ந்த மட்குணியை எட்டுவதற்கு, இவ்வுருவபாவம் சாமானியம் ஆகுமாறு செய்து அருவபாவம் விசேடமுற்றிருக்கினும், ஷை குணிப்பொருள் கிஞ்சித்தும் எட்டுதற் கியையாது முற்றும் சூனியமாக இலட்சியப் படுகின்றதே? இங்ஙனம் விளங்கும் சூனியத்துவந் தானே ஷை குணிப்பொருளென்பதெனின், விளங்குமிச் சூனியமானது முன்னூன்று மகத்தணுப் பேதங்களை ஆராய்ந்துவந்த முடிவின்கண்ணா? அன்றி ஆராய்தற்கு முதற்கண்ணா? ஆராய்ந்த முடிவின்கண்ணே யெனின், அம்முடிவின்கண் சூனியமாகத் தோற்றுவது ஆராயப்பட்ட மகத்தணுப் பேதங்களாகிய உருவங்களா? அன்றி மற்றொன்றென்பதா? உருவமன்று, மற்றொன்றாகிய இச்சூனியந்தானெனின், இச்சூனியமாகிய அருவம் முன்னூன்றிருந்தே அம்முடிவின்கண் தோற்றுவ்தா? அன்றி நூதனமாக உண்டாகித் தோற்றுவதா? நூதனமாக உண்டாகியதன்று, முன்னூன் றிருந்ததே தோற்றியதெனின், அஃது ஆராய்ச்சிக்கு முன்னூன்று தோற்றாததென்னை? உருவ பேதங்களால் மறைந்திருந்ததெனின், ஆராய்தற்கு முன்னூன்று உருவமாகத் தோற்றியது யாது? இவ்வுருவந்தானெனின், இவ்வுருவம் முன்னூன் றிருந்து தோற்றியதா? அன்றி நூதனமாக உண்டாகித் தோற்றியதா? முன்னூன்றிருந்தே

தோற்றியதெனின், இவ்வுருவம் ஆராய்ச்சி முடிவின்கண் தோற்ரு தென்னே? அருவத்தால் மறைந்திருந்ததெனின், இவற்ருல் அரு வமும் உருவமும் இருப்பாயிற்று.

அங்ஙனம் இருப்பாயின், ஆராய்ச்சிக்கண் காரணகாரிய அடுக் குப் பேதங்களாகச் சிதைந்துபோவது யாது? உருவம் சிதைந்து போகாவிடின், அருவமாய்த் தோற்றுமா? தீபாபாவமே இருளென் ருற்போல, உருவவபாவமே அருவமாகிய தோற்றமன்ருே? அன்றெ னின், உருவமானது காரணகாரிய பேதங்களாய்ச் சிதைந்து போவா னேன்? அங்ஙனம் சிதைந்த சிதைவே அருவ இலட்சிய மென்ப தற்கு முரணென்னே யென்க. ஆராய்ச்சிக்கண், உருவநாசமே அருவ இலட்சியமாயின், அவ்வாராய்ச்சி இன்மைக்கண், அருவநாசமே உருவ இலட்சியமாக வேண்டுமேயெனின், ஆராய்ச்சிக்கண் அருவமாயும், அவ்வாராய்ச்சி இன்மைக்கண் உருவமாயும் தோற்றுவது யாதெனப் படும்? ஆராய்ச்சிக்கண் உருவத் தேய்வே அருவமாவதால், அருவத் திரிபே உருவமென்பதாயிற்று, அருவம் உருவமாகத் திரிந்து காண் பது எங்ஙனமெனின், உருவம் அருவமாய்த் தேய்வானேன்? அருவ மாகிய அக்கினியானது உபர்தி சகிதத்தால் சிவப்பு உட்டினம் பிர காசமாக உருவப்பட்டதனுலன்ருே மீண்டும், அப்பேதங்கள் மாறி அருவமாகின்றன! அதுபோல், ஆராய்ச்சிக்கண் தோட்பட்ட அருவ மே தன்பாலுள்ள ஓர் விர்த்தியினுலே உருவபேதங்களாய்த் திரிந்த மையால், மீண்டும் இவ்வுருவ பேதங்கள் அருவமாகத் தேய்கின்றன. இவற்ருல் அருவமே உருவமாயும் உருவமே அருவமாயும் இருக்கின்ற தென்ருயிற்று! ஆகவே, ஆராய்தலினுலும் ஆராய்த லின்மையினு லும் மாறி மாறித் தோற்றுவது அருவமும் உருவமுமா? அன்றி வேறென்ரு? அருவமும் உருவமுமேயெனின், ஆராய்ந்தவர்க்கு உருவம் அருவமாய்த் தோன்றியஞான்று அவ்வுருவம் இல்லாதது போல், ஆராயாதார்க்கும் அவ்வுருவம் இல்லாதிருக்கவேண்டுமன் ருே? இருக்கின்றதே! ஆகலின், ஆராய்ந்தவர்க்கு முடிவில் அருவ மாகத் தோற்றுவது யாது? உருவமென்பதல்லவே! இங்ஙனமே, ஆராயாதார்க்கு அருவம் உருவமாய்த் தோன்றியஞான்று அவ்வரு வும் இல்லாததுபோல், ஆராய்ந்தவர்க்கும் அவ்வருவம் இல்லாதிருக்க வேண்டுமன்ருே? இருக்கின்றதே! ஆகலின், ஆராயாதார்க்கு முத லில் உருவமாகத் தோற்றுவதுயாது? அருவமென்பதல்லவே? ஆராய்ந்தவர்க்கு உருவமும் ஆராயாதார்க்கு அருவமுமின்றெனினும்,

அவ்வுருவாருவமாக மாறிமாறித் தோற்றுவது யாது? அன்றியும், உருவமென்பதும் அருவமென்பதும் சடபேதங்களா? அன்றிச் சித்துப்பேதங்களா? இரண்டும் கிரிசியங்களாகலில், சடமென்பதா மெனின், இவ்விருசடமும் தம்மையும் மற்றொன்றையும் அறியாதே! மற்றொன்றுவது—இவ்விருசடங்களையும் இடைவிடாதறிந்துகொண் டிருக்கும் நாமாகிற அறிவெனப்படுவது. ஷை ஆராய்ச்சிக்கண்ணும், அஃது இன்மைக்கண்ணும் உருவாருவமாக மாறிமாறித் தோற்றுவது நாமென்பதா? அன்றி வேறென்பதா? வேறென்பது ஷை சடமாகிய உருவாருவ பேதங்க ளெனப்படுவன. ஆகலின், மாறித் தோற்று வது இவைகளன்று. நாமென்பா மெனின், நாம் உருவபேதங்களாக மாறினமாயின், அவ்வுருவ பேதம் யாருக்குத் தோற்றுகின்றது? அன்றி நாம் அருவமாக மாறினமாயின் அவ்வருவம் யாருக்குத் தோற்றுகின்றது? இவ்விரு தோற்றங்களையும் இருந்தபடி இருந்தறி கின்றது நாமாயிருக்க, இங்ஙனம் மாறி மாறித் தோற்றுவது நாமெ னப்படுமா? படாதே? ஷை பரமாணுக்களுக்கு முதலாகிய குணிப் பொருளை எட்டாவிடினும், இங்ஙனம் மாறி மாறித் தோற்றுகின்ற இந்த ரகசியத்தையேனும் எட்டித் தெளியவேண்டுமன்றோ? நாம் முற்பொழுது அக்குணியாகிய பொருள் எது எது என்றெட்டும் அப்பியாசத்தைக் கணமும் விடாதிருக்கின், அவ்வப்பியாசமானது முதிரமுதிரப் பிற்பொழுது அந்நினைவெழுச்சியும் அஃது ஒடுங்குதலு மாகிற இரு புடைபெயர்ச்சிகளும் தலைகாட்டுமா? அவைகள் தலை காட்டாதொழிய நிலைத்திருக்கும் நிலைமையன்றோ உண்மை வெளிப் படுதற் கியைந்த நிட்டையெனப்படுவது! அங்ஙனமாகிய நிட்டை முதிரு முதிர்ச்சியினாலன்றோ மாறிமாறித் தோற்றுவது யாதென்கிற இவ்வரிய சந்தேகமகன்று பின்னொன்று அயலின்றித் தானாயிருத்தற் கியையும். இச்சந்தேகத்தைப்போன்ற வேறு சந்தேகமும் உண்டா? இச்சந்தேகம் ஒப்புயர்வற்றதாகின்றதே? இவ்வரிய சந்தேக மிருப் பது பற்றியும் நாம் உயர்திணையுற் றிருப்பது பற்றியுமன்றோ,

"ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து."

எனத் திருக்குறள் மகாவாக்கியம் பிறந்திருக்கின்றது. இச்சந்தேகம் தெளிதற்கியையாவிடின், இவ்வாக்கியப் பெரும்பயனை இழந்துவிட வேண்டுவது மன்றி இவ்வாக்கியமும் எங்ஙனம் மணம்பெறும்? [illegible] தெய்வமுண்டோ—என்றருவிய [illegible]

கருத்து யாதெனின், அகம்புற மீரிடத்தும் அயலென்பது முற்றுங் கற்பனைகளென ஆராய்ந்து தெளிந்த தெளிவே நிராசை யெனவும், அந்நிராசையே தெய்வமெனக் கூறியது அந்நிராசைக்குத் தெய்வம் அணிமைக்கெல்லாம் மிக்க அணிமையுற் றிருத்த லெனவுமாம். எனவே, அயலின்றென்னும் நிராசையே சிவானுபூதி விளக்க மென்பதாம்.

இதுவன்றி, மனோநிக்கிரகமே உபசாந்த நிலையெனக் கூறிய வாசிட்டக்கவியின் அபிப்பிராயம்போல, சந்தேக நிக்கிரகத் தெளிவே மெய்யுணர்வென்பதாமென்க. அன்றியும், அக்குறள் மகாவாக்கியமே,

> "ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
> பேர்த்துள்ள வேண்டா பிறப்பு."

எனவும் பிறந்திருக்கின்றது. மக்களியாக்கையைப் பெற்றும் அயலைப் பொருளென் றுணர்ந்து வாளாபோகாது இவ்வுழைப்புக்கு இயையவேண்டுமன்றோ? நம்மாலும் பிறராலும் நாம் உயர்வு உறுதிருக்கின் இவ்வரிய உழைப்பு நாம் எய்தவேண்டுவதின்று. அங்ஙனம் உயர்வுற் றிருக்கின்றதால்,

> "தூக்கப் படுவோன் றுயரம்போற் றனிருந்து
> மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க."

என்றருளிய உத்தமவாத நூலின்படி நின்று உழைக்கவேண்டுமே! அன்றியும்,

வாசிட்டம்.

> உலகெது நாமாரென்ன வுற்றுநின் றுணருமட்டுங்
> கலகமார் பிறவிமோகங் கங்குல்போன் மூடிநிற்கு
> மலகிலா வுலகும்யாமு மழிவில்சிற் சோதியன்றோ
> சலனமில் கண்ணுற்கண்டோர் தத்துவ நிலைமைகண்டோர்."

என்றருளியதில், உலகென்பது திரிசியம்; நாமென்பது திருக்கு. இத்திரிசியம் மூவகையின:—அவை, உருவமெனவும் அருவமெனவும் உருவாருவமெனவுமாம். இம்மூன்றும் நிலையாது மாறிமாறித் தோன்றும் அனுபவமுடையவைபோ லிருக்கின்றன. திருக்கு இங்ஙனந் தோன்றும் அம்மூன்றினையும் அவ்வப்பாவமாக நின்றுணர்ந்து கொண்டிருப்பது. இத்திருக்குத் திரிசிய மிரண்டும், ஏகமேவாத்வைத நிலைமையாகிய சொப்பிரகாசத்தின் பிரதிபலன மாகின்றன. என்னை? "அத்துவித வத்துவைச் சொப்பிரகாசத் தனியை" என்றார்

தாயுமானவர். இவ்வளவு தெரியாது ஷை திரிசியங்களில் சதுர்ப் பூதாம்ச பரமாணுக்களை மாத்திரம் பொருளெனக்கொண்டனர் நாத்திகர். அந்தச் சதுட்டயத்தோடு அவைகளுக் காதாரத்துவமாகிய அருவத்தையும் ஷை திருக்கையும் பொருளாகக் கொண்டனர் ஆத்திகர். அங்ஙனம் இவ்வாறினையும் ஒப்புக்கொண்டதிலும், திருக்கு இரண்டெனவும், அவ்விரண்டில் ஒன்று ஏகமெனவும், மற்றொன்று கோடிக் கணக்கென்பதின்றிப் பலகோடிக் கணக்குக்கும் மிஞ்சியதெனவும் கொண்டனர். ஷை உளவு தெரிந்து பகிர்முகநோக்கால் திருக்குத்திரிசிய மிரண்டெனவும், பின்னொன்று அந்தர்முகநோக்கால் இரண்டென்பதின்றி, அத்திருக்கை ஏகமேவாத்வைதமென்றும் கொண்டனர் அத்துவிதிகள். இவர்கள் இங்ஙனமிருக்க, நாம் ஷை சந்தேகத்தைப்பற்றி இன்னும் சற்றூகிக்குதும். எங்ஙனமெனின், இந்த நாமரூபங்களை முன்னர் ஆராய்ந்தனொன்று முடிவிற் சூனியமாகத் தோற்றுவானேன்? சூனியமென்பது ஓர் முதலல்லவே! நாமரூபங்களே, முதலல்லவெனின், சூனியமா ஓர் முதலெனப் படுவது? இஃதிங்ஙனம் நிற்க, ஷை ஆராய்ச்சியின்மையில் நாமரூபங்களாகத் தோற்றிக்கொண் டிருப்பது யாது? தோற்றுவதிலும் இவைகள் இருந்து தோற்றுவதா? அன்றி இல்லாதிருந்தே தோற்றல் மாத்திரமாகத் தோற்றுவதா? இருந்தே தோற்றுகின்றன வெனின், ஆராய்தலில் காரணகாரியம் காரணகாரியங்களாய்ப் போகவேண்டுவதின்று? பொருளில்லாமலே தோற்றல் மாத்திரமாகத் தோற்றுகின்றனவெனின், அருந்தல் பொருந்தல் முதலிய அனுபவங்களுக் கியையவேண்டுவதின்று. அனுபவத்துக் கியைந்திருப்பதால் உண்மை யென்னலாமே யெனின், இத்தோற்றங்களா லுண்டாகும் அனுபவங்கள் விபரீதானுபவமின்றி இருக்கவேண்டும்! எதார்த்த அனுபவமாகவே இருக்கின்றனவெனின், தூலமதி கிஞ்சித்து மில்லாதவர்க்கும் இருக்கவேண்டும்! அம்மதி இல்லாதவர்கள் யாரெனின், ஆராய்ந்து தெளிந்த தெளிவுமயமாயிருக்கும் சூக்கும மதியையுடையோர். இவை எவர்க்கு அனுபவப்பட்டு வருகின்றனவோ அவர்கள் தூலமதி யுடையாரென்றும், அத்தூல மதியாரால் அனுபவப்படுமனைத்தும் இல்லையென்றுங் கொள்ளலாமோவெனின், சொல்மாத்திரமாயும் தோற்றல் மாத்திரமாயு மிருப்பானேன்? இங்ஙனமிருப்பதால், இந்த நாமரூபங்களை என்னவென்கிறதெனின், துவைதசத்துப்பொரு ளென்கிறதென்க. எங்ஙனமெனின், ப்ராதிபாஸிக சத்தெனவும் வியவகாரிக சத்தெனவுமாமென்க. ப்ராதிபாஸிக சத்தென்

பது—ககனாரவிந்தம்போல் சொல்மாத்திரமாகவும், கயிற்றரவுபோல் தோற்றல் மாத்திரமாகவு மிருப்பதாமென்க. விவகாரிக சத்தென்பது—இங்ஙனம் பிரதிபலித்துத் தோற்றும் தோற்றங்களை, இருப்பது மட்பொருளும் நூற்பொருளுமாயிருக்க, கடபேதங்களும், படபேதங்களும் தத்தம் உபாதானங்களல்லது, தாமே சகலானுபவங்களுக்கும் உடன்பட்டிருப்பனபோல் ஆராயவேண்டியவாறு ஆராயாது, எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருளப்படிக் கிணு மறிவுடைய தூலமதிகள், இச்சாஞானக் கிரியைகளியற்றி இன்புறுதற்கியைந் திருப்பதாமென்க. பாரமார்த்திக சத்தென்பதோ வெனில், அரவாகிய ப்ராதிபாஸிகம் கயிற்றின் கண்ணும், கடபடமாகிய விவகாரிகம் மண் நூலின் கண்ணும் நிகழ்வனபோல், தோற்றல்மாத்திரமாகிய நாமரூப ப்ராதிபாஸிகமும், இவை அனுபவப்படும் விவகாரிகமும் நிகழுகின்றது எதன்பாலதோ அந்த அறிவாமென்க. இன்பதுன்பானுபவத்திற் கியைந்த இந்நாமரூபங்களைப் பாரமார்த்திக சத்தென்னாது, கயிற்றரவு கடபடங்களைக் காட்டிக் கற்பனை யென்னலாமோவெனின், சன்னிதோடமும், சொப்பனவத்தாத் தோடமும் நேரிட்டஞான்று தோன்றுந் தோற்றங்கள், பாரமார்த்திக சத்துப்பொருள்களாயின், அவிதப்போலிசத்தாகிய இந்நாமரூப மனைத்தும் பாரமார்த்திகச் சத்தெனப்படும். அவ்வீரிடத்தும் தோற்றும் தோற்றங்களைப்போல் இவற்றை என்னலாமோவெனின், அவ்வீரிடத்துத் தோற்றங்களும் அனுபவத்துக் கியையாததுண்டா? அனுபவத்துக் கியைந்ததனால் இந்த நாமரூபங்கள் அவைபோன்றதென்னலாமோவெனின், அவ்வீரிடத்துத் தோற்றங்களைப் பார்க்கினும் இவற்றில் என்னவிசேடமிருக்கின்றது? பந்தமுத்தி சாதனங்கள் நிகழ்ந்து வருகின்றதே மிக்க விசேடமெனின், சொப்பனவத்தைக் கண்ணும் பந்தமுத்தி சாதனங்கள் நிகழ்ந்து வருவதால் அக்காட்சிகள் மெய்ப்பொரு ளாகுமோ? ஆகாதே! ஆகாததால், அப்பந்தமுத்திகள் அவ்வவத்தைக் கண்மருண்டதுபோலும், தெளிந்ததுபோலுமே அன்றி, இச் சாக்கிராவத்தையைப்போல் அவைகள் எதார்த்த மல்லவென்ப தாயிற்றேயெனின், இவ்வவத்தைக் கண்ணும் மருண்டதுபோலும், மீண்டுந் தெருண்டது போலுமேயன்றி இவற்றால் எதார்த்த மென்பதென்னை? இவற்றுள் நிகழும் பந்தமுத்தி சாதனங்களுக்குப் பயன் போலிகளாயின், இச்சாதனங்களை நிகழ்த்துமாறு உணர்த்துவானேன் னெனின், தேகமே ஆன்மா போகமே முத்தி, கண்டதே காட்சி கொண்டதே கோல மென்றிருந்த

னுலென்க. இந்த நாத்திகானுபவம் வருவானேனெனின், நாமரூப எழுச்சியினாலன்றி வேறன்றென்க. நாமரூப எழுச்சி வருவானேனெனின், கயிற்றின்கண் அரவு வந்தது உண்மையாயின், இவ்வெழுச்சியும் உண்மை யெனப்படுமென்க. பந்தமென்பது கயிற்றரவுபோலெனின், இதுகாரணமாகவரும் முத்தியென்பதும் பொய்யாகுமே! இவ்விரண்டு மிங்ஙனமிருக்கின், நாம் எங்ஙனமிருப்பதெனின், அவத்தாத்திரயங்களுக்கு விலட்சணமுற்றிருக்கின்றதென்க. அங்ஙனந்தான் இருப்பானேனெனின், முன்னான்று பந்தம் கற்பிதமென்றதனால் இக்கற்பிதத்தைக் கடந்திருக்கவேண்டுவது அவசியமாமென்க. பந்தமுத்தி கற்பிதமென்றதற்கு உதாரணம்:—

சொரூபசாரம்.

"என்னையே யல்லாமல் யான்பெற்ற தேதுமில்லை
யென்னைநான் பெற்றிருந்த தெப்போது—மென்னையன்றிப்
பந்தமில்லை வீடுமில்லை பார்க்குளிவை யாராயிற்
சிந்தனையு மில்லாத தே." என்றும்,

வாசிட்டம்.

"அந்தமற் றொன்றாய் விகற்பமற் றறிவா
யழிவிலாப் பரம்பொரு ளிருக்கப்
பந்தமுற் றவரார் வீடுபெற் றவரார்
பாவனை விகற்பமே யனைத்துஞ்
சிந்தனை விரிவே பந்தமா மதனைத்
தீர்ந்திடன் முத்தியா மனத்தின்
றொந்தலீ லையினாற் றாரமா மணித்துந்
தாரமு மண்ணிதாய்த் தோன்றும்."

என்றுங் கூறியவாற்றாற் காண்க. காரியபேதங்களில் முடிவாயுள்ள காரியமாகிய மகத்துருவ மெனப்படாமலும், காரணபேதங்களில் முடிவாயுள்ள காரணமாகிய பரமாணுக்களெனப் படாமலும் நின்றுள்ள மண்ணென்கிற பெயர்க்கியைந்த குணிப்பொருள் யாதென இதுகாறும் ஆராய்ந்து வந்ததில், ஓரறிவென்பதாயிற்று. அவ்வறிவின்பால் எழுமெழுச்சியாகிய சங்கற்பமே சோபாதிக சங்கற்பமென்றும், நிருபாதிக சங்கற்பமென்றும் இருமையின. அவற்றுள், சோபாதிக சங்கற்பமாவது—சதுர்ப்பூத அணுமகத்து முதலிய அனேக பேதங்களா யிருக்கின்றது. நிருபாதிக சங்கற்பமாவது—இம்மகத்தணுப் பேதங்களுக்கு ஆதாரம் நிரந்தரம்போ லிருக்கின்றது. நிரந்தரமாவது—

இடையின்மை, அதாவது நிறைவு. ஷை மகத்தணுப்பேதங்களா யிருக்கும் சதுர்ப்பூத சோபாதிக சங்கற்பமானது, ஆராய்ச்சிக்கண் காரணகாரிய பேதங்களாகத் தேயுந் தேய்வே நிருபாதிக சங்கற்ப சூனியமும்; ஷை ஆராய்ச்சி யின்மைக்கண் இந்நிருபாதிக சூனியமே சோபாதிக சங்கற்ப அணுமகத்துக்களுமாக மாறிமாறிக் காண்படுதே யன்றி, சங்கற்பத்தையின்றிச் சோபாதிகமாகிய அணுமகத்துக்களும், நிருபாதிகமாகிய சூனியமும் இல்லவேயில்லை. உண்டெனின், ஒவ்வொரு பூதமும் மகத்துமுதல் பரமாணுக்காறுங் கலைந்து கலைந்துபோய் முடிவில் கலைதற் கிடமின்றித் தோற்றன்மாத்திரமாக நின்று, பின்னொன்று கரைந்துபோனது யாது? சதுர்ப்பூதங்களா? அல்லவே! எனெனின், ஆராயாதார்க்கு இச்சதுர்ப்பூதங்களும் தேய்ந்ததன்றென முன்னொன்றே சம்மதித்தாயிற்றே! ஆகலின், ஆராய்பவர்க்குக் காரண காரியமாய்த் தேய்வது யாது? தத்தம் சங்கற்பமாகிற பாவமன்றோ! எங்கெங்கே ஆராய்ச்சியினால் தத்தம் சங்கற்பமாகிய பாவமானது கலைதலையும், கரைதலையும் எய்துதலுண்டோ அங்கங்கும் சதுர்ப்பூத கற்பனைக ளின்றாயும், எங்கெங்கே ஆராய்ச்சி யின்மையினால் தத்தம் சங்கற்பமாகிய பாவமானது கலைதலையுங், கரைதலையும் எய்துத லில்லையோ அங்கங்கும் அச்சதுர்ப்பூத கற்பனைகளுண்டாயு மிருக்கின்றன. இவற்றை இனிது நிதானிக்கும் சூக்கும மதிகளுக்குத் தத்தம் பாவம் தேய்வது நன்கு விளங்கும். அங்ஙனம் நிதானித்தற்குக் கிஞ்சித்தும் நேரமில்லாது முற்றும் கல்வி கேள்வி வருண ஆச்சிரம மதவாத முதலியவைகளால், நான் இன்னான் நான் இன்னான் என்றும், நான் இன்னாள் நான் இன்னாள் என்றும், நாம் இன்னார் நாம் இன்னார் என்றும் முப்பாற் சொரூபிகளாகத் தத்தமையும் கௌணமாய்க் கொள்ளாது, சத்தியமாக மயங்கிப் போகத்துக்கே அங்காந்துகொண்டு நிகழும் தூலமதிகளுக்குத் தோன்றவே தோன்றாது. கிஞ்சித்தேனும் நிதானிக்க நேரமில்லாமைக்கு ஏதுவென்னை யெனின், கிர்த்தியங்கள் தோறும் நான் நான் என முந்துதற் கியைந்த போதமானது ஓர் முதலாயின், அது எப்பொருள் எக்காலத்தது எவ்விடத்தது எக்குணத்தது எச்சினையது எத்தொழிலுற்றது? அசேதனமும், அவயவமுமில்லாத அது எக்கிர்த்தியங்களையும் தான் எவ்வாறு நின்றியற்றுதற் கியைந்ததெனவும், பொருளன்றாயின், குணந்தொழி லாகுமெனவும்; அக்குணந் தொழிலுக்கு அதிஷ்டானதார விளக்கமென்பது யாதெனவும், கலங்கும் கலக்கமானது கிஞ்சித்துமின்றி முற்றும் நாமரூபங்களிலேயே திருத்தியுற் றிருத்தலா மென்க.

இவ்விபரீத திருத்தியால் ஷை ஆராய்ச்சிக்கண் காரண காரியங்களாகத் தேய்வது இத்தன்மைத்தெனத் தோன்றுகிருக்கின், அதை அபரோட்சமாகவேனும் பலனொன்றும் பழகித் தெளிந்து அதுவாதற்கு எங்ஙனங் கூடும்? கூடாமையின், படிப்பாலும் குதர்க்க தர்க்க மொழிகளாலும் அஃது எட்டுதற் கியையுமா? இயையாதாகலின், நிதானித்தே தீரவேண்டுமென்க. அங்ஙனம் நிதானித்தனொன்று மட்பூதக் குணிக்குப் பொருள் ஒப்பற்ற ஓரறிவையன்றி வேறுகுணிப் பொருள் இல்லையென்றுகின்றது. ஏனெனின், சங்கற்ப பாவமே அணுமகத்துப் பேதங்களாகிற மட்பூதமாயிருக்கின்றதால், இம்மட்பூதமானது பாவத்தை யன்றியும், அப் பாவமானது சங்கற்பத்தை யன்றியும் அச்சங்கற்பமானது அறிவானை யன்றியும் இன்றாகலினு லென்க. இம்மட்பூத குணிக்குப் பொருள் ஷை அறிவானையன்றி வேறில்லாததுபோல, ஏனைய நீர் முதலிய முப்பூத குணிகளுக்கும் பொருள் அவ்வறிவானே அல்லாமல் வேறின்றென்ப தாயிற்றென்க. ஏனெனின், அம் முப்பூதங்களையும் அததன் மகத்துருவில் நின்று காரண நெறித்தாக ஆராய்ந்து செல்லுழி, அணுவுக்குள் அணுவும், அணுவுக்குள் அணுவுமாய்க் கலையப்பட்டு ஈற்றில் ஒவ்வொன்றுங் கும் பொருள்படாது நிருபாதிக சங்கற்பமாய் முடிந்து, பின்னொன்று நிதானித்துழி ஷை அறிவானுகவே முடிகின்றது சத்தியமாகலின்,

### பிரத்தியட்சானுபூதி விளக்கம்.

" காலம் பொருளிட மேமய மாமூல கத்தியல்பு
காலம் பொருளிட மன்றி யுலகினைக் காட்டறியோங்
காலம் பொருளிட மெய்ம்மை யுணர்ந்தவர் கண்டறிந்தார்
காலம் பொருளிடத் தன்மை மயக்கறக் காட்டுதுமே." என்றும்,

" அணுமகத் தன்றி யவைமூன்று மில்லை யயலுருவா
யணுமகத் தென்றே யறிஞர் கணித்ததற் கையமில்லை
யணுமகத் தெங்ங னகம்பாவ மாகு மறிவிலர்க்கே
யணுமகத் தென்றறி யாதத னுலங்ங னுயதுவே." என்றும்,

### உத்தமவாதநூல்.

" அணுவசையோ கத்தா லகண்டமாக் கண்டிங்
கணுவாக மீண்டுமே யாகு—மணுவுந்தா
னுயுங்கா னுட்ப நுட்ப மாகியெட்டா தாகுமெனின்
மாயுஞ் செயற்கையெனல் வந்து." என்றும்;

" தனக்கென் றொருருவுருவஞ் சற்றுமிலை யுண்டா
வெனக்குநீ காட்டுதியே லேற்ப—வனைத்தினுமே
யாக்கப் படுபொருளென் றுரேறபர் நின்கொள்கை
வாக்கடங்கிக் கேட்டுய்க வந்து." என்றும்,

" இல்லை யெதார்த்தமொன்று மெங்கெங்கு மாய்ந்திடினு
மெல்லாம் விகாரவுரு விவ்வுருவால்—வல்ல
படைப்பா னுளனென்னிற் பாமரரின் மேலோ
அடைக்குங்கல் லிவ்வுத்தி யாம்." என்றும்,

சொரூபசாரர்.

" பூதாதி யைந்தும் பொறிபுலன்க ளெல்லாஞ்சித்
தேதாதி யந்தமவை யெல்லாஞ்சித்—தோதரிய
கற்பனையுஞ் சித்தனைத்துங் காண்பானுங் காட்சியுஞ்சித்
தற்பமும்வே றில்லாமை யால்." என்றும்,

குறள்.

" சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு." என்றும்,

தத்துவராயர் பாடுதுறை.

" உள்ளது போதமென் றாதேடா காள
முலகமோக் காளமென் றாதேடா காளம்
வெள்ள வெளியிதென் றாதேடா காளம்
வேதஞ் சொன்னவண்ண மூதேடா காளம்.

என்றும் உறுத்திக் கூறியிருக்கின்றன.

அன்றியும் உருவாருவமாகிய இப்பூதமைந்தையும் உயிராகிய அறிவையன்றிக் கிஞ்சித்து மின்றென அவ்வறிவிலொடுக்கி, அவ்வறிவாகிய உயிரை அறிவானாகிய ஷை ஆதாரபோதத்தை அன்றி யின்றென அவ்வாதார போதத்தி லொடுக்கி,

" அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு."

எனக் குறள் மகாவாக்கியம் பிறந்திருக்கின்ற தென்க.

இவ்வாராய்ச்சியில் சதுர்ப்பூதமாகிய குணங்களுக்குக் குணிப் பொருள் சங்கற்ப எழுச்சியையன்றி இன்றெனவும், அச்சங்கற்பமும் போதமாகிய என்னையன்றி இன்றெனவு மாயிற்றென்க.

9-வது மண் முதலிய சதுர்ப்பூத குணிப்பொருள்
ஆராய்ச்சி விளக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

பதநாவது

பிரமசைதன்னிய

# இலட்சியார்த்த விளக்கம்.

வெண்பா.

*இந்தவா ராய்ச்சியினி விப்பூத மைந்துமே*
*தந்தமசத் தாதிகளாய்த் தாமிருக்கிற—சந்ததமுஞ்*
*சத்தா திகளாகச் சார்ந்தசகு ணத்தினுக்கே*
*யொத்திலகும் பிரமமக மோர்.*

முன்னூல் ஞாராய்ச்சிக்கண் நானென்னும் போதமானது பிரம சொரூபமென்றதெங்ஙன மெனின், ஆங்காங்கும் தனித்தனியாக நின்றிலங்கும் ஆதார சாட்சி சைதன்னியங்க ளனைத்தும் ஒன்றுபட்டு வியாபித்து விளங்கும் அனுபூதி நிலையாமென்க. தனித்தனி ஆதார சாட்சி சைதன்னியமென்றதெங்ஙனமெனின், தனித்தனிச் சீவ போதமும் அவ்வச் சீவபோதங்கட்கும் தனித்தனி அவத்தாத்திரய முதலியவைகளும் தங்கியிருத்தற்கு இடமாகிய வியாபக விளக்கமா மென்க. சீவன் முதலியவைகளைத் தனித்தனி வியட்டிகளாகக் கூறு கின்றதென்னை யெனின்; சீவபோதமென்பது உண்டெனப் பட்ட தின்றே? அச்சீவபோதம் பலவென்பதா? அன்றி ஒன்றென்பதா? ஒன்றென்பதா வெனின், தேகம் அபிமானம் கன்மம் போகம் ஆகிய இந்நான்குள் ஒவ்வொன்றும் பலவாக அனுபவப்படாதிருக்க வேண்டுமே! இருக்கின்றதால், எங்ஙனம் சீவபோதம் ஒன்றெனப் படும்? ஷை தேகாதிகள் நான்கும் பலவெனப்படுதலால் சீவபோதம் பலவெனப்படுமோ வெனின், தேகங்களனைத்தும் நானென்று அபி மானிக்கப்படினும் அங்ஙனம் அபிமானிக்கும் வினைமுதல் சீவபோத மன்றோ? அச்சீவபோதம் ஒன்றாயின், ஓர் தேகத்தை நானென்று அபிமானித் திருத்தல்போல் ஆங்காங்குமுள்ள சர்வ தேகங்களையும் அவ்வொன்றே நானென் றபிமானிப்ப துண்டா? உண்டெனின், ஓர் தேகங் காரணமாக [illegible] தேகாபிமானியைத் தாக்கும் இன்ப துன்பப் போகமா[illegible] தேகாபிமானிகளையும் தாக்குகிற

துண்டா? இன்பதுன்பங்கள் வாய்ப்பதை ஏற்றற்கு ஏதுவின்றிய தேகமு முண்டாவெனின், சர்வ தேகங்களும் இன்பதுன்பப் போகம் வாய்த்தற்கு ஏதுக்களாயிருக்கினும் அவ்வப் போகங்களையும் ஏற்பது அவ்வத் தேகாபிமானிக ளன்றோ? அவ்வத் தேகாபிமானிகள் சிவபோதங்களாகலின் பலவென்பதற்கு மாறென்னை?

அன்றியும் ஓர் தேகம் ஏதுவாக இன்பம் வாய்க்குஞான்று மற்றோர் தேகம் ஏதுவாகத் துன்பம் வாய்க்கின்றது. ஓர் தேகம் ஏதுவாகத் துன்பம் வாய்க்கும் ஞான்று, மற்றோர் தேகம் ஏதுவாக இன்பம் வாய்க்கின்றது. ஓர் தேகம் ஏதுவாக வாய்க்கும் இன்பத்தை அத்தேகாபிமானி அனுபவிக்கும் ஞான்று மற்றோர் தேகாபிமானி அவ்வின்பத்தை அனுபவித்தலின்று. ஓர் தேகம் ஏதுவாக வாய்க்கும் துன்பத்தை அத்தேகாபிமானி அனுபவிக்கும் ஞான்று, மற்றோர் தேகாபிமானி அத்துன்பத்தை அனுபவித்தலின்று. ஓர் அபிமானியை அடுத்திருக்கும் தேகம் அவ்வபிமானியை விட்டகலும் ஞான்று, மற்றோர் அபிமானியை அடுத்திருக்கும் தேகம் அவ்வபிமானியை விட்டகலுதலின்று. ஓர் தேகாபிமானி பின்னுஞான்று அதாவது மறுமைக்கண் எவ்வெவற்றை அனுபவித்தற்கு அவற்றிற்கியைந்த ஆகாமியம் சஞ்சிதமிரண்டும் அவ்வபிமானிக்குக் கட்டுப்பட்டு வருகின்றனவோ அவ்வாகாமியம் சஞ்சிதமிரண்டும் மற்றோர் தேகாபிமானிக்குக் கட்டுப்படுகின்றதின்று. ஓர் தேகாபிமானிக்கு எது எனதென்று பந்திக்கப்படுகின்றதோ அது மற்றோர் தேகாபிமானிக்குப் பந்திக்கப்படுகின்றதின்று. ஓர் அபிமானி கர்மகாண்டியா யிருந்து யாகாதி கிருத்தியங்களை இயற்றின் மற்றோர் அபிமானி உபாசனா காண்டியாக வேனும் அன்றி ஞானகாண்டியாகவேனு மிருந்து அதற்கியைந்த உழைப்புக்களை எய்துதலும், ஓர் அபிமானி உபாசனா காண்டியாயிருக்கின், மற்றோர் அபிமானி மற்றிரண்டிலொன்றா யிருந்தொழுகுதலும், ஓர் அபிமானி ஞானகாண்டியாயிருக்கின் மற்றோர் அபிமானி மற்றிரண்டிலொன்றா யிருந்தொழுகுதலும், இன்னணம் ஒவ்வோர் அபிமானியும் ஒவ்வோர் நிலைமைத்தா யிருக்கின்றதாயின், அபிமானியாகிய சீவபோதம் ஒன்றென்பதூஉம் அல்லவே! தேகம் அபிமானம் கன்மம் போகம் ஆகிய இந்நான்கும் ஓர் வகுப்பா யிரா மல் கணித்தற்கரிய பலவகுப்புகளா யிருப்பது கண்கூடாகலின், அவ்வவ்வோர் வகுப்புக்கும் ஒவ்வோர் அபிமானி இருக்கின்றதென்பதற்குக் கிஞ்சித்தும் மாறணினுமென்னை?

இங்ஙனமிருக்கும் அபிமானிகளாகிய சிவபோதங்களுள் ஒவ்வொன்றுக்கும் தூல முதலிய சரீரத்திரயமும், விசுவன் முதலிய அபிமானத்திரயமும், சாக்கிர முதலிய அவத்தாத்திரயமும் உண்டாயிருக்கின்றது அனுபவமன்றோ? ஓர் சிவபோதமும் அதற்கியைந்த சரீரத்திரயமும் அபிமானத்திரயமும் அவத்தாத்திரயமும் ஆகிய இந்நான்கும் ஓர் வகுப்பா யிருப்பதுபோல் ஆங்காங்கும் பலவகுப்புக்களாயிருக்கின்றதன்றோ? ஓர் வகுப்பாகிய சிவபோத முதலிய நான்கும் தேர் உருளையைப்போல் மாறிமாறி வருகின்றதன்றோ? இங்ஙனமே ஒவ்வோர் வகுப்பாகிய சிவபோத முதலிய நான்கும் ஆங்காங்கும் ஷை உருளையைப்போல் மாறிமாறி வருகின்றதன்றோ? இங்ஙனம் இவ்வகுப்புக்குள் மாறிக்கொண்டு வருகின்றது யாதின்பாலெனப்படும்? ஓர் வகுப்பாகிய சிவபோத முதலிய நான்கும் தோன்றும் ஞான்றும், தோன்றாஞான்றும் இவ்வகுப்போடு தான் தோன்றுதலும், தோன்றாதிருத்தலு மின்றி இதற்கு விலட்சணமாக நின்றுணர்ந்து வருகின்ற ஓர் மாறாப் போதமுண்டன்றோ?

இங்ஙனமே ஆங்காங்கும் அவ்வவ் வகுப்புகளோடு தோன்றுதலும், தோன்றாதிருத்தலுமின்றி அவ்வவற்றிற்கும் விலட்சணமாக நின்று நின்றுணர்ந்து வருகின்ற ஒவ்வோர் போதமு முண்டன்றோ? அவ்வப்போதமும் அவ்வவ் வகுப்புகளுக்கும் சாட்சி சைதன்னியமென்பதன்றோ? அவ்வச்சாட்சி சைதன்னியமும் ஷை சிவபோதங்களுள் எதற்குண்டெனப்படும்? எதற்கின்றெனப்படும்? பிரமன் முதலாக நிகழும் ஒவ்வோர் உயிராகிய போதத்துக்கும் சாட்சிசைதன்னியம் சதோதயமாக விளங்கிக்கொண் டிருக்கின்றதன்றோ? அவ்வச் சாட்சிக ளனைத்தும் ஒன்றெனப்படுமா? அன்றிப் பலவெனப்படுமா? பலவெனப் படுமெனின், யாதினால் பலவெனப்படும்? அநுபவங்களாலெனின், அவ்வநுபவம் ஷை சிவபோதமுதலாகிய பல வகுப்புகளாக நிகழ்கின்றனவன்றோ? இப்பலவகுப்புகளுள் ஒவ்வொன்றும் வியட்டி வகுப்பன்றோ? இப் பலவியட்டி வகுப்புகளால் அவ்வாதார சாட்சி சைதன்னியபோதம் பலவாகின்றதானால், வியட்டிகளாகிய இப்பல வகுப்பென்பதின்றி ஓர் வகுப்பாகிய சமட்டி மாத்திரமாயிருக்கின், அஞ்ஞான்று அதனால் அவ்வாதார சாட்சி சைதன்னிய போதமானது பலவெனப்படுமா? படுமெனின் வியட்டி [illegible]திந்திரிய முதலிய பல வகுப்பாகிய இவ்வேதுக்களையன்றி அவ்வாதார சாட்சி போதம் பலவெனப்படும்.

வியட்டிகளாகிய இப் பலவகுப்புகளின்றி அவ்வாதார போதம் பலவெனப் படாதோ வெனின், வியட்டிகளாகிய இப் பலவகுப்புக ளிருக்கும் ஞான்றும் அப்போதம் ஒன்றெனப்படாதோ? படாதெ னின், பலவென்பதும் படாதென்பமே! அங்ஙனமாயின், பலவகுப் பாகிய உபாதித்திரய முதலியவைகள் இல்லாதிருக்கட்டுமே யெனின், இவ்வியட்டி உபாதித் திரயங்களுள் ஓர் பாகமாகிய ஒவ்வோர் தூலோபாதியும் சமட்டி பஞ்சீகிரத தூல பஞ்சபூதங்களையன்றிக் குணம் தொழிலெனப்படாது ஒவ்வோர் பொருளெனப் படட்டும்! இங்ஙனமே, ஷை வியட்டி உபாதித்திரயங்களுள் மற்றோர் பாகமாகிய ஒவ்வோர் சூக்குமோபாதியும் அபஞ்சீகிரத சூக்கும பஞ்சபூதங் களையன்றிக் குணந்தொழி லெனப்படாமல் ஒவ்வோர் பொருளா யிருக்கட்டும்! இங்ஙனமே, ஷை வியட்டி உபாதித்திரயங்களுள் ஓர் பாகமாகிய ஒவ்வோர் காரணோபாதியும், அவையாவன—அவித்தை யோபாதிகள், அவ் வவித்தையோபாதிகளும் சமட்டி காரணோபாதி யை யன்றி அதாவது—மாயோபாதியை அன்றிக் குணம் தொழி லெனப் படாமல் ஒவ்வோர் பொருளா யிருக்கட்டும்! அங்ஙன மில்லையே!

அன்றியும், ஆங்காங்கும் அவ்வவ் வியட்டி தூலோபாதி சகித மின்றி விசுவனென்னும் அபிமானியும், அவ்வவ் வியட்டி சூக்குமோ பாதி சகிதமின்றித் தைசதனென்னும் அபிமானியும், அவ்வவ் விய ட்டி காரணோபாதி சகிதமின்றிப் பிராக்ஞனென்னும் அபிமானியு மிருக்கட்டுமே! அன்றியும், வியட்டி தூலவிசுவாபிமானியை யன்றி வியட்டி சாக்கிராவத்தையும், வியட்டி சூக்கும தைசதாபிமானியை யன்றி வியட்டி சொப்பனவத்தையும், வியட்டி காரணப் பிராக்ஞாபி மானியை யன்றி வியட்டி சுழுத்தியவத்தையு மிருக்கட்டுமே! அன்றி யும், ஷை வியட்டி தூல முதலிய உபாதித் திரயங்களும், வியட்டி விசுவன் முதலிய அபிமானத் திரயங்களும், வியட்டி சாக்கிர முதலிய அவத்தாத் திரயங்களும் ஆகிய இம் முப்பாகங்களின் சகிதமின்றி ஷை வியட்டி சீவபோதமென்பது தனித்தனி ஒவ்வோர் முதலா யிருக்கட்டுமே! இன்றாகலின், இவ்வியட்டிகளாகிய எண்ணரிய பேதங் களும் சொல் மாத்திரமும், தோற்றன்மாத்திரமுமா யிருக்கின்றன வன்றோ? இங்ஙன மிருக்கும் இக்கற்பனைகள் அனுபவப்படுவது யதார்த்த அனுபவமா? யதார்த்த அனுபவமென்பது பழுதை பழுதை

யாகவும், கிளிஞ்சல் கிளிஞ்சலாகவும், கட்டை கட்டையாகவும் சம்பந் தப்படுவதுபோல் ஷடி உபாதித்திரய முதலியவைகள் பொருள்களா யிருந்து சம்பந்தப் படுவனவன்றே?

அங்ஙனமின்றி, அரவும் வெள்ளியும் கள்ளனும் சம்பந்தப் படுவதுபோல் சம்பந்தப்பட்டு வருவது விபரீதானுபவமன்றே? இங் ஙனம் சம்பந்தப்படு மனுபவமே விபரீதானுபவமாயின், இவ்விபரீத அவத்தாத்திரய முதலியவைகள் மாறி மாறி வருகின்றதுபோ லிருப் பதும் விபரீதமன்றே? இவ்விபரீதானுபவம் ஏதுவாக இதற்காதார சாட்சி சைதன்னிய போதம் பலவெனப்படுவது என்னெனப்படும்? அஃதும் விபரீத மெனப்படு மன்றே? அவ்வாதாரம் பல வென்பது போற் காணும் விபரீதத்தால் அஃது கற்பித மெனப்படுமே? கற்பித மெனக் கொள்வோமே யெனின், அரவு வெள்ளி கள்ளன் என்கிற இக்கற்பனைகளால் இவற்றிற்கு ஆதாரமாகிய கயிறு கிளிஞ்சல் கட் டை இவைகளும் கற்பனைகளாகட்டுமே! ஆகவில்லையே! ஆகலின், அவ்வாதார சைதன்னிய போதம் ஏகமென்பதற்கு முரணென்னை? பலவாயிருக்கின்ற கடங்கள்தோறும் நிறைவுற் றிருக்கின்ற ஆகாய மானது அக் கடபேதங்களால் பலவாகுமா? பலவாகக் கோடல் மயக்கமா? அன்றித் தெளிவா? மயக்கமாதல்போல், ஷடி எண்ணரிய வகுப்புகளாகிய வியட்டி யுபாதித்திரய முதலியவைகளுக்கு ஏக ஆதாரமா யிருக்கின்ற சாட்சி சைதன்னிய போதம் பலவெனக் கோடல் மயக்க மென்பதற்கு முரணென்னை?

சமுத்திர வியாபகத்தில் அலை திவலை நுரை குமிழிகள் தனித் தனி அனந்த வியட்டி பேதங்களா யெழுவதால் அச்சமுத்திரமானது பலவெனப் படுமோ? அஃது படுமாயின், ஆதார சைதன்னிய போத மும் அனந்தமெனப்படும். ஆதார நாட்டம் வாய்க்காக்காறும் அவ் வாதாரபோதம் ஏகமென்பதைப்பற்றி ஐயமயமாகத்தா னிருக்கும். கற்பனைகளாகத் தோற்றும் எண்ணரிய கடபேதங்களையும் அவற் றிற்கு உபாதான காரணத்தி லொடுக்கிப் பார்க்கும் ஞான்று மட் பொருள் ஒன்றெனப் பொருள்படுமன்றே? இங்ஙனமே, தனித்தனி எண்ணரிய வியட்டி யுபாதித்திரய முதலியவைகளும் அவ்வவற்றிற் கும் ஆதாருவாயிருக்கும் சீவபோதங்களுமாய் நிகழ்வன எவ்வெவ் விருத்திகளோ அவ்வவ் விருத்திகளையும் அவைகளுக்கு உபாதான காரணத்தில் ஒடுக்கிப் பார்க்கும் ஞான்று அம் முதற்காரணமாகிய

ஆதாரபோதம் ஒன்றாக விளங்குதற்கு முரணென்னை? அங்ஙனம் நாடாத தோடமே யன்றிப் பலவென்பதற்குக் கிஞ்சித்தும் பொருளேது? முன்ஞான்று ஆராய்ந்த ஆராய்ச்சிக்கண் மட்பொருள் முதலிய சதுர்ப்பூதக் கற்பனைத் தோற்றங்களும், அவைகளுக்கு ஆதாரம் போல் நிரந்தரமாகத் தோற்றும் சூனியமும் எவ்வகைப் பொருள்களாய் முடிந்தன? ஷெடி சதுர்ப் பூதங்களும், சோபாதிக சங்கற்பமும், சூனியம் நிருபாதிக சங்கற்பமுமாக வன்றோ? இஞ்ஞான்றே அச் சதுர்ப் பூதங்களையும் ஆராயின் முடிவில் நிருபாதிக சங்கற்பமாயும் அவ்வாராய்ச்சியில் நின்றகன்றுழி ஷெடி சூனியம் சோபாதிக சங்கற்பமாயும் முடிகின்றதே! முடிகின்றதால், சோபாதிகத்தில் நிருபாதிகமும் நிருபாதிகத்தில் சோபாதிகமும் அபாவமெய்துகின்றன. இதனையன்றோ அறிஞர்கள் அன்னியோன்னியாபாவமென்றனர்!

எங்ஙனமெனின், எவ்வுருவமேனும் காரணகாரிய மயமா யில்லாதிருக்கட்டும்! அங்ஙன மின்றெனின், ஒவ்வொரு நாமரூபங்களிடத்தும் அக்காரண காரிய நெறித்தாக நாம் செல்லவேண்டுமன்றோ? செல்லவேண்டுவ தின்றெனின், அவ்வவ் நாமரூபத்தையும் நாம் யாது பொருளெனச் சம்மதித்துக்கொண் டிருக்கின்றது? மெய்ப்பொருளாகச் சம்மதித்துக்கொண் டிருக்கின்றதெனின், ஒவ்வொன்றும் காரணகாரிய மயமா யில்லாதிருக்கட்டும்! மேலும்,

ஞானவாசிட்டம்.

" உலகெது நாமாரென்ன வுற்றுநின் றுணருமட்டுங்
கலகமார் பிறவிமோகங் கங்குல்போல் மூடிநிற்கு
மலகிலா வுல்கும்யாமு மழிவில்சிற் சோதியன்றோ
சலனமில் கண்ணுற்கண்டோர் தத்துவ நிலைமைகண்டோர்."

என்றருளி யிருப்பானேன்? அன்றியும்,

திருவள்.

" பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு." என்றும்,

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொரு
ளப்படிக் காண்ப தறிவு." என்னாது,

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்றும் அருளியிருப்பானேன்? ஆகலின், நாம் ஒவ்வொன்றினையும் ஷெ காரணகாரிய நெறித்தாகச் சென்றுதானே தெளியவேண்டும்! அங்ஙனம் சென்றமுடிவில் ஆராயப்பட்ட நாமரூபங்களுண்டா? இல் லையன்றே! இல்லையாயின், அஞ்ஞான்றிருப்பது யாது? சூனியமன் றே! அதாவது—அருவப்பொருளெனப்படுவது. அவ்வருவபாவ மன்றே நிருபாதிக சங்கற்பமென்பது! நாம் ஷெ ஆராய்ச்சி முடி வில் நில்லாதகன்றுழி, நிருபாதிக சங்கற்பமாகிய அருவபாவ மென் பதுண்டா? இல்லையன்றே! இல்லையாயின், அஞ்ஞான்றிருப்பது யாது? உருவப்பொருளன்றே! அவ்வுருவ பாவமன்றே சோபாதிக சங்கற்பமென்பது! சோபாதிக சங்கற்பத்தை யன்றி உருவபேதங்க ளென்பதும், நிருபாதிக சங்கற்பத்தையன்றி அருவமென்பதுமுண் டா? இன்றாகலின், இருப்பதி யாதெனப்படும்? இவ்விருவித சங்கற்ப முமன்றே? இவ்விரு விதமும் புடைபெயர்ச்சிகளாகலின், இப்புடை பெயர்ச்சிகள் மாறுவது எதன்பாலெனப்படும்? ஓர் அகண்டபரி பூரண வியாபக விளக்கமாகிய உணர்விலன்றே! அவ்வுணர்வன்றே சர்வாதாரசாட்சி சைதன்னிய போதமெனப்படுவது! அவ்வகண்ட பரிபூரண போதசொரூபத்தை யன்றி அயலென்பதெங்கே? முன் ஞான்று வியட்டியுபாதித் திரய முதலியவைகளை ஆராய்ந்து வந்த முடிவில் ஐந்தாவது அத்தியாயத்தில் தேரப்பட்டு விளங்கிய சொப் பிரகாச சைதன்னியமே சீவசாட்சிபோத மெனவும் பிரத்தியே காத்மபோதமெனவும், கூடத்த போதமெனவும் பொருள்பட்டது போல், இஞ்ஞான்றாராய்ச்சியில் சர்வவியட்டி தூலசரீர கற்பனை களையும் ஓர்சமட்டி தூல சரீர கற்பனையாகவும், சர்வவியட்டி சூக்கும சரீர கற்பனைகளையும் ஓர் சமட்டி சூக்கும சரீர கற்பனையாகவும், சர்வவியட்டி காரண சரீர கற்பனைகளையும் ஓர் சமட்டி காரணசரீர கற்பனையாகவும் தேர்ந்து, பின்ஞான்று இச்சமட்டி யுபாதித்திர யங்கள் ஷெ சோபாதிக நிருபாதிக சங்கற்பத்தையன்றி இன்றெ னவும், இச்சங்கற்ப மிரண்டும் தன்னையன்றி இன்றெனவும் தேரப் பட்டு, இஞ்ஞான்று விளங்கிய சொப்பிரகாசமே ஈசுரசாட்சி போத மெனவும், பரமாத்ம போதமெனவும், பிரமபோதமெனவும் பொருள் படுகின்றதன்றே?

தனித்தனி வியட்டி தூலசரீரமும் தனித்தனி வியட்டி சூக்கும சரீரமும் தனித்தனி வியட்டி காரண சரீரமுமாகிய இம்மூன்றும் தனித்தனிச் சீவபோதத்துக்கும் காரியோபாதி சொரூபமா யிருப்

பதுபோல, இம்மூவித வியட்டி உபாதிகளனைத்தும் முறையே ஒன்றெனப்படும். சமட்டி தூல சரீரமும், சமட்டி சூக்கும சரீரமும், சமட்டி காரணசரீரமும் ஆகிய இம்மூன்றும் ஈசுரபோதத்துக்குக் காரணோபாதி சொரூபமாயிருக்கின்றதன்றோ? அகண்ட பரிபூரண வியாபக சொப்பிரகாசமொன்றே, டிஷ ஐந்தாவது அத்தியாயத்தில் வியட்டி காரியோபாதி சொரூபியாகிய சீவபோதத்துக்குச் சாட்சி சைதன்னியமாயும், இவ்வத்தியாயத்தில் சமட்டி காரணோபாதி சொரூபியாகிய ஈசுரபோதத்துக்குச் சாட்சி சைதன்னியமாயும் விளங்குகின்றதாயின், இவற்றால் சாட்சிபோத மிரண்டெனப்படுமா? படாதே! சமட்டி உபாதித்திரயக் கற்பனைகளாகிய சர்வத்துக்கும் ஆதாரமாயிருப்பதால் இச்சர்வாதாரப் பொருளொன்றே தனித்தனிச் சமட்டியுபாதித்திரயக் கற்பனைகளுக்குத் தனித்தனி ஆதாரம்போ லிருக்கின்றதாகக் கண்டலை நிதானிக்காமல் இவ்வாதாரபோதத்தைப் பலவாகக் கோடலால் பலவெனப்படுமோ? டிஷ ஐந்தாவது அத்தியாயத்தில் கூடத்த சைதன்னிய போதமானது பிரமன் முதலாக நிகழும் ஒவ்வோர் உயிரினது சிந்தை வடிவென ஐயந்திரிபின்றித் தேரப்பட்டிருக்கின்றதே!

ஒருவரது சிந்தைவடிவான சிதாகாசம் இத்துணைத்தெனக் கணிக்கப்பட்டதா? கணிக்கப்படவில்லையே! ஒருவரது சிந்தை வடிவம் அகண்ட பரிபூரண வியாபக விளக்கமயமா யிருக்கின்றதாயின், அவ்வியாபக விளக்கத்தை அன்றி ஏனைய ஒவ்வொருவரது சிந்தைவடிவு பலவென்பதற்குப் பொருள் எங்ஙன மிருக்கின்றது? அங்ஙன மில்லையே! டிஷ பிரமன் முதலிய எண்ணரிய உயிர்களுள் எவரெவர் தத்தமது சிந்தைவடிவை எட்டினர்களோ அவரவர்களுமன்றோ மக்களெனப்படுவர்! அம்மக்களன்றோ சீவன்முத்தரென்பவர்! அங்ஙனம் தமது இதயாம்பரத்தை எட்டாதவர்கள் பிறவெனப் படுவரன்றோ? அங்ஙனம் எட்டினவரது சிந்தையும், எட்டாதவரது சிந்தையும் ஓர் அகண்ட பரிபூரண வியாபக விளக்கமாயினும், உள்ளவாறுழைத்து எட்டினவர்க்குச் சதோதயமாகப் பிரகாசிக்கின்றதன்றோ! அவர்களுக்கு அங்ஙனம் பிரகாசிக்கின்றதிலும் அயலென்பது கிஞ்சித்தும் உண்டாயிருக்கப் பிரகாசிக்கின்றதா? ஒவ்வோர்ஞான்று உண்டாயிருக்கப் பிரகாசிக்கினும் அவ்வயலனைத்தும் அவ் வியாபகத்தின் சங்கற்ப சத்திகளாகலின், அவை கயிற்றரவு முதலியவைபோல் தோன்றவன்றோ பிரகாசிக்கின்றது! அங்ஙனமாகிய அயலனைத்

தும் தமது சிந்தை வியாபகத்திலும், தமது சிந்தை வியாபகம் அவ் வயலனைத்திலு மாகவன்றோ பிரகாசிக்கின்றது! அங்ஙனம் சதோ தயமாகப் பிரகாசிக்கின்றதனு லன்றோ,

பகவற்கீதை.

'யாவ னொருவ னென்னையெல்லா
வுயுர்க ளிடையு மென்னிடையே
மேவ வெல்லா வுயிர்களையும்
வேறு காதே மெய்காண்பான்
றேவர் பகைமுன் செகுத்தோனே
யவன்யா தேனுஞ் செய்திடினு
மாவ வவனு கின்றேன்யா
னதுனீ யேது மையுறேல்.'' என்றும்,

ஞானவாசிட்டம்.

"முழுதுசத் தியமாய்ப் புரணமா யென்று
முடிவறு பிரமமா வதுதான்
பழுதின்ஞா னிகடம் மனமலா தில்லைப்
பரமமா மிதிலிலா தில்லை
யெழுதருஞ் சத்தி யாவுமா யிலங்கு
மிவைகளோர் காலமொன் றுளதாம்
வழுவிலாப் பிரம முடையசிற் சத்தி
மறிதரு முடல்களிற் றேன்றும்.''

என்று மருளியிருக்கின்றது.

இதனால் ஞானவான்களது தெளிந்த மனமே பிர்மசொரூப மென்றாயிற்று. அஞ்ஞானிகளது உள்ளமும் பிர்ம சொரூபமாயிருக் கினும் அவ்வுள்ளம் அறியாமையினால் மூடப்பட்டதுபோ லிருக்கின் றமையின், அவர்களுக்கு அப்பிர்ம சொரூபம் வேறுபோ லிருக் கின்றதென்க. இருவரது உள்ளமும் ஒப்பற்ற பிர்மசொரூபமாய்ப் பிரகாசிக்கின்றமையின் இஃது எட்டாதவர்க்குப் பயனற்றதுபோ லும், எட்டினவர்க்குப் பயனுற்றதாயு மிருக்கின்றது. இங்ஙனம் பயனுற்றிருக்கினும் அப்பயன் வியட்டி யுபாதித்திரயங்கள் நானன் றென்றகன்ற அகத்தாராய்ச்சி முடிவில் இது நான் இது நானெனன் றெட்டப்பட்டுச் சீவசாட்சியா யிலகும் பயனாகியும், சமட்டி உபாதித் திரயங்கள் நானன்றென்றகன்ற புறத்தாராய்ச்சி முடிவில் இது நான் இதுநானெனன் றெட்டப்பட்டு ஈசுரசாட்சியா யிலகும் பயனாகியு

மாமென்க. இப்பால், சமாதியென்பது இருவகையின. அவற்றுள் ஒன்று மருட்சமாதியும் மற்றொன்று தெருட்சமாதியுமாம். மருட் சமாதியென்பது கிரியா சமாதியும், தெருட்சமாதி யென்பது ஞான சமாதியுமாம். மருளாகிய கிரியாசமாதி யென்பது மூலாதார முதலி யனவாகிய ஆறுதார தரிசனம், பிராணபந்தனம். அதாவது—இரேசக பூரகம் முறையாய்ச் செய்தலும், பின்னான் றவற்றைக் கும்பித்த லும், கேசரி பூசரி மத்திம சண்முகி சாம்பவி இவை முதலியவற்றால் மனோவிருத்தியை ஒடுங்கச் செய்தலுமாமென்க.

தெருளாகிய ஞானசமாதி யென்பது சொரூபசமாதி யெனவும், சகசசமாதி யெனவுமாம். க-வது, சொரூபசமாதி யென்பது—வ்யஷ்டி சீவபோதமுதலிய கற்பனைகளுக்குச் சாட்சி மாத்திரமாய்ப் பிரகாசிப் பது. அன்றியும் இச்சமாதி விளக்கம் வத்துநிலே அணுவுக்கு மணு வா யிருக்கின்ற தென்னும் சுருதிவாக்கியத்திற் கிணங்க வ்யஷ்டி விய ட்டி கற்பனைகளுள் அணுவுக்குள் அணுவா யிருக்கும் தன்மை, அக் கற்பனைகளை ஒன்றிலொன் றொடுக்கிக் கொண்டுபோய்ச் சிற்பிரகாச மாகத் தெரிசித்தலாமென்க. இதனாலன்றோ முன்னான்று தான் தனிச்சாட்சி யெனப்பட்டது. உ-வது, சகசசமாதியென்பது— ஈசுரபோத முதலிய கற்பனைகளுக்குச் சாட்சிமாத்திரமாய்ப் பிரகாசிப் பது. அன்றியும், இச்சமாதி விளக்கம் வத்துநிலே மகத்துக்கும் மகத்தாயிருக்கின்றதென்னும் வ்யஷ்டி சுருதிவாக்கியத்திற் கிணங்க வ்யஷ்டி சமட்டி கற்பனை மகத்துக்குமேல் மகத்தாயிருக்கும். அதாவது வியாபகமா யிருக்கும் தன்மை, வ்யஷ்டி சமட்டி கற்பனைகளைத் தற்பிர காசமாகக் கரைத்துத் ததாகாரமாய் விளங்குவதா மென்க.

அன்றியும், அவ்வனுபூதி தொம்பத வாச்சியார்த்தமாகிய விசு வன் முதலியவாக நிகழும் சீவபோதமகன்று, அத்தொம்பத இலட்சி யார்த்தமாகிய கூடத்தானுபவமும், இவ்வனுபூதி தற்பத வாச்சி யார்த்தமாகிய விராட்டு முதலியவாக நிகழும் ஈசுரபோதமகன்று, அத்தற்பத இலட்சியார்த்தமாகிய பிரமானுபவமுமா மென்க.

அன்றியும், அக்கூடத்தானுபவம் அயலனைத்தும் கயிற்றரவு முதலியன போலாகலின், அவைகளுக்குத் தான் விலட்சணமாயும், அறிவே வடிவாயும் அதாவது—உணர்வொளியே சொரூபமாயும் விளங்குவதாமென்க. இப்பிரமானுபவம் வ்யஷ்டி கயிற்றரவு முதலியவை போற் றோன்றும் அயலனைத்தையும் தகித்து அன்னியமென்பது

சற்றுமின்றி ஆனந்தமே வடிவாய், அதாவது—இன்ப மயமாகவே விளங்குவதா மென்க. எனவே, அவ்வனுபவம் அனைத்தும் தானல்ல வாய் விளங்கலும், இவ்வனுபவம் எல்லாமாய் விளங்கலுமா மென்க. இவைகளுக்கு உதாரணம்:—

ஞானவாசிட்டம்.

விளக்குமிர வியுமலரு முண்டா லுண்டாம்
வீசொளியும் பகற்பொழுதும் விரையும் போலத்
துளக்கமில்சித் துண்டாகி லுண்டா ஞாலந்
தோற்றரவு மாத்திரமே சொரூப மாகும்
இளத்தபர மார்த்தத்தா வில்லை யென்னக்
கேட்டலுமே பாற்கடல்போற் கெம்பீ ரத்தா
லளக்கரிதாய்ச் சீதளமா யமல மாகி
யற்புதமா நின்மொழியென் றண்ணல் சொல்வான்.'' என்றும்,

''உன்னுறு மனத்தினாலே யுலகமா மிந்திரஞாலந்
துன்னுறு பணிகளென்னுஞ் சொற்பொருள் பொன்னையன்றி
யன்னிய மில்லைபொன்றாற் பணியென வறையவேண்டாம்
பன்னிய வுலகாஞ்சொற்குப் பரமன்றிப் பொருள்வேறில்லை.''என்றும்,

''களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர்
களங்கமற்ற கண்ணாடி காட்டும் போது
விளங்கியதன் மயமாகி யபேத மாகி
விகற்பமின்றி நிருவிகற்ப மானாற் போல
வளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தா
யானந்த மாம்பிரமத் தயிக்க மான
வுளந்தெளிந்த படியிருந்தா லுலக மெங்கே
யுலைவெங்கே யென்றுசங்கை யொழித்தி டாயே.'' என்றும்,

தத்துவராயர் பாடுதுறை.

''அன்னிய மில்லையென் றாதேடா காள
மானந்த மானோமென் றாதேடா காளந்
துன்னு சுடரேயென் றாதேடா காளஞ்
சோதியுட் சோதியென் றாதேடா காளம்.'' என்றும்,

''சாதி கழிந்ததென் றாதேடா காளஞ்
சங்கை தவிர்ந்ததென் றாதேடா காளஞ்
சோதி சுகமேயென் றாதேடா காளஞ்
சொல்லவொண் ணாததென் றாதேடா காளம்.'' என்றும்,

" தோற்றர வாகத் துணிந்தவூ ரெங்களூர்
சோக மோகங்க டுறந்தவூ ரெங்களூ
ராற்ற லுடையார்க் கடைந்தவூ ரெங்களூ
ரானந்த மாயே யிருக்குமூ ரெங்களூர்."

என்றுங் கூறியவாற்முற் காண்க.

இதுகாறும் கூறிப்போந்த பிர்மசாட்சி சைதன்னிய லட்சியார்த்த விளக்கமென்னும் இவ்வத்தியாயத்தில் சோபாதிக நிருபாதிகமாகிய சகமாதி திரிபதார்த்தங்களும் அசத்து சடம் துக்கமுதலிய இலக்கணங்களுக் கிலக்கியங்க ளென்றும், இக்குணங்களுக்கு எதிர்மறையாகிய சத்து சித்து ஆனந்தம் முதலிய விலக்கணங்களுக்கு ஷை சாட்சிபோதம் இலக்கியமென்றுங் கூறியிருப்பதை இன்னும் யூகிக்குதும். எங்ஙனமெனின், இச்சகத்து எதுவாக சீவேசுரத்துவம் வழங்கப்படுவனவா அன்றிச் சீவேசுர எதுவாகச் சகத்து வழங்கப்படுவதா? சீவேசுரத்துவம் எதுவாகச் சகத்து வழங்கப்படுவதெனின், எண்ணலளவையில் அநுமான அளவை யாதுக்கிருக்கின்றது? அவ்விரண்டும் தொம்பத தத்பத வாச்சியார்த்தப் பொருள்களாகலின், அவற்றை நிச்சயித்தற்கு ஓர் அளவை வேண்டுமன்றோ? ஆகலின், அவற்றிற் கியைந்ததாகிய அநுமான அளவை வேண்டுமென்பதாமெனின், அவ்விரு பொருளும் இலட்சியார்த்தத்திற் கியைந்தனவாயின், இவ்வளவை வேண்டுவதின்றன்றோ? அவ்விலட்சியார்த்தத்திற்கு இணங்காதவற்றை இவ்வளவையால் நிச்சயிப்பானேன்? கர்மோபாசனகாண்டிகட்கு அவசியம் வேண்டுவதாலெனின், ஞானகாண்டிகட்கு வேண்டுவது ஷை தொம்பத் தத்பத இலட்சியார்த்தப் பொருள்க ளாகின்றன!

ஆகவே, அவ்விரு காண்டிகட்கும் வாச்சியார்த்த மிரண்டும் வழிபடுதற் கியைந்தன. இவையினும், வாச்சியார்த்த இலட்சியார்த்த இவ்விருவகுப்பில் எது யதார்த்த மெனப்படுவது? எது கற்பித மெனப்படுவது? இவ்விருவகுப்புமே யதார்த்தமெனப் படுவதா மெனின், இவற்றை வாச்சியார்த்த மெனவும் இலட்சியார்த்த மெனவும் பிரிப்பானேன்? ஞானகாண்டிகளென்றும் உபாசன கர்மகாண்டிகளென்றும் பிரிவுற்றிருப்பதாலெனின், இவற்றால் ஞானகாண்டிகளுக்கு வாச்சியார்த்தப் பொருள்களும் உபாசன கர்மகாண்டிகளுக்கு இலட்சியார்த்தப் பொருள்களும் பயனுரு திருக்கின்றன. இங்ஙனமிருக்கினும், இலட்சியார்த்தப் பொருள்கள் யதார்த்தமும்,

வாச்சியார்த்தப் பொருள்கள் கற்பனைகளுமாகலின் அனுமான அள வை வேண்டுவது அவசியமாமென்க. அனுமான அளவைக் கியைந் தவை யெல்லாம் கற்பனைகளாயின், நமக்கு எஞ்ஞான்றும் காணப் படாத பிறதேச வத்துக்கள் அனுமானிக்கப்படுவதால் அவைகள் இன்றெனப்படுமோ? இன்றெனப்படாது! ஏன்? அவ்வத்துக்களுக்குச் சேய்மையுற் றிருக்கும் நமக்குத் தோன்றாது கூடி அளவைக் கியைந் திருக்கினும், அவ்வத்துக்களுக்கு அணிமையுற் றிருப்பவர்க்கேனும் அவை தோன்றுகின்றனவல்லவா? அதனால் அவ்வத்துக்கள் அனு மான அளவைப் பொருள்களென்ப தென்னையெனின், எஞ்ஞான் றும் அவத்தாத்திரயங்களுள் எவ்வவத்தைக் கண்ணும் எத்திறத் தருக்கும் காண்டலளவைக் கியையாதவைக ளெவைகளோ அவை களன்றோ கருதலளவையாகிய அனுமான அளவைக் கியைந்தவைக ளெனப்படும்!

அங்ஙனமாயின், மலையின்கணுள்ள அக்கினியானது அம்மலைக் குச் சேய்மையுற் றிருப்பவர்க்குக் கண்கூடின்றி யிருக்கினும், அம் மலையின்க ணுள்ளார்க்கு அஃது கண்கூடன்றோ? அங்ஙனம் கண் கூடாகிய அவ்வக்கினியை அனுமான அளவையா லேற்பானே னெனின், இவ்வனுமானம் ஏகதேசானுமானமும், கூடி சீவேசுரானு மானம் சம்பூரணானுமானமுமாம். ஆயினும், சீவானுமானம் விபரீ தானுபவ அனுமானமும், ஈசுரானுமானம் அங்ஙனமின்றி வெறும் தோற்றானுமானமுமாம். விபரீத அனுபவ அனுமானமென்பது கற் பனைகளாகிய உபாதித்திரயங்களை நானெனதாக மயங்கிய மயக்க மேதுவாகக் கருதுதல். தோற்றானுமானமென்பது சமட்டி வியட்டி களாகத் தோற்றும் உபாதித்திரய முதலிய கற்பனைகளைக்கொண்டு கருதுதல். இஃது மலையின்க ணின்றெழும் முகில்களைப் புகையென மயங்கி அம்மலைக்கண் அக்கினி யுளதெனக் கருதுதல் போலாமென்க.

மாயாப்பிரதிபிம்பம் ஈசுரனெனவும், அவித்யாப் பிரதிபிம்பம் சீவனெனவும் சத்பிரமாணங்கள் கோட்டித்திருக்கின்றனவே! ஈசுர போதம் இன்றாமோவெனின், தனித்தனி மரங்களின் சேர்க்கையன் றிச் சமட்டியென்னும் தோப்பென்பது உளதாயிருக்கின், தனித் தனி அவத்தாத்திரயங்களுக்குக் காரணமாகிய தனித்தனி அவித்தை களின் சேர்க்கையன்றிச் சமட்டி யென்னும் மாயையென்பது ஒன் றுளதாயிருக்கலாம். வியட்டி உபாதித்திரயங்களைப் பற்றிச் சமட்டி உபாதித்திரயங்களும், வியட்டி அவித்தையைப்பற்றிச் சமட்டி மாயை

யும், வியட்டி சீவபோதத்தைப்பற்றிச் சமட்டி ஈசுரபோதமும் இருப்பாகக் கொண்டதேயன்றி இவ்வியட்டியாகிய உபாதித்திரய முதலியவைகளை நீக்குழிச் சமட்டியாகிய உபாதித்திரய முதலியவைகளேது? இருக்குமாயின், ஈசுரபோதமு மிருக்கலாமென்க. அங்ஙனமாயின்,

ஒழிவிலொடுக்கம்.

" பெண்ணு ணலியாய்ப் பிறந்துவளர்ந் தேயழியு
மெண்ணுத பேத மியல்பின்றிப்—பண்ணுங்காற்
காரணகர்த் தாவொருவ னுண்டவனைக் காட்டுநூ
லாரணமு மாகமமு மாம்."

எனத் திருவாய்மலர்ந்தருளி யிருக்கின்றதென்னை? பதி பசு பாசம் ஆகிய இம்மூன்றும் அனாதி நித்திய சத்தாயில்லாமலும் இவற்றில் சீவனென்பது பாசமாகிய மாயைக்கண் அனாதியிலேயே இன்பதுன்பமின்றி வாளா மழுங்கி யில்லாமலும் இவற்றால் பதிப்பொருளானது தனது கருணையால் இச்சீவர்களை இழுத்து வெளிப்படுத்தித் தனுவாதிகளைக்கொடுத்து வழிப்படுத்த வேதாகமங்களையும் கற்பித்தில்லாமலுமா அங்ஙனம் திருவாய்மலர்ந் திருக்கின்றனர்? எனின், இம்முப்பொருளையும் இருப்பெனக் கொண்டன்றோ அங்ஙனம் அவ்வறிஞர் திருவாய் மலர்ந்தருளினர்! அங்ஙனமாயின்,

சொரூபசாரம்.

" ஆண்பெண் ணலியென் றனேக விதமாகக்
காண்பனவு மொன்றாகக் காண்பனவு—மாண்புடைய
சித்தினிடைத் தோற்றமல்லா வுண்டோ விவைதெளியா
ரெத்தனைசா தித்தாலு மென்."

எனத் திருவாய்மலர்ந்தருளி யிருப்பானேன்? பாசமாகிய இப்பிரபஞ்சப் பொருள்களானவை கற்பனையா யில்லாமலும் இவற்றைக் கொண்டு கருதுதற்கியைந்ததும் கற்பனையா யில்லாமலுமா அங்ஙனம் திருவாய்மலர்ந் திருக்கின்றனர்? கருதல் அளவைமட்டில் நின்றின் புறும் ஷை பட்சமானது ஐயந்திரிபகன்றதா? அகன்றதெனின்,

உத்தமவாதநூல்.

" உலகின் மதநிறுத்து முத்தமரே கேண்மி
னுலகமு நாமு மொருங்கே—நிலையின்றி
யெங்கே வெளிப்படுத லெங்கே மறைதனித
மங்கிருந் துங் காணுதெ ரைய்ந்து."

என்றருளி யிருக்கின்றனரே? ஆங்காங்கும் நான் நானெனற்கியைந்த தேகோகமும் எனது எனதெனற் கியைந்த இப்பிரபஞ்சமும் ஒத்துத் தோற்றுகின்ற சகலாவத்தையும் ஒத்து மறைகின்ற கேவலாவத்தை யும் எவ்வாதாரத்தி லெனப்படும்? இவை திருனுபவ மென்பதற்கு முரணின்று! அன்றியும், ஷை யானெனதென்பவற்றை ஆராய்வுழி முடிவில் சூனியமாயும் அவ்வியக்கம் விட்டுழி மீண்டும் பழமையாயும் தோற்றுகின்றது எவ்வாதாரத்தி லெனப்படும்? அவ்வாதாரம் வெளிப்பட்ட பின்ஞான்றன்றோ சீவேசுரசகத் தென்பதற்குப் பொருள் சித்திக்கும்? முன்ஞான்று பெண்ணலியென்றெடுத் தோதி யதைச் சற்றாகிப்பம். இப் புறத்தாராய்ச்சி விளக்கத்தில் மூன்ரு வ்து அத்தியாயமளவும், ஷை ஆண் பெண் அலி ஆகிய அறுவகைப் பிறப்பாயுள்ள வடிவங்கள் யாதாய் முடிந்தன? மட்பொருளாய் முடிந் தனவன்றோ? அம்மட்பொருள் ஒன்றெனப் பட்டதன்றோ? அம்மட் பொருள் மட்டில் நில்லாது அதனையும் ஆராய்வுழி வெளியாகின்ற தன்றோ? அவ்வெளி ஒன்றென்பதன்றோ? அவ்வெளிமட்டில் நில் லாது அதனையும் ஆராய்வுழி அவ்வெளியானது எதற்குக் காணப் படுதலும் மறைதலும் முடிவில் எதுவாதலுமோ அதுவன்றோ ஏக சைதன்னிய மெனப்படுவது? திரவறிவென்பது அதையன்றிச் சிற் சட பேதங்களென வழங்குவது அணுத்துணையுமுண்டோ? உளதாக வழங்குகின்றதே யெனின், தோற்றல் மாத்திரமாகவன்றோ, அங் ஙனம் வழங்குதற் கியைந்தன? இங்ஙன மிருப்பதனாலன்றோ,

> "ஆண்பெண் ணலியென் றனேக விதமாகக்
> காண்பனவு மொன்ருகக் காண்பனவு—மாண்புடைய
> சித்தினிடைத் தோற்றமல்லா லுண்டோ விவைதெளியா
> ரெத்தனைசா தித்தாலு மென்."

என்றருளி யிருக்கின்றனர்? அன்றியும்,

எதார்த்தவாதம்.

> "தேகாதி தோற்றத்தாற் சீவே சுரரென்பாய்
> தேகாதி தோற்றமன்றிச் செப்புவையோ—தேகாதி
> தோன்று மிடமெங்கே தோன்ரு விடமெங்கே
> யூன்றிப்பார்த் தங்கேநீ யோது."

எனவும் கூறியிருக்கின்றனர். இதனையேனும் நன்குணரவேண்டு மன்றோ? அன்றியும்,

வேதாந்தசூளாமணி.

" சீவனொடீ சன்கூடத் தன்பிரம மென்னச்
சித்துநான் காங்கடநீர் கதுவுறுவெண் மீன்வான்
றூவுபனி நீர்விம்ப வனுமிதா காசஞ்
சொற்கடா விச்சின்ன காயமொடு மாவான்
மேவுமிவை யனைத்தினுக்குந் திட்டாந்த முறையாம்
விடயமொடு பிரமவா சனைமுக்கி யம்பி
னேவுநிச மான்மாவோ டத்துவிதம் வித்தை
யெனுமிவற்றின் பெயராலெண் வகைப்படுமா னந்தம்."

என்றருளியதில் கடோபாதியிலும், மேகோபாதியிலும் வெளியானது நிறைவுற்றுத் துவிதவெளியாகத் தோற்றுதல்போல், அவித்யோபாதியிலும் மாயோபாதியிலும் இந்நூல் முகவுரையில் விளக்கிய தற்போதமானது நிறைவுற்று இருவகைச் சமாதிக்கண்ணும் கூடத்த பிரமமாயும், ஷை கடோபாதி மேகோபாதி சலத்தில் வெளியானது பிரதிபலனங்களாகத் தோற்றுதல்போல், ஷை அவித்யாந்தக்கரணத்திலும் மாயாந்தக்கரணத்திலும் ஷை போதமானது சீவேசுரராகப் பிரதிபலித்துத் தோற்றுகின்றதென் றுகின்றன. ஆகவே, ஷை தொம்பத தத்பத வாச்சியார்த்தமாயும், கருதலளவைக் கியைந்ததாயும் ஆகின்றன. இதுகாறும் கூறிப்போந்த இத்துணைக்கும் ஏதுயாதெனின், வியட்டி சமட்டியாகிய இவ்வுலகமன்றோ? இவ்வுலகை நன்காராய்ந்து மித்தையானுபவம் வாய்த்திருந்தால் சிற்றறிவு பேரறிவென்றபேதம் எங்கிருந்துவரும்? பொருளல்லவற்றைப் பொருளென மயங்குழியன்றோ :இவ் விபரீதத்துவைதம் மேற்கொண்டுவிட்டது? இவ்வுலகம் ஆராய்வுழி இன்மையாயும், அஃதில்லாவுழி உண்மையாயும் ஆகிய இவ்விருவித ஜாலமும் எதன்மாட்டு நடக்கின்றதோ அவ்வாதாரத்தை,

" நோக்கா நோக்கை நோக்க நோக்க
நோக்கா நோக்க நோக்கு மன்றே."

எனச் சிவஞான வள்ளல் அருளியவண்ணம் விடாது திருட்டித்துக் கொண்டிருக்கின், இச்சீவேசுர சகத்தென்பவை முற்றும் இல்லாமற் போகுமன்றோ? ஒவ்வோர்ஞான்று தோன்றினும் கயிற்றரவு முதலியவைபோல் இருக்குமன்றோ? இங்ஙனம் இருப்பதனு லன்றோ இவை அசத்து சடம் துக்கம் முதலியவற்றிற்கியைந்த இலக்கியப்

பொருள்களாகின்றன? இருக்கவே, இவ்வசத்தாதி இலக்கணங்களுக்கு எதிர்மறை இலக்கணங்கள் இருக்கவேண்டுமன்றோ? இருக்கவேண்டுமெனின், அவ்விலக்கணம் சத்து சித்து ஆனந்தம் முதலியனவா யிருக்கின்றதன்றோ? இருக்கின்றதால், இவ்விலக்கணங்களுக்கு இலக்கியப்பொருள் யாதெனப்படும்.

முன்ஞான்று மனமானது விடாது நோக்குதலுக் கியைந்திலகும் ஆதாரபோதமன்றோ? அப்போதம் இச்சத்தாதிகளாகிற சகுணப்பொருளெனப்படுமா? அன்றி நிற்குணப் பொருளெனப்படுமா? சகுணப்பொருளெனப் படுமெனின், அப்பிரம போதத்துக்கு இச்சகுணத்துவம் இயற்கையா? அன்றிச் செயற்கையா? இயற்கையேயெனின், அப்போதத்துக்கு இச்சகுணத்துவம் எதன் ஏதுவாக வந்தது? இயற்கைக்கு ஏது வினவுவது விவர்த்தமொழியாமெனின், சகுணமாகிற இச்சத்தாதி குணங்களுக்கு எதிர்மறையாகிய அசத்தாதி குணங்கள் இருக்கலாமா? இருக்கின்றதால் தோடமென்னையெனின், தனதனுபூதி விளக்கத்தில் ஷை சீவேசுர சகத்துத் தோன்றுங்காறும் இவை எப்பொருள்களெனப்படும்? அசத்தாதிகளெனப்படுமன்றோ? படுந்தோறும் இவற்றிற் கெதிர்மறையாகிய சத்தாதிகள் எவையெனப்படும்? இச் சீவேசுர சகத்துக்களுக்கு ஆதாரபோத மெனப்படுமன்றோ? அவ்வாதாரபோதம் அச் சத்தாதி குணங்களை யேற்பது யாதினாலெனப்படும்? இவ்வசத்தாதிகளினா லெனின், எதுகாறு மேற்கப்படும்? எஞ்ஞான்றுமே ஏற்கப்படுகின்ற தெனின், ஷை தனது சுவானுபவத்தில் இச்சீவேசுர சகத்து எஞ்ஞான்றுமே தோன்றுகின்றனவா? எஞ்ஞான்றுமே தோன்றுகின்றன வெனின்,

கைவல்லியநவநீதம்.

“ அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக
 மாகினு யம்மட்டு
நிசத்தி லுள்விழிப் பார்வையா யிப்படி
 நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர
 வடிவமா கிடின்மைந்தா
கசத்த தேகத்தி லிருக்கினு மானந்தக்
 கடல்வடி வாவாயே.”

என்றருளி யிருப்பானேன்?

அங்ஙனம் அருளிய ஞானப்பியாசம் பலகற்பமும் பழகிக் கிருத கிருத்திய மானாலன்றோ அகம்புறக் கற்பனைகளாகிய சீவேசுர சகத்தென்னு மறியாமை முற்றும் ஒழிந்துவிடும்? இங்ஙனமிருக்கச் சீவேசுரசகத் கற்பனைகள் என்ஞான்றும் தோற்றிக்கொண் டிருக்குமென்பதென்னை? ஷை அப்பியாச முதிர்ச்சியில் சீவேசுரசகத் கற்பனைகளில்லாஞான்று அசத்தாதி இலக்கணமென்பதேது? இல்லாதுழி ஷை பிரமசைதன்னியம் எவற்றிற்குத்தான் சத்தாதி இலக்கணங்களுடைய தெனப்படும்? எதுகாறும் சீவேசுரசகத் கற்பனைகள் தோற்றுகின்றனவோ அதுகாறும்தான் சத்துமுதலிய சகுணத்துவ மேற்குமன்றோ? பொய்ம்மையென்ப தொன்றிருந்தாலன்றோ மற்றொன்று மெய்ம்மையென்னும் நிலைமையை யேற்கும்? என்னை,

கைவல்லிய நவநீதம்.

“ குளிரிளகல் வெண்மையென்ற பதங்களினா னீர்மூன்று
கூறா யிற்றோ
வொளிதவனஞ் செம்மையென்ற பதங்களா லக்கினியு
மொருமூன் றாமோ
வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிட ரெனப்பிரித்து
விலக்கி வேத
மெளிதறிய மூரண்மொழிந்த சத்தாதி யெனும்பிரம
மேகந் தானே.”

எனக் கூறியிருக்கின்றதே.

சலமும் அக்கினியும் இனையதென விளக்குவித்தற்காகக் குளிர் முதலியவற்றையும், ஒளி முதலியவற்றையும் பிரித்துரைக்கவந்த சொல் வேறுபாடென்பதன்றிப் பொருள் மும்மூன்றாகப் பிரிந்திருக்கின்றதா? இல்லையன்றோ? அவ்வாறே சீவேசுர சகத்துக்களும், பிரம போதமும் இனையதெனப் பரிபாகிகளுக்கு விளக்குவித்தற்காக அசத்துமுதலியவற்றையும், சத்துமுதலியவற்றையும் பிரித்துரைக்க வந்த சொல் வேறுபாடென்பதன்றிப் பொருள் மும்மூன்றாகப் பிரிந்திருக்கின்றதன்று. சீவேசுரசகத்து எத்திறத்தார்க்கும், என்ஞான்றும், எங்கணும் சச்சிதானந்த முதலியவாகத் தோற்றுகின்றனவா? அன்றி வேறாகத் தோற்றுகின்றனவா? சச்சிதானந்த முதலியவாகவே தோற்றுகின்றதெனின், அங்ஙனந் தோற்றுவானேன்? அங்ஙனம் பார்ப்பதனாலெனின், அங்ஙனம் பார்ப்பதைத் தடுக்கவேண்டுமன்றோ? தடுத்தற்கு யாது செய்யவேண்டியது? அசத்து முதலியவாகக்

கூறவேண்டுமென்றே? அங்ஙனம் செல்லுழி, இவ்வசத்து முதலிய வற்றிற் கெதிர்மறை யாதென நாடுவார்களன்றே? எதிர்மறையாவது சத்து முதலியவைகளாமென்க.

அங்ஙனம் நாடுபவர்க்கு ஷ்டி பிர்மபோதம் சத்து முதலிய சகுணப்பொருளென் றுணர்த்தவேண்டுமன்றே? அங்ஙன முணர்த் துவதால் அப்போதம் சகுணப்பொருளெனப்படுமோ? படுமெனின், ஷ்டி அசத்தாதி இலக்கணங்களை நோக்காதுழி இருக்கட்டும்? நோக் கியஞான்றாகலின், சகுணத்துவம் செயற்கை யென்பதற்கு முரணி ன்று. இன்றாகலின், வஸ்துவென்பது நிர்க்குணப் பொருளா மென்க. என்னை?

கைவல்லிய நவநீதம்.

"நிர்க்குணவத் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடியென
னிகரென் றதே
சற்குணனே வத்துநிலை யுரையாம லறியவல்ல
சதுர ருண்டோ
நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி பெறப்பிரம
ஞானந் தோன்றச்
சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களல்ல பிரமமாஞ்
சொருபந் தானே."

என்பதா லென்க.

நமக்குச் சூரியன் விளங்குவ தியாதினு லெனப்படும்? பிரகாசத் தாலன்றே? அச்சூரியன் நமக்கு வேறாயினும் பிரகாசத்திற்கு வேறெ னப்படுமோ? அல்லவே! பிரகாசவடிவமே சூரியனென்பதற்கு முரணென்னை? இங்ஙனமே பிரமபோதமும் சத்தாதிகளின் ஒருமைப் பொரு ளென்பதற்கு முரணின்றாமென்க.

ஆகலின் இவ்வாராய்ச்சியில் தேர்ந்தது சுவகதாதிபேதம் இறந் தொளிரும் பிரமசைதன்னியமா மென்க.

பத்தாவது

பிரமசைதன்னிய இலட்சியார்த்த விளக்கம்

முற்றிற்று.





உ
திருச்சிற்றம்பலம்.

பதினொன்றாவது

# அறிவானந்த ஐக்கானுபவ விளக்கம்.



வெண்பா.

*இந்தவா ராய்ச்சியினி லெய்தியஞா னானந்தஞ்*
*சந்ததமைக் கானுபவந் தான்விளங்கிப்—பந்தமுத்தி*
*யீதிரண்டு மின்றெனவே யேற்கு முழைப்பினர்கட்*
*கேதமெனலுண்டோ விசை.*

அறிவானந்த ஐக்கானுபவ மென்பது அறிவே ஆனந்தமும், ஆனந்தமே அறிவும் என்றாகின்றன. இவற்றுள், அறிவே ஆனந்த மெனப்படுமாயின், அறிவு அயலின்பத்தைத் தாவவேண்டுவதின்று. தாவுகின்றதால் அங்ஙனம் கூறுவது, இனிப்பாகிய கன்னற்கட்டி மற்றோர் இனிப்பைத் தேடுற்றாற் போலாம். ஆனந்தமே அறிவெனப் படுமாயின், அவ்வானந்தம் அறிவினால் அறியப்பட வேண்டுவ தின்று. அறியப்படுகின்றதால், அங்ஙனம் கூறுவது உருவத்தை அறியும் விழி தான் உருவமென்பது போலாம். அவற்றால் அறி வானந்தம் ஈரிடத்தும் ஆபத்தாகின்றது. ஆகவே, எங்ஙனம் ஐக்கானு பவ மெய்துமெனின், அறிவானது தான் இயற்கை இன்ப வடிவ மாயினும், தன்பால் தான் நாமரூப விடயாகாரமாய் ஆரோபிதப் பட்டமையால், அவ்வவ் வாரோபிதங்களும் யானெனதாகக் காணப் படுகின்றன. அங்ஙனம் காணப்படுபவை இன்பம்போலத் தோற்று கின்றனவேயன்றி வேறன்று. தான் தன்பால் அயலாக விகற்புறாது தானாக நிற்கின் தன்னையன்றி அயலென்பதும் அயற்சுகமென்ப தும் ஏது? தினனுபவ சொப்பனத்தில் அறிவானுக்குச் சுகம் அயற் போல விருக்கின்றதா? அன்றித் தற்சுகமாகவே விளங்குகின்றதா? ஆங்குக் காணப்படும் அயலனைத்தும் அறிவானையன்றி இன்றாகலின், அயலென்பதும் அயற்சுகமென்பதும் ஏது? இதனால் அறிவே ஆனந் தமும், ஆனந்தமே அறிவுமென்ப தாயிற்றென்க.

அன்றியும், விழிப்பாகிய சகலாவத்தை முழுவதும் அல்லல் மயமா? அன்றி அமைதிமயமா? மயமென்பது வேறு கலப்பின்றித் தான்மாத்திரமாயிருத்தல். அது சலமயம் சமுத்திர மென்றாற்போ லும், மண்மயம் பூமியென்றாற் போலுமாம். இச்சகலாவத்தை முழு

வதும் சுகக்கலப்பின்றிய துக்க மயந்தானேவெனின், துக்கமாகாத் சுகமென்பது இருக்கின்றதா? இருக்கின்றதெனின், நாம் எவ்வா றிருத்தல் சுகமெனப்படும்? மண் பெண் பொன் ஆகிய மிக்க இலாபத்தைக் கருதினேன் விரைவாகச் செல்லுதல் சுகமெனப் படுமா? அன்றித் துக்கமெனப்படுமா? சுகமெனப்படுமெனின், அங் ஙனம் செல்லுதல் நீடித்துழி அச்செல்லுதலாகிய சுகம் யாதாய் முடிகின்றது? பெருந்துக்கமாய் முடிகின்றதன்றோ? முன்னொன் றின்பமா யிருந்த அந்நடையானது பின்னொன்று துக்கமயமாயின், இன்பமென்பது எதுவெனப்படும்? விரைந்து நடப்பதன்றே! ஆக லின், பொறுமையாகச் செல்லுதல் சுகமெனப்படுமா? அன்றித் துக்கமெனப்படுமா? சுகமெனப்படுமெனின், பொறுமையாகச் செல லும் அந்நடையானது நீடித்துழி அஃது பின்னொன்று யாதாய் முடி கின்றது? துக்கமாய் முடிகின்றதன்றோ? இத்துக்கம் முற்பொழுது இன்பமாயும், பிற்பொழுது இயல்பாயு முடிகின்றது. அதன் பின்னர் உட்கார்ந்திருத்தல் சுகமாயும், அஃதும் நீடித்துழித் துக்கமாயும், அதன் பின்னர் சயனித்திருத்தல் சுகமாயும், அச்சயனம் எவ் வெவ்வா றிருக்கினும் அவ்வந் நிலைமையும் பின்னர்த் துக்கமாயு முடி கின்றது. நாம் எவ்வெவ்வா றிருக்கினும் அவ்வவ் விருப்பும் முன் னொன்று சுகம்போலிருந்து, பின்னொன்று துக்கமாய் முடிகின்ற தாயின், நாம் எவ்வாறாக இருப்பது சுகோதயமெனப்படும்?

அன்றியும், ஷை மண் பெண் பொன் முதலியவற்றை அனுப வித்தல் சுகமென்போமெனின், அவ்வவ் வனுபவமும் நீடித்துழித் துக்கமின்றி யிருக்கட்டுமே! சத்தம் பரிசம் முதலியவற்றைத் தனித் தனி அனுபவிப்பதனுல் ஈற்றில் துக்கமாகின்றதெனக் கருதி, இவ் வைந்தையும் தக்க சாதனக் கருவிகளோடு ஒருங்கே அனுபவிக்கி னும் அவ்வனுபவமும் நீடித்துழித் துக்கமாகாதிருக்கட்டுமே! தனித் தனுபவிக்கு மனுபவமும், ஒருங்கே அனுபவிக்கு மனுபவமும் முன் னொன்று சுகம்போலும் அவ்வனுபவம் நீடித்த பின்னொன்று துக்கமா யும் முடிகின்றதாயின், இங்ஙனம் மாறாது எத்துணை னொன்று நீடித் திருக்கினும் அத்துணை னொன்றும் இன்பமுற் றிருத்தலன்றோ துக்கக் கலப்பின்றிய சுகமய மென்பதற்குப் பொருள்? இதுகாறு மாராய்ந் துழியுள்ள அனுபவங்க ளனைத்தும் இக்கதியா யிருக்கின்றமையின், உறக்கமாகிய கேவலாவத்தையையேனும் அமைதியெனப்படுமா; அன்றி அல்லலெனப்படுமா! எனச் சற்றாகிக்குதும்.

அவ்வுறக்கமாகிய கேவலாவத்தையானது அமைதிமய மன்றென் போமெனின், எவ்வுயிரும் உறக்கத்தை விரும்புவானேன்? இச் சகலாவத்தையின் அல்லல் தணிந்திருத்தற் கன்றோ? உட்டினம் தணித்தற்குச் சீதளம் ஏதுவாயிருத்தல்போல இவ்வல்லல் தணிதற்கு ஏது யாதெனப்படும்? அமைதியன்றோ? அவ்வமைதி உறக்க முழு வதுமன்றோ? அவ்வுறக்கத்தை யன்றி உயிர்களுக்குச் சுகமென் பது ஏது? இன்றாகலின், அவ்வுறக்க முழுவதும் சுகமயமாமென்க. ஆங்குச் சுகமயமாயிருத்தற் கேதுவென்னை? அறிவு சோபாதிகமாய் நில்லாது அதாவது உருவபாவமாய் நில்லாது நிருபாதிகமாய் நிற் கின்றதால் அதாவது அருவபாவமாய்த் தனித்து நிற்பதால் அஃதே சுகப்பேறெனின், அங்ஙனம் தனித்து நில்லாது பிரவிர்த்தியுற்று நிகழுதல் அல்லலெனப்படினும், இவ்விழிப்பு முழுவதும் இச்சா ஞானக் கிரியைகள் அற்றதன்றாகலின், இஃது அறிவுமய மெனப் படுமா? அன்றி அறியாமைமய மெனப்படுமா? அறியாமைமய மெனப்படுமெனின், ஷெ உறக்கமாகிய கேவலாவத்தை முழுவதும் அறிவு மயமாயிருக்க வேண்டுமே! அஃதறிவு மயந்தானெனின், ஆங்கு இச்சா ஞானக்கிரியை இயங்கவேண்டுமே! அவைகள் இயங் காமையால் அறிவின்றோ வெனின், இருந்தும் மக்கினப்பட்டிருக் கின்றதன்றோ? மக்கினமாவது பிரவிர்த்தியின்றி யிருத்தலென்க. பிரவிர்த்தியின்றி யிருத்தலும் யாது! அறிவன்றோ? அவ்விர்த்தி உற்றிருத்தலும் அற்றிருத்தலு மறிவின்பாலாயின், அவ்வறிவாகிய போதம் சகல கேவலமென்னு மீரிடத்தும் உண்டென்பதற்கு முர ணென்னை? இன்றாகலின், இச்சகலாவத்தையை மாத்திரம் அறிவு மயமென்பா னேனெனின், இவ்வவத்தை முழுவதும் விர்த்திமயமா யிருத்தலால் பந்தமுத்தி சாதனங்கள் இயங்குகின்றன வாகலின், அறிவுமய மென்பதற்கு முரணின்று மென்க.

முன்னொன்று அறிவே ஆனந்தமும் ஆனந்தமே அறிவுமென்ற துண்மையாயின், இவ்வீரவத்தைக் கண்ணும் அறிவிருக்கின்றது போல் ஆனந்தமும் அவ்வவத்தைகளை விடாதிருக்கவேண்டுமன்றோ? அங்ஙனமின்றி இச்சகலாவத்தைக்கண் இன்பமற்றிருப்பா னேனெ னின், இவ்வவத்தை முழுவதினும் அறிவு எதனைக் கணனொன்றும் மாறாது நாடிக்கொண்டிருக்கின்றது? சுகத்தை யன்றோ? அதாவது நித்திய திருப்தியை. அந்த நித்தியசுகத்தை விடாது நாடுவானேன்? இவ்வவத்தைக்கண் பிரமசாலோக முதலிய நவவிதப் பதவிப்பே றெய்

தினும், திருப்தியுறாது மேலுமேலும் நித்திய திருப்திக்கே அங்காந் திருப்பானேன்? மேலாகிய அப்பதவி சுகங்களே சாலுமான தன்றெனின், இவ்விக சுகங்களா சாலுமானதற் கியைந்தது? அல்லவே! எவ்வெச் சுகத்தையும் அவ்வவ்வீற்றில் அதிருப்தியாகக்கொண்டு, சதோதயமாகிய நித்திய திருப்தியைத் தாவிக்கொண்டிருப்பானேன்? சுபாவமெனின், முடிவின்றிப்போமே! போகவே, ஞான சாதனங்கள் எற்றுக்கு?

அன்றியும், அறிவாகிய நாம் திருப்தியை விடாது நாடுவதுபோல் அதிருப்தியையும் விடாது நாடவேண்டுமன்றோ? கிஞ்சித்தும் நாடவில்லையே? சுகத்தையே நாடுவானேன்? நாம் இடையறாது நாடுவது சுகத்தையும், இடையறாது அனுபவிப்பது துக்கத்தையுமா? சுகத்தை நாடுவது அகன்றாலன்றோ துக்கமென்பவை அஞ்ஞான்றே ஒருங்கே அகன்றுவிடும். துக்கமென்பவை அகலவேண்டுமாயின், சுகதாக முன்ஞான்றே ஒழிந்துவிட வேண்டுமே! அத்தாகம் மாறாதிருத்தற்கு ஏதுவென்னை? இதனால், வேண்டுகோளாகிய சுகமென்பது அறிவைவிட்டுக் கணஞான்றேனு முண்டென்பதற் கியைந்ததா? இல்லையன்றோ! ஏன் இன்று? அன்றியும், இவ்வின்பம் அறிவை விடாததுபோல் அறிவும் சுகத்தை விடாதிருக்கின்றதன்றோ? அறிவென்பதைச் சுகமும், சுகமென்பதை அறிவும் கணஞான்றும் விடாதிருக்கின்றதே! இஃதென்ன வியப்பென்பம்! இச்சகலாவத்தைக்கண் நின்று நிகழுமறிவு கேவலாவத்தாச் சுகமன்றோ? அக்கேவலா வத்தைக்கண் நின்றிலங்கும் சுகம் இச்சகலாவத்தை அறிவன்றோ? இவற்றால் அச்சுகத்தையன்றி இவ்வறிவும் இவ்வறிவையன்றி அச்சுகமும் வேறன்று. எஞ்ஞான்றும் இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று அபேதமுற்றிருக்க, மாறுகின்றதாக அனுபவப்படுகின்றதே யெனின், சகல கேவல அவத்தையின் தர்மங்களாலன்றி வேறன்று.

எங்ஙனமெனின், இவ்விரவத்தைகளும் ஒன்றுள்ள ஞான்றொன்றின்றாய் மாறி மாறித் தோற்றுகின்றன. தோற்றவே, சகலமென்பது பிரவிர்த்தியும், கேவலமென்பது நிவிர்த்தியுமா யிருக்கின்றதால், சகலாவத்தையில் ஆனந்தம் குன்றியதுபோலும், கேவலாவத்தையில் அறிவு குன்றியதுபோலுமன்றி, அவையிரண்டும் குன்றினவன்று. எங்ஙனமெனின், நிவிர்த்தியாகிய கேவலாவத்தை

யில் அறிவென்பது குன்றினதாயின், அக்கேவலத்தில் இலட்சியார்த்
தம் யாது? ஒன்றும் தோன்றாமையன்றே? அத்தோன்றாமையில்
சுகோதயமன்றே? அத்தோன்றாமையும் சுகோதயமும் யாருக்கு?
தமக்குத்தாமே யென்பமா? அன்றி வேறொன்றிற் கென்பமா?
தமக்குத்தாமே யென்போமெனின், அவ்விரண்டும் தம்மைத் தாமே
உணர்ந்ததும், சுகித்ததுமா யாகின்றன. ஆகவே, அத்தோன்றா
மையும், அச்சுகமுமாகிய விரண்டும் திருக்குத் திரிசியுமாகின்றன.
ஆகவே, அக்கேவலாவத்தையிலும் அறிவுண்டென்பதற்குக் கிஞ்சித்
தும் ஐயமின்றாமென்க. இன்றாகலின், ஆனந்தமுமறிவும் ஏகமாகின்
றன. ஆகவே, இச்சகலாவத்தை அறிவுமயமென முன்ஞான்றே
ஒப்புக்கொண்டதால், இவ்வவத்தையிலும் ஆனந்தம் அறிவைவிட்
டிருத்தற் கெங்ஙன மியையும்?

அன்றியும், ஷை கேவலாவத்தையில் நின்று விழித்துழி அக்
கேவலத்தில் யாதும் தோன்றவில்லையென்றும், தோன்றாவிடினும்
மிக்க சுகமா யிருந்தேனென்றும் கருதிப் பிறர்க் குரைத்தலும் எது?
அறிவன்றே? அவ்வறிவு ஆங்குள்ள தோன்றாமையையும், சுகப்
பேற்றையும் ஆங்கு உணர்ந்ததை ஈங்கு வந்துணர்த்துகின்றதன்
றே? அன்றியும், ஒருவன் உறங்குஞான்று அவன் இயல்பாக
விழித்துக்கொள்ளுதற்கு முன்ஞான்றே மற்றொருவன் அவ்வுறக்
கத்தைக் கலைத்துழி, உறங்கினவன் சிங்கம்போற் சீறியெழுந்து, மிக
வும் வெறுத்துக்கொள்ளுதல் யாதுக்கு? ஆங்கனுபவித்தற் கியைந்
திருந்த சுகம் பின்னமாயிற்றென்றன்றே? ஆனந்தம் அறிவைவிட்ட
தன்றென முன்ஞான் றொப்புக்கொண்டு, இஞ்ஞான்று அவ்வானந்
தம் பின்னமாயிற்றெனக் கூறலாமோ வெனின், அவ்வானந்தம்
சகலாவத்தையாகிற பிரவிர்த்தியினாற் குன்றினதுபோலும், அறிவு
கேவலாவத்தையாகிற நிவிர்த்தியினாற் குன்றினதுபோலு மிருக்
கின்றதென முன்ஞான்றே ஒப்புக்கொண்டு, இஞ்ஞான்று அவ்வானந்
தம் அறிவுக்குப் பின்னமாகலாமோவெனக் கூறலாமா? அறிவுக்கு
ஆனந்தமும், ஆனந்தத்திற்கு அறிவும் எஞ்ஞான்றேனும் பேதித்த
துண்டா? சகலாவத்தைக்கண் ஏகதேசமேனும் சுகதாகம் விட்ட
துண்டா? கேவலாவத்தைக்கண் ஏகதேசமேனும் சுகவாழ்வை
விட்டதுண்டா? இல்லையே! நீரின்கண் ஒருவன் தனது சிரம்
மறைய முழுகியிருந்தும் தனது சலதாகமாறாது உற்றிருந்ததால் அந்
நீர்ப்பொருள் சேய்மையுற்றதாமா? அதுபோல் சகலாவத்தையில்

அறிவானது சுகாகாரமா யிருந்தும், தனது பிரவிர்த்திப் பராக்கிறுற் சுகம் செய்மையுற் றிருக்கின்றதாக மயங்கியது குறித்துச் சுகமானது தனக்கயலா யிருக்கின்ற தென்னலாமா?

அன்றியும், ஆங்காங்கும் பெண்பாற் குழாங்கள் வக்கணை யோடு துக்கிக்கும் ஞான்று, அவ்வவ் வாராமைகள் எங்கிருந் தெழு கின்றன? அறிவிலிருந் தெழுகின்றனவெனின், அங்ஙன மெழு வானேன்? தம்மால் அபிமானிக்கப் பட்டவர்களுக்கு ஆனியுற்றதனு லெனின், அவ்வானி யுருக்காறும் அம்மாதர்களுக் கியாதிருந்தது? சுகமிருந்ததன்றே? அவ்வச் சுகத்தையும் அவ்வவரும் கருதாதுழி, ஷை அவ்வவ் வாராமையும் ஏது? முன்ஞான்றிருந்த அவ்வச்சுகத் தையும் உன்ன உன்னத் துக்கவெழுச்சியாயின், அவ்வுன்னல் சுகத் தையன்றியும், அச்சுகம் சுகிப்பானுகிய அறிவை யன்றியும், அவ் வறிவும் சுகத்தை யன்றியு முண்டெனப்படுமோ? படாதாகலின், எஞ்ஞான்று மிருப்பது ஞெப்திப் பிரிய மென்றுயிற்று. ஆகவே, அறிவானந்த ஐக்கானுபவமென முன்ஞான்று கூறியதற்கு முரணென்னை? அஞ்ஞானமாகிய இவ்வசுத்த சகல கேவலங்கள் முழு வதிலும் அறிவைவிடாத ஆனந்தமும் ஆனந்தத்தை விடாத அறிவு மின்றுயின், ஞானமாகிய சுத்த சகல கேவலங்களிலேயா இவ்வறி வானந்தம் பேதித்திருக்கும்? அறிவுக்கு ஆனந்தம் வேறெனின், அறிவு என்ன அறிவாய் முடியும்? இன்பங் கெட்டதாய் முடியுமன் றே? இன்பங் கெட்டதாயின், துக்கமுற்றதெனப்படுமன்றே? துக்கமுற்றது சடமெனப் படுமன்றே? துக்கசட மென்பது அசத் தெனப்படுமன்றே? துக்கம் சடம் அசத்து எனப்படுவது யாதெனப் படும்? அறியாமை யெனப்படு மன்றே? இவற்றுல், அறிவென் பதற்குப் பொருளெங்கே! இது நிற்க.

ஆனந்தத்திற்கு அறிவு வேறெனின், ஆனந்தம் என்ன ஆனந் தமாய் முடியும்? அறிவு கெட்டதாய் முடியுமன்றே? அறிவு கெட்ட தாயின் சடமெனப் படுமன்றே? சடமெனப்படுவது அசத்தெனப் படுமன்றே? சடமசத்தென்பது துக்கமெனப் படுமன்றே? சடம் அசத்து துக்கம் எனப்படுவது யாதெனப்படும்? அஃதும் அறியாமை யெனப் படுமன்றே? அறிவானந்தம் தனித்தனிப் பொருளெனு எங்ஙனம் ஏற்கின்றது? ஞானமாகிய சுத்த சகல கேவலமென்ப தியாதெனின், ஷை அஞ்ஞான சகலாவத்தை அசுத்தத் திரிபுடியாக இருக்குமாறுபோல், ஞான சகலாவத்தை யென்பது சுத்தத் திரிபுடி

யாக இருக்கின்றதென்க. திரிபுடியாவது—ஞாதுரு ஞானம் ஞேயம் எனப்படுவனவாம். ஞாதுருவென்பது முதற் பொருளாகியும், ஞானமென்பது அம்முதலினது சத்தியாகியும், ஞேயமென்பது அச்சத்தியின் காரியமாகியு மிருப்பது. அசுத்தத் திரிபுடியாவது—அவித்யாப் பிரதிபிம்பனன சிதாபாசாந்தக் கரணேந்திரியோபாதிக ளனைத்துமாமென்க. இத்திரிபுடி மூவிதமா யுள்ளன. அவை பாகியத்திரிபுடியெனவும், மத்தியத்திரிபுடி யெனவும், ஆந்தரத் திரிபுடியெனவுமாம். (அதாவது உள் திரிபுடியெனப்படுவது)

க-வது, பாகியத்திரிபுடியென்பது - எத்துணைக் கல்விகேள்விகளிற் சிறந்தும், தூலசரீரம் வினைமுதலாகத் தோற்றுகின்றதால், இத்தூலமே ஞாதுருவெனவும், இத்தூலத்திற்கு ஐம்பொறிகளில் பரிசேந்திரியம் ஆதாரமா யிருந்தும், இத்தூலத்துள் மற்ற விந்திரியங்களோடு நின்றுணர்வதுபோ லிருத்தலால் இவ்வைந்திந்திரியமும் ஞானமெனவும், சத்த முதலிய ஐந்து விடயங்களும் ஞேயமெனவுமாம்.

உ-வது, மத்தியத்திரிபுடியென்பது - மன முதலிய அந்தக்கரணம் ஞாதுருவெனவும், ஷை தேகேந்திரியங்கள் ஞானமெனவும், ஏனைய சத்த முதலிய விடயங்கள் ஞேயமெனவுமாம்.

ந-வது, ஆந்தரத்திரிபுடி யென்பது-சிதாபாசன் ஞாதுருவெனவும், ஷை மனமாதிகள் ஞானமெனவும், ஏனைய தேகேந்திரியாதியனைத்தும் ஞேயமெனவுமா மென்க.

இத்திரிபுடிகள், பொருளல்லாததைப் பொருளென் றுணர்தலும், பொருளல்லாதது பொருள்போற் றோற்றுதலு மாகலின், இஃது அசுத்தத்திரிபுடி யெனப்பட்ட தென்க.

சுத்தத்திரிபுடியென்பது "இருளிற் சுடரென்ன விந்திரவின்ன" என்றறிஞர் அருளியவாறு சொரூப சமாதிக்கண் மின்மினி யொளி போல் தற்பிரகாசம் வெளிப்பட்டது முதல் வயோதிகப் பருவம் போன்ற அந்தச் சொப்பிரகாசானுபவ முதிர்ச்சிகாறுமுள்ள இலட்சியார்த்தமே ஞேயமெனவும், அந்த ஞேயமாகிய விளக்கக்குறியைக் குறியாது குறித்துணரும் நெறியாகிய மெய்யுணர்வே ஞானமெனவும், அம்மெய்யுணர்வுக்கு வினைமுதலாகிய சிவமே ஞாதுருவெனவுமாமென்க. அவ் வினைமுதலைச் சிவமென்பானேனெனின், சிவமென்பது காந்திமான் என்பதனுலென்க. காந்திமான் என்பானேனெனின், பிரகாசமென்றும் பிரகாசியென்று மிருவகையின. அவ்வி

றுள், பிரகாசமென்பது காந்தியெனவும், பிரகாசியென்பது காந்திமானெனவு மாகின்றதால், சிவப்பிரகாசமென் ருயிற்று. அதாவது— வியாபக விளக்கமென்க. வியாபகம் ஞாதுருவெனவும், விளக்கம் ஞேயமெனவும், இந்த ஞாதுரு ஞேயமாகிய இவ்விரண்டின் மத்தியில், இவ்விரண்டினையும் தழுவி நிகழும் ஸ்புரணவடிவமே ஞானமெனவுமா மென்க. இங்ஙன மிலங்கும் திரிபுடியானுபவ மானது, தானென்னும் ஓர் உபசாந்த நிலையையன்றி யின்ருயினும், இவ்வனுபவமுள்ள ஞான்றும் இஃது சித்துத்திரிபுடி யென்பதா? அன்றிச் சடத்திரிபுடி யென்பதா? சித்துத் திரிபுடியாகலின் இத்திரிபுடி ரகித அகம்பொருளே வேதாந்தமென்னும் சுவானுபவாதீதப் பிரமோக மென்பதாமென்க. இதற்கு உதாரணம்:—

ஞானவாசிட்டம்.

"இருளன்றி யொளியன்றி யளவன்றி யலேவன்றி
யியல்பொன் றின்றிப்
பொருகின்ற பூதங்கள் பலபொருள்க ளன்றிநிறை
புரண மாகி
யுருவன்றி யருவன்றி யுளதன்றி யுண்டில்லை
யென்று மொன்ருய்
வருகின்ற திரிபுடியி னடுத்தோன்று மறவாது
மதித்துக் கொள்வாய்."

எனக் கூறியவாற்ருற் காண்க. ஷை சொரூபசமாதிக்கணுள்ள திரிபுடியனுபவம் அறிவெனப்படுமா? அன்றி ஆனந்தமெனப்படுமா? ஆனந்த மெனப்படுமெனின், திரிபுடிரகிதம் யாதெனப்படும்? அஃது அறிவுமய மென்பதாக்கும்! ஆகவே, அந்த ரகிதம் சகலாவத்தை யெனப் படவேண்டுமே! ஷை அஞ்ஞான நிசைக்கணுள்ள சுழுத்தியவத்தை சகலாவத்தை யென்பதாயின், இத்திரிபுடி ரகிதானுபவமும் சகலாவத்தையெனப்படும். அஃது அங்ஙனமில்லையே! இஃது இங்ஙனமிருக்க. அச்சுழுத்தியவத்தை திரிபுடிரகிதமாகலின், அஃது கேவலாவத்தை யெனப்பட்டது. அங்ஙனமே, இஞ்ஞான நிசைக்கண் இத்திரிபுடி ரகிதமானது கேவலாவத்தை யெனப்படாது சகலாவத்தை யெனப்படுமோ? அன்றியும், திரிபுடிசகிதானுபவம் சகலமென்பதால் இச்சுத்த சகலமே துரியாவத்தை யெனவும், இத்திரிபுடி ரகிதானுபவம் கேவலமென்பதால் இச்சுத்த கேவலமே துரியாதீதாவத்தை யெனவுமாமென்க. துரியாவத்தை அறிவு விளக்கமும், துரியாதீதாவத்தை ஆனந்தோதயமுமா மென்க.

அன்றியும், சங்கற்பமென்பது மூன்றுவகையின. அவை-மன விகற்ப சங்கற்பமெனவும், நிர்விகற்ப சங்கற்பமெனவும், சவ்விகற்ப சங்கற்ப மெனவுமாம். மனவிகற்ப சங்கற்ப மென்பது-அஞ்ஞான திசைக்கண் ஷை பாகியத் திரிபுடிமுதல் மூவிதத் திரிபுடிகளும், நிர் விகற்பசங்கற்ப மென்பது-ஞானதிசைக்கண் தன்னைச் சொப்பிரகாச வடிவமெனக் கண்டுகண் டனுபவிக்கும் ஷை திரிபுடி சகிதானுபவ மும், சவ்விகற்ப சங்கற்ப மென்பது-தன்னை ஆனந்த வடிவமெனக் கண்டுகண் டின்புறும் திரிபுடி சகிதானுபவமுமாம். அறிவு வடிவாய் விளங்கும் நிர்விகற்பமும், ஆனந்தவடிவாய் நிற்கும் சவ்விகற்பமும் சங்கற்பமெனப்படுமோ வெனின், தானென்பது சுசாதி முதலிய மூன்று மயக்கமுமின்றி, அறிவே வடிவாய் விளங்கினும் அவ்விளக் கம் ஓர் ஞான்றாகலின், (அதாவது சொரூபசமாதி மட்டுமென்பது) அவ்வோர் ஞான்றும் மூடவிருத்தி கோரவிருத்தி யெனப்படாது சாந்தவிருத்தியாயினும் அது விவேகவிருத்தி யெனப்படுதலினாலும், தானென்பது ஷை சுசாதி முதலிய மூன்றாள் சுகதபேத கற்பனா மயக்கங்களுக் காதாரம்போ லிருக்கு மின்பமே வடிவாய் நிற்கினும் அவ்வின்பநிலை ஓர்ஞான்றாகலின் (அதாவது சகசசமாதிமட்டு மென் பது) அவ்வோர்ஞான்றும் மூடவிருத்தி கோரவிருத்தி யிறந்த சாந்த விருத்தியாயினும் அது அகண்டாகார விருத்தியெனப் படுதலினா லும், சங்கற்பமென்பதற் கையமின்றென்க. ஷை மனவிருத்தியின் சேட்டையும், அச்சேட்டை யின்மையுமாகிய அசுத்த சகல கேவலா வத்தையிலேயே ஷை அறிவானந்தம் பிரிவற் றிருக்கின்றதாயின், ஷை வியாபகவிளக்க வுணர்வாகிய சுத்தத்திரிபுடி யென்னும் விவேக விருத்தியே சுத்த சகலமும், இத்திரிபுடியாகிய விவேக விருத்தியின் அயர்வே சுத்த கேவலமுமாகலின், இச்சகல கேவலத்திலேயா அவ் வறிவானந்தம் பிரிவுற்றிருக்கின்றது? அக்கினியினது உட்டினமும் பிரகாசமும் பிரிவுற்றிருக்கின்றதா? இன்றன்றோ? அவ்வபேதமா னது விளக்கின்கண் ஒளிமிகுதியாயும் கட்டையின்கண் உட்டினம் மிகுதியாயு மிருக்கினும், அவ்விளக்கின்கண் உட்டினமும் கட்டை யின்கண் ஒளியுமின்றோ? இருக்கினும், அவ்வவற்றில் அததுவும் குன்றியிருக்கின்றது. அதுபோல், தானே தானாகிய அறிவானந்த ஒருமை ஷை சுத்தாசுத்த சகலாவத்தைகளில் அறிவு மிகுந்திருக்கி னும், ஆனந்தமின்றோ? இன்றெனின், அவ்விரண்டினும் அறிவு ஆனந்தானுபவ மின்றாயினும், ஆனந்தாகாரமாகவேனும் இருக்கின்ற தன்றோ? அங்ஙன மிருத்தல் ஆனந்தம் குன்றினதுபோலும். ஷை

சுத்தாசுத்த கேவலாவத்தைகளில் ஆனந்தம் மிகுந்திருக்கினும் அறி வின்றே? இன்றெனின், அவ்விரண்டிலும் ஆனந்தம் பிரவிர்த்தி யானுபவ மின்றாயினும், நிவிர்த்தியாகவேனு மிருக்கின்றதன்றே? அங்ஙன மிருத்தல் அறிவு குன்றினது போலுமா மென்க.

இவற்றால் அறிவானந்தம் பிரிவற்றதாயிற்று. ஆகின்றதால், ஒவ்வொரு போதமும் இருவகைச் சமாதிகளிலும் பலகற்பமும் பழகிப் பழகி இவ்வறிவானந்த ஒருமையானுபவம், அதாவது தானு னந்தானுபவம் எய்தவேண்டுமென்றே? இங்ஙன மெய்தியிருத்தலே தானறிவானந்த மாயிற்று. இத்தானென்பதை யன்றி விடயானந் தம் வேறாகவிருக்குமாயின் அடி அறிவானந்தமும் வேறாக விருக்க லாம். இருக்கின்றதேயெனின், ஒவ்வோர் விடயமும் சோதனையில் தானாக முடியாதிருக்கட்டும். முடிகின்றதால், அவ்வறிவானந்தமும் தானென்பதையன்றி இன்றென்பதாயிற்று. ஆகலின்,

திருக்குந்திரிசிய விவேகம்.

"தானறிவா னந்தமதாற் றன்விடயா னந்தமதாந்
தானவத்தை யாதியெனல் சாற்றவோ—யானிதனை
யொவ்வோர் விடயத்து மொவ்வொன்றாக் காட்டிடுவன்
செவ்விதாக் காண்பவர்க்குச் சென்று."

என்றருளியிருக்கின்றதைக் காண்க. அன்றியும் இவ்வறிவானந்த ஒருமையினை.

தத்துவராயர் பாடுதுறை.

"சாதி கழிந்ததென் றாதேடா காளஞ்
சங்கை தவிர்ந்ததென் றாதேடா காளஞ்
சோதி சுகமேயென் றாதேடா காளஞ்
சொல்லவொண் ணாததென் றாதேடா காளம்." என்றும்,

"அதுவேகா ணிதுவென்றொன் றாரிய னருள்செய்ய
விதுவது வாகுமென் றுந்தீபற
விலக்கணைப் புகுந்ததென் றுந்தீபற."

என்றும் கூறியவாற்றாற் காண்க.

ஒவ்வோர் போதமும் எத்தகையதாகிய பக்குவமுற்றிருக்கவேண் ண்டியது? பின்னான்று எத்திறத்தர்பாற் சென்று தஞ்சமென் றடையவேண்டியது? அதன் பின்னான்று அத்திறத்தர்பாற் சென்று எவ்வாறுழைத்து எவ்வாறு தெளிந்திருக்கின்றதெனின், அகத்தும் புறத்தும் காணப்படுவனவாகிய,

முதலாவது

சர்வமும் தமக்கெனச் சற்றும் பொருளின்றிய ஆரோபமெனக் கண்டு இவற்றின்மீது முற்றும் விரக்தியுற்று,

உத்தமவாதநூல்.

"அல்லவற்றை நானெனலி லற்பரினு மென்சிறந்தோ
மல்லவற்றைக் கோனெனினு மங்ஙனமே—சொல்லளவா
வாதிக்கக் கற்றுணர்ந்தீர் வாயடங்கிக் கேட்டுய்மின்
போதிக்கத் தக்கவர்பாற் புக்கு." என்றும்,

"தன்னைத்தான் காணிற் றலைவன் றலைவல்ல
தன்னுருவ மல்லவெலாந் தானன்று—தன்னை
யறியாத் தகையதனு லாய்துமின் வல்லீ
ரெறியன்மி னென்சொல்லை யீங்கு." என்றும்,

அருளிய இவ்வாக்கியங்களுமன்றி இவைபோன்ற அரியவாக்கியங் களையும் நன்குன்னி ஷெ நானென்னும் அப்போதமானது தன்னை எது நான் எது நானெனப் பலகற்பமும் தேடியும் காணேனென்னு மாராமையும் அதி தீவிரதர முற்றிருத்தலும்,

இரண்டாவது

குறள்.

"இழுக்க லுடையுழி யூன்றுகோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்."

எனக் கூறிய இவ்வரிய வாக்கியத்திற் குறிக்கப்பட்ட அகம்புற மென்ப திறந்து தானேதாகிய ஞானசற்குருவின்பா லடைந் திருத்தலும்,

மூன்றாவது

தாயுமானவர்.

"கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறு வுற்பவநோய் மாறுமோ—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றேதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம்."

என்றருளிய இவ்வாக்கியமுமன்றி இதுபோன்ற வாக்கியங்களையும் நன்குன்னிச் சிரவணம் மனனம் நிதித்தியாசனமட்டில் நில்லாது, மேலே பலகற்பம் சமாதி கூடி ஈற்றில் ஷெ அறிவானந்த ஒருமை யாகிய சாட்சாத்கார மாதலுமா மென்க.

அன்றியும், இப்பரிபாகிகட்கு அப்பரமாசிரியர்கள் நேரிடுதலையும் அங்ஙனம் நேரிட்ட பின்னன்றி அவர்கள் இவர்களைப் பாதுகாத்தலையும், அங்ஙனம் பாதுகாத்தலுக்கு இவர்கள் ஒத்திருத்தலையும் திருட்டாந்த பூர்வமாக உணர்த்துதல். இவ்வதிதீவிரதர பரிபாகிகள், கப்பலைச் செலுத்தும் மாலுமிகள் தமக்குக் கிஞ்சித்தும் எல்லை கரைகாணாது அவ்வகண்ட சமுத்திரத்திற் கிடையில் திசைதப்பித் திகைதிகைத்து அலையும் ஞான்று அவர்களுக்குத் தெய்வகதியாக ஓர் தீவு கண்கூடானாற்போல், இவர்கட்குப் பொருளல்லாதவை பொருள்களாக ஆரோபிதமாய்த் தோற்றினும், அவற்றினுக்கும், தற்போத மெட்டாமைக்கும் கிஞ்சித்தும் சகியாமல் திகைத்து அலையும் ஞான்று அவ்வாசிரியர்கள் நேரிட்டு,

கைவல்லிய நவநீதம்.

“ வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்தி றந்து
தீராத சுழல்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப் பிரமையிற் றிரிவன் போத
மாராயுந் தன்னைத் தானென் றறியுமவ் வளவுந் தானே.” என்றும்,

வேதாந்த இலக்கணம்.

“ பூர்வசித் தாந்த வடுக்கு நெறியால்
வலித்திழுத் துப்போய் மாறு வாழந்
தெரிக்கவல் லவனாற் றேர்தன் ஞானம்.”

என்றும் அருளியிருக்கின்றபடி அவ்வாசிரியர்கள் தாம் மார்ச்சால நியாயம்போல், அதாவது பூனைகள் தாம் செல்லுமிடமெல்லாம் தமதுகுட்டிகளைக் கவ்விக்கொண்டுபோய் வைத்து வைத்துப் பாதுகாத்து அவற்றை வளர்த்து விடுவதுபோல், இவ்வாசிரியர்கள் தம்மை வந்தடுத்த பரிபாகிகளைத் தாம் முன்னன்றி அகமுக நெறிக்கண் வாச்சியார்த்த லட்சியார்த்தமாகத் தெளிந்த ஆங்காங்கும் அழைத்துக்கொண்டுபோய் வைத்து வைத்துத் தானே தானக் குவிக்க, அங்ஙனமே இப்பரிபாகிகள் மர்க்கட நியாயம்போல், அதாவது குரங்கின் குட்டிக் குழாங்கள் தத்தம் தாய் செல்லுமிடங்கடோறும் அத்தாயைக் கணமும் விடாது சென்று சென்று வளர்ந்து நிகழுவதுபோல், ஆசிரியர்களது திருநோக்கின்படியே இப்பரிபாகிகளும் அகமுகநெறிக்கண் கூடவே சென்று சென்று ஷை வாச்சியார்த்த லட்சியார்த்தமாகத் தெளிந்து, தானே தானக இருத்தலுமா மென்க.

இஃது இங்ஙனமிருக்க, முன்ஞான்று ஞான சற்குருவென இரண்டாகக் கூறியது எற்றுக்கெனின், ஞானுனுபவ மெனவும், தானுனுபவமெனவு மிரண்டாக விருக்கின்றதனுலென்க. இவ்விரண் டனுபவத்துக்கு மியைந்தவர் ஒருவராயிருக்கினும், இவ்வொருவரை யே ஞானகுரு வெனவும் சற்குருவெனவும் இரண்டாகப் பிரித்துக் கூறியிருக்கின்றது. ஞானகுருவெனப் பிரித்த தியாதுக்கெனின், ஞானமென்பது இருவகையின. அவை—போலிஞான மெனவும், உண் மைஞான மெனவுமாம். அவ்விரண்டுள் போலிஞான மென்பது இஃதெனத் தெரியாத தம்மைத்தாம் ஞானிகளென நடிப்பது. அவ் வாறு நடிப்பவர்கள் விடயகதப் பிரத்தியட்சத்திற் கியைந்த சரியை கிரியை யோகம் என்னும் இம்மூன்றின் மாத்திரம் நன்கழுந்தி முறைபிறழா தொழுகி, இம்மட்டிலே தம்மைத் தீர்ந்த ஞானிகளாக மதித்து, நாமரூபங்களைக் கரைத்தற் கிணங்காது, அவற்றை வினை முதலாக மயங்கிய சரித்திரங்களையன்றி முடிவென்பது வேறேயின் றெனத் துணிபுற்று, மேல் நிகழும் ஞானமொன் றுண்டென்ப வரைத் தூடித்துக்கொண் டிருப்பவரும், இச்சரியையாதிகளில் நன் கழுந்தினவர்போல் தம்மைக் காட்டிக்கொண்டு வேடத்தாலும், சொல் லாலும் நடித்துப் பிறபோதையினிடத்தும், கைம்பெண்களிடத்தும் நன்கழுந்தி ஞானநூல்களையும் மிகக் கற்றுத் திரிபவருமாம். இங் ஙன மிருப்பவரைக் கள்ள ஞானிகளெனப் பிரித்தற்கு அங்ஙனம் ஞானகுருவெனக் கூறினதேயன்றி வேறன்றென்க.

எனவே, முதற்கண் கூறப்பட்டவர்கள் தீர்ப்பென்பதியாதோ அதை வறிய சொல்லாற்றலினுலும், இரண்டாவது கூறப்பட்டவர் கள் வறியசொல்லோடு வேடத்தாலும் மயக்குபவருமாமென்க. அங் ஙனம் கூறியது இவர்களை நிக்கிரகித்தற்கேனும், அவ்வகையான ஞானகுருவினது ஞானுனுபவ மென்ப தியாதெனின்,

ஞானகுருவினிலக்கணம்.

முன்னர் அனைத்தும் சதுர்ஞான்றும் தமக்கெனச் சற்றும் இருப் பென்பதின்றிய மித்தையெனத் தேர்ந்திருக்கினும், மீண்டு மீண்டும் அவைகள் தோற்றிக்கொண்டேதானிருக்கும். ஆயினும், அவ்வத் தோற்றங்கள் முன்ஞான்றுபோலின்றிக் கயிற்றரவு முதலியவை போல் தோற்றுமாகலின், கன்னற்கட்டியை யூட்டிச் செய்யப்பட்ட பணியாரங்கள் இனிப்பு மயமாவதுபோல், அஃது தோற்றல் மாத்திர

மாகிய சீவேசுர சகத்துக்கள் ஒவ்வொன்றினும் சமாதிக்கண் விளங்கிய தனது ஞானப்பிரகாசத்தைக் கொடுத்துக் கொடுத்துத் திருட்டியழுந்துந்தோறும், அத்தோற்றங்கள் ஒவ்வொன்றும் கரைந்து கரைந்து, பின்னொன்று அனைத்தும் ஷை தனது ஞானப்பிரகாசமாகத் தோன்றுமன்றோ? அங்ஙனமிலங்கும் சுயம்பிரகாசத்தையன்றி அன்னியமாக அணுத்துவமேனு முண்டெனப்படுமோ? இல்லாவழி, எது அகமென்பதற்குப் பொருள்படும்? வேறின்றாகலின், அச்சுயம்பிரகாசத்தையே இது நான் இது நானெனப் பல கற்பமும் கண்டு கண் டின்பாகாரமாய்ப் பழகிக்கொண் டிருக்கவேண்டி வருமன்றோ? இங்ஙனம் பழகுவது ஞானநுட்டானமாகலின், இந்த ஞானநுட்டானிகளைத்தான் ஷை ஞானகுருவென் றுரைத்திருக்கின்றதென்க.

இங்ஙனம் விடாது அப்பியாசிக்கு மனுபவம் ஞானமாயினும், இஃது ஐந்துவித அனுபவமா யிருக்கின்றன. அவை க-வது, தனக்கெனப் பொருளின்றித் தோற்றல் மாத்திரமாக நிகழும் சீவேசுர கற்பனைகள் சின்மாத்திரமாகக் கரையப் பட்டுக்கொண்டிருக்கினும் இவை அநாதி மயக்கமாகலின், ஷை ஞானநுட்டானம் நன்கு நிலைக்குங்காறும் இடையிடையே கரைந்து கரைந்து தோற்றுவது இயல்பாகுமன்றோ? இயல்பாயினும் எது இங்ஙனம் தோற்றுவது? தற்பிரகாசத்தையன்றி யுண்டெனப்படுமோ! படாமையால், இவை யனைத்திற்கும் உபாதானகாரணம் யாதெனப்படும்? தானாகலின் தானே முதற்காரணமாயும், உ-வது, அவ்வாறாயினும், இத்தோற்றங்கள் தானெனப்படுமா? படாததால் இவற்றிற்குத் தான் விலட்சணமாயும், ங-வது, இத்தோற்றங்கள் மாறிக்கொண்டேயிருப்பது எதன்பாலெனப்படும்? தன்பாலெனப்படுமன்றோ! ஆகலின் தான் வியாபகமாயும், ச-வது, இத்தோற்றங்கள் காணப்படுவது எதற்கு? தனக்காகலின் தான் சாட்சியாயும், ரு-வது, இத்தோற்றங்கள் விளங்குவது யாதினாலெனப்படும்? தன்னாலாகலின் தான் விளக்க வடிவாயும் ஆகின்றன. எனவே, தானென்பது சர்வோபாதானமெனவும், சர்வ விலட்சணமெனவும், சர்வாதாரமெனவும், சர்வசாட்சியெனவும், சர்வப்பிரகாசமெனவும் ஆயிற்று. ஆகவே, இச்சீவேசுர சகத்தனைத்தும் தனது சாயைகளாகலின், சர்வமும் நானெனவும், இச்சாயைகளுக்கு ஆனி விருத்தி எத்துணை மீக்குறினும், கிஞ்சித்தும் தனக்கின்றாகலின் சர்வாதீதமெனவும், இச்சாயைகளுக்குத் தான் இடமாயிருத்தலின் சர்வாதாரமெனவும், இவற்றைச் சர்வக்ஞத்துவமாக

நின்றுணர்தலின் சர்வ சாட்சியெனவும், இவையனைத்தையும் விளக்கிக் கொண்டிருத்தலின் சர்வப்பிரகாசமெனவுமா யிருத்தலே, ஷை முக்கியானுபவமாமென்க.

அங்ஙனமாயின், ஞானகுருவென்றது சற்குருவெனப் பிரித்த தியாதுக்கெனின்,

இஃது போலிஞானம்.

சிலர் அஞ்ஞானமென்பது முழுதும் நசித்தற் கியைந்த அபர ஞானமெனவும், பரஞானமெனவும், திரஞானமெனவும் மூன்றுண் டெனக் கூறி, அவற்றுள் திரஞானத்தைக் கேட்டு மறியாமலும், ஷை பரஞானனுபவ மின்றியும், அப்பரஞானனுபவத்திற்கு எதிர் மறையான ஓர்வித ஞானனுபவத்தை யெய்தி (அதாவது கிஞ்சித் தும் அஞ்ஞானமென்பது நசிப்புறாது நீங்கியதுபோ விருக்கும் ஞானம்) இந்த ஞானத்தினால், மோட்சானுபவிகளைப்போல், (அதா வது ஞானஞ்ஞானரகித நிரதிசயானந்தானுபவிகள் போலிருந்து) அடுத்தவராது அஞ்ஞானிகளை யகற்றற்கு இவ்வஞ்ஞானிகள் அகலாத வேதபாகிய அந்த ஞானனுபத்தாலும், அவ்வனுபவத்திற் கியைந்த வேதபாகிய சுருதிகளாலும், (அச்சுருதிகளாவது சதுர்த் தச வித்தைகளாகிய சத்பிரமாணங்களுக்கு மிணங்காதவைகள்) அஞ் ஞானிகளை மறையச் செய்பவர்களும், இங்ஙனமாகிய ஞானனுபவ ஆதரவு சற்றுமின்றி வேதபாகியமான ஷை சுருதிகள் மாத்திரத்தாற் பிறரை மயக்கி வைத்துக்கொண் டிருப்பவர்களுமாகிய இவ்விருபட் சத்தாரும் தீர்ந்தானுபவிக ளன்றெனக் களைதற்கு ஷை சற்குரு வெனக் கூறினதேயன்றி வேறன்றென்க.

அஞ்ஞானமென்பது சற்றும் நசிப்புறாது அகன்றதுபோ விருக் கும் ஞானனுபவமென்ப தியாதெனின்,

ஒழிவிலொடுக்கம்.

"காணு மறிவுநீ காட்டறிவு நாமவற்றைக்
காணக் கழலுங் கழற்றியிலே—நாணி
நமைத்திரும்பிப் பாராதே நான்றானென் றதே
யமிழ்த்துகர கம்போனிற் பாய்." என்றும்,

"வதுவைச் சடங்கதனை மைதுனமாக் கொண்ட
புதுமைச் சிவானந்தம் போதும்—பதையா
விளக்கொளியி லெண்ணெய் வியாபியா றற்போற்
கொளக்கொடுத்தல் சத்தியமாக் கொள்."

என்றும் கூறியிருக்கின்றது.

தத்துவங்கள் ஒவ்வொன்றையும் ஆத்மாவானது நானன்று நானன்றென நியதி களைந்து களைந்து சென்று, தனிப்பட்டிருக்கும் முடிவில், எஞ்ஞான்றும் அறிவுக்கறிவாய் நின்றிலங்கும் திருவருளானது வெளிப்பட்டு, முன்ஞான்று தனிப்பட்டிருந்த ஆத்மாவை அயத்தை இழுக்கும் காந்தம்போல் இழுத்து, தனக்காதார குணியாகிய சிவவியாபகத்தில் கடலின்கண் கடமானது அமிழ்ந்துவிடுவது போல் அமிழ்ச்செய்து, பின்னர் விளக்கொளியில் எண்ணெயானது வியாபித்து அவ்விளக்கொளிக்குத் தான் உணவாய்விடுவதுபோல், ஷை சிவத்தி லழுந்திய இவ்வாத்மா அச்சிவத்திற்கு உணவாகுமாறு செய்விக்கின்றது ஷை திருவருளெனக் கூறுகின்றதன்றோ? இவ்விருகவிகளும் சித்தாந்த பட்சம். க-வது, ஷை முதற்கவியில் சலவியாபகத்து ளொடுங்கிய கடப்பொருளானது அச்சலத்துக்குத் தான் வேறுபொருளா யிருக்கின்றதுபோல், சிவத்துளொடுங்கிய சீவப் பொருளானது அச்சிவத்துக்குத் தான் வேறு பொருளா யிருக்கின்றது. இதனால், முத்தியென்பது இரண்டறக் கலத்தலென்பதெங்கே? இன்றாகலின், அத்துவிதமென்பது விருத்தமாகின்றதே! சிவமும் ஆன்மாவும் பிரிவுற்றிருக்கும் ஐக்கானுபவமே ஒன்றெனவும் இரண்டெனவும் படாத அத்துவித முத்தியென்பதெனின், சிவமுமான்மாவும் அநாதி இரண்டாகலின் முத்தியில் ஒன்றல்லவென்பது உண்மையே! அதனோடு இரண்டு மல்லவென்பது எங்ஙனம் கூடும்? பிரிவற்றிருத்தலே இரண்டென்ப தல்லவெனின், கதிரொளியில் விளக்கொளி இரண்டுபடாதிருக்குமாயின், சிவவொளியில் சீவனாகிற சிற்றொளி இரண்டுபடாதிருக்கும். கதிரொளி மிகுதியில் விளக்கொளி தோன்றாதிருக்கில் அவ்விளக்கொளி வேறன்றெனப்படுமோ? இதுபோல், சிவப்பிரகாசத்தில் சீவ சிற்றொளியானது தோன்றாதாயின், சீவன் வேறன்றெனப்படுமோ? சிவமும் ஆன்மாவும் அநாதி இரண்டாகலின் அவ்விரண்டும் கலந்த ஞான்றும் கலக்காஞான்றும் இரண்டென்பதற்கு முரணென்னை? இன்றாகலின், அத்துவிதமென்பது அடாதென்ப தாயிற்றென்க.

ஷை இரண்டாவது கவியில் விளக்கொளியில் வியாபித்த எண்ணெயானது அவ்விளக்கொளிக்குத் தான் உணவாகிய பின்னர், எண்ணெயென்பது அணுவணுப் புகைவடிவா யெழுச்சியுற்றுச் சூனியமாகிப் போகுமன்றோ? அதுபோல், சிவத்திலொடுங்கிய ஆன்மாவானது அச்சிவத்தில் வியாபித்துப் பின்னர் அதற்குத் தான் உணவாகிய ஞான்று, ஆன்மா வென்பது உண்டெனப்படுமோ? படாதாகையால், இவ்வான்மா அநித்திய விலக்கண மேற்பதுமன்றி அஞ்ஞாதி நித்தியமெனக் கூறியிருப்பதும் பொய்ப்பட்டுப் போகின்றதென்க. அன்றியும், சிவத்தோடு ஏகமாதற் கியைந்த ஆன்மப் பொருளானது தான் அஞ்ஞாதியாயுள்ள பாசத்தை நோக்குங்கால் சத்தெனவும், பதியை நோக்குங்கால் அசத்தெனவு மாகின்றது. இவ்வான்மா பாச நோக்கிற் சத்தாயிருக்குங்காறும் அசத்தெனப் படாமலும், பதிநோக்கில் அசத்தாயிருக்குங்காறும் சத்தெனப்படாமலு மாகின்றதாயின், இதற்கு இவ்விரண்டுள் எதுவா யிருக்கு மிருப்பு மாறாத நிலையெனப்படும்? பதியின்கண் அசத்தாயிருக்குமிருப்பே நிலையெனப்படுமெனின், முன்ஞான்று பாசத்துள் சத்தாயிருந்த இருப்பு நிலையாயிற்று? பின்ஞான்று பதியுள் அசத்தாயிருக்கு மிருப்பு நிலையெனப்பட? அஞ்ஞாதியாயுள்ள பாசவசமே நிலையாவுழி, இடைஞான்று வாய்க்கும் அருள்வசமோ நிலைத்திருக்கும்? அன்றியும், ஆன்மா சதசத்துப் பொருளாயின், இவ்விரண்டு எதிர்மறை நிலைமையும் எங்ஙனம் அபேதமாயிருக்கும்? சத்துள்ள ஞான்று அசத்தும் அசத்துள்ள ஞான்று சத்துமின்றி அன்னியோன்னியாபாவ மாகின்றன. ஆகவே, ஆன்மாவென்பதற்குப் பொருளெங்கே? ஓர் பொருள் சத்தாயும் அசத்தாயுமிருப்பதுண்டோ? இராதே! ஓர்முதல் ஓரவசரத்தில் சத்தைப்போலும் மற்றோர் அவசரத்தில் அசத்தைப்போலு மிருப்பது தான் முறையெனப்படும். எங்ஙனமெனின், அனுபவத்தை நோக்கச் சத்தாயும் ஆராய்ச்சியை நோக்க அசத்தாயு மிருப்பது. அங்ஙனமிருப்பது அநிர்வசனீயமென்பரறிஞர். அஃது யாதெனின், கயிற்றரவு கானல்நீர் கனாக்காட்சி போன்ற அகத்தும், புறத்தும் விடாது காணப்பட்டுக் கொண்டிருக்கும் நாமரூபங்களாமென்க.

அவற்றுள் ஒன்றை யூகிக்குதும். ஆடையானது உடுத்தல் முதலிய அனுபவத்தை நோக்குழி உளதாயும், அதனை யாராய்ந்து நூற்பொருளை நோக்குழி இலதாயும் முடிகின்றது. இங்ஙனமே சர்வமும் ஆகின்றன. ஆன்மாவென்பது இவற்றைப்போலாயின்,

அநிர்வசனீயமாகுமே! அன்றியும், ஆன்மா சதசத்துப் பொருளாயின், சத்தும் அசத்தும் சேர்ந்திருக்கும் சேர்க்கையாம். அச்சேர்க்கை விகாரமெனப்படும். அவ்விகாரம் ஒன்றன்கூட்ட விகாரமும், திரிபிணுக்க விகாரமுமன்று. பலவினீட்ட விகாரமாகின்றது. ஆகவே, அது தோற்றல்மாத்திரமும் சொல்மாத்திரமுமா? அல்லவே! ஏனெனின், ஓர் முதலன்றாகலினென்க. இங்ஙனமிருக்க, முன்ஞான்று திருவருளானது தத்துவங்களையெல்லாம் ஈது ஈதென அறிவித்தவாறு இவ்வான்மா அத்தத்துவங்களுள் ஒவ்வொன்றையும் தனதுருவ மன்றெனச் செல்லுழி, இங்கே அன்றென்பதற்கு எதிர்மறையென்பது எதுவெனப்படும்? ஆம் என்பதன்றோ? அவ்வாமென்பதற் கியைந்திருப்பதியாது? மேலிருந்து இவ்வான்மாவை இழுத்துச் சிவத்தோடு கலக்கச் செய்யும் திருவருட் பிரகாசமெனின், ஷை தத்துவங்களைக் களைந்து செல்வது எது? ஆன்மாவன்றோ? அவ்வான்மா நானல்ல நானல்ல வென்றன்றோ செல்வது? நான் அல்லவெனச் செல்லும் ஈற்றில் நான் ஆமெனப்படுதற் கியையவேண்டுமன்றோ? இத்தத்துவங்களை நானல்ல நானல்ல வென்று ஏகாது திருவருளல்ல திருவருளல்லவென்று ஏகியிருக்கின் ஈற்றில் நானும் நானுமென்பதற் கியையாது திருவருள் ஆம் திருவருள் ஆம் என்பதற் கியையும். அங்ஙனமின்றி, இவற்றை நானல்ல நானல்ல வென்றேகுவதால், ஈற்றில் நானும் நானுமெனப் பொருள்படுதற்கு முரணென்னை?

ஆராய்ச்சியில் தத்துவங்கள் நானல்லவென்பதனால் அந்தத்தில் விளங்கிய அச்சிற்பிரகாசம் நானென்பதாகின்றதே! அன்றியும், ஷை தத்துவக் குழாங்களை நீ அன்று நீ அன்றெனச் சென்றாலன்றோ ஈற்றில் நீ ஆம் நீ ஆமென்பதற்கு அத்திருவருள் இயையும். அங்ஙனமில்லையே! தத்துவக்குழாங்களை நானன்று நானன்றென நியதிகளைவதியாதுக்கு? நானென்பதற்கு உள்ளீடா யிருக்கும் திருவருளை ஆமெனக்கண் டுணர்தற்கெனின், நானென்பதல்லாததை நான் அன்றெனக் களைந்துழி ஈற்றில் நானென்பதற்கு எப்பொருள் இலட்சியமாயிற்று? வெறும் சொல்மாத்திரமா யிருக்கும் பொருளா யாகின்றதன்றோ? சொல்மாத்திரப் பொருளன்றெனின், கற்பனைகளாகிய கயிற்றரவு கானல்நீர் முதலியவைகள் அனர்த்தமாக இருந்தும் தோற்றுகின்றதாகலின், ஷை திருவருளைப்போல் நானென்பது இருப்பாயிருக்கின்றமையால் ஏன் தோற்றாமற்போகும்? எனக்கு நான்

தோன்றுதுழி, அயலாகிய திருவருளிலட்சியத்தை ஏற்கவேண்டுவ தென்ன? என்னை நான் கண்டன்றோ அங்ஙனம் கண்ட என்னைக் கொண்டு யான் மேலேயிருக்கின்றதைக் காணவேண்டும்? முன் ஞான்று என்னை நான் காணாது மேலேயிருக்கின்றதைக் காண வேண்டுமென்பது மிக்க அறியாமை யென்றோ லென்னை? மேலே யிருக்கும் அயல் இலட்சியம் வேண்டுவதின்றெனக் கூறின், இது காறும் அயலாகிய நாம ரூப இலட்சியத்தை ஏன் ஏற்க வேண்டு வதெனின், அறியாமையினால் அங்ஙனம் ஏற்றமையினாலன்றோ இஞ்ஞான்று விவேகத்தால் நானன்றெனக் களைந்து செல்லவேண் டுவ தாயிற்று!

ஆகவே, பின்ஞான்று அயலை நானென மயங்கிய நானென் பதியார்? நானென்பதியார்? எனப் பன்ஞான்றும் பழகிப் பழகி இலட்சியப்படக் கண்டுணர வேண்டுமன்றோ? அங்ஙனம் நானென் பதைக் கண்டு தெளியாது, ஒன்றை நானன்றெனக் களைந்து, மற்றொன்றை நீ ஆமெனக் காண்கிறதற்கா? அல்லவே? நானன்று நானன்றென அவ்வப் பாவத்தை விட்டுச் செல்வது எத்துணைக் கட்டமெனப்படும்? இத்துணைக் கட்டமுற்றுச் சென்றதனால் ஈற்றில் தன்னை விட்டு விட்டு அருளென்றும் பரையென்றும் ஆனந்த மென்றும் அதீதமென்றும் மோசம்போய் விடலாமோ? இம்மோசம் ஒருவன் குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டதுபோ லன்றோ இருக்கின்றது? தன்னாற் களையப்படும் தத்துவக் குழாங்கள் தன்னை யன்றி இன்றெனத் தெளிந்து செல்லின், ஈற்றில் தன்னாற் பற்றப் படும் அருளென்பது தன்னையன்றி யுண்டெனப்படுமோ? முன் ஞான்று தத்துவக் குழாங்களையும் தன்னையும் உண்டென ஏமாந்து விட்டதனாலன்றோ, பின்ஞான்று ஈற்றில் விளங்கிய தன்னை அய லென நன்கு ஏமாந்து மோசம்போய்விட நேர்ந்தது? தன்னை உழைப் பின்றிய மூடதிசைக்கண்ணும் அவ்வுழைப்பு முதிர்ந்த விவேக திசைக் கண்ணும் ஏமாந்துவிட்ட கொடுமையினாலன்றோ இன்னும் நன்கு ஏமாந்து மோசம்போய் விடுதற்குக் காரணமாகத் தன்னை வாச்சியார்த்த இலட்சியார்த்தமாய் விளக்கிவைத்தற்கு மிக்க ஆப்த மாயிருக்கின்ற அனாதியாகிய வேதமாதாவை, விபசாரி யென்றும் அவிசாரி யென்றும் மயக்கியென்றும் மோகியென்றும் பிரேதமென் றும் பசுவென்றும் வறுமையென்றும் இவ்வாறே அனேகமாக வைதுகொண்டு வருகிறதற் கிடனாயிற்று. அன்றியும், தன்னால் தானன்றெனக் களையப்படும் அயலனைத்தையும்,

## சொரூபசாரம்.

*"நாமா யிருந்தோமு நாமேநா மல்லவாப்*
*போமாறு போகும் பொருளுநாம்—யாமத்துத்*
*தானே யுறங்கிச் சகத்துருவாய்த் தோற்றிவிழித்*
*தானே யவன்போலத் தான்."*

என்றருளியபடி காரணகாரிய முதலிய அபேதவாதம் ஐந்தாலும் ஆராய்வுழிக் காரியப்பொருளாய் முடிகின்றதன்றோ? முடியவே, இக் காரியங்களுக்கு உபாதான காரணம் யாதாய் முடிகின்றது? ஆராய்ந்து நின்ற நானென்பதன்றோ! அங்ஙனமாயின், ஆராயப்பட்ட அனைத்தும் எதனது காரியமாகின்றன? ஆராய்ந்துநின்ற தனது காரியங்களன்றோ? தனது காரியங்கள் தன்னைத்தவிர உண்டா? இன்றெனின், தான் மாத்திரமன்றோ இருப்பா யிருக்கின்றது? 'இருக்கவே, ஷை ஆராய்ச்சி முடிவில், பூதவிருளைக் கெடுத்தெழுகின்ற அருணனுதயம்போல், இவ்வாணவாதி அஞ்ஞானவிருளைக் கெடுத்தெழும் ஒப்பற்ற சொப்பிரகாசம் யாதெனப்படும்? தற்பிரகாசமெனப்படுமன்றோ? அதனோடு எழுகின்ற ஆனந்தம் என்ன ஆனந்தமெனப்படும்? தானனந்தமெனப்படுமன்றோ? ஆங்கு நானென்றிலங்கும் போதமானது என்னபோத மெனப்படும்? தற்போதமெனப்படுமன்றோ? ஆங்கு இதராகாரமென்பது கிஞ்சித்துமின்றியிருக்கின்றமையின் (அதாவது விடயாகார மெனப்படுவது) அஃது என்ன ஆகாரமெனப்படும்? ததாகார மெனப்படுமன்றோ? (அதாவது தத்பாவ மெனப்படுவது) இத்ததாகாரம் ஞானனுபவமாகலின், என்னஞான மெனப்படும்? தத்ஞான மெனப்படுமன்றோ? அத் தத்ஞானத்தையன்றி அயலென்பது தோன்றுமோ? ஒவ்வோர் ஞான்று தோன்றினும் பொருளுண்டா? இன்றாகலின், சர்வமும் என்னமயமெனப்படும்? தன்மயமெனப் பொருள்படுமன்றோ? ஒன்றையொன்றாக உணர்தலும் ஒன்று ஒன்றாகத் தோன்றுதலும் உள்ளதை உள்ளதாக உணர்தலும் உள்ளது உள்ளதாகத் தோன்றுதலுமாகிய பிரவிர்த்தி நிவிர்த்தியென்னும் இப் புடைபெயர்ச்சிகள் எதன்பாலது? தன்பாலதாகலின், தற்செய லெனப்படுமன்றோ? இங்ஙனம் யாவும் தானயிருக்கின்றதால் ஷை தற்காரிய மெனவும், தற்பிரகாச மெனவும், தானனந்த மெனவும், தற்போத மெனவும், ததாகாரமெனவும், தத்ஞான மெனவும், தன்மய மெனவும், தற்செய லெனவுமாகிய இந்நிலைகள் விளங்க, ஷை வேதமாதா உணர்த்தியிருக்கின்றது. இங்

னமிருக்கு மிலக்கணங்கள் தன்னுடையதென் றுழைத்துத் தெளி தற் கியையாததால், பதின்மர் கதைக்கிணங்க முழுதும் தன்னை விட்டுவிட்டுத் தற்காரியத்தை மாயாகாரியமெனவும், தற்பிரகாசத்தை அருட்பிரகாசமெனவும், தானனந்தத்தை அருளானந்த மெனவும், தற்போதத்தை அருட்போதமெனவும், ததாகாரத்தை அருளாகார மெனவும், தத்ஞானத்தை அருண்ஞானமெனவும், தன்மயத்தை அருண்மயமெனவும், தற்செயலை அருட்செயலெனவும் மயங்கி முழுதும் முன்னிலை படர்க்கைப் பராக்காயிற்று. இத்துணைப் பராக்கும் தன்னைவிட்டு ஏமாந்து விடுதற்காயிற்று. இதனால் அறிஞர்கள்,

சொருபசாரம்.

"ஏதுசிவா னந்தமோ வேதுசிவா காரமோ
வேது சிவன்செயலென் றெண்ணுதே—யேதும்
பிறிவாகா வொன்ருகாப் பேதமா காத
வறிவா நிறைவே யது."

எனக் கூறியிருக்கின்றனர்.

இங்ஙனம் கூறிய வேதமாதாவைக் கிஞ்சித்தும் முகராது, இந்துக்களை முழுதும் அஞ்ஞானிகளென்றும் தாம் முழுதும் ஞானிகளென்றும் மயங்கிய கிறிஸ்தவர்கள் போலும், இவ்விந்துக்களது ஆசாரங்களுக்கு நேர் எதிர்மறையாக மயங்கியிருக்கும் மகமதியர் போலும், காலதேசவஸ்து பரிச்சேதமின்றி விளங்கும் அத்வைத பரமஞானிகளை மாயாவாதிகளெனவும், முத்தியிலும் அம்மாயையை அனுபவித்துக்கொண்டிருக்கின்ற தாம் அருண்ஞான வாதிகளெனவும், இன்னும் பிறவுமாகத் தூடித்துவருவது என்னகொடுமை யெனப்படும்? மாயாவாதிக ளென்பவர்கள்,

சொருபசாரம்.

"சிற்சொருபந் தானே செகசொருப மானவெலாந்
தற்சொருப சாரமாய்ச் சாற்றவே—பொற்சொருப
மச்சுருவாம் போல வதுவதுவாத் தோற்றுமொரு
சொற்சொருபந் தானே துணை." என்றும்,

"பூதாதி யைந்தும் பொறிபுலன்க ளெல்லாஞ்சித்
தேதாதி யந்தமவை யெல்லாஞ்சித்—தோதரிய
கற்பனையுஞ் சித்தனைத்துங் காண்பானுங் காட்சியுஞ்சித்
தற்பமும்வே றில்லாமை யால்." என்றும்,

ஞானவாசிட்டம்.

"பொருகடலிற் றிரைமுதலாப் பிறந்த வெல்லாம்
புனலாகி விளங்காமற் புழுதி யாமோ
வொருபொருளாம் பிரமமாத் திரமே யல்லா
லுபயமெனுங் கற்பிதப்பே ரொன்று மில்லை
யெரியிடத்திற் சூடுமாத் திரமே யல்லா
லிரண்டுண்டோ வவ்வகைபோ லென்று மொன்றுஞ்
சரியைகிரி யாயோக பதத்தின் முற்றிச்
சாதனங்க ணிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும்."

எனத் தெளிந்தவர்கள்தானு? அல்லவே! அன்றியும், இங்ஙனம் தெளிந்திலங்கும் தானுனுபவிகள் மாயாவாதிக ளென்றென்று அனந்த உபநிஷத்துக்களும் கீதைகளும் புராணேதிகாச முதலிய சதுர்த்தச வித்தைகளும் கோஷடித்திருப்பதைப் பலரும் கண்டு பிடித்து உணர்தற்கு மிக்க அரிதா யிருக்கின்றதால், அப்பலரும் இம்முடிவாகிய சித்தாந்தத்தை நுகருகிறதற்கும் சிலர் வெடி பராக்காகிய கள்ள நெறிகளிற் சென்று தடுக்காகப் பேசுகிறதை இனிப் பேசாவண்ணம் தடுக்கிறதற்கும் அநேகர் தமது மிக்க கருணையினுல் வெடி சதுர்த்தச வித்தைகளிற் பூரித்திருக்கின்ற தானுனுபவ ரசத்தை நவநீதமாகத் திரட்டி அநேக அநுபந்தமாக அரிய நூல்களை அனேக யுத்தி யனுபவங்களோடு விளக்கியிருக்கின்றனர். இவற்றையேனும் உணரவேண்டுமன்றே? இங்ஙன முணராது பிடிவாதமும், அபிமானமு முற்றிருக்கின், ஆரம்பத்தில் சர்வமும் தற்காரியமெனப்படுமோ? படாவழி, ஏனைய தற்பிரகாசம் தானுனந்த முதலிய அநுபவங்கள் எங்ஙனம் வாய்க்கும்? வாய்க்காதாகலின், அறிஞர்கள் வேதபாகியமான நெறிகளனைத்தும் குறுக்குவழிகளெனப் பலரும் நன்கு கருதுமாறு,

தத்துவராயர் அடங்கன்முறை.

சூழ்வார்ப்பு.

"ஞானம்போலச் சிலசொல்லி
நாடற்கரிய முத்தியினுந்
தானுஞ்சிவமும் பாசமுமாஞ்
சைவப்பேய்க்கும் வாரீரே. என்றும்,

"வேதாகமங்கள் சொன்னபொருண்
மெய்யேயறிவார் போன்றிருந்து
பேதாபேதஞ் சாதிக்கும்
பெரும்பேய்தனக்கும் வாரீரே." என்றும்,

"படித்துமறைகள் பொருள் படுத்திப்
பயனினெட்டிப் பாராதே
வடித்தகிளிபோல் வருமாயா
வாதப்பேய்க்கும் வாரீரே." என்றும்,

சிவஞானவள்ளலார்.

"ஒன்று புலகனைத்து மானுரென் றப்பமுனி
பொன்று மொழியாற் புகன்றிருக்கக்—குன்றாத
முத்தியினு மும்முதலு முண்டென் றுரைத்தவெவன்
பித்தமுறுஞ் சைவாநீ பேசு." என்றும்,

"ஓசை வொலியெல்லா மானுய்நீ யென்றபினர்ப்
பேச விரண்டுண்டோ பேய்ச்சைவா—வாசையெல்லா
மற்றவிட முத்தி யிலையோ வஃதெல்லா
முற்றவிட முத்தியிலை யோ." என்றும்,

ரீபுகீதை மகாவாக்கியம்.

"அற்பமுமே யறியாத சிலமா மூட
ரத்துவித மேதறியார் வெறும்பொய் யான
கற்பிதமாந் துவிதமதே யுண்மை யென்று
கழறுவரம் மாமூட ருடனே யென்று
மற்பமுமே பேசவொணு தன்னே ருக்கோ
ரணுவேனு மளிக்கவொணு தவரைக் கண்டாற்
சொற்பமுமே வணங்கவொணு தவரெந் நாளுஞ்
சுத்தமகா மூடரென்றே யுரைத்தல் வேண்டும்." என்றும்,

இங்ஙனம் அனேகரும் நன்கு உறுத்தியிருக்கின்றார்கள். இவற்றால் மாயாவாத மென்பது யாதெனப் படுகின்றது? பொருளல்லாததைப் பொருளாக உணரும் அனுபவமன்றோ? அதாவது,

குறள்.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்னும் அனுபவத்துக்கு எதிர்மறையா யிருக்கின்றது. அவ்வனுபவம்,

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொரு
ளப்படிக் காண்ப தறிவு."

என்னும் தகையது. இங்ஙனம் கூறிய அனுபவத்தையன்றி மாயா வாத மென்பது வேறிருக்கின்றதா? இல்லையே! அன்றியும்,

உத்தமவாதநூல்.

"கிளைவழி போகிற் கிடைக்குமுள் கள்ளர்
களைந்து பெருவழி காணி—லுளைவுறுமோ
வில்லையுண் டென்னன்மி னெல்லா மவசரமே
யல்லவிது வத்துநிலை யாம்."

என்று கூறியிருப்பது யாதுக்கு? முன்னிலை படர்க்கையாகிற பராக்கிற் செல்லாதிருத்தற்கன்றோ? முன்னிலை படர்க்கையாகச் செல்லவேண்டாவோவெனின், கர்மோபாசனு காண்ட மிருப்பது யாதுக்கு? இதுகாறும் கூறிப்போந்த கிளைமார்க்கப் போலியனு பவிகள் மீக்கூர்ந் திருக்கின்றமையால், இவர்களைக் களைதற்காக முன் ஞான்று சற்குருவெனத் தானுனுபவிகளைப் பிரித்துக் கூறவந்த தென்க. அத்தானுனுபவ மாவதியாதெனின், சர்வம் என்கிற ஆரோ பிதமிருப்பதனுல் நானென்கிற போதம் சர்வம் சர்வாதாரம் சர்வா திட்டானம் சர்வசாட்சி என்னும் இவை முதலியவைகளாகத் தன்னை யனுபவித் தின்புறுதல். அங்ஙன மின்புறுதல் ஞானுனுபவ மென்ப தாயிற்று. அவ்வாரோபிதம் இல்லாவுழி, அஞ்ஞான்று நானென்கிற போதம் எங்ஙன மிருக்கின்றது? நிராதாரமாகியும் நிரந்தரமாகியும் குணுதீதமாயும் சுவானுபவாதீதமாகியும் தானே தானுகியு மிருந்திலங் குகின்றதன்றோ? இங்ஙனமிருக்குமிருப்பே ஷை சற்குருவின் அனு பவமாமென்க.

ஞானுனுபவம் தானுனுபவ மிரண்டனையுமுள்ள அனுபவிகளை யடுத்த சாதகாதிகாரி, இவர்கள் திருச்சந்நிதானத்திற் கேட்டுக் கொள்ளும் விண்ணப்பமாவ தியாதெனின், ஐயனே! முன்ஞான்று கிரியாகாண்டத்திற் கட்டுண்டு, இத்தேகபோகங்களை யானெனதென் னும் அகங்கார மமகாரங்கள் கிஞ்சித்துங் குன்ருதொழுகிவந்ததும், பின்ஞான்று உபாசனுகாண்டத்திற் கட்டுண்டு ஷை தேகபோக அகங்கார மமகாரங்கள் இறக்காது, அவை குன்றுமாறு செய்யவேண் டிய கருமமனைத்தும் ஈசுரார்ப்பணமாக முடித்துவந்ததும் நானென்ப தாகலின், அந்த நானெனப்படுவதியாது பொருளெனக் கண்டு

கண்டின் புறுகின்றது? அந்நான் அவத்தாத் திரயங்களுள் சாக்கிரா வத்தை நானோ? அன்றிச் சொப்பனாவத்தை நானோ? அஃதுமன்றிச் சுழுத்தியவத்தை நானோ? சாக்கிராவத்தை நானென்பது பஞ்ச பூதாம்ச இத்தூல சரீரமும், சொப்பனாவத்தை நானென்பது மனோ விகற்பமாகிற சூக்கும சரீரமும், சுழுத்தி அவத்தை நானென்பது அந்தகாரமாகிய சூனிய சரீரமும் ஆகின்றன. ஆகவே, நானென் பதற்குப் பொருள் யாதெனத் தெளிவுற்றிருக்கின்றது? நான் கல்வி கேள்விகளில் எத்துணை வல்லவனாயிருந்தும், தேவரீர்போல்வார் நீயாரெனவும் இதுகாறும் நீ யெய்தியது எதையெனவும் வினவில் அதற்கு நான் என்னவென் றுரைப்பேன்? அகத்தும் புறத்தும் ஆராய்வுழி அனைத்தும் கற்பனைகளாக இருக்கின்றனவே! இது காறும் எய்தியது யாதுமில்லையே! என்னை நான் கண்டவிடத்தன் றோ யான் எய்தியது இஃதென நன்கு விளங்கும்?

உபாதித்திரயங்களையன்றி நானென்பதற்குப் பொருள் இனைய தெனப் பரோட்சமாகவேனும் இதுகாறும் கிஞ்சித்தும் முகர்ந்த தில்லையே! நான் நானென்று விடாது குளறிக்கொண் டிருக்கின் றேனே! இக்குளறல் சற்றும் வெட்கமில்லாமையாயினும், இதற்கு மேல் ஒவ்வொரு கற்பனையிலும் தலையிட்டுக்கொண்டு நான் இன் னான் நான் இன்னானெனக் குளறிக்கொண்டிருத்தல் எத்துணை வெட்கமில்லாமை யென்பன்? இத்துணை வெட்கமில்லாமையை உள்ளத்திற் சற்றும் கருதாது ஏமாப்புற்றிருத்தல் என்னவெனப் படுகின்றது? அடியேன்பால் கல்வி கேள்விக ளிருத்தலில் அடியேன் போல்வாரால் வல்லவனெனவும், நல்லவனெனவும் மதிப்புற்று மதிப் புற்று முற்றுங் கெடுதியுற்றேனேயன்றி, அறிஞர்களால் கிஞ்சித்து மதிப்புற்றேன் அல்லவே! அவர்களுக்கு அடியேன் முற்றும் இழிந் தோனா யிருப்பதுபோலும், அடியேனுக்குப் பிறர் இழிந்தோரா யிருப்பதுபோலும், அடியேன் முற்றும் இழிந்தோனா யிருக்கின்றது அடியேனுக்கே நன்கு பட்டாலன்றோ அதுமுதல் அழுக்காறு புறங் கூறல் முதலிய கெடுதிகள் சிறுகச் சிறுகக் குன்றி, விடயக் கைப்புந் தோன்றி, அகமுகநெறிக்கட் செல்லுதற் கியையும்? ஒவ்வொரு கற்பனையையும் பொருளாகவே மயங்கி மயங்கி அவ்வவற்றின்கண் ணும் நான் நானென முந்தும் இவ் வகந்தையானது எத்திசைக்கண் ணும் தலைகாட்டா தொழியுமாறு அடியேனைத் திருத்தவேண்டுவது எவ்வாறோ? அவ்வாறு திருத்தல்செய்து, மகாவாக்கியமென்பது

யாதோ அதனை அனுக்கிரகித்து, அடியேனைத் தெளிவிக்கவேண்டு மென வினவிப் பணிகின்றதாமென்க. அங்ஙனம் பணிந்துநிற்கும் மாணாக்கனுக்கு அம்மகாவாக்கிய பேதங்களைக் கூறுதல்,

### இஃது மகாவாக்கிய நிருபணம்.

இம்மகாவாக்கியானுபவம் யாதெனின், விதிவாக்கியம், நிடேத வாக்கியம், அவாந்தரவாக்கியம், ஆப்தவாக்கியம் என நான்காம். இந்நான்கும் வாக்கியமாயினும், இறுதியிற் கூறிய ஆப்தவாக்கியமே மகாவாக்கிய மெனப்படுவதாம். அஃது ஞாஞேஞானரகித அகம் பொருளென்னும் சுத்த சைதன்னியம் உள்ளங்கை நெல்லிக்கனி போற் றோன்ற விளக்குவதால் மகாவாக்கிய மெனப்பட்டது. இஃதே சித்தார்த்த போதக வாக்கியமெனவும் பொருள்பட் டிருக்கின்ற தென்க. சித்தார்த்த போதகமென்பா னேனெனின், சத்தாசா மானிய மென்னும் உறுதிப்பொரு ளாகலினென்க. உறுதிப்பொரு ளென்பது கூடஸ்த பிரமைக்கிய மெனற்பாலது. ஞானகாண்டத் தில், இவ்வாக்கியப் பொருளொன்றே நான்கு வேதங்களி னிறுதிக் கண் நான்கு விதமாக வந்திலங்குகின்றது. எவ்வெவ் வேதத்துக் கெவ்வெவ் வாக்கியம் நிகழுவதெனின், இருக்குவேத ஐத்திரிய உபநிஷத்தில் பிரக்ஞானம் பிரமமெனவும், எசுர்வேத தைத்திரிய உபநிஷத்தில் அகம்பிரமாஸ்மி யெனவும், சாமவேத சாந்தோக்கிய உபநிஷத்தில் தத்தொமசி யெனவும், அதர்வணவேத மாண்டுக்கிய உபநிஷத்தில் அயமான்மாப் பிரமமெனவு முண்டாயினவென்க. இவ் வரிய நான்கு வாக்கியங்களுள் சிவபதம் நான்கும் சீவபதம் ஐந்தும் சொருப பதம் இரண்டும் ஆகிய பதினொரு பதங்க ளிருக்கின்றன.

அவற்றுள், சிவபதம் நான்கும், முதல் வாக்கியத்தின் கடைக் கண் பிரமபதமொன்றும், இரண்டாவது வாக்கியத்தின் இடைக்கண் பிரமபதமொன்றும், மூன்றுவது வாக்கியத்தின் முதற்கண் பிரம பதமொன்றும், நான்காவது வாக்கியத்தின் கடைக்கண் பிரமபத மொன்றுமாக இருக்கின்றன. சீவபதம் ஐந்தும், முதல் வாக்கியத்தின் முதற்கண் பிரக்ஞான பதமொன்றும், இரண்டாவது வாக்கியத்தின் முதற்கண் அகம்பதமொன்றும், மூன்றுவது வாக்கியத்தின் இடைக் கண் தொம்பதமொன்றும், நான்காவது வாக்கியத்தின் முதற் கண், இடைக்கண் அயம் ஆன்மா வென்னும் பதமிரண்டுமாக இருக்கின்றன.

சொரூபபதம் இரண்டும், இரண்டாவது வாக்கியத்தின் கடைக்கண் அஸ்மிபதமொன்றும், மூன்ருவது வாக்கியத்தின் கடைக்கண் அசிபதமொன்றுமாக இருக்கின்றனவென்க. ஷை கூடஸ்த பிரம ஐக்கானுபவத்தை விளக்குதற்கு இந்நான்கில் ஒன்றுபோதாதா? நான்கும் வேண்டுவதெற்றுக்கெனின், முன்னர் ஆரோபநாட்டமகன்று அதிட்டான நாட்டம் வாய்த்தற்கும், பின்னர் அவ்வதிட்டானுனுபவமும் தன்மையானுபவமாய் முடிதற்கும், அதன்பின்னர் இவ்விரண்டனுபவமும் பரிபாகிகளுக்கு வாய்த்தற்கும், ஈற்றில் கிருதகிருத்தியானுபவ மாதற்கும், இந்நான்கு வாக்கியங்களும் வேண்டிற்றென்க. அவ்வாக்கியங்களின் இலக்கணமாவன—பிரக்ஞானம் பிரமமென்கிற முதல் வாக்கியம் இலட்சண வாக்கியமும், அகம் பிர்மாஸ்மியென்கிற இரண்டாம் வாக்கியம் அனுபவ வாக்கியமும், தத்தொமசி யென்கிற மூன்றும் வாக்கியம் உபதேச வாக்கியமும், அயமான்மாப் பிரமமென்கிற நான்காம் வாக்கியம் சாட்சாத்கார வாக்கியமுமா யிருக்கின்றதென்க.

ஷை நானல்லவற்றைப் பொருளென்றுணரு மருளானுபவ மொழிந்து, "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்" மெய்ப்பொருளானுபவம் வாய்க்குமாறு செய்வித்தற்கு வந்தது. முதலாவது லட்சணவாக்கியமும், இவ்வனுபவம் முன்னிலையுற்றுத் துவைதமாக இருத்தலை மறுத்துத் தன்மையானுபவம் வாய்க்குமாறு செய்வித்தற்கு வந்தது இரண்டாவது அனுபவ வாக்கியமும், பரிபாகிகள் இவ்விரண்டாம் வாக்யானுபவ அகம்பொருளையன்றி முதல் வாக்கியானுபவப் பிரக்ஞானப்பொருள் இன்றெனுமனுபவம் வாய்ந்து நிலைத்திருத்தற்கு முன்ஞான்றே, முதல் வாக்கியானுபவப் பொருளாகிய பிரக்ஞானத்தை யன்றி இரண்டாவது வாக்கியானு பவப் பொருளாகிய அகமென்ப தின்றெனவும், பின்னர் இரண்டாவது வாக்கியானுபவப் பொருளாகிய அகமென்பதையன்றி முதல் வாக்கியானுபவப் பொருளாகிய பிரக்ஞான மின்றெனவும் அனுபூதி வாய்த்தற்கு வந்தது மூன்ருவது உபதேசவாக்கியமும், இம்முதல் வாக்கியானுபவமும், இரண்டாம் வாக்கியானுபவமும் பேதியாது அபேதமாய் நிலைத்துத் தானே தானுகுமாறு செய்வித்தற்கு வந்தது நான்காவது சாட்சாத்கார வாக்கியமுமா மென்க. அன்றியும், (முதலாவது) இலட்சண வாக்கியானுபவமாவது - அகத்தும் புறத்தும் காணப் படுவனவாகிய சிவேகசா சகந்நாரோபிதங்கள்,

தமக்கியையாதனவாகிய சச்சிதானந்த இலக்கணங்கள் இயைந்தன வாகத் தோன்றுவதுபோல், திருக்குவாகிய ஞானமானது — தனக் கியைந்தனவாகிய சச்சிதானந்த விலக்கணங்கள் இயையாதனபோ லிருக்கினும் இயற்கையில் அச் சச்சிதானந்த சொருபமுற்றிருப்ப தால், அச்சொருபமாகவே கடாதிகள் பிரத்தியட்சப்படுவதுபோல், இருவகை நிட்டையிலும் அபரோட்சமாகின்றது. இதனால் அறிவே ஆனந்தமாயிற்றென்க.

இரண்டாவது

அனுபவ வாக்கியமென்பது — அவ்விருவகை நிட்டையிலும் சச்சிதானந்த சொரூபமாக விளங்கியதியாது ? அகமென்பதன்றோ ! அதாவது—நானென்னும் பொருளது. எங்ஙனமெனின், பகிர்முகத்த தாகிய மருள்திசைக்கண், சீவேசுர சகத்தாக விளங்குவது நானெ ன்பதன்றாயின், அந்தர் முகத்ததாகிய ௸ இருவகை நிட்டைக் கண்ணும் சச்சிதானந்த சொருபமாக விளங்குவது நானென்பதன் றெனப்படும். விஸ்மரணையாக விளங்குவது நானென்பதாகலின், தஸ்மரணையாக விளங்குவ தியாதெனப்படும் ? அஃதும் நானெனப் படுமன்றோ ? நானென்பது இங்ஙனமாயும் அங்ஙனமாயும் விளங்கு வதாகலின், நானென்பது பிரமமாயிற்றென்க. இதனால் நான் என் னும் போதமே ஆனந்தமாயிற்று.

மூன்றாவது

உபதேசவாக்கிய மென்பது ௸ இரண்டாவது வாக்கியானு பவம் திரிபுடியிறந்து அதீதமாகிய அந்நானென்பதை,

ஞானவாசிட்டம்.

"ஆன்மாவை யறிந்தவலவற் றிருந்த வென்னை
 யயன்பார்த்து நாமேரின் னறிவை மாற்றி
யூன்மாயப் பின்பொழித்தோ முலகெ லாகின்
 னுபதேசம் பெற்றுய்ய வுபாயஞ் செய்தோ
மேன்மாயும் வினைநிறைந்த சம்புத் தீவின்
 மேவியபா ரதவருடம் விரைவின் மேவித்
தான்மாளாக் கிரியையர்க்குக் கிரியை சாற்றிச்
 சாதனமுள் ளோர்க்குணர்வைச் சாற்று கென்றான்."

என்று கூறியவாறு, நானலதை நானெனவும், எனதலதை யென தெனவும் மயங்கிய கர்மோபாசன சற்கிருத்தியங்களாகிய பரம்பரா சாதனங்களை வழுவி யொழுகுபவர்க்கும், வழுவாதொழுகுபவர்க்கு

முணர்த்தாமல், சாதன சதுட்டயத்தைப் பெற்ற அதிதீவிரதர பக்குவர்க்கே எடுத்துரைக்கவேண்டுவது அவசியமாகலின், ஷை அனுபவத்தைச் சுத்தாசுத்த இலட்சியார்த்த வாச்சியார்த்த முதலிய பேதங்களை யெல்லா முள்ளடக்கி, முப்பதமாக முடித்து நன்குணர்த்துவதாமென்க. இதனால் "அதுவே நான், நானே அது" வென்னும் ஐக்கானுபவ மாயிற்றென்க.

நான்காவது

சாட்சாத்கார வாக்கியானுபவமென்பது — முன்னூன்று சுயம் பிரகாசமாய் விளங்கிய அகம்பொருளானுபவம் நிலைத்த பின்னர்க் காலதேசவஸ்து பரிச்சேதமின்றித் தானே தானாக இருத்தலாமென்க.

ஷை முதல் வாக்கியமாகிய பிரக்ஞானம் பிரமமென்பதற் கர்த்தமென்னையெனின், சடவடிவாகநின்று காணப்படுவனவாகிய விடயங்களும், இவ்விடயங்களைப் பொதுவா யுணரும் வினைகளுக்கு முதலாகிய பொறிகளும், இப்பொறிகளையும் விடயங்களையும் இன்னதின்னதெனச் சுட்டியுணரும் வினைகளுக்கு முதலாகிய அந்தக்கரணங்களும், இவ்வந்தக்கரணேந்திரிய விடயங்களை இன்னதின்னதெனச் சுட்டியுணரும் வினைகளுக்கு முதலாகிய சீவனும், இச்சீவாந்தக்கரணேந்திரிய விடயங்களனைத்தையும் ஆரோபமாக ஒருங்கே யுணர்தற்கியைந்த சாட்சிமாத்திரமாயும், ஆதாரமாயும், அதிட்டானோபாதானமாயும் விளக்கவடிவாயு மிலங்குவது யாதோ அதுவே பிரக்ஞான மெனப்படுவதாம். இவற்றால், இப்பிரக்ஞானம் போலிஞான மன்றெனவும், ஏனைய சீவாந்தக்கரணேந்திரியங்கள் உண்மைஞான மன்றெனவு மாயிற்று. ஆகவே, பிரமன் முதல் பிபீலிக மீறாக நிகழும் ஒவ்வோர் வகுப்பாயுள்ள இச்சீவாந்தக் கரணேந்திரியங்களையும் ஒவ்வோர் பிரக்ஞானமும் சாட்சியா யறிந்துகொண் டிருக்கின்றமையால், அவ்வப் பிரக்ஞானமும் அவ்வவ் வகுப்பாகிய சீவாநந்தக்கரணேந்திரியத்திற்குத் தனித்தனி சாட்சி சைதன்னியமா யிருத்தலின் பிரக்ஞான மென்ப தாயிற்றென்க.

ஷை அம்முதல் வாக்கியத்தில் இரண்டாவதுபதம் பிரமமென்பது, அது ஷை பிரமன் முதலியனவாகிய உபாதிகுணந் தொழில்களையும், அவ்வவற்றின் ஆகாரமாயிருந்து நிகழும் சீவாந்தக்கரணேந்திரியங்களையும் ஒருங்கே பிரித்துப் பார்க்கும் ஞான்று, அவ்வச் சீவாந்தக்கரணேந்திரியப் போலி ஞானங்களுக்குத் தனித்தனிச் சாட்சியாயிலங்கும் ஷை பிரக்ஞானம் பலவென்பதின்றி ஏகமென்ப

தற்கியைந்து, சர்வசாட்சியெனப்படுமென்றே? இவற்றால் பிரக்ஞான மென்பது பன்மைப் பொருள்களாயும், பிரமமென்பது ஒருமைப் பொருளாயு முடிகின்றன. முடியவே, இப்பன்மை யகன்ற ஒருமை யாகிய சுயம்பிரகாசமே முதல் வாக்கியானுபவப் பொருளாமென்க.

இரண்டாம் வாக்கியத்தில் முதற்பதம் அகமென்பதற்குப் பொருள் ஷை தனித்தனி யவத்தாத்திரய விலட்சண சாட்சியாயுள்ள சுயம்பிரகாச சொரூப நானுமென்க. அஃதெங்ஙனமெனின், வியட்டி தேகேந்திரியாந்தக்கரண சிதாபாச விருத்திகள் மருட்டிசைக்கண் நான் நானென்று நிகழுமவற்றை ஆராயின், ஒவ்வொன்றும் நானன்று நானன்றென அகன்றுழி இருப்பது ஷை தனிச் சாட்சியாகிய சுயம் பிரகாசமாகலின், அதுவன்றே எது நான் எது நானெனனத் தேடு தற்குப் பொருள்? இத்திண்ணம் நோக்கி, அம்முதற்பதம் அக மெனக் கூறியதென்க. இவ்வகமே ஷை வாக்கியத்தில் இரண்டாம் பதப்பொருள், பிரமமென்பது எங்ஙனமெனின், சர்வ உபாதிகுணாந் தொழில்களாகிய சமட்டிக்கு ஷை தனித்தனிச் சாட்சிகளின் ஒருமை யாகிய பெரும்போதமே உபாதானமாயும், ஏகமாயும், உள்ளும் புற மும் இடையும் பூரண சச்சிதானந்த சொருபமாய் மிலங்குவதேயா மென்க. ஷை இரண்டாம் வாக்கியத்தில் மூன்றும் பதப்பொருள் அஸ்மியென்பது எங்ஙனமெனின், முன்னர் வியட்டி பேதங்களாற் பலவாயும், பின்னர்ச் சமட்டியினுல் ஏகமாயும் விளங்கியது, அகாரண அத்துவிதாகண்ட அஸ்திபாதிப்பிரிய ரகிதமாகிய தானே தானுகும் பொருளென்பதா மென்க.

முன்ஞான்று தத்தொமசி வாக்கியமானது வாச்சியார்த்த லட்சி யார்த்த முதலிய அனேக கூறுபாடுகள் அடங்கப்பட்டு வழங்கி வருகின்றதெனக் கூறியதெங்ஙனமெனின், இஃது நான்கு வர்னமும், மூன்று பதமும், மூன்று பதார்த்தமும், மூன்று லக்கணையுமாகிய இவ்வரிய பேதங்களை யெல்லா முட்கொண்டு நிகழுகின்றது. நான்கு வர்னங்களாவன—சத்தியம் ஞானம் அனந்தம் ஆனந்த மென்பவை களாம். இவற்றுள், சத்தியமென்பது பரமெனவும், ஞானமென்பது சீவனெனவும், அனந்தமென்பது சராசர பேதங்களெனவும், ஆனந்த மென்பது சகலபுவன பேதங்க ளெனவுமாமென்க. மூன்று பதங் களாவன—தத்பதமெனவும், தொம்பதமெனவும், அசிபதமெனவுமா மென்க. இவற்றுள், தத்பதமென்பது அதுவெனவும், தொம்பத மென்பது நீ யெனவும், அசிபதமென்பது ஆனுயெனவுமா மென்க.

எனவே, அதுவென்பது பிரமமெனவும், நீ யென்பது கூடஸ்த னெனவும், ஆனுயென்பது ஐக்கியானுபவ மெனவு மாமென்க. மூன்று லக்கணையாவன—விட்டலக்கணை யெனவும், விடாதலக்கணை யெனவும், விட்டுவிடாத லக்கணை யெனவுமாமென்க. விட்டலக்கணை யென்பது—சத்தித்தற்கு வினைமுதல் குச்சுவீ டன்றெனு அக்குச்சு வீட்டை விட்டு அவ்வீட்டில் ஓர் புருடனிருந்து சத்திக்கின்றான் என்றாற்போல், இச்சாஞான மெழுதற்கு வினைமுதல் உபாதிக ளன்றென இவ்வுபாதிகளை விட்டு, இவ்வுபாதிகடோறும் ஓர் உணர் வான் இருக்கின்றானெனக் கோடலென்க. விடாதலக்கணை யென் பது—ஒருவனால் கறுப்பென்பதும் சிவப்பென்பதும் செல்கின்ற தெனக் கேட்ட அக்கணமே, அக்கறுப்பு சிவப்பாகிய குணங்களை விடாது அக்குணங்களுக்குக் குணியாகிய குதிரைகளென்னும் உடலை விடாது லட்சியிப்பதுபோல, ஷை உபாதிகள்தோறும் நான் நானென் னும் போதத்தைச் சத்தாதி குணங்கள் விடாமற் பற்றுதலாமென்க. விட்டுவிடாத லக்கணையென்பது—ஓர் புருடன் சிலஞான்று குடும்பி யாயும் சிலஞான்று சந்நியாசியாயு மிருந்தானென்புழி, அக்குடும்ப வேடமும் அக்காலமும் அத்தேசமும் அக்கிருத்தியமும் இச்சந்நியாச வேடமும் இக்காலமும் இத்தேசமும் இக்கிருத்தியமும் அவ்வோர் புருடனையன்றி இன்றென்பதாயினும், அவ்வேட முதலியனவாகிய நான்கு வகுப்பும் இவ்வேடமுதலியனவாகிய நான்கு வகுப்பும் ஒன்றி லொன்றில்லாமல், அக்குடும்பப் புருடனே இப்புருடனும், இச்சந் நியாசப் புருடனே அப்புருடனும் ஏகத்துவம் வந்துழி, இவ்வேகத் துவ புருடனையன்றி அக்குடும்பியும், அக்குடும்பியைச் சார்ந்தவர் களும் இச்சந்நியாசியும் இச்சந்நியாசியைச் சார்ந்தவைகளும் இன்று கலின் விடாதலக்கணையும், இவைகளுள் ஒன்றேனும் அப்புருடன் அல்லனாகலின் விட்டலக்கணையுமாம். அதுபோல், ஷை குணங்கள் காரணமாக லட்சியிக்கப்பட்ட அப்போதமானது—பிரமன் முதலிய சர்வ உபாதி குணத்தொழில்களுள் எதற் கியைந்தது? யாதுக்கு மியைந்ததன்றெனின், அப்போதத்தை யன்றி யாதிருக்கின்றது? ஒன்றேனு மின்றெனின், யாவும் தான் அன்றென்பதனால் அவை களைத் தான் விட்டதாயும் தன்னையன்றி அவைகளுள் ஒன்றேனு மின்றென்பதனால் அவைகளைத் தான் விடாததாயு மிருக்கின்றது. இங்ஙன மிருப்பதே விட்டுவிடாத லக்கணை யென்க.

ஷை தத் என்கிற முதற்பதம் அசுத்தமெனக் கூறியது வாச்சியார்த்தமும், சுத்தமெனக் கூறியது லட்சியார்த்தமுமாம். இவ் வாச்சியார்த்தத்திற்குப் பொருள்—சமட்டியில் விராட்டு இரணிய கருப்பன் அந்தரியாமியாகிய மூன்று உருவமாய் நிகழும் மாயாந்தக் கரணப் பிரதிபிம்ப ஈசுர சைதன்னியமும், ஷை லட்சியார்த்தத்திற்குப் பொருள்—ஷை விராட்டு முதலியனவாக நிகழும் மூன்று உருவமான அம் மாயா சகித ஈசுரபோத முதலிய சர்வத்திற்கும் விலட்சணமாயும், ஆதாரமாயும், அதிட்டானமாயும், சாட்சியாயு மிலங்கும் பிரமசைதன்னிய போதமாமென்க.

ஷை தொம் என்கிற இரண்டாம் பதம் அசுத்தமெனக் கூறியது வாச்சியார்த்தமும், சுத்தமெனக் கூறியது லட்சியார்த்தமுமாம். இவ்வாச்சியார்த்தத்திற்குப்பொருள்-வியட்டியில் விசுவன், தைசதன், பிராக்ஞன் ஆகிய மூன்று உருவமாக நிகழும் அவித்யாந்தக்கரணப் பிரதிபிம்ப சீவ சைதன்னியமும், ஷை லட்சியார்த்தத்திற்குப் பொருள்—விசுவன் முதலியனவாக நிகழும் மூன்று உருவமான அவ்வவித்யா சகித சீவபோத முதலியவைகளுக்கு விலட்சணமாயும், ஆதாரமாயும், அதிட்டானமாயும், சாட்சியாயு மிலங்கும் கூடஸ்த சைதன்னியமுமா மென்க.

அன்றியும், ஷை இருவகை வாச்சியார்த்தங்களான சீவேசுர ரிருவரும் கற்பனைத்துவைதமாயும், இருவகை லட்சியார்த்தங்களான கூடஸ்த பிரமரிருவரும் சாட்சித்துவைதமாயு மிருக்கின்றனரென்க.

அசி என்கிற மூன்றும் பதம் அசுத்தமெனக் கூறியது வாச்சியார்த்தமும், சுத்தமெனக் கூறியது இலட்சியார்த்தமுமாம். இவ் வாச்சியார்த்தத்திற்குப் பொருள்—கூடஸ்த பிரமமாகிய சாட்சித் துவைதமும், லட்சியார்த்தத்திற்குப் பொருள்–இச்சாட்சித்துவைதங் களின் ஒருமையான அத்வைத சொருப சாட்சாத்கார அகம்பொரு ளுமா மென்க. இங்ஙனம் நிலைத்து நின்றிலங்கும் அகம்பொருளே தீர்ந்த அதிட்டான சொருபமாயும், இவ்வதிட்டானத்திற்கு ஷை சாட்சித் துவைதம் ஆரோபமாயும், இவ்வாரோபத்திற்குச் சீவேசுர துவைதம் ஆரோபமாயு மிருக்கின்றன வென்க.

அன்றியும், ஷை சாமவேத மகாவாக்கியமானது முப்பத முடைத்தாயினும், அம்மூன்று பதங்கட்கும் மூவித சம்பந்த முள்ள னவாம். அவையாவன—சமானாதிகரண சம்பந்தமும், விசேடண விசேடிய சம்பந்தமும், இலக்கண இலக்கிய சம்பந்தமுமா மென்க.

முதலாவது சமானுதிகரண சம்பந்தமென்பது—தத் தொம் என்கிற அத்துவைதபதம் அர்த்தத்திற் பிரிபடாது ஒத்திருத்தலால் சமானமும், இப்பதங்க ளிரண்டும் அசிபதப்பொருளா யிருக்கின்ற மையால் அதிகரணமும், இம்முப்பதமும் அர்த்தத்தில் ஏகமாயிருத்த லால் சம்பந்தமுமாமென்க.

இரண்டாவது விசேடண விசேடிய சம்பந்தமென்பது—கூடஸ்த பிரமமிருவரும் ஒருவர்க் கொருவர் பேதமுறுது தற்கிழமையே மீக் கூர்ந் திருத்தல் விசேடணமும், அவ்விசேடணத்தினது ஒருமை யான ஆனுயென்னும் பொருளாய்க்காண்பது விசேடியமும், இத் தத் தொம் அசி என்கிற பொருள் மூன்றும் ஒன்ருகவே ஒத்திருப்ப தினுல் சம்பந்தமுமாமென்க.

மூன்ருவது இலக்கண இலக்கிய சம்பந்தமென்பது—இம்முப் பொருளாய் நிற்குந் தானென்பது அறிவானந்த ஏகமாயிருத்தலால், அவ்வேகமானது இலக்கணமும், இவ்வேகமென்பதின்றிச் சுயமா யிருத்தலால் அச்சுயமானது இலக்கியமும், ஷை ஏகமென்பதும் சுயமென்பதும் பிரிவின்றி ஒத்திருத்தலால் அவ்வொருமையே முடி வாகிய சம்பந்தமுமாமென்க.

எனவே, ஷை தத் தொம் அசி என்கிற பதங்களுக்குச் சமானுதி கரண சம்பந்தமும், அது நீ ஆனுய் என்னும் பதார்த்தங்களுக்கு விசேடண விசேடிய சம்பந்தமும் இப்பதார்த்தமுள்ள வாக்கியார்த் தங்களுக்கு இலக்கண இலக்கிய சம்பந்தமுமாமென்க.

இந்த சாமவேத மகாவாக்கியத்தினது பதங்களும் பதார்த்தங் களும் வாக்கியார்த்தங்களுமான இம்மூன்றினுக்கு முண்டாகிய சம் பந்தங்கள், இம்மூன்றினுலு முண்டாகிய கூடஸ்த பிரம ஐக்கியமான அத்வைதசொரூப சாட்சாத்கார அகம்பொரு ளென்கிற பிரயோசன மாமென்க.

இவ்வரிய அனுபவ ரசங்களையுடைய இம்மூன்ரும் வாக்கியத் தைப் பிரகடனமாக அனுக்கிரகித்துக் கொள்ளுதல் யார்பாலெனின்,

இஃது முதலாவது கேட்டலேன்பது.

குறள்.

"இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்."

என முன்னொன்றே எடுத்துக்காட்டிய ஞானசற்குருநாதன் பாலெ ன்க. அவன்பால் எவ்வாறு கேட்கின்றதெனின், தனது கணவன் இறந்தானெனக் கேட்ட அக்கணமே, தானுமிறந்த முதற்றரமான கற்புடை மகளிர்போல், பரிபாகி தனது தேகோகமானது வாக்கிய சிந்தனு உழைப்பில்லாமலே கணத்திற்றனே இறக்குமாறும்,

தனது கணவனிறந்தானென்பதைக்கண்டும் அக்கணமே தான் இறவாது சிலகடிகைசென்ற பின்னர், இறந்த அக்கணவனோடு தீப்புகுந் திறந்த இரண்டாந்தரமான கற்புடைமகளிர்போல், ஷை தேகோகமானது தனது வாக்கிய சிந்தனு உழைப்பு முதிர்ந்த சில ஞான்று சென்ற பின்னர் இறக்குமாறும்,

தனது கணவன் இறந்தா னென்பதைக் கண்டும் அவனோடு தானுமிறவாமலும், சிலஞான்று சென்றேனும் அக்கணவனோடு தீப்புகாமலும், தனது தேகநழுவுங்காறும் போகத்தை முற்றும், மறந்து மனம் ஒருவழிப்பட்டு தவநெறிக்கண்ணே விடாமல் நிற்கும் மூன்றாந்தரமான கற்புடைமகளிர்போல், ஷை தேகோகமானது தனது ஷை வாக்கிய சிந்தனு உழைப்பு முதிர்ந்த சிலஞான்று சென்ற பின்னரேனு மிறவாவிடினும், அவ்வுழைப்பு முதிர்ந்த இறுதியிலே னும் மிறக்குமாறும், அவ்வாக்கிய உபதேசத்தைக்கேட் டின்புறு தலா மென்க.

இஃது இரண்டாவது சிந்திந்தலென்பது.

பரம சற்குருநாதன்பால் இங்ஙனங் கேட்டுக் கிரகித்த அவ்வரிய வாக்கிய உபதேசத்தை நிலத்தில் நாட்டப்பட்ட தம்பமானது அசைவற் றிருக்கத் தக்கபடி செய்வார்போல், தனது சிந்தையிற் படிந்த இவ்வாக்கிய உபதேச அர்த்தமானது இலட்சியப்படுங்காறும், விடயப் பராக்குகளால் கிஞ்சித்தும் பேதியாதிருத்தற்கு மனன உழைப்புக்களினால் இறுகச் செய்தலும்,

பசுக்குழாங்கள் பயிர்களை விரைவில் ஒன்றுபாதியாகக் கறித் துக் கறித்து விழுங்கியவற்றை மீண்டும் ஒவ்வொன்றாக வியத்தப் படுத்தி மென்று மென்று ருசித்து விழுங்குவதுபோல், ஆசிரியர் பால் இவ்வாக்கியானுபவ ரசங்களைப் பல்ஞான்றும் கேட்டு உட்கொ ண்டவற்றை யெல்லாம், தனித்திருந்து ஒவ்வொரு ரசத்தையும் தனது நினைவிற் கொண்டுவந்து கொண்டுவந்து அதனினுமுண்டாம்

ஐயந்திரிபறுமாறு, ஒருவன் தானுண்ட கள் முதலியவைகள் தமது போதையாகிற வெறிவசத்தி விழுக்குமாறுபோல், மனனமென்னும் வெறிவசத்திலிழுக்க அவ்வெறியில் விடாதழுந்தி யிருத்தலாமென்க.

இஃது மூன்றுவது தேளிதலேன்பது.

இப்பரிபாகி கணப்போதும் மாருது மனனித்து மனனித்துத் தற்போதையாகிற வெறிவசப்பட்டு வருகின்ற நெடுஞான்று முதிர்ச்சியினல், ஒருவன் இரவு பொழுதுக்குக் கிஞ்சித்தும் சகிக்கப்படாது அருணன் உதயமாதற்கு முன்னர் விடியற்காலம் வந்துழித் தனது மனத் தெளிவும் அம்மனத் திட்பமும் வாய்க்குமாறு போலும்,

ஆற்றின்கண் நீர்பெருகி வரும்ஞான்று ஓர் கடிகை அன்றி அரைக்கடிகைக்கு முன்ஞான்றே அவ்வாற்றின் மணல்களுக்குள் சலம் விரைவிற் செல்லுழி, அதனுல் அம்மேல் மணல்கள் கொந்தளிக்குமாறுபோலும்,

ஞானப்பிரகாசமானது பூரித்துவருகிறதற்குச் சின்னுள் முன்னரே, இப்பரிபாகியின் மனமானது தனதெதார்த்த வடிவம் கணஞான்றேனும் விளங்கவில்லையே என்னும் ஆராமை மேலிட்டிருத்தலினல், தனது மெய்முழுதும் வாடியிருத்தலும், என்புகளானவை தத்தம் கட்டுகளெல்லாம் தளர்வுற் றிருத்தலும், இருவிழிகளிலும் மணற்கேணியில் மோழைநீர் வெளிப்படுமாறுபோல் தாரை தாரையாக ஆனந்த நீர் பெருகுதலும், காந்தச்சிலை முன் இருப்பூசியானது அதனே டணைவதற்குச் சேட்டிக்குமாறுபோல் இனி வெளிப்படும் தனதெதார்த்த வடிவில் அணைந்து கரைந்து விடுதற்கு அஃது அம்மனமானது நெளிந்து நெளிந்து பரோட்சமாக உறைந்துகொண்டிருத்தலும், இப்பிராரத்துவ சரீரம் அகன்றிடில் மீண்டும் எப்பிறவி வாய்த்துவிடுமோவெனப் பயகம்பன முதலியவைகளுற்றிருத்தலும், ஓர் ஞான்று ஆரவாரித்தலும், இடையிடையே தனக்குக் கிஞ்சித்துந் தோன்றுத களிப்புற் றிருத்தலும் அதாவது உன்முக் களிப்பென்பது. தான் இதுகாறும் மனனிக்கப்பட்ட தனது எதார்த்தத் திர்ப்பையன்றி ஏனைய தீர்ப்பனைத்தும் முடிந்த தீர்ப்பன்றெனக் களைந்து தன்னை அத்துவிதானுபவமாகத் தெளிந்து அத்தெளிவின் படியே நிற்றற்கு முன்னர்த் துவிதானுபவமாகவும் பின்னர் விசிட்டாத்துவைதானுபவமாகவும் தெளியவேண்டுவதும் அவசியமாக

வின், இதுகாறும் பரிபாகப்பட்டு வந்த முதிர்ச்சியினால் முன்னர்த் தெளியவேண்டியது துவிதானுபவத் தெளிவேயாம். இத்தெளிவே ஷை கேட்டல் சிந்தித்தல் இரண்டிற்கும் மேலாகியதாமென்க.

வழிபடுதற் கியைந்த துவிதம்.

துவிதமென்பது இருமை யுடையன. அவை உயிர்கள் வழி படுதற் கியைந்த அஞ்ஞான மகலாத துவிதமெனவும், அஃதகலும் துவிதமெனவுமாம். அஞ்ஞான மகலாத துவித மென்பது திருக் கெனவும் திரிசியமெனவு மிருக்கு மிரண்டில் திருக்கு அதிட்டான மெனவும், திரிசியம் ஆரோபமெனவும் வாச்சியார்த்தமாகவும் லட்சி யார்த்தமாகவும் தெளிந்தின்புறாது, ஓர் வத்து அனுமான அளவை யால் உளதெனவும் அவ்வத்துவுக்குச் சுசாதிக பேதங்களும் விசாதிக பேதங்களும் அநாதி சத்துக்களா யிருக்கின்றதென்னும் மயக்க மகலாமையேயாமென்க.

எங்ஙனமெனின், அந்தத்துவிதம் உலகு உயிர் பரம் இம்மூன் றும் அநாதி சத்துப்பொருளெனக் கூறியிருக்கின்றது. இம்மூன்று வித சத்துள் உலகாகிற சத்துக்கு உபாதான காரணம் யாது? உயிரு மன்று பரமுமன்று, பின்னர் யாதெனப்படும்? மாயையெனப்படுவ தாகலின், மாயாகாரியம் சகத்தெனப்பட்டது. படவே, ஓர் சத்தாகிய உலகப்பொருளுக்கு உபாதானகாரணம் ஒன்றிருக்கின்றமையால், ஏனைய இருவித சத்தாகிற உயிர் பர மிரண்டினுக்கும் உபாதான காரணங்கள் இரண்டிருக்க வேண்டுமே! அவ்விரண்டையும் சேர்த்துக் கணிக்கில் திரிபொருளென்பதின்றிச் சடுவிதப்பொரு ளென் றாகின்றதே! உயிர் பரம் என்னும் இரண்டு சத்துப் பொருள்களுக் கும் ஷை உபாதான காரணம் வேண்டுவதின்றெனின் உலகாகிற சத் துப்பொருளுக்கு மாத்திரம் உபாதானகாரணம் ஏன் இருக்கக்கூடும்? பிரதிபாலிக சத்துக்கும் விவகாரிக சத்துக்குமே கூடுமன்றிப் பார மார்த்திக சத்துக்கு எங்ஙனம் உபாதான காரணம் இருக்கக்கூடும்? உபாதான காரணத்தைக் காரியப்பொருள் ஏற்குமே அன்றிக் காரிய காரணம் கடந்திருப்பது எங்ஙனம் ஏற்கும்? இவ்வுலகம் காரியப் பொருளா? அன்றிக் காரணப்பொருளா? காரியப்பொருளாயின், இக்காரியம் கற்பனை யெனப்படுமே? படுமாயின் மேலே காரண மிருத்தற்கு விருத்தமின்று. அங்ஙனமின்றி இவ்வுலகு எதார்த்தப் பொருளா யிருக்கின்றமையால், இதற்கு மேலே காரணப்பொருள்

வேண்டுவதின்று. இருக்கின்றதெனின், இவ்வுலகு ஓர் சத்துப் பொருளும் இச்சத்துக்குமேல் இன்னும் ஓர் சத்துப்பொருளுமாகி இரண்டு சத்தாகின்றன. இவ்விரண்டு சத்தோடு உயிர்ச்சத்து ஒன் றும் பரச்சத்து ஒன்றும் ஆக நான்கு சத்துப்பொருள்க ளாகின்றன. உயிர் பரமென்னு மிரண்டு சத்தும் தமக்குமேல் காரணங்களை யிலா தாயினும் சதுர்விதச்சத்து இருக்கின்றதற்குச் சற்றும் விருத்த மின்று. இங்ஙனமிருக்கத் திரிபொருள் நிச்சயஞ் சாதிப்பது கிஞ்சித் தும் பொருத்தமின்று. இதுநிற்க. உலகென்பது தனிப்பொருளா? அன்றி, ஒன்றின் காரியப்பொருளா? தனிப்பொருளன்று, ஒன் றின் காரியப்பொருளெனின், காரியப்படுவது முன்னில்லாமை யன்றோ? முன்னில்லாமை காரியப்படின், அஃது எஞ்ஞான்று மிருக் கின்றதா? காலவரையறைப்படியிருந்து பின்ஞான்றில்லாமற் போகி ன்றதன்றோ? முன்ஞான் றில்லாததுபோலப் பின்ஞான்று மில் லாமையன்றோ காரியமெனப்படுவது? முன்ஞான்றும் பின்ஞான்று மில்லாமையே காரியமாயின், அக்காரியம் தோற்றமாக இருக்கின் றதா? அன்றிப் பொருளாக இருக்கின்றதா? பொருளாகவே இருக் கின்றதெனின், பொருளல்லதாக இருக்கின்றது முன்ஞான்றும் பின் ஞான்றும் இஞ்ஞான்றும் எஞ்ஞான்றும் மாறாது ஒருபடித்தா யிருப்ப தாக்கும்! இஃது விந்தையினும் மிக்க விந்தை! காரியப்படுவதெல் லாம் முன்ஞான்றும் பின்ஞான்று மில்லாமையாயின், அஃது இடை ஞான்று மாத்திரந்தானே இருப்பெனப்படுகின்றது? ஓர்ஞான் றிருப் பது பொருளாயும், சதுர்ஞான்று மிருப்பது பொருளென்பதின்றிக் கற்பனையாயு மிருக்கின்றதாக்கும்!

அன்றியும், உலகமென்பது காரியப்பட்ட பொருளாயின், உல கம் என்கிற இப்பெயர் அர்த்தப் பெயரா? அன்றி அனர்த்தப் பெயரா? அர்த்தப்பெயரெனின், எந்த அர்த்தத்திற்கு உலகமென் கிற பெயர்? காணப்படுதலுக் கெனின், அஃது தோற்றுதலுக் கென் றாகின்றது. அத்தோற்றம் தொழிற்குண மாகின்றது. அத் தொழிற்குணமா உலகமென்று வழங்குகிறதற்குப் பொருள்? அல் லவே! இப்பெயர் அனர்த்தப்பெய ரென்பதற்கு முரணென்னை? ஆகலின், இருக்கின்றது மண் முதலிய பஞ்ச பூதங்களும் அண்ட பிண்டங்களு மன்றோ? இவற்றுள் எது உலகெனப்படுவது? எதுவு மல்லவே! பஞ்சபூத முதலியவைகளின் சேர்க்கையாகிய பலவின் கூட்ட விகாரமன்றோ விருக்கின்றது? இச்சேர்க்கைக்கன்றோ உல

கெனப்பெயர் வழங்குவது? உலகென்கிற பெயரே அனர்த்த மாயின், சேர்க்கையுற் றிருக்கின்ற பல நாமரூபங்களுமா பொரு ளெனப்படும்? படுமெனின், ஆராய்தலில்லாத மூடத்திற்கின்றி ஆராய்ச்சியாகிற விவேகத்திற்கு இவை அன்மை இன்மை என்பதற் கியையாதிருக்கட்டுமே! அற்றேல், இத்தூணென்பது இன்றுவெ னின், தூணென்பது என்ன நிலைமையது? மேலேயிருக்கும் பரப்பு முதலியவைகளைச் சுமக்கு நிலைமையதெனின், சுமக்குந் தொழிலுக் குத் தூணென்பதா? அன்றிப் பொருளுக்குத் தூணென்பதா? பொருளுக்கேயெனின், இஃது எப்பொருளெனப்படுவது? உருட்சி நீட்சியாயிருத்த லெனின், அவை குணங்களாயிற்றே! பொரு ளென்பதெங்கே? ஆகலின், இக்குணங்களையுடையது யாதெனப் படும்? கற்பொருளெனின், கற்பொருளுக்குத் தூணென்கிற பெய ருண்டா? இன்றெனின், மற்றெதற் கியைந்தது? ஷை உருட்சி நீட்சி முதலியவைகட்கெனின், பண்புப்பெய ராகின்றதே! பண்புந் தொழிலுமா யிருக்கின்ற இத்தூண் சுமந்திருத்தல் முதலிய அனுப வத்தால் உண்டெனவும், சொரூபத்தால் ஆமெனவும் படுகின்றதே யன்றி, பொருளாயிருப்பது கல்லேயன்றி இல்லையே!

அன்றியும், இது தூணெனச் சுட்டிப் பரிசிக்கின், இச்சுட்டை யேற்பது ஷை கற்பொருளேயன்றி வேறாயிருக்கட்டுமே! இவ்வாறே எவ்வெந்நாமரூபமும் நமது அறியாமைக்குப் பொருளாகக் காணப் படுகின்றதே! அதனையும் சுட்டிப் பரிசிக்கின் அததுவும் அவ்வச் சுட்டையும் கிஞ்சித்தும் ஏலாமற் போகின்றதே! போகின்றதால், ஈற்றில் இருப்பு யாதெனப்படும்? அததன் உபாதான காரணமன் றோ? இதுபோல், உலகென்கிற அனர்த்தப் பெயரை ஏற்றி நிகழ் கின்ற பண்புக்கும் தொழிலுக்கும் எதுமுதலெனப்படும்? மாயை யெனப்படுமெனின், அம்மாயை மயக்கமெனப்படா திருக்கட்டும்! எங்ஙனமெனின், அனைத்தும் பண்புந் தொழிலுமாகிய தோற்றல் மாத்திரமாயிருக்கச் சத்தாகத் தோன்றுவானேன்? சத்தாகப் பார்ப் பதனாலெனின், அங்ஙனமுணர்வது பொருளல்லவற்றைப் பொரு ளென்றன்றோ? அஃதன்றோ மயக்கமெனற்பாலது! இம்மயக்கத் தையன்றி மாயையென்பது ஏது? அதனை இத்தகையதென,

குறள்.

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு." என்றும்

பிரபுலிங்கலீலை.

"விருப்பு வெறுப்புரு வாம்விட யத்தோ
டிருக்கு மயற்சக மென்ப திலாமை
பரப்பிர மத்தியல் பார்ப்ப தெமக்குத்
தெரித்தரு ளென்றுரை செய்து துதித்தான்." என்றும்

ஞானவாசிட்டம்.

"பேதமுறு புந்தியே மாயை யாகும்
பெரிதுவருந் தியுமிதனைப் போக்கல் வேண்டும்
போதமுறு பேற்றினா லன்றி மாயைப்
பொருநதியின் கரைதோன்றாப் புகலத் தோன்றி
லேதமறு மப்பதமே யிறவா வீடா
மிம்மாயைப் பிறப்பிடமே தென்னல் வேண்டாஞ்
சேதமுறக் கொல்வழியே தென்று தேர்வாய்
சிதைவுற்று விதனியல்பு தெரியு மன்றே."

என்றும் கூறியிருக்கின்றன.

இவற்றால், மாயையென்பது மயக்க மென்பதற்கு முரணென்னை? இங்ஙனமிருக்கும் மாயையை வேறாகக் கொள்ளில் அஃது பொருளெனப்படுமா? படுமெனின், இவ்வுலகம் என்னவெனப்படும்? இஃதும் பொருளெனப் படுமெனின், காரணமாகிற மாயையும் காரியமாகிற இவ்வுலகமும் ஓர் முதலென்பதா? காரியமென்பது முன்னொன்றும் பின்னொன்று மின்மையாயும், காரணமென்பது அம் முன்பின்னோடு இடையொன்று முண்மையாயு மிருக்கின்றதன்றோ? இவ்வுலகம் காரிய சத்துப் பொருளா யிருந்தாலிருக்கட்டும்! மாயை யென்பது இவ்வுலகமாகக் காரியப்பட்டது பரிணம பட்சமாகவா? அன்றி ஆரம்ப பட்சமாகவா? அஃதுமன்றி விவர்த்தபட்சமாகவா?

க-வது, பரிணமபட்ச மென்பது—ஓர் முதல் திரிந்து மற்றோர் முதலாக இருப்பது. அது பாலென்பது கெட்டுத் தயிராக இருப்பது.

உ-வது, ஆரம்ப பட்சமென்பது—ஓர் முதல் மற்றோர் முதலின் ஆற்றலினால் குணபேதமாகக் காரியப் பட்டிருப்பது. அது மட்பொருளானது கடவடிவமாகக் காரியப்பட் டிருப்பது.

ங-வது, விவர்த்தபட்சமென்பது—ஓர்முதல் மற்றொன்றாகத் திரியாமலும், மற்றோ ராற்றலினாற் குணபேதமாகாமலும் தன்பால் மற்றோர் முதல்போலத் தோற்றுகின்றது. அது கயிற்றின்பால்

அரவுபோற் றோற்றன் மாத்திரமாகத் தோற்றுவது. இஞ்ஞான் றிங்ஙனம் விளக்கிய இம்முப்பாகத்துக்குள் மாயையை எதுவென் றேற்கப்படும்? பாலென்பது திரிந்து தயிராவதுபோல் எற்போ மெனின், அந்தப்பால் தயிராகத் திரிந்த பின்ஞான்று பாலென்ப தில்லாமற் கெட்டுச் சற்றும் பொருளில்லாமைபோல் அம்மாயை உலகாகத்திரிந்த பின்ஞான்று அஃது கெட்டுச் சற்றும் பொருளின் றிப்போகுமே? போகுமாயின், காரியப்பட்ட இவ்வுலகு காலவரை யறைப்படி மாறுஞான்று, எதன்கண் ஒடுங்கி எதுவாய் விடுகின்றது? மாயையின்கண்ணொடுங்கி அதுவாய் விடுகின்றதெனின், இங்ஙனங் கொள்வதனால், மாயையென்பது கெட்டு உலகாகக் காரியப்பட்ட தன்று. அன்றாகவே, இவ்வுலகுக்கு மாயை பரிணாமோபாதானமு மன்று. மட்பொருள் குணபேதமாகக் காரியப்படுகின்றதுபோல், அம்மாயை குணபேதமாகக் காரியப்பட்டதெனின், அம்மட்பொருள் கடவடிவாகக் காரியப்பட்டஞான்று, அக்காரியமாகிய கடம் முன் னும் பின்னுமின்றித் தோற்றன் மாத்திரமாகவும் சொன்மாத்திர மாகவும் நிகழும் விவகாரிக சத்துக்கற்பனை யெனப்படுவதுபோல், அம்மாயை உலகாகக் காரியப்பட்டிருக்கும் ஞான்று, காரியமாகிய உலகு முன்னும் பின்னுமின்றித் தோற்றன்மாத்திரமாகவும் சொன் மாத்திரமாகவும் நிகழும் விவகாரிக சத்துக் கற்பனை யெனப்படுமே!

இதனால், மாயையென்பது உலகாகக் காரியப்பட்டதன்று. அன்றாகவே, இவ்வுலகுக்குத் தான் ஆரம்போபாதானமுமன்று. கயிற்றின்கண் அரவு தோற்றுதல்போல், மாயையின்கண் இவ்வுலகு தோற்றிக்கொண் டிருக்கின்றதெனின், மாயையானது கெடாமலும் குணபேதப்படாமலும் இருந்தபடியிருக்கும் தன்பால் இவ்வுலகு பிராதிபாஸிக சத்தாகிய கற்பனைத்தோற்ற மெனப்படுமே! இதனால், இவ்வுலகு மாயையின்கண் ஓர் முதல்போற் றோற்றிக்கொண் டிருப்ப தன்று. அன்றாகவே, இவ்வுலகுக்கு அம்மாயை விவர்த்தோ பாதானமு மன்றென்க.

இங்ஙனமிருக்க, இவ்வுலகம் அம்மாயையின் காரியமென்றெங்ஙன மேற்கின்றது? உலகைக்கண்டு ஆராயவேண்டியவாறாராய்ந்து தெளி யாது, வெறும் உத்தேசமாத்திரத்தால் மாயையின் காரியமென்று கொண்டதேயன்றி வேறன்று. இங்ஙனம் உத்தேச மாத்திரமாகக் கொண்டதனால், ழுற்று முரணாகவே இருக்கின்றது. ஷை மாயை

யைப் பொருளெனக் கொள்ளாது குணமெனக் கொண்டாற் ரேடமென்னையெனின், குணமென்பது ஓர் முதலினது தர்மமெனப்படும். அத்தர்மம் குணமாகலின், ஓர் முதலினது குணம் மற்றோர் பொருளாகக் காரியப்படுமா? அங்ஙனம் காரியப்படுவதிலும் உண்மைப் பொருளாகவும் காரியப்படுமா? ஒருண்மைப்பொருளே மற்றோருண்மைப்பொருளாகக் காரியப்படாதுழி, ஓர் முதலின் குணமா மற்றோருண்மைப் பொருளாகக் காரியப்பட்டு நிகழும்? மட்பொருளின்கணுள்ள கடசத்தியாகிய குணமானது கடகலசாதி பேதங்களாகக் காரியப்படுதல்போல், குணமாகிய மாயை காரியப்பட் டிருக்கின்றதெனின், மண்ணின் பாலுள்ள சத்தியே கடமாகக் காரியப்படுவதாயின், அம்மண்ணானது கடமாதிகட்கு உபாதான காரணமெனப்படா திருக்கட்டும்! கடமாதிகளாகக் காரியப்படுதற்கு அச்சத்தி சகாய காரணமா யிருக்கின்றதே யன்றி முதற்காரணமாக நின்று தான் காரியப்பட்டதன்று.

அன்றியும், அயமானது அக்கனியின் சகாயத்தால் வளைதல் குவிதல் முதலியனவாகக் குணபேதமாய்க் காரியப்படுகின்றதேயன்றி, ஷை அக்கினியானது வளைதல் குவிதல் முதலியனவாகக் குணபேதமாய்க் காரியப்படவின்று. இவைகளைப்போல் மாயையானது சகாயமாய் நிற்க, இப்பஞ்சபூத பவுதிக முதலியனவாகக் குணமாய் ஏதோ ஓர் முதலிருந்து காரியப்பட்டிருக்கவேண்டுமே! இதனால், உலகுக்கு மாயை முதற்காரண மன்றென்பதாகின்றது. இதற்கென்செய்தும்! இதனால் மாயையை ஓர் பொருளெனக்கோடற்கும் குணமெனக் கோடற்கும் இயையாமல் இவ்விரிடத்தும் மிக்க ஆபத்தாயிருக்கின்றதே! இவ்வாபத்து இருதலைக் கொள்ளியில் அகப்பட்ட எறும்பு போ லிருக்கின்றதே! இத்துணை ஆபத்தில் நின்று திரிபதார்த்த நிச்சயம் சாதிப்பது என்ன வியப்பென்கின்றது! இம்மருட்சிக்குக் காரணம் யாதெனின்,

குறள்.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு." என்றும்,

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு." என்றும்,

பிறந்திருக்கின்ற மகாவாக்கியத்தை வேதபாகியர்களைவிட்டு, அவ் வேத முதலிய சதுர்த்தச வித்தைகளாகிய சத்பிரமாணங்களையும்

அனேக யுத்திகளாலும் இலட்சியார்த்த அனுபவங்களாலும் பல முறையு மெடுத்தெடுத்து உணர்த்திக்கொண்டுவரும் அறிஞர்களாகிய ஆப்தர்கள்பால், நன்கு உன்னியுன்னித் தேராததேயாமென்க.

அன்றியும், பொருளெனவும் குணமெனவும் இயையாத ஷெ அநாதி சத்தாகிற மாயையும், அதன் அபேதகாரியமாகிற பாரமார்த்திக சத்துப்பொருளாகிய இவ்வுலகும் இவற்றோடு அநாதிசத்துப் பொருளாகிய உயிரும் பரமும் ஆகிய இச்சதுர்ப்பொருளும் கூறுபாடுடைத்தாகலின், ஒன்றுள்ளவிடத்தில் மற்றொன்று உண்டாயிருக்குமா? இராதன்றோ? இங்ஙனமிருக்கும் இந்நாற்பொருள்களும் எங்கிருக்கின்றன? ஓர் ஆதாரத்திலிருக்கின்றனவா? நான்காதாரத்திலிருக்கின்றனவா? நான்காதாரத்தி லிருக்கின்றனவெனின், அந்நான்கு ஆதாரமும் நான்கு என்கிற கூறுபாடுற்றிருக்கின்றனவாகலின், அந்நான்கும் எந்த ஆதாரத்தி லிருக்கின்றதெனவருமே! ஆகலின், அங்ஙனமன்று ஷெ நாற்பொருளும் ஓர் ஆதாரத்திற்றானே இருக்கவேண்டிய தவசியமாகின்றது! அவ்வாதாரத்தில் ஆதேயங்களாகிய இச்சதுர்விதப் பொருள்களும் ஆகாயமுதலிய பஞ்சபூதமயமாகியும் இருப்பாகியுமுள்ள இவ்வுலகுக்கு, எல்லையென்பது இத்துணைத்தென் றேற்கப்பட் டிருக்கின்றதா? இல்லையன்றோ? அங்ஙனம் எல்லையின்றிய இவ்வுலகமும், வியாபகமாகிய மாயையும் உயிரும் பரமும் ஆகிய ஒவ்வொன்றும் எங்ஙனம் கூறுபாடுற்றிருக்கும்? கூறுபாடுற்றிருக்கின்ற இந்நான்கும் எங்ஙனம் வியாபகமுற்றிருக்கும்? வியாபகமாயும் கூறுபாடுடையதாயு மிருக்கின்றது அவற்றிற் கியைந்ததெனின், கண்டத்துவமாயிருக்கும் வியாபகமுமுண்டா? உண்டாயிருக்கின்றதாகவே கொள்வம். இந்த நான்கும் நிகழும் அவ்வோரிடமானது யாதெனப்படும்? அந்த நாற்பொருள்களுள் பரமென்கிற பொருளில் ஏனைய மூன்று மிருக்கின்றனவெனின், இதனால் இவைகள் வியாபக வியாப்பிய மெனப்படுகின்றன. இவ் வியாபக வியாப்பிய சித்தாந்தம் வேறே யிருக்கின்றதே? அவ்வெல்லையில் தலையிட்டுக்கொள்ளுவானேன்? ஓர் பட்சத்தைச் சாதிக்கப் போந்தால் மற்றோர் பட்சத்தைத் தொட்டுக்கொள்ளலாமா? துவைதம் சாதிக்கப் போந்தால், அப்பட்சத்திற் பொருள்கள் எத்துணையாயிருக்கினும் அவைகள் வெவ்வேறு கண்டத்துவமா யிருக்கவன்றோ சாதிக்கவேண்டும்.

துவைதமென்பதற்கு வியாபக வியாப்பியம் சொல்லும் பட்சத்தில் சீவர்கள் மாயை உலகு ஆகிய இம்மூன்றும் அப்பரத்தில் கற்பனைகளாக வியாப்பியமா! அன்றிப் பொருள்களாக வியாப்பியமா? பொருள்களாகவே வியாப்பியமெனின், இதனால் பரமென்பது புரையுடைமை யேற்கின்றதே! எங்ஙனமெனின், சீவர்கள் முதலிய ஒவ்வொரு பொருளின் பரிமாணம் எத்துணை எத்துணையோ அத்துணை அத்துணைக்கும் அப்பரம்பொரு ளின்றாகலினென்க.

இதனாற் பரத்துக்கெனப் பொருள் கிஞ்சித்துமின்றி அப்பரமானது புரைமயமாகி விடுமே! அதாவது சூனியமெனப்படுவது. அச்சூனிய நிறைவில் இருக்கின்ற சீவர்கள் முதலிய மூன்றும் என்ன பொருள்க ளெனப்படும்? சூனியப் பொருள்க ளெனப்படுமன்றோ? இதற்கென்செய்தும்! இச்சீவர்கள் முதலிய முப்பொருள்களும் அப்பரத்தில் வியாப்பியமுற் றிருக்கினும் அதற்குத் தோடமின்று! ஏன் இன்று? இடமா யிருப்பதோடு இம்மூன்றுக்கும் உள்ளும் இடையும் வியாபித்திருக்கின்றதாலெனின், ஓர் பொருளுக்குத் திரிபுறமும் மற்றோர் பொருள் நிறைவுற் றிருக்கின், அந்நிறைவையன்றி அந்நிறைவைத் தன்பால் ஏற்கும் பொருள் தோற்றமா யிருக்குமா? அன்றி ஓர் முதலா யிருக்குமா? முதலாயிராதே! அதுபோல், அப்பரம்பொருள் ஷெ மூன்றிற்கும் திரிபுறமும் வியாபியா யிருக்குமாயின், இவ்வியாபகத்தை யேற்கும் இம்மூன்றும் கற்பனைகளெனப் படுமன்றி ஒவ்வோர் முதலெனப்படுமா? படாதுழி, துவைதமென்பது இங்ஙனந்தான் இருக்கின்றதோ? துவைத மென்பது எவ்வாறாகிக்கினும் இரண்டெனப்பட்டே யிருக்கவேண்டுமே! அங்ஙனமின்றித் திரிபதார்த்த மென்பதையுங் கடந்து சதுர்ப்பதார்த்தங்களா யிருக்கின்றதே! இவைகள், துவைதானுபவமாகுமா? சதுர்ப்பொருள்களேனும் இருக்கின்றன்றோ அவைகள் பேதித்திருக்கின்றனவெனக் கொண்டு, துவைதம் கூறலாம். அங்ஙனமும் பொருளாயில்லையே! இவற்றுள், முப்பொருள்களுள் சகமென்கிற ஓர் பொருள் விபரீதப் பிரத்தியட்சமாயும், சீவர்களென்கிற ஓர் வகுப்புப்பொருள்கள் விபரீதானுபவ அனுமானமாயும், மாயையென்கிற பொருளும் விபரீதத்தோற்ற அனுமானங்களாயு மிருக்கின்றனவே! இதனால், எங்ஙனம் துவைதமெனப்படும்? ஆகலின், துவைதமென்பது இஃதன்றென்க. அறிஞர்களால் புராதனமா யேற்கப்பட்டு வருகின்றதேயெனின், இத்துவைதம் நாத்திகானுபவத்தை மறுத்து

வழிப்படுதற்குக் கற்பிக்கப்பட்டதே யன்றி, மனமானது அயல் போதமின்றித் தற்போதமாதற்காக முன்னான்றே தெளிந்திருத்தற் கியைந்த துவைதம் வேறே யிருக்கின்றது. அஃதன்றோ இணக்க மாகியது ? இதுகாறுங் கூறிய இத்துவைதம் இணக்கமன்றென் பதற்கு உதாரணம்:—

பிரபுலிங்கலீலை.

"தூய்தா கியநெஞ் சுடையார்க்குத்
தாமே சிவமாத் தோன்றுமால்
தீதா கியநெஞ் சுடையார்க்குத்
தெளிய வபேத மிகலின்றி
வேதா கமங்கள் விளம்பிடினும்
விளங்கா தென்றும் வேறென்னும்
வாதா லழிவ ரவர்மாயை
மயக்க மயங்கு மதியினர்." என்றும்,

அத்துவிதக் கலிவெண்பா.

"ஈசன்வேறி யான்வேறென் றெண்ணுகின்ற பாதகரை
நீசரிற் கண்டு நினையென்று—னைசயொடும்
வேத முடிவறிந்த வேதியனைக் கூடென்றான்
பேதமிலை யெல்லாம் பிரியென்றான்." என்றும்,

வைராக்கிய சதகம்.

"புகலரும் பரம் பிரமமாங் கடறனிற்
புணர்பரை திரை யீசன்
சகமொ டாருயி ரெனுநுரை யாதிக
டந்துமாற் றிடுமென்றே
பகரு நான்மறை யெனிலதி லதையெதைப்
பற்றுவாம் விடுகிற் பாஞ்
சுகசொ ரூபமே யனைத்துமென் றகற்றுதி
துவிதபா வனைநெஞ்சே."

என்றும் கூறியிருப்பதனாற் காண்க.

இஃது

வழிபடுதற்கியைந்த விசிட்டாத்துவைதம்.

இவ்விசிட்டாத்துவைதமானது ஷ மகாவாக்கிய சதுட்டயத் தில் எந்த வாக்கியத்துக் கியைந்ததெனின், தத்துவமசி வாக்கியத் துக் கியைந்தது. அது தத் என்பது அதுவெனவும் துவம் என்பது

குணமெனவும் அசியென்பது ஆறுயெனவும் பிரிக்கப்பட்டு வழங்குகின்றது. அவற்றுள், அது என்பது பரமெனவும் அதாவது பரமாத்மாவினது வெனவும், குணமென்பது தர்மமெனவும் அதாவது பரத்தினது தன்மையாக வெனவும், அசி என்பது ஆறுயெனவும் அதாவது நீ அவ்வா றிருக்கின்று யெனவுமாம். அங்ஙன மிருத்தல், பரத்தினது தர்மமாக இருக்கின்றுயெனக் கொள்ளப்பட்டது. அவ்வாக்கியம் தனது முப்பதத்துள் இடைப்பதமாகிய துவமென்பதற்குத் துவைதிகள்போல் நீயெனப் பொருள்கொள்ளாது, தர்மமெனப் பொருள் கொள்ளுதற்கு இடமுண்டா யிருக்கின்றதாவெனின், தஸ்யிபாவ தத்வம் என்றுகின்றன. அவை தஸ்யா என்பது பரமாத்மாவின் பாவ என்பது தர்மமாக இருக்கின்றுயென ஆகின்றன. ஷை துவைத பட்சத்தில் மதிமுகம் பவளவா யென்புழி, இவ்விரு பதங்களின் இடையில் போலவென்கிற உவமை உருபு குன்றியிருக்குமாறுபோல், இங்கு தத்துவம் என்கிற பதத்தில் நீ என்கிற எழுவாய் குன்றி துவமென்கிறது தர்மமெனப் பிரிக்கப்பட் டிருக்கின்றதென்க. அஃதெங்ஙனமெனின், பிராமணத்துவம் சந்நியாசத்துவ மென்புழி, துவமென்பது தர்மமென்றுயதுபோ லென்க. ஆகவே, சேதனு சேதன மிரண்டும் பரமாத்மாவினது தர்மமெனப் பொருள்பட்டன. இது நன்கு விசாரித் துணர்பவர்க்கே வெளியாகுமென்க.

எங்ஙனமெனின், விசிட்டாத்துவைத மென்பதற்குப் பொருள் கூடியிருக்கிற அத்துவைதமா ? அன்றி மேன்மையான அத்துவைதமா ? மேன்மையாகிய அத்துவைதமெனின், தாழ்மையாகிய அத்துவைதமொன் றிருக்கவேண்டுமே ! இவற்றால் அத்துவைதமென்பது இரண்டாகின்றன. இரண்டு அத்துவைத மிருக்குங்கால், இரண்டு துவைத மிருக்கவேண்டுமே ! அவை என்ன துவைதங்க ளெனப்படும்? ஒன்று கூடாத்துவைதமும் மற்றொன்று கூடுந்துவைதமு மாகுமன்றோ ? ஆகவே, மேன்மையாகிய அத்துவித் மென்பதற்குப் பொருளென்னே ? அத் துவிதம் அத்துவித மென்னின், அஃது இரண்டற் றிருக்கின்றதெனப் பொருள்படுகின்றது ! இரண்டற்றது என்பதில் இரண்டென்பது எவை ? பரமாத்மாவும் சேதனு சேதனப் பிரபஞ்சமுமெனின், இவ்விரண்டு மற்றதே அத்துவிதமெனப் பொருள் படுகின்றது. இதனால் பரமாத்மாவாகிய குணியும் பிரபஞ்சமாகிய குணவேற்றுமைகளு மில்லாததா அத்துவித மெனற்பாலது ?

இது மேலான அத்துவிதமா? அல்லவே! அங்ஙனமன்றி, குணியாகிய பரமாத்மாவை விட்டுக் குணவேற்றுமைகளான சேதனு சேதனங்கள் பிரியாதிருக்கின்றதே அத்துவிதமெனின், இதனுல், குணிகுண மென்னுந் துவைத மகன்றதா? இல்லையே! குணி குணமாகிய துவைதம் சத்தியமாயிருக்க, இவற்றை அத்துவிதமென்பது கருங்காக்கையை வெண்காக்கை யென்பது போலாம். அத்துவிதமென்பது நான்கு விதமா யிருக்கின்றதே! அந்நான்கு விதத்துள், இவ்வத்துவிதம் ஒன்றேனுமல்லவே! அந்த நான்குள், ஒன்றிருந்தால் ஏனைய மூன்றும் ஏகாத்துவித மெனப்படுமே! முடிவில், ஏகாத்துவிதமாயினும், அதுகாறும் நான்குவித அத்துவிதமு முண்டோவெனின், துவைதம் நான்குவிதமா யில்லாதிருக்கட்டும்! அந்நான்குவித மென்ப தெங்ஙனமெனின், காரண காரியம், குணி குணம், பிம்பப் பிரதிபிம்பம், அம்சாம்சிக மென்பனவாம். அவற்றுள் காரணகாரிய மென்பது மட்கடம் நூற்படம் என்பன. குணிகுணமென்பது நீலோற்பலம் கருங்குயில் என்பன. பிம்பப் பிரதிபிம்பமென்பது வான்கதிர் நீர்க்கதிர் முகம் முகச்சாயை என்பன. அம்சாம்சிக மென்பது நீர்த்தரங்கம் ஆலாங்கட்டி என்பன.

ஷை க-வது, காரணங்களாகிய மட்பொருளும் நூற்பொருளும் காரியங்களாகிய கடப்பொரு ளெனவும் நூற்பொரு ளெனவும் படுமா? படாதன்றோ?

இங்ஙனமே உ-வது, குணிகளாகிய உற்பலப் பொருளும் குயிற் பொருளும் குணங்களாகிய நீலநிற மெனவும் கருநிற மெனவும்,

ந-வது, பிம்பங்களாகிய சூரியப்பொருளும் முகமாகிய பொருளும் சலசூரியப் பொருளெனவும் ஆடிமுகப் பொருளெனவும்,

ச-வது, அம்சமாகிய நீர்ப்பொருள் அம்சிகங்களாகிய அலையாதி பொருளெனவும், ஆலாங்கட்டிப் பொருளெனவும் படுமா? படாதன்றோ? இங்ஙன மிருப்பதால், காரணகாரிய முதலிய இந்நான்கு வகுப்புக்களுள் ஒவ்வொன்றும் துவைத மெனப்படுமா? அன்றி அத்துவித மெனப்படுமா? ஒன்று மற்றொன் றெனப்படா திருக்கின்றதால், துவைதங்க ளென்பதற்கு முரணென்னை? ஆகவின், இத்துவைத பேதங்கள் சதுர்ஞான்றும் காரணம் குணி பிம்பம் அம்சம் ஆகிய இந்நான்கையுமன்றிக் காரியம் குணம் பிரதிபிம்பம் அம்சிகம் ஆகிய இந்நான்கு மின்றெனவும், காரிய முதலிய இந்நான்கும்

ஷை காரண முதலிய அந்நான்கு மன்றெனவுமாகத் தெளியுமித் தெளிவே விட்டுவிடாத லக்கணையாம். இந்த லக்கணையே அத்துவித மென்பதற்கு முரணின்று? இன்றாகவே, ஷை காரண முதலிய நான்கும் காரிய முதலியனவாகிய எல்லாமாயும், அவை தாம் அல்ல வாயு மாயிற்றென்க. அத்துவிதமென்பது எல்லாமாயும் அல்லவாயும் தெளிந்திலங்கும் விட்டுவிடாத லக்கணையா யிருக்க, விசிட்டாத் துவித மென்பது என்னவெனப்படும்? விடாதலக்கணை யெனப்படு மன்றோ? இவ்விரண்டும் விட்டுவிடாத லக்கணையும் விடாத லக்கணையு மாயின் ஷை துவிதமென்பது என்னவெனப்படும்? விட்டலக்கணை யெனப்படுமன்றோ? இவ்வத்தியாயத்திற்கு முன் அத்தியாயத்தில் துவிதமென வழங்குவதும், இவ்வத்தியாயத்தில் விசிட்டாத்துவித மென வழங்குவதும் பொருத்த மிருக்கின்றனவா? இல்லையே! இவை நிற்க.

விசிட்டமென்பதற்குப் பொருள் கூடியிருக்கின்றதென்பதா? அன்றிக் கூடாதிருக்கின்ற தென்பதா? இவ்விருபதத்துள் கடைப் பதம் அத்துவிதமென்றாகின்றதால், எங்ஙனம் முதற்பதம் கூடியிருக் கின்ற தென்னப்படுமெனின், அக்கடைப் பதம் துவிதமா யிருப் பதை அத்துவிதமாகக் கொண்டதனாலன்றோ, கூடியிருக்கின்ற தென்னு முதற்பதம் மேன்மையைத் தரற்பால தெனக்கொண்டு மேன்மையாகிய அத்துவிதமென வழங்கப்படுகின்றது? இதனால், விசிட்டத் துவிதமெனப்படாது விசிட்டாத்துவித மெனப்பட்ட தாக்கும்! அங்ஙனமாயின், பரமாத்மாவை வியாபகப்பொரு ளென் பானேன்? ஓர் பொருள் வியாபகமா யிருக்கின்றதாயின், அவ்வியா பகம் எதற்கென வினவவருமன்றோ? அதுபோல், பரமாத்மா எதற்கு வியாபகமெனப்படும்? சிற்சடமாயுள்ள பிரபஞ்சப் பொருள் களுக்கெனின், இதனால் பிரபஞ்சப் பொருள் வியாப்பிய மாகின்றன. ஆகவே, பிரபஞ்சம் பரமாத்மப் பொருளென்பமே! கூடாதெனின், பரமாத்மாவுக்கு இப்பிரபஞ்சம் வேறுபொரு ளென்பமே! அங்ஙன மும் கூடாதெனின், ஏன், கூடாது? இவை பரமாத்மாவின் தன்மை களாமெனின், அவையாவன குணவேற்றுமைகளா யிருத்தல். இக் குணங்களுக்குக் குணிப்பொருள் பரமாத்மாவன்றோ? பரமாத்மா குணியும் சிற்சடப்பிரபஞ்சம் குணங்களு மாகின்றன. இச்சிற் சடங்கள் பரமாத்மாவிற் கூடியிருக்கின்றனவா? அன்றிக் கூடாதிருக் கின்றனவா? அதாவது—பரமாத்மாவைவிட்டு அஃதில்லாவிடத் திருக்

இன்றவைகளா வென்பது. பரமாத்மாவிற் கூடியே இருக்கின்றன வெனின், அதனால் துவித மெனற்பாலதா? அன்றி அத்துவித மெனற்பாலதா? அத்துவித மெனற்பாலதெனின், ஷை காரண காரிய முதலிய ஐந்து விதங்களில் இஃதென்ன அத்துவித மெனப் படும்? மேல் அத்தியாயத்தில் சுசாதிகம் விசாதிகமுள்ள துவித மும், இவ்வத்தியாயத்தில் இஃது அச்சுசாதிக விசாதிகமின்றிய சுகத பேதமென்னும் கூடியிருக்குந் துவிதமு மாகின்றன.

அங்ஙனமன்று, இஃது அத்துவிதமே யெனின், பரமாத்மா வோடு சிற்சடங்கள் பிரிவற் றிருத்தலால் அத்துவிதமாகின்றது. இவைகள், வியாப்பிய முற்றிருத்தலால் என்னவெனப்படும்? வியாபக வியாப்பியம் ஏற்குங்காறும் கூடுந் துவிதமும், அங்ஙனமின்றி ஒவ் வொன்றும் தனித்தனி வெவ்வேறிடத்தது என்றேற்குங்காறும் கூடாத் துவிதமுமாகுமன்றோ?

அன்றியும், வியாபக வியாப்பியமென்பது இருவகைத்தாயது. அவை—ஓர் பொருளின்கண் நின்று நிகழும் சினை குணம் தொழில் இம்மூன்றும் வியாப்பியமும், அவற்றால் அப்பொருள் வியாபகமு மாகின்றன. அவை சாத்தனது உறுப்பும் நிறமும் தொழிலும் போல்வன. ஷை பொருளின்கண்ணே நின்று நிகழும் மற்றோர் பொருள் இடம் காலம் இம்மூன்றும் வியாப்பியமும் அதனால் அப் பொருள் வியாபகமுமாகின்றது. அவை சாத்தனது ஆடையும் மனையும் ஆயுளும் போல்வன. முன்ஞான்று கூறிய சினை குணம் தொழில் மூன்றும் தற்கிழமையாகிய வியாப்பியமும், பின்ஞான்று கூறிய பொருள் இடம் காலம் மூன்றும் பிறிதின் கிழமையாகிய வியாப்பியமுமாம். இவ்விருவித வியாப்பியங்களில் எது கூடுந் துவித மெனப்படும்? எது கூடாத்துவித மெனப்படும்? தற்கிழமையாகிய வியாப்பியம் கூடுந்துவிதமும், பிறிதின்கிழமையாகிய வியாப்பியம் கூடாத்துவிதமு மாகின்றன. இவற்றைப்போல், பரமாத்மாவும் சிற் சடங்களும் என்ன துவிதமெனப்படும். கூடுந்துவித மென்பதன்றோ? மேன்மையான அத்துவித மென்பதற்குப் பொருளெங்கே? அத்து வித மென்பது ஷை காரணகாரியம் குணிகுண முதலிய துவிதபேத மற்றதன்றோ? கூடியிருக்கின்ற துவிதம் என்கிற இருபதங்களின் இடைக்கண் ஆகாரத்தை வருவித்து இது வடமொழிச் சந்திகளில் ஒன்றென மயங்கி விசிட்டாத்துவித மென்னலாமா?

இஃதன்றியும், சேதனுசேதன உலகம் பரமாத்மாவின் குண பேதங்களா யிருக்கின்றமையின், இக்குணபேதங்கள் விகாரமெனப் படுமா? அன்றிச் சுயம்பெனப்படுமா? சுயம்பெனப் படுமெனின், சமட்டி வியட்டிகளாகக் காணப்பட்டவைகளுள் ஒன்றேனுமுண்டா? இல்லையே! இருக்கின், காரண காரியம் கடந்ததா யிருக்கட்டுமே! ஒவ்வொன்று காரியமாயினும் ஒவ்வொன்று காரணமாகவேனு மிருக்கின்றதன்றோ? அவைகள் சுயம்பென்பதற்கு முரணென்னை யெனின், எதெது காரணப்படுகின்றதோ அததுவும் மேலொன்றுக்குக் காரியமெனப் படாதிருக்கட்டும்! அங்ஙன மில்லையே! முற்றும் காரியமயமா யிருக்கின்றதே! எங்ஙனமெனின், பிருதிவிக்கு வித்து காரியமாயும், அவ்வித்துக்கு அங்குரம் காரியமாயும், அவ்வங்குரத்திற்கு இதழ் காரியமாயும், அவ்விதழுக்குச் சாகை காரியமாயும், அச்சாகைக்குத் தளிர் காரியமாயும், அத்தளிருக்கு அரும்பு காரியமாயும், அவ்வரும்புக்குப் பிஞ்சு காரியமாயும், அப்பிஞ்சுக்குக் காய் காரியமாயும், அக்காய்க்குக் கனி காரியமாயும், அக்கனிக்குப் பஞ்சு காரியமாயும், அப்பஞ்சுக்கு நூல் காரியமாயும், அந்நூலுக்கு ஆடை காரியமாயும், அவ்வாடைக்கு அலங்காரம் காரியமாயும், அவ்வலங்காரத்திற்குத் திருப்தி காரியமாயு மிருக்கின்றன. இங்ஙனமே ஏனைய ஒவ்வொன்றும் அபாவத்தை மேற்கொண்டு உதித்து ஒவ்வோர் முதலாகத் தோன்றுகின்றன. இவற்றால், சர்வமும் காரியமயமே யன்றிக் காரணமென்பது எஞ்ஞான்றும் எவ்விடத்தும் இல்லவேயில்லை! இங்ஙனமிருக்க, சுயம்பெனப்படுவது எது? இன்றாகலின், சர்வமும் விகாரமென்பதற்கு முரணின்றென்க.

அன்றியும், இவ்விகாரங்க ளனைத்தும் அசுத்த மெனப்படுமா? அன்றிச் சுத்தமெனப்படுமா? சுத்தமென்பதற்குத் தோட மென்னை யெனின், காரியமாகிற விகாரமென்பது சுத்தத்துவ மாகுங்கால் காரணமாகிற நிர்விகாரமென்பது அசுத்தத்துவமாக்கும்! ஆங்காங்கும் தொழிலும் பண்புமாயுள்ள அனைத்தும் விகாரமாயும், அசுத்தமாயு மிருப்பதன்றோ? இங்ஙனமிருக்கு மனைத்தும், மாறுந் தகையதன்றோ? ஆகலின், அநித்திய மென்பதற்கு முரணென்னை? மாறத்தகையவை கண்டிதப்பொருள்களா? அன்று! கண்டிதப்பொருள்க ளாகின்றவே! கண்டிதமாகிய இவ்விகாரங்க ளனைத்தும் அதிருப்தியைத் தரற்பாலனவா? அன்றித் திருப்தியைத் தரற்பாலனவா? திருப்தியைத் தரற்பாலனவெனின், இதுகாறும் பிரமன் முதலிய

சர்வ உயிர்களில் எவ்வுயிர் திருப்தியடைந்தது ! சிற்றின்ப மென்னும் திருப்தியையேனும் பெற்றிருக்கின்றதே யெனின், அஃது நிலையற்றதாகலின் போலியின்ப மாகின்றன. ஆகின்றதால், அவ்வவ்வின்பமும் ஈற்றில் துக்கமாய் முடிகின்றது. முடிவதால், ஷை தொழிலும் பண்புமாகிய குணபேதங்கள் விகாரம் அசுத்தம் அநித்தியம் கண்டம் துக்கம் ஆகிய இவ்வைந்துவித விபரீதமும் உற்றிருக்கின்றன. உற்றிருக்கு மிவைகள் எந்த முதலை உடையன ? பரமாத்மாவாகிய முதலை யுடையனவன்றோ ? நீலோற்பலம் செந்தாமரை யென்புழி, நீல்நிறமும் செம்மை நிறமும் எந்த முதலையுடையன ? எந்த முதலையும் உடையனவன் றென்னலாமோ ? அவ்வவற்றிற்கு முதல் புட்பமன்றோ ? அவைபோல், ஷை குணபேதங்களாகிய விகார முதலியவைகள் பரமாத்மாவை உடையனவாயின், இவற்றையுடைய பரமாத்மா என்னவெனப்படும் ? கற்பனையுடைய தெனப்படுமன்றோ ? அப்பரமாத்மா நிர்விகாரமாயும், சுத்தமாயும், நித்தியமாயும், அகண்டிதமாயும், இன்னும் அனந்த இலக்கணங்களை யுடையதாயிருத்தலால் விகார முதலியவைகளை ஏற்காதெனின், இவ்விகார முதலிய அசுத்த குணங்களை ஏற்குமுதல் எது ? பிரகிருதி என்கிற மாயையேயெனின், அம்மாயையானது பரமாத்மாவுக்கு வேறுபொருளாக்கும் ! ஆகவே, கூடாத்துவிதமொன்று இருக்கின்றதாக்கும் !

அன்றியும், மாயை என்கிற ஓர் பொருள் தவிர மற்றவற்றிற்கு அப் பரம் வியாபகமாக்கும் ! இதனால் அரைப்பாகம் கூடும் துவிதமும், அரைப்பாகம் கூடாத் துவிதமுமாகின்றதே ! ஷை சேதனமும் சேதன விகாரம் முதலிய குணங்களோடு அப்பிரகிருதியும் குணப் பகுதியன்றோ ? யாவும் தற்கிழமைக் குணபேதங்களாகலின், அப்பரம் சர்வவியாபக மெனப்படுகின்றது. இச்சர்வமாகிய விகாரம் அசுத்த முதலியவைகளையுடையது பரமாத்மா ஆகலின், அப்பரம் விகார முதலியவை யென்பதற்கு முரணின்றுமென்க. அங்ஙனமன்று,

திருமழிசைப்பிரான் பிரபந்தம்.

"தன்னுளே திரைத்தெழுந் தரங்கவெண் டடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளே பிறந்திறந்து நிற்பவுஞ் சரிப்பவும்
நின்னுளே யடங்குகின்ற நீர்மைநின்க ணின்றதே."

எனக் கூறியிருக்கின்றதால் அப்பரத்திற்கு என்னதோட மிருக்கின் றது? சலவியாபகத்தில் நின்றெழுகின்ற அலையாதிகளால் அச்சலம் விகாரமுதலியவைக ளாயிற்றா? அதுபோல், பரமாத்மா இருக்கின்ற தாமெனின், அலையாதி விகாரங்களாற் சலப்பொருள் விகாரமென் பதற் கியைந்ததன்று? ஏனெனின், அவ்வலையாதிகள் ஓர் முதலன் றாகலினென்க. எங்ஙனமெனின், பிராதிபாஸிக சத்தெனவும், விவ காரிக சத்தெனவுமிரண்டாம். அவற்றுள், பிராதிபாஸிக சத்தென்பது தனக்கெனக் கிஞ்சித்தும் பொருளின்றிச் சொல்மாத்திரமாயும், தோற்றல் மாத்திரமாயு மிருக்கின்றது. அது கயிற்றரவுபோல்வது. விவகாரிக சத்தென்பது ஐம்புலனாலும் அனுபவித்தற் கியைந்தது போலிருக்கின்றது. அது சன்னிவிகாரம், கனவின் விகாரம் முதலியன போல்வது. அலையாதிகள் சலப்பொருளை யன்றி ஓர் முதலெனப்படுமா? படுமெனின், சலத்தையன்றி வேறாயிருக்க வேண்டும்! வேறாயிராவிடினும், அச்சலத்தின்கண்ணே நின்று நிகழுகின்றன வெனின், ஒருவன் அலையால் மோதப்பட்டுழி, சலப் பரிசமின்றி அலைப்பரிச மாத்திரந்தா னிருக்கின்றதாகும்! அலை மோதும் ஞான்று, சலம் எங்குபோயிற்று? இருப்பது சல இருப் பின்றித் தோற்றன் மாத்திரமாய் நிற்பது அலையுமாகின்றதே! இருக்கின்றதால் இவ்வலையாதிகள் என்ன சத்தெனப்படும்! இருப் பின்றித் தோற்றுவதால் பிராதிபாஸிகசத்தும், இத்தோற்றம் ஐம்பு லானுபவத்திற் கியைந்ததுபோ லிருத்தலால் விவகாரிக சத்து மாகின்றன. இங்ஙனமே, பரமாத்மா யதார்த்தமாயும், ஷை பிர கிருதி முதலிய சர்வ வியாப்பியங்களும் சொல்மாத்திரமும் தோற்றன் மாத்திரமாயும் ஆகின்றவே! ஷை திருமழிசைப் பிரான் திருவாக்கு அத்துவிதிகளுக்கு இணக்கமா யிருக்கின்றதே! அதை நாம் ஏன் எடுத்தாளவேண்டும்? நாம் ஆளவேண்டியது பரமாத்மாவைச் சர்வவியாபகமெனவும், அவ் வியாபகத்தில் வியாப்பியமாய் நிகழும் பிரகிருதி முதலிய சேதனு சேதன மனைத்தும் குணபேதங்க ளென வும், அன்றியும் அவை எதார்த்தமெனவு மன்றோ? இங்ஙனமிருக்க, அலையாதி திட்டாந்தம் வருவித்ததென்னை? பரமாத்ம சொருபம் கற்பனைகளுக்கு வியாபகமெனச் சொன்னால், அவ்வியாபகம் கிஞ்சித் தேனும் இழுக்குறுமா? எதார்த்தங்களுக்கு வியாபகமெனச் சொன் னால் அவ்வியாபகம் புரையுடைமையாய் முடியுமே! குணபேதங் களுக்கு வியாபகமெனச் சொன்னால், அவ்வியாபகம் அக்குண

பேதங்களுக்கு வரும் இன்ப துன்பம், இறத்தல் பிறத்தல் முதலிய வை அப்பரமாத்மாவுக்கே வாய்க்குமே! ஏனெனின், குணங்கள் ஒவ்வோர் முதலாகாமையினுலென்க.

குறள்.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்பதற்கு விருத்தமாக உணர்ந்து, அதாவது "எப்பொரு ளெத் தன்மைத் தாயினு மப்பொரு ளப்படிக் காண்ப தறிவென்பது." இங் ஙன முணர்ந்து அப்பரமாத்மா இழிவுறுமாறு செய்வது ஓர் கற்புடை மகண்மேல் இல்லாப்பழியை உள்ளதாகச் சுமத்திக் களிப்புறுவது போலாம். அன்றியும்,

நாலடியார்.

"தெளிவிலார் நட்பில் பகைநன்று சாதல்
விளியா வருநோயி னன்று—ளிய
விகழ்தலிற் கோற லினிதே மற்றில்ல
புகழ்தலின் வைதலே நன்று."

என அறிஞர்கள் கூறியிருக்கின்றனர். என்னை? சுசாதிகம் விசா திகம் சுகதபேதமென்னும் வஸ்து பரிச்சேத மின்றிய சுயம்பிரகாச காச வஸ்துவுக்கு அறிஞர்கள் முனிவுறச் சுசாதிகமும் விசாதிகமும் இருப்பதாகக் கற்பித்துத் துவிதபட்சம் சாதிப்பதுபோல், நாம் ஷெ சுசாதிகம் விசாதிகமிரண்டும் அவ்வஸ்துவினது குணபேதங்க ளெனச் சுவகதபேதம் சாதிக்கின்றதும் அவ்வஸ்துவுக்கு இழுக் கென்பதற்கு முரணென்னை? வஸ்துவென்பது எங்ஙன மிருக்க வேண்டுமெனின், ஒப்பு உயர்வு தாழ்வு என்னு மிம் மூன்று மின் றியதா யிருக்கவேண்டுமென்க.

அங்ஙனந் தெளிதற்கன்றோ ஷெ காரணகாரிய முதலிய அபேத வாத மிருக்கின்றன? அக்காரணகாரிய முதலியவைகள் இறந்து தானேதானுய்த் தெளிந்திருக்க வேண்டுமே! அங்ஙனம் தெளி தற்கு முன்ஞான்று துவிதானுபவ சோபானமும், விசிட்டாத்துவி தானுபவ சோபானமும் வந்திருக்கின்றன! இதுகாறும் கூறிப் போந்த இத் துவித விசிட்டாத்துவித மிரண்டும் உயிர்கள் வழிப் படுதற் கியைந்த சோபானங்களே யன்றி, இவைகள் சித்தாந்த சோபானங்களாமோவெனின், தானேதானுகத் தெளிவித் தற் கியைந்த துவிதம் விசிட்டாத்துவித மிரண்டுமே தீர்ந்தவனு

பவம் அன்றென்பதாயின், பரத்திற்குப் பரிபூரண தோடமும், விகார முதலிய தோடங்களும் செய்விக்கும் இத்துவித விசிட்டாத்துவித மிரண்டுமா சித்தாந்தமெனப்படும்? பரமென்பது எங்ஙனமிருக்கச் சம்மதிக்கின்றதெனின், சுசாதி விசாதி சுகதபேதமென்னும் மூன்றும் கயிற்றின்கண் அரவுபோலிருக்கச் சம்மதிப்பதாமென்க. தானே தானுகத் தெளிவித்தற் கியைந்த அத்துவித விசிட்டாத்துவித மென்பதெங்ஙனமெனின்,

அவ்விரண்டில் இஃது எதார்த்த துவிதம்.

பதி பசு பாசம் என்னும் மூன்றில், பதியும் பசுவும் சித்துப் பொருளும் பாசம் சடப்பொருளுமாயினும், இவை அறியப்படும் பொருள்களா? அன்றி அறியப்படாப் பொருள்களா? பாசம் சடமாகலின், அறியப்படும் பொருளாகும். பதியும் பசுவும் அறிவுப் பொருளாகலின் எங்ஙனம் இவை அறியப்படுகின்றதெனின், பதி ஒன்றுளதென எங்ஙனம் ஏற்கப்படுகின்றது? பாசமாகிய பிரபஞ்சத்தாலெனின், அங்ஙனம் ஏற்பது அனுமான அளவையெனப்படும். படினும், அவ்வளவையால் அறிந்து ஏற்பது எது? உயிரெனின், அவ்வுயிரால் அறியப்படுகின்றதன்றோ? பாசமாகிய பிரபஞ்சம் இந்திரியப் பிரத்தியட்சமும், பரமாகிய வஸ்து மானதப் பிரத்தியட்சமு மாகின்றன. ஆகவே, இவ்விரண்டும் திரிசியப் பொருள்களென்பதற்கு முரணில்லையே! இல்லையாயினும், உயிரேனும் அறியப்படாத பொருளன்றோவெனின், உயிராகிய பொருள் அறிவாயினும் பரமாகிய அறிவு அறியப்படுதற் கியைந்திருப்பதுபோல, இவ்வுயிரும் அறியப்படுதற் கியைந்திருக்கின்றதன்றோ? யாவும் உயிருக்குக் காணப்படுகின்றமையின், உயிர் எதற்குக் காணப்படும் தகையதெனின், உயிரென்பது அறிவாயினும், இஃது அவத்தாத்திரயங்களிலுள்ள காட்சிகளை உணருகின்றதன்றோ! அவற்றை யுணருமிவ்வுயிர் நானென்றறிகின்றதா? அங்ஙனமின்றி அறிகின்றதா? நானென்றறிகின்றதெனின், எத்துணை நானென நின்றறிகின்றது? உடற்றுணையாகவெனின், அவ்வவ் வவத்தா உடற்றுணையாகவா? அன்றி இச் சாக்கிராவத்தை யுடற்றுணை மாத்திரமாகவா? அவ்வவ் வவத்தா உடற்றுணையாகவெனின், அவ்வத்துணையாக நின்றுணர்தலுக்கன்றோ உயிர் என வழங்குகின்றது? அங்ஙனம் உயிரென வழங்கப்படினும் அஃது எதற்கு வழங்கப்படுகின்றது?

ஷை அவத்தாத்திரய அகம்பொருளுக்கன்றோ? அஃதன்றி எதற்குமல்லவே? அங்ஙனம் வழங்கப்படுவது என்றேகம் என்னிந்திரியம் என் அந்தக்கரணம் என இவை கிழமைகளாக வழங்கப்படுவனபோல், என் உயிர் என் உயிரெனவும் கிழமையாக வழங்குப்படுகின்றது. அங்ஙனம் என்னுயிர் என வழங்கப்படுவதால், உயிர் அறியப்படும் பொருளாய் விடுமோவெனின், நானென்னும் அகம் பொருள் இலட்சியார்த்தப் பொருளா? அங்ஙனம் அல்லாப் பொருளா? அல்லாப் பொருளெனின், விடாநிட்டை கூடுவது யாதுக்கு? நானென்கின்ற அகம்பொருள் வெளிப்படுதற்கன்றோ? நான் எனக்கு வெளிப்பட்டுழி நான் ஆத்மா என வழங்கப்படுகின்றதன்றோ? அஞ்ஞான்று நான் உயிரன்றெனப் படுமன்றோ? அவத்தாத்திரய திசைக்கண் நானென்பதற்கு உயிரெனவும், சமாதி திசைக்கண் ஆத்மா எனவுமாயின், இச்சுத்தாசுத்த இரண்டு தர்மமும் நானென்பதற்குக் கிழமைகளன்றோ? இக்கிழமைகளில் எது தற்கிழமை எது பிறிதின்கிழமை யெனப்படும்? ஆத்மா தற்கிழமையும் உயிர் பிறிதின் கிழமையுமன்றோ? இதனால், இவ்வுயிர் அறியப்படும் பொருளென்பதற்கு முரணென்னை? இவ்வுயிரென்பதே அறியப்படும் பொருளாயின் ஏனையிரண்டும் இவ்வுயிரால் கண்கூடாகவும் அனுமானமாகவும் அறியப்படும் பொருள்க ளென்பதற்கு முரணென்னை? இங்ஙனம் ஆராய்ந்ததால் தேர்ந்தது பதி பசு பாசமென்னும் மூன்றும் திரிசியங்களாயும், நானென்கிற போதம் திருக்காயும் முடிந்தன. முடியவே, உயிரென்பது அநுபவ அனுமான அளவைப் பொருளாயினும், தனக்கெனக் கிஞ்சித்தும் பொருளுண்டா? ஏனெனின், அறியாமையாய் முடிவதா லென்க.

எங்ஙனமெனின், இத்தூலமுதலிய உபாதித்திரயங்கள் தமக்கெனப் பொருளின்றித் தோற்றல் மாத்திரமாக இருப்பதைப் பொருளாகக் கொண்டது மயக்கமா? அன்றித் தெளிவா? மயக்கந்தானெனின், இம்மயக்கத்தால் அவ்வவ் உபாதித்துணை நானென மருவியது யாதெனப்படும்? அஃதும் மயக்கமன்றோ? இங்ஙனம் இரட்டித்த இம் மயக்கம் யாதெனப்படும்? அறியாமையெனப் படுமன்றோ? இவ் வறியாமை வடிவாயிருக்கின்ற தன்றோ சீவனெனப்படுவது? இரட்டித்த அறியாமையாயுள்ள சீவன் தனது உபாதான அதிட்டானத்தை எஞ்ஞான்றேனும் கிஞ்சித்தும் நாடுவதுண்டா?

அங்ஙனம் நாடாமையாலும் அறியாமை யென்பதற்கு முரணின்று. இன்றாகவே, சொல்மாத்திரமாக வழங்கப்படுகின்றதன்றோ? இச் சொல் மாத்திரமாக உபாதித்திரய விபரீதானுபவ அனுமானத்தால், ஓர் சீவப்பொருளுண்டென வழங்கப்படுகின்றதால், கற்பனையாகிற பாவனைத் தோற்றமாகின்றது. ஓர் பரம் உண்டென வழங்குவதும் சீவப்பொருளுண்டென்பதைப்பற்றி யன்றோ? சீவன் என்பது இக்கதியா யிருக்கின், மேலே ஓர் பரம் உண்டென்பதும் எக்கதி யெனப்படும்? அஃதும் பாவனைத் தடிப்பன்றோ? ஆகலின், இவ் விரண்டும் பாவனைத் திரிசியமென்பதாயிற்று. ஆகவே, பிரபஞ்சம் தூலதிரிசிய மென்பதாயு மாயிற்றென்க.

இம் மூன்றும் திரிசியமாயின், இவற்றிற்குத் திருக்கென்பது யாது? அதிட்டானமாகிய அகம்பொருளன்றோ? சீவேசுரசகத் தென்பது முப்பொருளாயினும், திரிசியமென்பதில் ஒன்றன்றோ? இதனால், திரிசியம் ஒன்றும், திருக்கென்பது ஒன்றும் ஆக இரண் டாயிற்று. இவற்றை யன்றித் துவிதமென்பது ஏது? இங்ஙன மிருக்க, பதி பசு பாசம் இம் மூன்றும் வெவ்வேறு சத்துப்பொரு ளெனவும், இவற்றுள் ஓர் கூறாகிய மாயையினது காரியம் பிரபஞ்ச மெனவும், இப்பிரபஞ்சம் அம்மூன்றைப்போல எதார்த்த சத்துப் பொருளெனவும், இந்நான்கு கூறுபாடுள் பரமென்பது எவற்றினும் நிறைந்திருக்கின்றதெனவும், அந்நிறைவில் அனைத்துந் தங்கி யிருக் கின்றதெனவும், அங்ஙனம் நிறைவுற்றிருத்தல் எள்ளுக்குள் எண் ணெய் பூரித்திருக்கின்றதுபோ லிருக்கின்றதெனவும், முத்தியில் பதிப்பொருளும் பசுப்பொருளும் இரண்டறக் கலந்திருத்தலே அத்து விதமெனவும் கூறுவதுதானோ துவித சித்தாந்த மெனற்பாலது? ஆண்டான் எனவும், அடிமை எனவுமா யிருப்பதனால் துவித மென் பதேயன்றி வேறு விதத்தா லன்றெனின், விசிட்டாத்துவித பட்சம் ஆண்டான் அடிமை என்பதல்லவோ? அதிற்கூறிய அடிமை இறை வனை விட்டு நீங்காதிலகும் சேதன குணமாயும், இதிற் கூறிய அடி மை இறைவனுக்கு அனாதி வேறு சத்துப்பொருளாயு மிருக்கின்ற தெனின், அவ்வடிமை இறைவனது அம்சமாகலின் அஃது பந்த முத்தி யிரண்டிலும் கூடியிருக்கும் துவிதமும், இவ்வடிமை வேறு சத்துப்பொருளா யிருக்கின்றமையின் அப்பந்தமுத்தி இரண்டிலும் கூடாத்துவிதமுமா யிருக்கின்றன.

ஆகலின், இவ்விரண்டு பட்சமும் துவித மென்பதற்கு மூா ணின்று. இங்ஙனமிருக்க, இறைவனென்பது ஒன்ருே? அன்றி இரண்டா? ஒன்ருகலின், அவ்வோரிறைவன் சில உயிர்களைத் தனது சேதனும்சங்களாகவும் சில உயிர்களைத் தனக்கு வேறு சத்துப் பொருள்களாகவும் கொண்டிருப்பது முண்டா? இங்ஙனம் எவ் வெவ்வுயிர் எவ்வெப் பட்சத்தை அபிமானிக்கப்பட்டதோ அவ் வவ் வுயிரும் அததன் நிலைமைத்தா யிருக்கின்றதென்னின், இவ் விரண்டு பட்சத்தையும் அபிமானிக்காதுழி அவ்வுயிர்கள் என்ன நிலைமைத்தாயிருக்கின்றன?

ஆங்காங்குமுள்ள பட்சங்களில், எவ்வெப் பட்சங்களில் எவ் வெவ்வுயிர் அபிமானித்ததோ அவ்வப்பட்சத்தின் நிலைமையதாய் அவ்வவ்வுயிரு மிருக்கின்றன வெனின், அவ்வப் பட்சத்தில் நின் றும் மாறி ஏனைய எவ்வெப்பட்சத்தை எவ்வெவ்வுயிர் அபிமானிக் கின்றதோ அவ்வப்பட்ச நிலைமையதாய் அவ்வவ்வுயிரு மிருக்கின்ற தாக்கும்! அன்றியும், மானுட யாக்கையைப் பெருமல் ஏனைய யாக் கைகளைப் பெற்றுள்ள உயிர்கள் அவ்விறைவனுக்குச் சேதனும்சங் களா யிருக்கின்றனவா? அன்றி வேறு அனுதிசத்துப் பொருள்க ளாக விருக்கின்றனவா? வேறு அனுதி சத்துப்பொருள்களாகவே இருக்கின்றனவெனின், அவைகள் இறைவனது சேதனும்சங்களா யிருக்கின்றனவென்ருே லென்னை? உயிர்கள் அனந்தமாயினும் இறை வன் ஒன்றுதானே யெனின், அவ்வோ ரிறைவனுக்கு உயிர்கள் எவ்வாறிருக்கின்றன? தனது சேதனும்சங்களா யிருக்கின்றனவா? வேறு அனுதி சத்துப்பொருள்களா யிருக்கின்றனவா? இப்பட்சங்க ளனைத்தும்,

உத்தமவாதநூல்.

"உலகின் மதநிறுத்து முத்தமரே கேண்மின்
உலகமு நாமு மொருங்கே—நிலையின்றி
எங்கே வெளிப்படுத லெங்கே மறைதனிதம்
அங்கிருந்துங் காணுதெ ணுய்ந்து."

என்று கூறியபடி, உலகையும் இவ்வுலகையறியும் நம்மையும் கற் பனை வியாப்பியமாகப்பெற றிலங்கும் அதிட்டான அகம்பொருளைப் பரோட்சமாகவேனும் எட்டி யுணராமல், இவ்வுலகை எதார்த்த சத்துப்பொருளென மயங்கி, இதற்குமேல் ஓரிறைவ னுண்டென வும் மயக்க மிரட்டிக்கப்பட்டு, இதுகாரணமாகப் பற்பல வேறு

பாடுகளைக் கற்பித்து, அபிமானம் பிடிவாத முற்றிருப்பதனால், இவைகள் எதார்த்த துவிதமும் எதார்த்த விசிட்டாத்துவிதமு மாகுமோ?

இவற்றுள், எதார்த்த துவிதமென்பது—முன்ஞான்று அதிட்டான அகம்பொருள் திருக்காயும், தேகாதிப்பிரபஞ்சங்கள் திரிசியமாயு மிருப்பதில், தேகமுதலிய திரிசியம் பஞ்சேந்திரியானுபவமாயினும் இவை தோற்றல்மாத்திரத் திரிசியமா? அன்றி இருப்புள்ள திரிசியமா? தொழிற்குணம் தோற்றக்குண மயமாகிய மூவித விகார திரிசியமே யன்றிப் பொருளின்று. இவ்விதமாயுள்ள கற்பனைகளில் ஒன்றேனும் நானென்னும் அகம்பொருளுக் கியைந்ததன்றாகலின், நானென்னும் அகம்பொருள் வேறென்பதல்லவோ? அஃது வெளிப்படாக்காறும் நான் நான் என வழங்குவது சொல் மாத்திரமன்றோ? சொல்மாத்திரமாக வழங்குவது ஒன்றும் கற்பனையேனும் கண்கூடாத் தோற்றும் பிரபஞ்சமொன்றுமாக இங்ஙனம் வழங்குவதுதானோ துவிதமெனற்பாலது? அல்லவே! அன்னியமாகிய தேகாதிகள் நமக்கு விளங்குவதுபோல் நாமும் நமக்கு விளங்கினாலன்றோ துவிதமெனப்படும்? நமது திருட்டியை அகமுகத்துத் திருப்பில் நமது சுயம்பிரகாசமும் புறமுகத்துத் திருப்பில் சீவேசுரசகத் கற்பனையும் விளங்கவேண்டுமே? நமது திருட்டியைச் சீவேசுரசகத் கற்பனையை மாத்திரம் நோக்கிக்கொண் டிருத்தற்குத் தானோ ஒதுக்கப்பட் டிருக்கின்றது. அத்திருட்டியை அகமுகமாகத் திரும்புமாறு பழக்கிக்கொண்டுவந்தால் நீடித்தேனும் பழகித் திரும்பாதோ? அங்ஙனம் மிகவும் கட்டமுற்றுத் திருப்பினாலன்றோ நமது உண்மை வடிவம் விளங்கும்? அஃது விளங்காக்காறும் ஆடி திரிபதார்த்த நிச்சயம் சாதிக்கும் சொல்லாற்றல் துவிதம்போலன்று முடியும்! அங்ஙனமுடியின் விசிட்டாத்துவிதமென்னும் கூடியிருக்கும் துவிதம் கைவல்லியமாகாதே! அஃதோ ஆகாதுழி ஈற்றில் அத்துவிதமென்னும் ஐக்கானுபவம் விளங்காதே? ஆகலின், திருக்கும் திரிசியமும் கண்கூடும் அனுபவமுமே ஆடி எதார்த்தத் துவிதமாமென்க.

இஃது எதார்த்த விசிட்டாத்துவிதம்.

உருவம் அருவம் உருவாருமாகிய சிற்சடபேத சர்வமும் அவத்தாத்திரயத்தை விட்டதன்று. ஆகலின், அவத்தாத்திரயத்தைப் பிடிக்கின் அனைத்தும் வேறன்று. இங்ஙனமிருக்க, இவ்வவத்தாத்

திரயம் கயிற்றரவு கானல்நீர் களுக் கற்பிதம்போலாகலின், இக்கற் பிதங்கள் மாறிமாறித் தோற்றுகின்றனவா? அன்றி நிலையாயிருக் கின்றனவா? மாறிமாறித் தோற்றுகின்றனவெனின், எதன்பால் மாறுகின்றன? ஓர் பரத்தின்பாலெனின், அவத்தாத்திரயம் மாறு கின்றதை உணருகின்றது எது? அப்பரந்தானெனின், அங்ஙனம் மாறிமாறித் தோற்றுதலாலுண்டாம் இன்பதுன்பானுபவம் யாருக்கு? நமக்கெனின், இவ்வவத்தைகளுக்கு இடமாயிருந்து உணர் தலுக்கு ஓர் பரமும், இன்பதுன்பம் அனுபவித்தலுக்கு நாமுமா? அங்ஙனமாயின், நாம் உணருகின்றது எதை? அப்பரத்தை உணரு கின்றதாக்கும்! நாம் சுகதுக்கங்களை அனுபவித்துக்கொண்டே பரத் தை உணருகின்றதும் அப்பரம் அவத்தாத்திரயங்களுக்கு இடமா யிருந்து அவற்றை உணருகின்றதுமா? இஃது விந்தையினும் மிக்க விந்தை! நாம் நிட்டை கூடுவது யாதுக்கு? பரத்தை உணருகிற தற்கெனின், அதற்கு நிட்டைகூடுங்காறும் நாம் எதை உணருகின் றனம்? அவத்தாத்திரயங்களை அன்றி வேறல்லவே! அங்ஙனம் அவத்தாத்திரயங்களை உணர்ந்துகொண் டிருக்கும் நமக்கு அவை எங்கிருந்து காணப்படுகின்றன? வேறொன்றிலெனின், நாம் எங் கிருந்து உணருகின்றன மெனவருமே?

அன்றியும், அவத்தாத்திரயங்கள் மயக்கமா? அன்றித் தெளி வா? மயக்கமன்றெனின், இவ்வவத்தாத்திரயங்களில் பொருளல் லாதது பொருளாகத் தோன்றுது பொருள் பொருளாகத் தோன் றட்டுமே! இதனால், இவைகள் மயக்கமென்பதற்கு விருத்தமென்னை? இன்றாகலின், இம்மூவித மயக்கமும் யாருடையது? பரத்தினு டையதா? அல்லவே! நம்முடையதாகலின், இம்மயக்கங்கள் பிறி தின்கிழமை என்பதாயிற்று. ஆயினும், இம்மயக்கத்திற்கு ஆதாரம் யாது? பரமென்பதா? அல்லவே! அஃதும் நாமென்பதன்றோ? இதனால் என்ன ஆயிற்றெனின், அவத்தாத்திரயம் முதலிய சர்வ கற்பனைகளுக்கும் நானென்னும் போதமானது வியாபகமாயும் சாட் சித்துவமாயு முடிந்தன.

இவற்றிற்கு ஐயமிருக்கின், அவரவரும் நிட்டைகூடிப் பார்க்கில் நன்கு விளங்கும். அந்நிட்டை கூடுதற்கு ஏதுவென்னவெனின், ஷை அவத்தாத்திரயம் முதலிய சர்வசராசரமும் கயிற்றரவு கானல் நீர் முதலியவைகள் போலெனத் தக்கவா ருராய்ந்து தெளிவுற்

திருக்கலாமென்க. இங்ஙனந் தெளியாமலும், பின்ஞான்று அவ்வவத்தாத்திரயம் முதலியவைகள் தத்தமது சிந்தையிற் படாதிருக்கின்ற நிட்டைகூடி நிலைக்காமலும், அதன் பின்ஞான்று நானும் வியாபக விளக்கத்தைக் கண்டுகண் டின்புறாமலும், அவ்வியாபக விளக்கத்தோடு கூடி கற்பனைகளாகிய நாமரூப வியாப்பியங்களையும் ஒருங்கே கண்டுணராமலும் வாளா போவதென்னை ?

ஞானவாசிட்டம்.

"நானெனும் பொருள்கா ணாதோர்
ஞானவா காயங் காணார்
நானெனும் பொருளைக் கண்டோர்
ஞானவா காய மாவார்
நானெனு மகங்கா ரக்கார்
ஞானவின் மதியை மூடின்
நானெனும் பரம வாம்ப
னன்மலர் விரியா தன்றே." என்றும்,

கைவல்லிய நவநீதம்.

"பலகலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி யிவனுமனு
பவம் விடாமற்
பலமலரின் மதுப்போலச் சச்சிதா நந்தமொன்றும்
பரமார்த் தத்தைப்
பலபொழுதுங் கண்மூடிச் சமாதியிருந் தான்விழித்துப்
பார்த்த போது
பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு
படமா னனே."

என்றும் கூறிய இவ்வனுபவ ரசங்களை இனியேனுங் கேள்வியுற்று உள் நோக்கிற் சென்று நிலைத்திருக்கலாமே ! இதற்கிழுக்கென்னை ? அன்றியும், விசிட்டாத்துவிதமென்பது தானே தானுகத் தெளிதற்கு முன்ஞான்று நானென்பது யாது யாதென ஆராய்ச்சியிற் செல்லும் இடைக்கண் விளங்கிய ஆதார ஆதேய மிரண்டையும் ஒருங்கே கண் டனுபவிக்கும் நிலையா ? அன்றி வாதிட்டுக்கொண் டிருத்தற்குக் கற்பித்ததா ? கற்பித்த தன்றெனின், சர்வமும் மித்தையாமனுபவம் முன்ஞான்று வரவேண்டுமே ! அவ்வனுபவம் வாராவழி, பின்ஞான்று வியாபக வியாப்பியானுபவம் வாய்ப்பது எங்ஙனம் கூடும் ? அம்மித்தையானுபவமும் இவ்வியாபக வியாப்பியானுபவமும் வாராவழி, ஈற்றில் அகம்பொருள் ஏக மேவாத்வைதானுபவமாதற்

செங்ஙனங் கூடும்? ஷை த்விதானுபவம் முதலிய இம்மூவித அநுபவமும் வாய்ப்பதற்கே சர்வம் மித்தையென உபநிஷத் கோஷ்டிக் கின்றதைத் உள்ளவாறே ஏற்கற்பாலதென்க. இதுகாறும் கூறிப் போந்த எதார்த்த த்விதானுபவத்திற்கு உதாரணம்:—

ஞானவாசிட்டம்.

"செந்நெல்வா லினுஞ்சற்றுகிச் செகங்களுக்
கயலா யென்று
மன்னுது மெனக்கொள் போத மற்றையாங்
காரமாகும்." என்றும்,

தத்துவராயர் பாடுதுறை.

"தோற்றா வாகத் துணிந்தவூ ரெங்களூர்
சோகமோ கங்க டறந்தவூ ரெங்களூ
ராற்ற லுடையார்க் கடைந்தவூ ரெங்களூ
ரானந்த மாயே யிருக்குமூ ரெங்களூர்."

என்றும் கூறியவாற்றாற் காண்க. விசிட்டாத்துவித மென்பதற்கு உதாரணம்:—

பகவற்கீதை.

"யாவனொருவ னெனையெல்லா வுயிர்களிடையு மென்னிடையே
மேவவெல்லா வுயிர்களையும் வேறாகாமை மெய்காண்பான்
றேவர்பகைமுன் செயித்தோனே யவன்யாதேனுஞ் செய்திடினு
மாவவனு கின்றேனு னதின்யாதேனு மையமுறேல்." என்றும்,

ஞானவாசிட்டம்.

தானுகு மிகுநொய்தா மாகாயத்திற்
சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானேகோட்டு
மானுத வுலகமெலாந் தனதுசோதி
யாதலினு லதற்குவே றயலொன்றில்லை
நீநானுஞ் சகபேத வடிவந்தானு
நிலைநிற்க வதன்பொருளாய் நீங்காதென்று
நானுவாம் பொருட்புணர்வா னடந்ததாகு
நடக்கவிட மிலாண்மையினு னடவாதாகும்." என்றும்,

"எழுதுவோனு மெழுதிடமு மெதிர்காண் பொருளு
மிலதாகி
வழுவிலாத விண்ணிடையே வந்துதோன்று
மோவியந்தான்

*பழுதின்மேவுந் தனைத்தானே பாராநிற்கும்*
*பலபொறியு*
*நழுவுதுயிலி னாலின்றி நனவான்மேவுங்*
*கனவொக்கும்.''*

*என்றும் கூறியவாற்றாற் காண்க.*

இஃது அத்துவிதம்.

*இவ்வத்துவிதம் ஷை மகாவாக்கியங்களில் எந்த வாக்கியத்துக் கியைந்ததெனின், சாமவேத தத்துவமசி வாக்கியத்துக் கியைந்த தென்க. அத் தத்துவமசி வாக்கியம் துவிதம் விசிட்டாத்துவிதம் என்னு மிரண்டுக்கு மியைந்திருக்க, இவ்வத்துவிதத்துக்கும் எங்ஙன மியையுமெனின், ஷை துவித முதலிய மூன்று பட்சங்களையும் விளக்கும் அத் தத்துவமசி யென்கிற முப்பதத்துள், அசி என்கிற கடைப்பதத்திற்கு ஆனாய் என்கிற பொருள் இறந்த ஞான்றதாக ஏற்றி வழங்கினும் பேதமிருக்கின்றது. எங்ஙனமெனின், துவித பட்சத்தில் மதிபோல் முகம் பவளம்போல் வாய் என்னு மிவ்விரு மொழிகளுள்ளே போல வென்கிற உவமையுருபு குன்றி மதிமுகம் பவளவாய் என வழங்கப்பட்டு வருவனபோல், ததிவாதுவம் தத்துவ மென வழங்குகின்றது. அவற்றுள், தத் என்பது பரம் இவா என்பது போல என்னும் உருபுகுன்றிய தொத்துக் குன்றித் தத் துவம் என்றாய், அதனுடன் அசி என்பது கூடி வழங்குகின்றது. இதற்குப் பொருள் எங்ஙனமெனின், ததிவா என்பது பரத்தைப்போல துவ மென்பது நீ அசி யென்பது ஆனாய் என்றாகின்றது. அது முத்தியில் பரவத்துவைப்போல் உயிராகிய நீ ஆனாயென்றாகின்றதென்க.*

*இவ்வாக்கியத்துள், ஈற்றில் ஆனாய் என இறந்த ஞான்றதாக இருப்பதில் பேதமிருக்கின்றதாய் முன்னர்க் கூறியதைப் பற்றி யூகிக்கின், ஆனாயென்பதனால் முத்தி யெய்துதற்கு முன்னமே நாம் பரவத்துவைப்போல் ஆயிருக்கின்றோ மென்றாகின்றது. அங்ஙனமாயின், நாம் கர்மோபாசனா ஞானகாண்டிகளாய் முயல்வானேன்? முயன்ற பின்ஞான்றன்றோ பரவத்துவைப்போல் ஆகவேண்டும்? வாக்கியத்தின் பதம் முன்ஞான்றே ஆயிருக்கின்றதாய் நிகழுகின்றதே! அங்ஙனம் நிகழுவானேனெனின், எவ்வெவ்வுயிர் கர்மகாண்ட விதி விலக்கின்படி சற்றும் வழுவின்றி ஒழுகுகின்றதோ அவ்வவ் வுயிரும் நீடித்த பின்ஞான்று உபாசனா ஒழுக்கத்துக் குட்படு*

தற்குச் சற்றேனு முரணுண்டா? அவ் வொழுக்கமும் நன்கு முதிர்ந்துழி பின்ஞான்று ஞானகாண்ட ஒழுக்கத்துக் குடன்படு தற்குச் சற்றேனு முரணுண்டா? இம்மூவித ஆற்றலும் முடிந்த பின்ஞான்று முத்தியில் ஷை உயிர்கள் பரவத்துவைப்போ லாகிற தற்குச் சற்றேனு முரணுண்டா? இன்றாகலின், இத்திண்ணம் நோக்கி ஆவாய் என்றது ஆனாய் என்னும் பதம் வந்து நிகழுகின்றது. என்னை, எறும்பு முட்டைகொண்டு திட்டையேறின் பெய்தது மழை என்றும், காலான முதற்பூமி கைவந்தான் முத்தியுங்கை வந்ததாமே என்றும் கூறியவாற்றாற் காண்க.

இரண்டாவது விசிட்டாத்துவித பட்சத்தில் உயிர்கள் இயற்கையில் அப்பரத்தினது அம்சங்களா யிருக்கினும், முத்தியில் ஷை துவித பட்சத்தைப்போல் ஆவாய் என்றது ஆனாய் என இறந்தஞான்றனுபவமாகப் பொருள்கொண்டு தஸ்யாபாவ தத்துவம் என நிகழுகின்றது. அவற்றுள், தஸ்யா என்பது பரத்தினது பாவவென்பது தன்மையா யிருக்கின்று யென்றாகின்றது. அப்பதங்களுள், நீ யென்பது தோன்று எழுவா யாகின்றதென்க. என்னை, பிராமணத்துவம் பிராமணரின் றன்மையெனலும், சூத்திரத்துவம் சூத்திரரின் றன்மையெனலும் போலாமென்க. அவ் வாக்கியம் அத்துவிதத்துக் கியைந்தது எங்ஙனமெனின், இவ் வத்துவிதம் ஷை துவிதம் விசிட்டாத்துவிதங்கள்போற் குறுக்கு நெறியிற் செல்லாது நேர்நெறித் தாச்சென்றது. அதாவது, தத் என்பது பரமெனவும் துவம் என்பது நீயெனவும் அதாவது உயிரெனவும் அசி யென்பது ஆனாயெனவும் அதாவது ஐக்கியமெனவும் நேராகவே பொருள்கொண்டு, ஷை தற்பத அர்த்தத்துக்கும் துவம்பத அர்த்தத்துக்கு மிடைக்கண் தேற்றேகாரம் குன்றி யிருக்கும். அவ்வேகாரத்தை வருவித்துத் தத் என்கிற பதப்பொருளாகிய பரமே துவம் என்கிற பதப்பொருளாகிய உயிரெனவும், இத்துவம் என்கிற பதப்பொருளாகிய உயிரே அத் தத் என்கிற பதப்பொருளாகிய பரமெனவும், அசி என்கிற ஐக்கியத்தைக்கொடுத்து யுத்தி அனுபவத்தோடு வழங்குகின்றதென்க. என்னை, சோ அயம் தேவதத்தனென்புழி, சோ என்பது அவனே அயம் என்பது இவனெனவும், அயம் சோ தேவதத்த னென்புழி, அயம் என்பது இவனே சோ என்பது அவனெனவுமாம். அவை, தேவதத்தனென்னும் ஓர் புருடன் கதம்செய்த் புண்ணிய பரிபாகத்தால் காசியில் அரசனாகவும் பின்னர் அவ்விராஜ

போகத்தில் விரக்திதோன்றுழி சிதம்பரத்தில் சந்நியாசியாகவுமானு னென்புழி, ஆங்கு அவ்வரசனு யிருந்த தேவதத்தனே ஈங்கு இச் சந்நியாசியா யிருந்த தேவதத்தனெனவும், ஈங்கு இச்சந்நியாசியா யிருந்த தேவதத்தனே ஆங்கு அவ்வரசனுயிருந்த தேவதத்த னென வும் ஏகத்துவம் வாய்த்திருத்தல் போலாமென்க.

இதுபோல், தாட்டாந்தத்தை இன்னும் நன்கூகிக்குதும். எங்ஙன மெனின், ஷெ வாக்கியத்தில் ஆனுயென்னும் ஐக்கத்துவமானது முதற்பதம் இரண்டாம் பதம் அர்த்தத்தோடு வழங்கும் ஞான்று தேற்றேகாரமாய் விரிந்தும், அவ்வர்த்தமின்றி அவ்விருபதமாத் திரம் வழங்கும் ஞான்று அத்தேற்றேகாரம் தொக்கியும் வருகின்றது. அப்பதங்கள் அர்த்தங்களோடு வழங்குஞான் றெங்ஙனம் விரிகின்ற தெனின், அது என்னும் பிரமமே நீ என்னும் கூடஸ்தனெனவும், நீ என்னும் கூடஸ்தனே அது என்னும் பிரமமெனவும் அத்தேற் றேகாரம் விரிந்து வருகின்றது. அர்த்தமின்றிப் பதமாத்திரமாய் வழங்குஞான் றெங்ஙனம் தொக்கியிருக்கின்றதெனின், அது நீ ஆனுயெனவும், நீ அது ஆனுயெனவும் அவ்வேகாரம் தொக்கி வருகின்றது. அவை பரமாத்மா பிரத்தியகாத்மாக்கியமெனவும் பிரத் தியகாத்மா பரமாத்மாக்கியமெனவும் ஐக்கிய பதம் விரிந்து வழங்கு கின்றதாம். இவ்வைக்கியத்துவம் இடைக்கண் வரும்போது தேற் றேகாரமாகவும் ஈற்றில் வரும்போது ஆனுயெனவும் வழங்கி வருகின் றது. மேலும், இவ் அசியென்கிறபதம் தேற்றேகாரமாகவும் எதிர் ஞான்றைக் கிஞ்சித்துந் தழுவாமல் இறந்த ஞான்றையே தழுவி ஆனுயெனவும் வழங்குகின்றதென்க. இவ்வரிய வாக்கியப்பொருள் கள் வாச்சியார்த்தமட்டிலிராமல் இலட்சியார்த்த அநுபூதிப் பொருள் களாகலின், இவற்றுள் முதற்பதம் இடைப்பத மிரண்டுள் முதற்கண் தொம் என்வும், இடைக்கண் தத் எனவும் அமைத்துத் தொந்தத் தசியென்னுது தத் தொம் அசி யென்பானேன் ? இவ்விருவகையில் முக்கியமானது தத் தொம் அசி யென்பதா ? அன்றித் தொந் தத் தசி யென்பதாவெனின், இரண்டும் முக்கியமேயாயினும், தொந் தத் தசி யென்பதே மிக்க முக்கியமாமென்க. எங்ஙனமெனின், தத் தொம் அசி எனத் தெளிந்திலங்குந் தெளிவினுல் அவித்தையும், தொம் தத் அசி எனத் தெளிந்திலங்குந் தெளிவினுல் மாயையும் நசித்தற் கியைந்திருத்தலா லென்க.

இம்மாயை அவித்தை யிரண்டில் முன்னொன்று கெடவேண்டியது யாதெனப்படும்? அவித்தை யன்றே? அவ் வவித்தை எத்தெளிவினாற் கெடவேண்டியது? தத் தொம் அசி எனத் தெளிந்திலங்குந் தெளிவினாலன்றே? பின்னர் மாயை என்பதும் கெடவேண்டுமே? அஃது எத்தெளிவாற் கெடவேண்டியது? தொம் தத் அசி எனத் தெளிந்திலங்குந் தெளிவினாலன்றே? ஆகலின், ஷ மகாவாக்கியம் தத் தொம் அசி எனப் பிறந்திருக்கின்றது. தத் தொம் அசியால் அவித்தை கெடுவது மிக்க அரியதாயினும், பின்னொன்று மாயை கெடுவது திரிலோகத்தினு மிக்க அரிதெனப்படுமென்க. ஆகலின், முதற்றெளிவான நானென்கிற தொம்பதார்த்த சோதனையும், இரண்டாவது தெளிவான அவனென்கிற தற்பத சோதனையும் செய்து நிலைக்கவேண்டுமென்க. அன்றியும், முன்னொன்று தத்துவமசியெனத் தெளிந்தனுபவியாதுழி, அதாவது (அதுவே நானெனத் தெளிதல்) பின்னொன்று தொந் தத்தசி யெனத் தெளிந்தனுபவித்தற் கியையாது. அதாவது (நானே அதுவெனத் தெளிதல்). இவற்றுள், அது நானென்பது பிரமமகமெனவும், நான் அதுவென்பது அகம்பிரம மெனவுமா மென்க.

அங்ஙனமாயின், பிரமமென்பது நானெனப்படுமா? அன்றியும், நானெனவும் நிகழுமா? பிரமமென்பது தேகேந்திரியாதிகள் இறந்ததாயிற்றே! அது எங்ஙனம் நான் நானென நிகழும்? அப்பிரமம் நானென்பதற்கே இயையாதிருக்க, அது நானென நிகழுவ தெங்ஙனம்? நானென்பதோ வெனின், தேகேந்திரியாதிகளைச் சுமந்து சுமந்து இன்ப துன்பங்களில் மொத்துண்டு திரிபவனாயிற்றே! ஆகலின், இந்த நானென்பது எங்ஙனம் அந்தப் பிரமமெனப்படும்? அந்தப் பிரமம் நானெனவும் படாது, நானெனவுந் திரிந்துழலாது, இந்த நான் பிரமமெனவும் படாது, பின்னர் தானே தானாகவு மிராது. இவ்விரண்டும் இங்ஙனமிருக்க, அது நானெனவும் நானதுவெனவுந் தெளிதலே ஞானானுபவ மென்றும் மோனானுபவ மென்றும் மயங்கி யிருக்கலாமோ வெனின், இவ்விரண்டனுபூதி பட்சமும் ஞானப்பியாச சாதகநிலைக்கண்ணேயன்றி முடிந்த சாத்திய நிலைக்கண்ணும் சாதகநிலைக்கு முன்னுமன்று. இச்சாதக நிலையில் முன்னொன்று அது நானென்றும், பின்னொன்று நானதுவென்றுங் கூறுபனவு நினைவுமாத்திரமாகவும் சொல்மாத்திரமாகவு மன்றிக் கண்டறிந்தது ஞானமென்ற கைவல்லிய நவநீதக் கலியிற் கூறியபடி,

இலட்சியார்த்தமாகப் பன்ஞான்றும் பழகாவிடின், நான் நீ என்கிற இருமையு மிறந்து, தானே தானுதற் கியையாதென்க. பிரமமகம், அகம்பிரம மென்பதற்கு உதாரணம்:—

சிபுகீதை மகாவாக்கியம்.

"பிரமமக மகம்பிரம மென்றிவ் வண்ணம்
பேதமிலா வகம்பிரம நிச்ச யத்தைச்
சரிவரவே சந்ததமும் பழகா நின்றோன்
சத்தியசிற் சுககனமாம் பரமே யாவ
னரியவனே யாதலினு னீயெப் போது
மன்புடனே யகம்பிரம நிச்ச யத்தைப்
பிரிவறவே பழகியதாற் பேதந் தீர்ந்து
பின்னமிலா வகண்டபரப் பிரம மாவாய்." என்றும்,

"அகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றநவரத மதிதிடமாய் நிச்ச யித்து
மிகும்பிரம பாவனையே தொடர்பாய்ச் செய்து
மேவியவித் துவிதமெலா மிக மறந்தே
யகம்பிரம ஞானமது நிருவி கற்ப
மானவுட னசஞ்சலமாய்ச் சிலையே போலத்
தகும்பிரம வடிவாகித் தளர்வு தீர்ந்து
தடையற்ற வாநந்த மனுப விப்பாய்." என்றும்,

கூறியவாற்றாற் காண்க.

அது நானெனவும் நானது வெனவுமாகிய ஒருமையென்பது டுடி சாதக முதிர்ச்சியில் வாய்க்கின்றதாயின், அச்சாதக மில்லா ஞான்றில், அவ்வொருமை இல்லையென்றாகின்றது. ஆகவே டுடி த்த்துவமசிவாக்கியம் ஈற்றில் எதிர்ஞான்றைத் தழுவி நிகழாது, இறந்த ஞான்றைத் தழுவி நிகழுவானேனென்னின், அவ்வொருமை யென்பது சாதக முதிர்ச்சியில் மாத்திரமன்று, அச்சாதக மில்லாத எஞ்ஞான்றும் மாறாதிருக்கின்றதென்க. அவ்வொருமை இஞ்ஞான்றிருக்குமாயின், எஞ்ஞான்று மிருக்கு மென்பதற்கு முரணின்று. ஆகலின், இஞ்ஞான்றிருக்கின்றதாவெனின், அவித்தை மாயை யென்னு மாரோபத்தால் நீ நான் என்னுந் துவிதங் காண்டலே யன்றி, அந்தத் துவிதாரோபத்தை இஞ்ஞான்றே நீக்கிக் காணுழி அவ்வொருமை இஞ்ஞான்றே விளங்குதற்கு விருத்த மின்றென்க. எங்ஙனமெனின், முன்னர் இருமையி லுண்டாந் தோடத்தை யூகித்

துப் பின்னர் அவ்வொருமை இஞ்ஞான்று மிருப்பதைப் பற்றி நன்கு யூகிக்குதும், என்னை? பிரமமென்பது நானன்றாயின், பிரமத்திற்கு நானென்பது வேறெனப்படும். நானென்பது பிரமமன்றாயின், நானெனற்குப் பிரமமென்பது வேறெனப்படும். படவே, பிரமமென்பது ஓர் பொருளும், நானென்பது ஓர் பொருளுமாகி இரண்டுபட்டுப் போம். போகவே, இவ்விரண்டும் கண்டப்பட்டுவிடும். விடவே, பிரமமென்பது பரிபூரணத்துவ மில்லாமற்போம். போகவே, பிரமமென்பது ஓரிடத்ததும், இதனால் நானென்பது பலவென் றேற்படுதலின், ஒவ்வோர் நானும் ஒவ்வோ ரிடத்ததுமாய் முடியும். முடியவே, அவ்வொவ்வோரிடமும் வேறே ஓரிடத்ததாக வேண்டுமென வரும். வரவே, அவ்வோரிடமானது யாதெனவருமே! இதற் கென்செய்தும்! நானென்பது எண்ணரியதாயினும், ஒவ்வொரு நானுக்கும் உள்ளும் புறமும் இடையும் நீக்கமின்றி விரிந்திருக்கின்றதால், எங்ஙனம் அப்பிரமம் அபரிபூரணமெனப் படுமெனின், பரமாணுவுக்கும் பரமாணுவும் நீக்க மின்றிய அப்பரமாகிய நிறைவில் மற்றோர் பொருள் அணுத்துணையேனு மிருக்காதாயின், எண்ணரிய நானென்பவைகளும், பாஞ்சபூதமும், அவற்றாலாகிய அண்டநிரைகள் பலகோடிகளும், அவ்வவ் வண்டங்களுக்கியைந்து நிகழும் எண்ணரிய பவுதிகங்களும் எங்ஙனமிருந்து நிகழும்? அனைத்து மிருந்துதானே நிகழுகின்றதெனின், இதனால் அப்பரவத்து நிறைவெனப்படாதே! பரமென்பது நிறைவற்று மிருக்குமாவெனின், அந்நிறைவில் தங்கி நிகழுகின்றவை பொருள்களெனப்படுமா? படுமெனின், பாஞ்சபூத பவுதிகமயமாயுள்ள இப்பிரபஞ்சத்துணை அப்பரவத்து இல்லையெனப் படாதோ? படாதெனின், அந்நிறைவிலிருக்கும் மகத்தாகிய இப் பிரபஞ்சப்பொரு ளில்லையெனப் படாதோ? இஃதும் படாதெனின், ஓர் மசகமானது அகம்புற மிறந்திருக்கும் இவ்வாகாயத்தை விழுங்கியிருக்கின்ற தென்றாற்போலாம். இஃது விந்தையினும் மிக்கவிந்தையென்க.

இது நிற்க. முன்ஞான்று பிரமமே அகமெனவும் அகமே பிரமமெனவுமா யிருக்கின்ற அவ்வொருமையானது இஞ்ஞான்று மிருக்கின்றதென்பதைச் சற்றாகிப்பம்.

எங்ஙனமெனின் 1-வது பிரமமக மென்பது பிரமன் முதலாக நான் நானென்ன நிகழும் ஒவ்வோருயிரும் நானென்னுதலின்றாகலின், அவ்வவ் வுயிருக்கும் நானென்பது அவ்வவ் வுபாதித்திரயமா?

அன்றி வேறு? அவ்வவ்வுபாதித் திரயந்தானெனின், ஒவ்வோருயிருக்கும் மூன்று மூன்று நான் இருக்கின்றதாகின்றதே! ஒவ்வோருயிருக்கும் ஒவ்வோர் நானன்றோ இருக்கவேண்டியது? அவ்வவ் வுபாதித்திரயம் ஒன்றுள்ள ஞான்று ஒன்றில்லாமற் போகின்றன. போகவே, ஒவ்வோருயிரும் நானென்னுத நேரமுமுண்டா? இல்லையன்றோ? இல்லாவழி, இம்மூன்றில் எது நானென்பதற்கியைந்தது? ஒன்றுமல்லவே! அல்லாவழி, பின்னர் எது நானெனப்படுவது? ஆங்காங்கும் அவ்வவ் வுயிரேயெனின், அவ்வவ் வுயிரும் அறிவு வடிவன்றி வேறன்று. அறிவென்பது எந்நிலைமைத்தாயது? நிலைமையாவது இருவகையின. அவை—அவத்தாத்திரயமாகிய அஞ்ஞானதிசை யெனவும், இருவித சமாதியாகிய ஞானதிசையெனவுமாகின்றன. ஆகவே, இவ்விரண்டு திசைக்கண்ணும் கூடி அறிவு இருக்கின்றது. இருக்குமவ்வறிவுக்கு இவ்வஞ்ஞான திசைக்கண் இவ்வுபாதித்திரயம் நானாகத் தோற்றுகின்றதால் இந்த நான் அகலுகிறதற்கன்றோ,

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்."

எனக் குறள் மகாவாக்கியம் பிறந்திருக்கின்றது. இந்த உபாதித்திரய நானைக் களைய வேண்டுமாயின், மேலே எந்த நானை நானெனக் கண்டு பிடிக்கின்றது? இந்த நான் ஆரோபித நானாகலின், அந்த நான் அதிட்டான நானன்றோ? அவ்வதிட்டான நான் கூடி இருவகைச் சமாதியில் வெளிப்படுகின்றதன்றோ? இந்த உபாதித்திரய நான் விகாரமெனப் படுமாயின், அந்த நான் சுயம்பெனப்படுமன்றோ? அச் சுயம்பாகிய வியாபக விளக்கத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்பதற்கே,

ஞானவாசிட்டம்.

"நானெனும் பொருள்கா ணுதோர்
ஞானவா காயங் காணர்
நானெனும் பொருளைக் கண்டோர்
ஞானவா காய மாவார்
நானெனு மகங்கா ரக்கார்
ஞானவிண் மதியை மூடின்
நானெனுப் பரம வாம்ப
னன்மலர் விரியா தன்றே."

எனக் கூறியிருக்கின்றது. இதனால் இவ்வியாபக விளக்க உணர்வை யன்றிப் பிரமமென்பது வேறெனப்படுமோ? உபாதித்திரய விகாரத் தையன்றி அறியாமை யென்பது வேறெனப்படுமோ? படாததால் அப்பிரமம் நானெனப்படுமா? இவ்வறியாமையே நானெனப்படு மெனின்; இஃதகல்வதற்கு யானெனதென்னுஞ் செருக்கு அகல வேண்டு மென்பானேன்? அச்செருக்கு நானல்லவற்றை நானென வும், எனதல்லவற்றை யெனதெனவும் மயங்கிய மயக்கமென்க. இம்மயக்கம் எதன்பாலதெனின், இஃது தொழிற்குணமா? அன்றித் தோற்றக்குணமா? தோற்றக்குணம் கண்கூடாக வேண்டும்! ஆக லின், தொழிற்குண மென்பதற்கு ஐயமின்று. இன்றாகவே, இம்மயக் கம் உயிரினது என்போமெனின், உயிரென்பது அறிவெனவும், அவ்வறிவு ஷை வியாபக விளக்கத்தையன்றி இன்றெனவும், அவ் வியாபக விளக்கமே பிரமமெனவும் முன்னர்த் தீர்மானித்தோமாக லின், ஷை மயக்க மென்பது யாதின்பாலதென்பம்! பிரமத்தின் பால தென்போமெனின், அம்மயக்கம் என்னுடையதெனப் பிறிதின் கிழமையாக வழங்குகின்றதே! இதனால் யாதின்பாலதென்பம்! நானென்பதன்பாலதெனின், நானென்பது பிரமமா யிருக்கின்றதே! இதனால், அம்மயக்கமாகிய அறியாமை நானென்பதை யன்றியும், அஃது நானென்பதன்றாயு மிருக்கின்றதால், இவ்வறியாமை ஷை பிரமத்தின்கண் கயிற்றரவுபோ லிருக்கின்றது. இருக்கின்றதால், இஞ்ஞான்றும் நானென்பது பிரமத்தையன்றி வேறன்றா யிருக்கின்ற தென்க.

இன்பதுன்பானுபவமும் பிறத்த லிறத்தல் முதலியனவும் யார் பாலதெனின், அறியாமையின்பாலதேயன்றி வேறன்றென்க. அவ் வின்பதுன்ப முதலியவைகளை அறியாமை அனுபவிக்குமோவெ னின், அறிவென்பது அனுபவிக்குமோ? அறியாமை சடப்பொரு ளாகலின் எங்ஙனம் அனுபவிக்குமெனின், அறிவு சித்துப்பொரு ளாகலின் அஃது எங்ஙனம் அனுபவிக்கும்? இரண்டும் அன்றாயின், வேறேயிருந்து அனுபவிப்பது யாதெனப் படுமெனின், ஒன்றை மற்றொன்றாக உணர்வது அறிவாயினும், அவ்வவசரம் அஃ தறியாமை யெனப்படுமா? அன்றி அறிவெனப்படுமா? அறி வெனப் படுமெனின், உள்ளதை யுள்ளதாக உணர்வது அறி யாமையாக வேண்டுமே! இஃது விந்தையெனப் படுமன்றோ? உபாதித்திரயம், அவத்தாத்திரய முதலியவைகள் கற்பனைகளாகலின்,

இக்கற்பனை எதார்த்தமாக மயங்கின மயக்கங் காரணமாய் ஷை இன்ப துன்பங்களை அனுபவிப்பது யாது? அம்மயக்கத்தையன்றி வேறே யாதிருக்கின்றது? அறிவாகிய நாம் அனுபவிக்கின்றேமே யெனின், அவ்வறிவாகிய நாம் இலட்சியப்பொருளா? அஃதல்லாப் பொருளா? அஃதல்லாப் பொருளெனின், நிட்டை கூடுவது யாதுக்கு? நாமென்பது வெளிப்படுதற்கன்றே? அங்ஙனம் வெளிப்படுவது யாதுபொரு ளாகின்றது? ஷை வியாபக விளக்க உணர்வுப் பொரு ளாகின்றதன்றே? அவ்வியாபக விளக்க உணர்வையன்றி நாமென்பது எது? அவ்வியாபக விளக்க உணர்வாகிய பிரமமே நாமாயின், ஷை இன்ப துன்ப முதலியவைகளை அனுபவித்தற் கிருப்பது யாது? ஒன்றை யொன்றாக உணரு மயக்கமன்றே? அம் மயக்கம் சீவனெனவும் சிதாபாச னெனவும், அறியாமை யெனவு மாகின்றது. ஆகவே, இவ்வறியாமை யுள்ளளவும் பிரமமாகிய நானென்பது ஷை சீவனெனவும், சிதாபாச னெனவு மாகின்றது. எதுபோலெனின், களிம்புள்ளளவும் தங்கமானது செம்பு எனப் படுமாறுபோலன்று. ஏனெனின், செம்பென்பது தோற்றன் மாத்திரக் கற்பனையாயினும் தங்கமென்பதும், களிம்பென்பதும் ஒவ்வோர் பொருளாயிருப்பதனாலென்க. ஆகலின், ஒளியின் அபாவமே இருளெனப்பட்டது. அவ்விருள் உள்ளளவும் பழுதையானது பாம்பாக இருக்குமாறுபோ லாகின்றது. ஆகவே, கற்பனையாகிய பாம்பானது சரித்தல் கடித்தல் முதலிய புடை பெயர்ச்சியை யுடையதாகக் காண்டல்போல் கற்பனையாகிய சிதாபாசனனது இச்சாஞானக் கிரியையாதி புடைபெயர்ச்சி யுடையதாகக் காண்கின்றதென்க. இதனால் என்ன ஆயிற்றெனின், பழுதையானது யாதோர் செய்கையும் அற்றிருத்தல்போல், பரமாத்ம சொருபமாகிய நானென்பது யாதோர் செய்கையு மற்றிருத்த லென்றாகின்றது. ஆகவே, இவ்வப்பியாச அனுபவம் பிரமமக மென்பதாயிற்று. அப் பிரமமக மென்பதற்கு உதாரணம்:—

தத்துவராயர் பாடுதுறை.

"அஞ்ஞான காரிய மனைத்து மறவிட்டு
விஞ்ஞான மானேனென் றுந்தீபற
வெளியாகி நின்றேனென் றுந்தீபற." என்றும்,

"அதுவேகா ணிதுவென்றொன் றாரிய னருள்செய்ய
இதுவது வாகுமென் றுந்தீபற
இலக்கணைப் புகுந்ததென் றுந்தீபற. என்றும்,

நிஜாநந்த உந்தியார்.

"தானுகி நின்ற தனித்த பரம்பொரு
ளுனுகி நின்றேனென் றுந்தீபற
நாடிலொன் றில்லையென் றுந்தீபற." என்றும்,

ஈசுரகீதை.

"இந்த ஞானத்தை யெய்திய வின்பத்தா
ரந்த மில்பிர மத்துரு வாயினோர்
பந்த மேவிடார் பண்டுமின் றுமென்றே
யெந்தை யீறிலி யீச னியம்பினுன்." என்றும்,

வருவனவற்ருற் காண்க.

## 2-வது அகப்பிரமமென்பது.

இவ் வுபாதித்திரயம் கயிற்றரவு முதலியவைபோல் சொல் மாத்
திரமும், தோற்றன் மாத்திரமுமா யிருப்பதால், நானன்றென நியதி
களையப்பட்டன. படவே, எது நானன்றென நியதி களையப்படாதது?
நியதி களையப்பட்ட இவ்வுபாதித்திரயம் அவத்தாத்திரயம், அபி
மானத்திரய முதலியவைகளுக்கு ஆதாரமாயும், சாட்சியாயு மிலங்
கும் வியாபக விளக்கமன்றோ? அவ்வியாபக விளக்கமே நானெனத்
தெளிந் தின்புற்ருற்போல் நான் அதுவெனத் தெளிந் தின்புற
வேண்டுமா? அன்றி வேண்டாவா? இங்ஙனந் தெளிந்தின்புற்ற
தெளிவாநந்தமே நிரதிசயாநந்த மாகலின், நான் அதுவெனத்
தெளியவேண்டுவது எற்றுக்கு? அது நானென்பதற்குப் பொருத்த
மிருக்கின்றது, நானது வென்பதற்குப் பொருத்தமில்லையே! அது
நானென்பதனுல் அதுவே நானெனப் படுகின்றது. இதனு
லன்றோ தத்துவமசி வாக்கியம் பிறந்திருக்கின்றது? நானென்
பது ஓர் முதலானுல் அவ்வாக்கியம் அங்ஙனம் பிறக்குமா? ஆகலால்,
நான் அதுவெனத் தெளிந்தின்புற வேண்டுவ தின்றெனின், அவ்
வாக்கியம் ஐக்கியானுபவத்தை விளக்கவந்ததேன்? அஃது தத்துவ
மசி யென்பது மாத்திரமா? தொந் தத் தசியென்பது மன்றோ?
அன்றெனின், ஷை வியாபக விளக்கத்தை நானெனத் தெளிந்
தின்புற வேண்டுவதென்னை? இவ்வுபாதித்திரயத்தை நானன்றெனக்
களைந்ததனுலன்றோ? எதை நானெனப் பரோட்சமுற்று இவ்வுபா
தித்திரயத்தைக் களைகின்றது? ஷை வியாபக விளக்கத்தை யாக
வின், அவ்வியாபக விளக்கத்தைப் பரோட்சமாகக்கொண்டு இவற்

றைக் களைந்த பின்னொன்றே, அவ்விளக்கத்தை அபரோட்சமாகத் தெளிகின்றது. இங்ஙனந் தெளிவது நானதுவெனத் தெளிதற் காகலின், சோயந் தேவதத்த னென்பதுபோல, அயம்சோ தேவ தத்தனெனவும் வழங்குகின்றது. அயம்சோ தேவதத்த னென்பதே ஜீவ தொந்தத்தசி யெனப்பட்டது. இத்தொந்தத் தசி யென்பதே அகம்பிரம்ம மெனப்பட்டது.

அகம்பிரம மென்பதற்குப் பொருளுண்டோவெனின், முன் னொன்று களையப்பட்டவை உபாதித்திரய முதலியவைகளன்றோ? இவை யனைத்தும் உண்மைப் பொருள்களாகத் தோற்றுகின்றனவா? அன்றிக் கயிற்றரவு முதலியனபோற் றோற்றுகின்றனவா? உண்மை யாகவே தோற்றுகின்றனவெனின், இருப்பாயிருந்து உண்மையாய்த் தோற்றுகின்றனவா? அன்றித் தோற்றன்மாத்திரமாக இருந்து உண்மைபோலத் தோற்றுகின்றனவா? இருப்பாயிருந்தே உண்மை யாய்த் தோற்றுகின்றனவெனின், இவ்வனைத்தும் ஆராய்ச்சிக் கியை யா திருக்கட்டும்! இயைவதாற் றோடமென்னையெனின், அன்மை யெனவும் இன்மை யெனவு முடியா திருக்கட்டும்! அங்ஙன முடிவ தாற் பொருளின்றோ வெனின், ஆம் எனவும் உண்டு எனவுமா யிருப்பது பொருள் இல்லாததாக்கும்! பொருளென்பதும், பொரு ளல்ல வென்பதும் இங்ஙனந்தான் மாறுக இருக்கின்றதோ? இஃது விந்தையினும் மிக்க விந்தை யாகின்றதே! காணப்பட்ட நாமரூப மனைத்தும் அன்மை இன்மை யென்பதனால் இழுக்கென்ன வெனின், தோற்றன்மாத்திர மென்பவற்றிற் கியைந்ததன்றோ? அன்றியும் இத்தோற்ற மனைத்தும் உண்மையாகத் தோற்று வானேன்? அங்ஙனந் தோற்றுதல் சுபாவமெனின், கயிற்றரவு முதலியவைகள்போலன்றி உண்மையாகத் தோற்று மிவைகளு தெளிந்த ஞான்றோ? அன்றித் தெளியா ஞான்றோ? தெளியாஞான் றெனின், அதுபோல் இவ்வனைத்தையும் ஆராய்ந்து தெளிந்தஞான்று உண்மைபோற் றோற்றுகின்றனவா? தோற்றாதெனின், உண்மை யாய்த் தோற்றுதல் சுபாவமென்பானேன்? சுபாவமென்பது என் றும் ஒருபடித்தா யிருப்பதன்றோ? இவையனைத்தும் அங்ஙனமில் லையே! தெளியாதுழி உண்மைபோலும், தெளிந்துழி இன்மையாயு மிருக்கின்றதே! தெளியாமை மூடமாகிய அவிவேகமும், தெளிவு அம் மூட மின்றிய விவேகமுமன்றோ? அவிவேகத்தால் அனைத்தும் உண்மைபோற் றோற்றுவானேன்? உண்மையாகப் பார்க்கின்றதனு

லன்றோ? தெளியாதுழி உண்மையாகப் பார்க்கினும், தெளிந்துழிக் கற்பனைகளாகப் பார்க்கினும், அனைத்தும் ககனாரவிந்தம், கயிற்றரவு, கானல்நீர், கனவுலகம் ஆகிய இந்நான்கினைப்போன்றதென்பதற்கு மூரணென்னை? இன்றாகலின்,

இத்தோற்ற மனைத்தும் எதற்குக் காணப்படுகின்றன? ஆங்காங்கும் நானென்பதற் கன்றோ? நானென்பதற்குக் காணப்படும் இவ்வனைத்தும் எவ்விடத்தது? ஷை பிரமமாகிய ஆதாரத்ததெனின், எது இவற்றாதி தோற்றங்களாகத் தோற்றுகின்றது? ஷை பிரம சொரூபந்தானெனின், இத்தோற்றங்க ளனைத்தும் உண்மைபோற் றோற்றுதற்கு உண்மையாகப் பார்ப்பதும், கற்பனையாகத் தோற்றுதற்குக் கற்பனையாகப் பார்ப்பதும் எது? ஷை பிரமந்தானோ? அல்லவே! அல்லாவுழி, நானென்பதன்றோ? அந் நானென்பது மயங்கிய ஞான்று அனைத்துமென்பது விவகாரிக சத்தாயும், அங்ஙனம் மயங்காஞான்று அவ்விவகாரிக சத்தனைத்தும் பிராதிபாஸிக சத்தாயுமிருக்கின்றதன்றோ? அங்ஙனம் இருவித சத்தாயுமிருப்பது யாது? ஷை பிரமமெனப்படுமா? படாதே! படாதாகலின் நானென்பதே?

அன்றியும், இத்தேக முதலிய ஒவ்வொரு நாமரூபத்தையும் காரணகாரிய முதலிய நெறித்தாக ஆராய்ந்து செல்லுழி, அந்தத்தில் எது இருக்கின்றது? ஷை பிரமந்தான் இருக்கின்றதெனின், அங்ஙனம் ஆராய்ந்து சென்ற நானென்பது எங்கே போயிற்று? அவ் வந்தத்தில் நசித்து விட்டதாக்கும்! அங்ஙனம் நசித்து விட்டதாயின், அவ் வந்தத்தில் யாது மின்றெனவும் இருப்பது பாழெனவும் அறிகின்றது எது? நானென்பதன்றோ? இதனால், நானென்பது ஆராய்தலுக்கு முற்பொழுதும், ஆராய்ந்து முடிந்த பிற்பொழுதும், ஆராயும் இடைப்பொழுதும் இருந்து ஆங்காங்குமுள்ள நிலைமைகளை யுணர்வதன்றோ? அம் முப்பொழுதுமுள்ள நானென்பது எப்பொழுது இன்றெனப்படும்? எப்பொழுதும் உண்டென்பதால் எப்பொழுதுள்ளது? இரு ஆராயப்பட்ட நாமரூபங்க ளனைத்தும் எப்பொழுதுமுன்னும் பின்னுமென்பது-இடைப் போது இன்மையும் அதாவது-முன்னும் பின்னுமென்பது-இடைப் போது தோற்றன் மாத்திரமு மானமையால், எப்பொழுதும் இன்றென்பதற்கு மூரணின்று மென்க. இதனால், நானென்கிற ஓர் போதத்தை யன்றிச் சிற்சட பேதங்களாய்த் தோற்றுவனவாகிய

சீவேசுர சகத்தென்பவையுள், பரமாணுவுக்கும் பரமாணுவேனு மின்றாகலின், நானென்கிற போதமானது அயலிறந்ததாகின்றது. ஆகவே, அயலுளதாகத் தோற்றுவதும் எதுவெனப்படும்? நானெனப் படுமென்பதற்கு முரணென்னை?

இன்றாகவே, அனைத்திற்கும் நானென்னும் போதமே உபாதானமும், அதிட்டானமு மாகின்றது. ஆகவே, அதிட்டானமும், உபாதானமுமாகிய நானென்பதன் காரியங்களான ஆரோபங்களுக்கு ஆதாரம் யாதெனப்படும்? வேறொன்றெனப் படுமெனின், ஒன்றினது காரியத்துக்கு மற்றொன்று ஆதாரமா யிருப்பதுமுண்டா? எந்தக் காரியத்திற்கு எது உபாதான காரணமோ அக்காரணமன்றோ அந்தக் காரியத்திற்கு ஆதாரமெனப்படுவது? சீவேசுரசகத் காரியங்கட்கு நானென்கிற போதம் உபாதானகாரணமா யிருக்கின்றமையால், இக்காரியங்கட்கு ஆதாரம் நானென்னும் போதத்தையன்றி வேறென்பது எங்ஙன முண்டெனப்படும்? இக்காரியங்க ளனைத்தும் நானாகிய போதத்தை உபாதானமாயும், ஆதாரமாயும் பெற்று விளங்கினும், எவ்விளக்கத்தால் விளங்குகின்றன? வேறே விளக்கம் உண்டென்பமா? அங்ஙன முண்டென்பதற்குப் போதவியாபகத்தையன்றிக் கிஞ்சித்தேனும் எல்லையென்ப துண்டாயின், அவ்வெல்லையில் நின்று வேறோர் விளக்கம் விளக்க இக் காரியங்கள் விளங்கு கின்றனவாக ஏற்பம். இப்போத வியாபகத்தை யன்றி வேறே எல்லையென்ப துண்டா? இல்லையே! ஆகலின், இச்சர்வ தோற்றங்களும் விளங்க விளக்கிக்கொண்டிருப்பது யாதெனப்படும்? நானாகிய போத வியாபகமன்றி வேறின்றென்க.

இஃதில் ஐயமுளதேல் நினைவிலும், கனவிலும், சுழுத்தியிலும் அவ்வக்காட்சிகள் விளங்க விளக்கிக்கொண்டிருத்தலை எளிதிற் காணலாம். இதனால், நானென்னும் போதமே அதிட்டானமாயும், உபாதானமாயும், ஆதாரமாயு முடிந்தது. முடியவே, இச் சீவேசுர சகத்தாகிய சர்வமும் ஆரோபமாயும், காரியமாயும், ஆதேயமாயு முடிந்தன. முடியவே, நானென்னும் போதத்தையன்றி, ஆரோபமாய் விளங்கும் சர்வமென்பதுண்டா? இன்றெனின், அதிட்டானமாய் விளங்கும் ஷை வியாபக விளக்கமென்பதும் இன்றென் றாகின்றது. ஆகின்றதால், நானென்கிற போதமே ஆரோபமாகிய இச் சீவேசுர சகத்தும், வியாபக விளக்கமாகிய அப் பிரமமுமா மென்க. இது

காறும் கூறிப்போந்ததில் என்ன ஆயிற்றெனின், முன்ஞான் ஞாராய்ச்சியில் அது நானெனவும் அதாவது பிரமமே அகமென வும், பின்ஞான் ஞாராய்ச்சியில் நான் அதுவெனவும், அதாவது அகமே பிரமமெனவு மாயிற்றென்க. இதற்கு உதாரணம்:—

### ஸ்ரீபுகீதை மகாவாக்கியம்.

"அகம்பிரம மெனக்கயலாய்ச் சித்து மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சடமு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சத்து மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் மித்தை யில்லை
யகம்பிரம மெனக்கயலா யிருமை யில்லை
யகம்பிரம மெனக்கயலா யொருமை யில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா." என்றும்,

"அகம்பிரம மெனக்கயலாய் மாயை யில்லை
யகம்பிரம மெனக்கயலா யீச னில்லை
யகம்பிரம மெனக்கயலா யவித்தை யில்லை
யகம்பிரம மெனக்கயலாச் சீவ னில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சகத்து மில்லை
யகம்பிரம மெனக்கயலா யொன்று மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா." என்றும்,

"அகம்பிரம மெனக்கயலாய்த் தீர்த்த மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தான மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தெய்வ மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பூசை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் செயலு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பயனு மில்லை
அகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா." என்றும்,

### திருக்குத்திரிசியவிவேகம்.

"அதுநானு நானதுவா வாதற்குட் சென்ம
மிதுபோயி னென்செய்வ னெந்தா—யதுகேட்கிற்
சிற்பொருளி னுட்டஞ் சிதையாமை நின்கடமை
யற்பமகத் தாலென்ன வாம்." என்றும்,

சொரூபசாரம்.

"என்னைத் தவிரமற்றிங் கேதுமில்லை யென்னுணே
பொன்னைத் தவிரவிலாப் பூடணம்போற்—பொன்னையுரு
வேறாக்கிப் பேருரைத்த வேற்றுமைபோ னம்மையுமவ்
வாறாப் பகுத்துரைத்தோ மால்." என்றும்,

கூறியவாற்றாற் காண்க.

இதுகாறும் கூறிப்போந்ததால் தனது ஆரோபமாகிய உபாதித் திரயங்களை முன்ஞான்று நானன்றென நியதிகளைந்த பின்ஞான்று தனது அதிட்டானமாகிய பிரமமே நானென்னும் அனுபூதி முதிர்ந்து, அதன் பின்ஞான்று ஷை ஆரோபமாகிய சிவேசுரசகத்தனைத் தும் தன்னைத் தவிர எஞ்ஞான்றும் இல்லவேயில்லையென முடிகின்றமையால், ஷை அதிட்டானமாகிய பிரமமென்பதும் தன்னைத் தவிர இன்றென்பதாகின்றது. ஆகவே, நானே அனைத்துமாயும் அன்றாயுமிருக்கின்றதென்க. என்னை ?,

சொரூபசாரம்.

"மெய்யெல்லாம் நாமாய் விளங்கியபின் னுமாய
பொய்யெல்லா மெங்கேனும் போயவோ—மெய்பொய்
யிருவகைக்கும் நாமே யிடமானோந் தொந்தித்
திருவகைக்கு மொட்டாம லே."

என்பதனாற் காண்க.

வெல்லப்பாகானது இரத கஜ துரக பதாதிகளென்னும்-வடிவப் பேதங்களா யிருக்கும் ஞான்று, அவ்வொவ்வொரு வடிவமும் மதுரமயமா யிருக்குமன்றோ ? அதுபோல், நானென்னும் போதமானது சர்வவிடயப் பகுதிகளா யிருக்கின்றமையால், இப்பகுதிகள் ஒவ்வொன்றும் போதத்தினது துவிதம் விசிட்டாத்துவிதம் அத்துவிதம் ஆகிய இம்மூன்று இலக்கணங்களையும் ஏற்றிருக்க வேண்டுமன்றோ ? அங்ஙனம் ஏற்றிருக்கின்றதாயின், இவற்றுள் ஓர் விடயம் ஏற்றிருக்கட்டுமேயெனின், மட்கடம் பொற்பணி நூற்படம் முதலியவற்றுள் முன்னர் மட்கடத்துள் ஷை இலக்கணங்கள் இருக்கக் காட்டுதும்.

இஃது முதலாவது துவிதம்.

எங்ஙனமெனின், மட்கடமென்புழி இவை இருமையதெனப்படுமா ? அன்றி ஒருமையதெனப்படுமா ? சொல் இருமையதாயினும் பொருள் ஒருமையதேயெனின். மட்பொருளான்து தன்பால்

பலவடிவாதற் கியைந்த செயல் அமைதற்குத் தான் முதற்பொருளா
யிருக்கின்றமையால், அம்மட்பொருள் காரணமும் அச்செயலால்
தான் ஓர் வடிவாக விகற்புறுதலால், அவ்விகற்புருவம் கடமென்
னும் காரியமுமா யிருக்கின்றன. இங்ஙனமிருக்கு மிவற்றுள், மட்
பொருள் கடப்பொரு ளெனப்படுமா? அன்றிக் கடப்பொருள்
மட்பொருளெனப்படுமா? இவை ஒன்று மற்றொன் றெனப்படுமெ
னின், காரணம் காரியமெனவும் காரியம் காரணமெனவும் படவேண்
டுமே! இதற்கென்செய்தும்! இம்மட்கடமாகிய காரணகாரியம் வெவ்
வே றிடத்ததாயிருந்தாலன்றோ ஒன்று மற்றொன் றெனப்படா தென்
பம். அங்ஙன மில்லையேயெனின், வெவ்வேறிடத்ததா யிருந்து நிகழ்
பவை பேதகாரண காரியமும், அங்ஙனம் வெவ்வேறிடத்தின்றி
ஓரிடத்திருந்து நிகழ்பவை அபேத காரணகாரியமு மாகின்றன.

ஆகவே, இஃது அபேத காரணகாரிய மாகின்றதால், எங்ஙனம்
இக்காரணகாரியம் வேறிடத்ததாகும்? இக்காரண காரியம் வேறி
டத்த தின்றாயினும், ஒன்று மற்றொன்றெனப் படாதோவெனின்,
காரண காரிய பேதமும் அததற் கியைந்த சொரூப பேதமும் இன்றி
யிருக்கட்டுமே! அங்ஙன மிருக்கின்றதால், வெவ்வே றெனப்படு
மோவெனின். மட்பொருள் கடப்பொரு ளெனப்படுமா? படுமெ
னின், மட்பொருளின்பால் ஷி செயல் அமையவேண்டுவ தவசிய
மின்று. ஏனெனின், அச்செயல் அமைவது யாதுக்கு? அடி
குவிந்து இடை பருத்து மேல் விரிந்திராநின்ற ஓர் வடிவமாதற்
கன்றோ? அங்ஙனம் விகற்புற்ற ஞான்றன்றோ கடப்பொரு ளெனப்
படுவது? அங்ஙனம் கடவடிவாக விகற்புற்ற ஞான்று, அக்கட
வடிவு மட்பொரு ளெனப்படுமா? படுமெனின், மட்பொருளுக்குச்
சொரூபம் கடமாகிற விகற்பவடிவ மாகத்தானா இருக்கின்றது?
மட்சொரூபத்திற்குக் கடப்பொருளெனவும் கடச்சொரூபத்திற்கு
மட்பொருளெனவும் பெயர் வழங்கப்படுவதுமுண்டா? அன்றியும்,
மட்பொருளுக்கியைந்த நிலம் தரை முதலியனவாக வழங்கும் பரி
யாய நாமங்களோடு, கடமென்கிற நாமமும் அதற்கியைந்ததாய் வழங்
குவதுண்டா? இல்லையன்றோ? அங்ஙனமே, கடப்பொருளுக் கியை
ந்த குடம் பாண்ட முதலியனவாக வழங்கும் பரியாய நாமங்களோடு
மட்பொரு ளென்கிற நாமமும் அதற்கியைந்ததாய் வழங்குவதுண்
டா? அங்ஙன்மு மில்லையே! இங்ஙனமிருக்க, எங்ஙனம் ஒன்று

மற்றென்றெனப்படும்? படாமையால், இம்மட்கடமென்னுங் காரண காரியம் பேதமெனப் படுமன்றே? ஆகலின், இப்பேதமே காரண காரிய துவிதமாமென்க.

இஃது இரண்டாவது விசிட்டாத்துவிதம்.

இம்மட்கடம் துவிதமென்பதற் கியைந்திருப்பது உண்மையாயிருக்க, விசிட்டாத்துவித மெனப்படுவ தெங்ஙனமெனின், மட்கடமென்னும் காரணகாரியத் துவிதமிரண்டுள், கடமென்னுங் காரியப்பொருள் தோன்றி நிகழுகின்றது எதன்பா லெனப்படும்? தன்னைத் தசபுறமும் சூழ்ந்திராநின்ற வெளியின்பாலெனின், மட்பொருளிற் றோன்றிய இஃது அம்மட்பொருளினின்று நீங்கி விளங்குவது அணிமைக்கண்ணோ? அன்றிச் சேய்மைக்கண்ணோ? இரண்டுமன்றெனின், மட்பொருளி லுண்டாகிய கடமாகிய காரியப்பொருள், அம்மட்பொருளை விட்டு வெளியின்கண் எங்ஙனம் தனித்துத் தோன்றும்? அம்மட்பொருளை விடாமலே தோற்றுகின்றதெனின், அம்மட்பொருளுக் கியைந்த தசபுறத்துள் எந்தப் புறத்தை விடாது நின்று தோற்றுகின்றது? மேற்புறத்தில் நின்று தோற்றுகின்றதா? அன்றிக் கீழ்ப்புறத்தில் நின்று தோற்றுகின்றதா? அங்ஙனமுமின்றி, அட்டப்புறத்துள் எந்தப்புறத்தி லெனப்படும்? இங்ஙனங் கூறிய எந்தப் புறத்து மன்றெனின், உட்புறம் இடைப்புற மென்பவற்றுள் உட்புறத்ததா? அன்றி இடைப்புறத்ததா? அவையு மன்றெனின், அம்மட்பொருளை விடாது எங்ஙனந் தோற்றுகின்றது? அம்மட்பொருளோடு தோற்றுகின்றதே நமக்குச் சாலுமான அனுபவமெனின், அஃது எங்ஙன மிருந்து தோற்றினுந் தோற்றட்டும். பொருளாகத் தோற்றுகின்றதா? மற்றியாதாகத் தோற்றுகின்றது? பொருளாகவே தோற்றுகின்றதெனின், அப்பொருள் தனித்தாகவேனும் அன்றி ஷை மட்பொருளின் உட்புறம் வெளிப்புறம் இடைப்புறமென்பவற்றுள் ஓர் புறத்திலேனுமிருந்து, ஓர் முதலாகத் தோற்றவேண்டுமே! இதற்கு என்செய்தும்! இருந்துதானே தோற்றுகின்றதெனின், இல்லாமற்றோற்றுகின்றதாக ஈங்குக் கூறவில்லையே! இருந்தே தோற்றுகின்றதால், எங்கிருந்து எங்ஙனமாகத் தோற்றுகின்ற தென்பதன்றோ ஈங்குக்கடாவியது? இங்ஙனமிருக்க, தீயிலகப்பட்ட மாசுணம்போலப் புரண்டு புரண்டு வினவில் ஐயமென்பது எங்ஙனமகலும்? இக்கடமாகிய காரியப்பொருள் ஓர் முதலாக நின்று தோற்றுவதன்று, ஓர்வித வடிவப்பொருளாக நின்

றே தோற்றுகின்றதெனின், வடிவப்பொருளென்பது முன்னான்று
அடிகுவிந்து இடைபருத்து மேல் விரிந்திருக்கின்றதாக ஒப்புக்
கொண்டதாகின்றது. ஆயினும், அவ்வடிவமானது இருந்து தோற்று
கின்ற தென்பதனுல், எங்கிருந்து தோற்றுகின்ற தெனவருமே!
இதற்கு யாது செய்வது? அங்ஙனந் தோற்றுதல் ஓரிடத்ததன்று;
அம் மட்பொருளின் தசபுறமுமேயெனின், அம்மட்பொருளைப்
போல் ஓர் பொருளாக அன்றென்ப தாகின்றது.

ஆகவே, பல்வகை வடிவங்களுள் ஓர்வடிவ மாகின்றது. இவ்வடி
வம் குணமெனப்படுவதா? அன்றி வேறெனப்படுவதா? குணமெனப்
படுவதுதானெனின், இதற்குக் குணியென்பது யாதெனப்படும்?
மட்பொருளெனப்படுமெனின், இஃது மட்பொருளின் குணமென
றுகின்றது. ஆகவே மட்பொருளாகிய குணியென்பதில் கடவடிவா
கிய குணமென்பது விளங்குகின்றதா? அன்றிக் கடவடிவாகிய குண
மென்பதில் மட்பொருளாகிய குணியென்பது விளங்குகின்றதா?
மட்பொருளாகிய குணியின்கண்ணே கடவடிவாகிய குணம் விளங்கு
கின்றதெனின், இவற்றுல் குணிப்பொருள் வியாபகமும் குணவடி
வம் வியாப்பியமு மாகின்றன. ஆகவே, கடமாகிய குணவடிவம் மட்
பொருளாகிய குணிவியாபகத்தில் கூடியிருக்கின்ற வியாப்பியமாகின்
றது. ஆகவே, இவ்வியாப்பியம் அக்குணி யெனப்படாமலும், அவ்
வியாபகம் இக்குண மெனப்படாமலு மிருக்கின்றன.

ஆகலின், இவைகள் இங்ஙனமிருக்கு மிவ்விருப்பு என்ன துவித
மெனப்படும்? கூடியிருக்குந் துவிதமா? அன்றிக் கூடாதிருக்குந்
துவிதமா? கூடாதிருக்குந் துவிதமென்பது இதற்குமுன் கணிக்கப்
பட்டுள்ள காரணகாரிய பேதங்களாம். இஃததுபோ லன்றுகலின்,
அத்துவித மெனப்படுமா? படுமெனின், குணிப்பொருள் குண
வடிவமெனவும், குணவடிவம் குணிப்பொருளெனவும் படவேண்
டும்! அங்ஙனம் படாமையால், வெவ்வேறு பொருளென்பமே யெ
னின், இம்மட்கடம் வெவ்வே றிடத்ததாக இருக்கவேண்டும்! அங்
ஙனமு மின்றுகலின், இவை துவிதமுமன்று. அத்துவிதமுமன்று.
ஆன்றுகவே, குணிகுணமாகிற இம்மட்கடமென்பது என்னவெனப்
படும்? வியாபகவியாப்பியமாகவும், குணிகுணமாகவும் கூடிப் பிரி
வின்றி யிருக்கின்றன. இங்ஙன மிருப்பதால் என்ன ஆயிற்றெனின்,
குணியோடு குணம் கூடியிருப்பதால் விசிட்ட துவிதமும் கூடியுமிரண்
டும் பிரிவற விருப்பதால் அத்துவிதமு மாகின்றதென்க.

இஃது மூன்றவது அத்துவிதம்.

ஷை துவிதத்தையும், இவ் விசிட்டாத்துவிதத்தையும் ஏற்றி லங்கும் இம்மட்கடமானது, அத்துவிதத்தையும் எங்ஙன மேற்கு மெனின், மட்கடமென்னு மிரண்டுள், கடமென்பது காரியமாயும் குணமாயுமிருக்கினும், இஃது இல்லதெனப் படுமா? அன்றி உள்ள தெனப்படுமா? இல்லதெனப் படுமெனின், பிடித்தல் எடுத்தல் சமைத்தல் முதலிய அனுபவங்க ளில்லாதிருக்கட்டும்! உள்ளதென்ப் படுமெனின், ஆராய்வுழி இருப்பது மட்பொருளன்றோ யிருக்கட்டும்! உண்டா யிருக்கின்றமையால் கடானுபவ மின்றோவெனின், அக் கடானுபவத்தில் மட்பொரு ளில்லாமற் போயிற்றோ? அம்மட் பொருள் உண்டாயிருப்பதால் சமைத்தல் முதலிய அனுபவம் மட் பொருள் ஏற்கட்டுமே! அச்சமைத்தல் முதலிய அனுபவங்களாற் கடப்பொரு ளுண்டெனப்படுவது முன்னொன்றோ? அன்றிப் பின் னொன்றோ? அஃதுமன்றி இஞ்ஞான்றோ? முப்பொழுதுந்தானெனின், குலாலனது திரிகை சுழலுதற்கு முன்னொன்று அத்திரிகையில் நின் றிலங்குவது எதுவெனப்படும்? மட்பொரு ளெனப்படு மெனின், அப்பொழுது கடப்பொரு ளென்பதுண்டா? இன்றெனின், அக் கடப்பொருள் எப்பொழு துண்டெனப்படும்? ஷை திரிகையின் சுழ லில் நின்று வெளிப்பட்டது முதல் அஃது மாறுங்காறு மெனின், மாறிய பின்னொன்று இல்லையென்றுகின்றது. ஆகவே, இடைஞான்று மாத்திர முண்டென்ப தாகின்றது. அங்ஙன முண்டெனப்படுவது தோற்றமாகவா? அன்றிப் பொருளாகவா? தோற்றமாகவு மன்று வேறு பொருளாகவு மன்றெனின், பின்னர் யாதாக வெனப்படும்? வடிவுப்பொருளாக வெனின், வடிவுப்பொருள் தோற்றன் மாத்திர மாகக் காணப்படுவ தன்றோ? அன்றெனின், இக் கடப்பொருள் பிடித்தல் எடுத்தல் சமைத்தல் முதலியவைகளுக் கியைந்ததென முன்னொன்றே ஏற்றிருக்கின்றதால், அவ்வனுபவங்களுள் ஓர் அனு புவத்தைச் சற்றாகிக்குதும்.

அதாவது, இக் கடப்பொருளைக் கரத்தாற் பிடிக்குஞான்று, அப் பிடித்தலுக்கு அகப்படுவது எது? கடப்பொருள்தானெனின், அப்பொழுது மட்பொருளைவிட்டு அகப்பட்டதா? அன்றி விடாம லகப்பட்டதா? விட்டு அகப்பட்டதெனின், அம் மட்பொருளைத் தான் அணிமையாக விட்டதா? அன்றிச் சேய்மையாக விட்டதா?

இரண்டாகவு மன்றெனின், இதனால் அம்மட்பொருளைத்தான் விட்ட தென்பதன்று. விடாமலே அகப்பட்டதெனின், அப்பொழுது எது அகப்பட்டது? கடப்பொருள்தான் அகப்பட்டதெனின், கூறியது கூறல் குற்றமென்பது படவில்லையாக்கும்! ஆகலின், மட்பொருள் அகப்பட்டதெனின், கடப்பொருளைப் பிடிக்க மட்பொருள் அகப் படுவானேன்? இருப்பது மட்பொரு ளென்பதன்றோ? எடுத்தல் சமைத்தல் முதலிய அனுபவங்களுக்கு மியைந்தது அம்மட்பொருளை யன்றி வேறே யாதிருக்கின்றது? ௸ அனுபவங்களுக்கு இக்கடப் பொருளை யன்றி மட்பொருள் இயைந்திருக்கட்டுமே யெனின், மட் பொருளின்றி இக்கடப்பொருள் இயைந்திருக்கட்டுமே! அன்றி யும், கடப்பொருள் எதுவாகவேனும் மட்பொருள் அனுபவப்படு கின்றதன்றோ! இதனால் கடப்பொருள் மட்பொரு ளனுபவப் படுகிறதற்கு அபேதகருவி யாகின்றது. ஆகவே, கடப்பொருள் ஓர் முதலெனப்படுமா! படுவதாகவே கொண்டால், மட்பொருள் ௸ கிரிகையில் அகப்படாஞான்று, சமைத்தல் முதலிய அனு பவங்களுக் கியைகின்றதா?

அன்றியும், சுவர் முதலிய கட்டடங்களாதற்கு அனுபவப்படு ஞான்று, இக் கடப்பொருள் மட்பொருளுக்குப் பேதகருவியாக வேனும் அபேத கருவியாகவேனு மிருக்கின்றதா? இல்லையே! ஏனின்று? தான் ஓர் முதலாக இல்லாமையா லென்க. இதனால் என்ன ஆயிற்றெனின், மட்பொருளொன்றே காரணகாரியமாயும், குணிகுணமாயு மாகின்றது. ஆயினும், இக்காரணகாரிய பேதமும், குணிகுணபேதாபேதமும், மட்பொருளுக்குச் செயற்கையா யியைந் திருக்கின்றனவா? அன்றி இயற்கையா யியைந்திருக்கின்றனவா? இயற்கையாகவே இயைந்திருக்கின்றன வெனின், மட்பொருள் ௸ கிரிகையில் அகப்பட்டு விகற்புற்றதுமுதல் அவ் விகற்பவுரு மாறுங் காறும் காரியபேதத்தையும், வடிவமாகிய குணபேதத்தையும் ஏற் றியது யாது? கடமென்பதன்றோ? அங்ஙனம் ஏற்றியிலங்குங் கடப்பொருளுள்ளஞான்றும், மட்பொருள் என்னவெனப்படும்? காரணமெனவும், குணியெனவும் படுமன்றோ? கடமென்கிற பெய ரை யேற்கும் விகற்பம் நிலையற்றதாகலின், அஃது மாறிய ஞான்று மட்பொருள் என்னவெனப்படும்? காரணமென்பதையும், குணி யென்பதையு மேற்குமா? ஏலாதன்றோ? அன்றியும் கடவிகற்பம் மட்பொருளை யன்றி இன்றாயின், அம்மட்பொருள் காரியமெனவும்

குணமெனவும் படுமோ? படாதெனின், இவ்விரண்டினு லன்றோ தான் காரணமெனவும், குணியெனவு மாகின்றது? கடவிகற்பம் எதார்த்தமாயின், அதற்கு வந்து வழங்கப்படும் காரியமென்பதும், குணமென்பது மெதார்த்த மெனப்படும்! அவ்விகற்பம் தோற்றன் மாத்திரமாகலின், அதற்கு வந்த காரியமென்பதும், குணமென்ப தும் சொன்மாத்திரமாகின்றன. ஆகவே, கடவிகற்பம் மட்பொருளை யன்றி யின்றாகலின், கடி காரியமென்பதும், குணமென்பதும் அம் மட்பொருளையன்றி ஏது? இக்காரிய முதலிய கற்பனையினால் வந்த காரணமென்பதும், குணியென்பதும் கற்பனைகளெனப்படுமன்றோ? இங்ஙனமிருக்கின்றமையால், மட்பொருள் காரணகாரிய பேதமும், குணிகுண பேதாபேதமு மிறந்ததென் றாகின்றது. ஆகவே, மட் பொருளென்பது துவிதப்பொரு ளெனப்படுமா? அன்றி விசிட் டாத்துவிதப்பொரு ளெனப்படுமா? அஃதுமன்றி அத்துவித மெனப்படுமா? அத்துவித மெனப்படுமாகலின், இவ்வத்துவிதமே சித்தாந்த மாயிற்றென்க.

முன்ஞான்று துவித முதலிய முப்பேத தாட்டாந்தங்களை விரிவாக எடுத்துக் காட்டியதை, இஞ்ஞான்று காட்டிய இத் திட்டாந்தத்தைப் பற்றி இன்னும் அத் தாட்டாந்தத்தை வற்புறுத்துவான் வேண்டிச் சற்றுத்தொகுத்து யூகிக்குதும்.

இஃது 1-வது துவிதம்.

எங்ஙனமெனின், கடி சீவேசுர சகத்தென்பவை காணப்படு தலுக்குக் காரணம் யாதெனப்படும்? இதற்கு வேறே ஓர் காரண மும் வேண்டுவதில்லையே யெனின், இவைகள் எதற்குக் காணப் படுகின்றன? தமக்குத்தாமே காணப்படுகின்றனவெனின், ஓர் ஞான்று காணப்படுகின்றதும், மற்றோர்ஞான்று காணப்படாததுமா யிருப்பதென்னை? அவ்விருஞான்றுவது—சகலமும் கேவலமுமா மென்க. இவைகள் இருந்தபடியிருந்து தொற்றிக்கொண்டே இருக் கின்றதை அறிவு சகலாவத்தையாயிருந்து உணருகிறதும், கேவலா வத்தையா யிருந்து உணராமையுமேயன்றி வேறன்றேயெனின், நாம் எங்ஙனம் சொல்லினும் அறிவு உணர்ந்தஞான்று தானே இவை கள் தோற்றுகின்றதும்! இதனால் உளதென்றதும் உணராதுழி இவைகளின்றோவெனின், இருக்கினும் அறிவைமுன்னிட்டுத்தானே தாம் தோற்றுகின்றன. இதனால் அறிவு காரணமும் இம்முப்பொருள்

காரியமு மாகின்றன. இவைகள் இருக்கின்றதைப் பற்றியன்றோ அறிவு உணரவந்ததெனின், அறிவு உணர்வதைப் பற்றியன்றோ இவைகள் விளங்குகின்றது.

அன்றியும், அறிதல் முன்னிட்டதா? அன்றி விளங்குதல் முன்னிட்டதா? விளங்குதல் பின்னிட்ட தாயினும், இஃது காரியப் பொருளெனப்படுமோவெனின், முன்னிட்டதாகிற அறிதல் காரிய மெனப்படுமோ? அன்றியும், விளங்குகின்றதற்குக் காரியத்துவம் சொல்லவந்ததேயன்றிப் பொருள்களுக்குக் காரியத்துவம் சொல்ல வந்ததல்லவே! அங்ஙனமாயின், அறிதல் காரணமும் விளங்குதல் க்காரியமு மெனப்படுமெனின். இங்ஙனம் ஏற்கக்கூடிய இவைகள், காரணகாரியத் துவிதமென்பதற்கு முரணென்னே? இன்றாகவே, இவைக்ள் என்ன காரண காரியத் துவித மெனப்படும்? பேதகாரண காரியத்துவித மெனப்படுமன்றோ? இஃதிங்ஙனமிருக்க, அறிவினால் விளங்குகின்ற திரிபதார்த்தமும் பொருள்களா? அன்றித் தோற்றன் மாத்திரங்களா? ஏன் இங்ஙனம் கடாவுவதெனின், இப்பிர பஞ்சப் பொருள்களை ஆராயும் வண்ணம் ஆராய்வுழி, ஒவ்வொன்றும் காரணகாரியம் காரணகாரியமாகச் சென்று சென்று, ஈற்றில் இருப் பின்றித் தோற்றன் மாத்திரமாயும் சொன்மாத்திரமாயு முடிகின் றது. இக்கற்பனைகளைக் கொண்டு விபரீத அனுபவானுமான அள வையாலும், தோற்றானுமான அளவையாலும் உளதென்றேற்படும் ஓவேசுரத்துவமும் தோற்ற மென்பது சற்றுமின்றிச் சொன்மாத் திரமாக முடிகின்றன. முடியவே, இம்முப்பொருள்களுள், இப்பிர பஞ்சமானது கயிற்றரவாதிகள்போல் இல்லாமலே தோற்றுகின்ற னவா? அன்றிக் கயிறாதிகள் போல் இருந்து தோற்றுகின்றனவா? இல்லாமலே தோற்றுகின்றதெனின், எதற்குத் தோற்றுகின்றன? தமக்குத்தாமே தோற்றுகின்றதெனின், தமக்கெனப் பொருள் சற் றேனு மிருக்கவேண்டும்! இல்லாமையால், ஓர் சித்துக்குத் தோற்று கின்றதுதானெனின், அச்சித்தானது அறிய இஃது தோற்றுகின்ற தாகின்றது. ஆகின்றதிலும், சித்து இருந்தறிகின்றதும், பிரபஞ்சம் இல்லாமலே தோற்றுகின்றது மாகின்றது. ஆகவே, காரணமென் பது யாது? காரியமென்பது யாது? அறிவே காரணமும், அய லனைத்தும் காரியமு மாகின்றன. ஆயினும், காரணமாகிற அறிவு காரியமாகிற முப்பொருளெனப்படுமா? அன்றிக் காரியமாகிற முப்பொருளும் காரணமாகிற அறிவெனப்படுமா? இரண்டுபட்சமு

மாகாதெனின், இவ்விரண்டும் என்ன துவித மெனப்படும்? பேத காரண காரியத் துவிதமெனப் படுமாகலின், இதற்குச் சற்றும் முரணின்றுமென்க.

இஃது 2-வது விசிட்டாத்துவிதம்.

எங்ஙனமெனின், சேதனு சேதனமாகிய சர்வ தோற்றமும் ஏதனது எனப்படும்? ஷை அறிவினது எனப்படுமெனின், இத் தோற்றங்கள் ஒன்றன்கூட்ட முதலிய விகாரங்களாகலின், குணபேதங்க ளென்பதற்கு முரணென்னை? பிரபஞ்சப் பொருள்கள் ஒன்றன் கூட்டம், பலவின் ஈட்டம், திரிபினுக்கமுடைய விகாரந்தான், சீவேசுர ரிருவரும் விகாரங்களாகுமோ? அதிலும், அவை என்ன விகார மெனப் படுமெனின், வியட்டி சமட்டி உபாதிகுணம் தொழில்களை யன்றி அவ்விருபொருளென்பது ஏது? இருபொருளெனக் கொண்டது இருவித உபாதி குணந் தொழில்களின் சேர்க்கைகளையுமே வெவ்வேறு முதலெனக் கொண்டதனுலென்க. அங்ஙனம் கொண்ட இருமுதலும் ஷை உபாதிகுணம் தொழில்களின் சேர்க்கைக ளாக லின், சீவேசுரத்துவம் பலவினீட்ட விகார மென்பதற்கு முரணென்னை? இம்முப்பொருளும் தோற்றன்மாத்திர மாகலின், இக் குணபேதங்களையுடைய குணிப்பொருள் எதுவெனப்படும்? இருப் பது ஷை அறிவாகலின், அதனை யன்றி வேறில்லையே! அறிவென் பது குணிப்பொருளாயும், அவ்வறிவினது முப்பொருளும் குண பேதங்களாயு மாகின்றன.

ஆகவே, குணபேதங்கள் குணியின்கண் நிகழுகின்றதால், குணி யென்பது வியாபகமும், குணங்க ளென்பது வியாப்பியமு மாகின்றன. ஆகின்றதால், இவ்வியாப்பியமாகின்ற குணபேதங்கள் அவ்வியாபகமாகின்ற குணியில் கூடியிருக்கின்றனவாகலின், இஃது என்ன துவிதமெனப்படும்? கூடியிருக்கும் துவிதமெனப்படுமன் றோ? இத்துவிதத்திற்கு விசிட்டாத்துவித மென்பானேனெனின், இத்திரிபதார்த்தத் தோற்ற வடிவங்கள் வியாபக விளக்கமாகிய அறி வெனப்படாமலும், அவ்வறிவின்கண்ணே நிகழுகின்றமையால் கூடி யிருக்கின்ற தெனவும், இங்ஙனம் கூடியிருக்கும் இம்முப்பொருளாகிற தோற்றங்களும் அவ்வறிவினது அம்சங்களாயும், அவ்வறிவை விட்டுப் பிரிபடாததாயு மிருக்கின்றமையால், அத்துவிதமெனவு மாகின்றன. ஆகவே, இத்திண்ணம் நோக்கி, விசிட்டாத்துவித

மெனப்பட்டதென்க. இங்ஙனமின்றி நானென்னும் போதத்துக்குப் ப்ரமாத்மா வேறு பொருளெனவும், அப்பரமாத்ம வியாபகத்தில் நிகழும் உயிரு முலகமும் அவனது அம்சங்களெனவும், அம்சங்களாயிருப்பதிலும் இவைகள் எதார்த்த சத்துப்பொருள்க ளெனவும், அவன் வைகுந்தத்தில் சின்னங்களோடு திருவுருக்கொண்டு பாகவதாளோடு இருக்கின்றானெனவும், பரிபாகமுற்ற உயிர்கள் விர்ஜா நதிக்கண் மூழ்கி இப்பிரகிருதி சரீரத்தை விட்டு, அப்பிராகிருத சரீரத்தைப் பெற்று அவ்வைகுந்தத்திற் சென்று, ஷை திருவுருக்கொண் டிருக்கும் பகவானுக் கியைந்த சின்னங்களைப்போன்ற சின்னங்களை அப்பிராகிருத சரீரமாகியதாமும் தரிக்கப்பெற்று, சதா அவனது திருநோக்கிற் பட்டுக்கொண் டிருக்கின்றதே முத்தியெனக் கூறுவது விசிட்டாத்துவித மன்றென்பதாமென்க.

### இஃது 3-வது அத்துவிதம்.

நானென்கிற அறிவாகிய வியாபகத்தில், காரிய பேதங்களாயும், வியாப்பிய குணபேதங்களாயும் தோற்றி நிகழும் சிற்சட சீவேசுர சகத்துக்களுக்கு, வியாபகமாகிய அவ்வறிவு என்னவெனப்படும்? காரணமெனவும் குணியெனவும் பொருள்படுமன்றோ? தான் இவ் விரண்டு நிலைமையையு மேற்பது இயற்கையாகவா? அன்றிச் செயற்கையாகவா? இயற்கையாகவேயெனின், இவ்வியற்கை யாதோர் எதுவையு மேலாததா? அன்றி ஏற்றதா? ஏலாததெனின், சீவேசுர கற்பனைகள் காரியபேதத்தையும் குணபேதத்தையும் ஏற்றி யிலங்குவது இயற்கையாகவா? அன்றிச் செயற்கை யாகவா? இயற்கையாகவே யெனின், இவ்வியற்கையை யேற்கும் சீவேசுரசகத் கற்பனைகள் அறிவாகிய வியாபகத்தில் நிகழுவதாயினும், இக்கற்பனைகள் எது? அவ்வியாபகத்தி லெழும் சங்கற்ப மென்னும் நினைவெழுச்சிக ளன்றோ? அந் நினைவெழுச்சியையன்றி ஷை முப்பொருளென்னும் பேதங்கள் எது! உளதெனின், விபரீத அனுபவானுமான அளவையாலும், தோற்ற அனுமான அளவையாலும் கருதுகின்ற கருதுதலையன்றி யுளதெனப் படுகின்றதா! இல்லையன்றோ! ஆகலின், ஷை நினைவெழுச்சியே சீவேசுரத்துவமாமென்க.

அங்ஙனம் கருதுதற் கேதுவாகிய இப்பிரபஞ்சத் தடிப்பும் நினைவெழுச்சியா? அன்றா? அன்றெனின், ஒவ்வோர் நாமரூபமும் ஆராய்வுழி, அன்மை யெனவும் இன்மை யெனவுமாகி, முடிவில்

ஆராய்ந்துவரும் அறிவாய் முடிவானேன்? தனது நினைவே சகமாதிகளாகத் தோற்றுகின்ற தன்றி வேறன்று. இதனால், தன்னையன்றி நினைவென்பதும், அந்நினைவென்பதை யன்றிச் சகமாதிகளென்பதும் இன்றாகலின், இருப்பு யாதெனப்படும்? அறிவாகிய போதமன்றோ? இப்போதத்தை யன்றி அயலென்பது அணுவேனுமுண்டா? இல்லாமையின், அயலிறந்த தானாகிய போதமானது காரணமெனவும், குணியெனவும் எங்ஙனம் பொருள்படும்? இக்காரணமென்பதற்கும், குணியென்பதற்கும் எதிர்மறை யென்பது யாது? காரியமும் குணமுமன்றோ? எந்தக் காரியத்திற்கும், குணத்திற்கும் இப்போதம் காரணம் குணி எனப்படுவது? காரியத்துவத்தையும், குணத்துவத்தையும் ஏற்கும் பொருள் யாது? ஷை சகமாதிகள்தானெனின், இச் சகமாதிகள் தன்னை யன்றி யின்றென முன்னரன்றே முடிந்தாயிற்றே. தன்னை யன்றி யில்லாத சகமாதிகளாலன்றோ தனக்குக் காரணத்துவமும், குணத்துவமும் வந்தன? இங்ஙனமிருக்க, இவ்விரண்டு நிலைமையும் தான் இயற்கையாகவே ஏற்றிருக்கின்றதாகக் கோடல் மயக்க மென்பதாகுமே? ஆகலின், தானாகிய போதம் காரணமும் குணியு மெனப்படுமா? அன்றிக் காரியமும் குணமுமெனப்படுமா? காரணமும் குணியுமெனப் படுமெனின், காரியமும் குணமும் யாதெனப்படும்? அவையும் தன்னையன்றி யுண்டோ? இவ்விரு வகுப்பும் தன்னையன்றி யின்றாயிருக்க, தான் காரணமெனவும், குணியெனவும் படுவானேன்? தனது ஆரோபமாகிய இச் சகமுதலிய காரிய குணபேதத்தைப் பற்றியன்றோ தான் அதிட்டான மெனவும், காரண குணியெனவுமாயிற்று. ஆகவே, தான் காரணகுணி யென்பவற்றை ஏற்றிருத்தல் இயற்கை யெனப்படுமா? படாதன்றோ? படாதாகவே, செயற்கையாக வந்த தென்பதாயிற்று. செயற்கையாக வந்தது சகமுதலிய பொய்களைப் பற்றியாகலின், பொய்களைப்பற்றிவந்த காரணப் பொருளென்பதும், குணிப்பொருளென்பதும், என்னவெனப்படும்? இவையும் பொய்யெனப் படுமன்றோ? படவே, தானாகிய வியாபக விளக்கம் என்னவெனப்படும்? காரணகாரிய ரகிதமும், குணிகுணரகிதமுமாகின்றதன்றோ? அந்தத் தானென்பது அத்துவிதப்பொருளென்பதற்கு முரணென்னை? இவ்வத்துவிதம் என்ன அத்துவித மெனப்படும்? விசிட்டாத்துவிதம், கேவலாத்துவித முதலியவைகளிலொன்றெனப்படுமா? படாததால், இஃது ஏகமேவாத்வைதம் பிர்மோக மென்பதற்குக் கிஞ்சித்தும் ஐயமென்பதின்றாமென்க.

இவ் வத்துவிதப் பொருளையன்றோ ஆன்றோர் பலருள் சிலர் பின்னுள்ளோர் கட்டுப்பட்டு வழிபடுவதற் கியையக் கர்மோபாசிஞ் காண்டங்களைத் தழுவி முன்னிலையாகவும், படர்க்கையாகவுங் கொண்டுத் துதித்தும்; சிலர் தன்மையாகத் தாபித்து மிருக்கின் றனர். " என்னை ?

இஃது முன்னிலை யெனப்படுவது.

தாயுமானவர்.

"அத்துவித வத்துவைச் சொப்பிரகா சத்தனியை
யருமறைகண் முரசறை யவே
யறிவினுக் கறிவாகி யானந்த மயமான
வாதியை யனாதி யேக
தத்துவ சொருபத்தை மதசம் மதம்பெறாச்
சாலம்ப ரகித மான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
சாந்தபத வியோம நிலையை
நித்தநிர் மலசகித நிட்ப்ரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்த மான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராம யத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகு
திவ்வியதே ஜோம யத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலி செய்வாம்." என்றும்,

இஃது படர்க்கை யெனப்படுவது.

ஞானவாசிட்டம்.

"அயனெடுமால் சங்கரனுஞ் சதாசிவனு மிந்திரனு
மருக்கன் முனும்
வியனிலுப சாந்தராம் வேலையினி லுபாதியெலாம்
விட்டு நீங்கிப்
பயனில்சக மென்கின்ற பற்றகன்று சின்மயமாம்
பரம ரூப
மயர்விகற்ப மிலாவடிவா யெங்குநிறை சிவமாகி
யொன்றாய் நிற்கும்." என்றும்,

இஃது தன்மை யெனப்படுவது.

ஸ்ரீபுகீதை மகாவாக்கியம்.

"சத்தியஞா னாநந்தப் பிரம நானே
சமுசார சங்கமிலாப் பிரம நானே
நித்தியநிட் களமான பிரம நானே
நிராகார மானபரப் பிரம நானே
தத்துவமாய்த் தனித்தபரப் பிரம நானே
தான்றானாய் நின்றபரப் பிரம நானே
அத்துவித மானபரப் பிரம நானே
அகண்டபரி பூரணமாம் பிரம நானே." என்றும்

கூறியவாற்றாற் காண்க.

இதுகாறும் துவித முதலியனவாகக் கூறிப்போந்ததனால் என்னை ஆயிற்றெனின் அபுத்தி பூர்வமாகத் தோற்றும் சிவேசுரசகத்தாரோபிதங்கள் ஒருங்கே யொழிதற்கு, இவற்றைச் சிரவணாதிக ளுழைப்பென்னும் புத்தி பூர்வகத்தால், முன்ஞான்று அபேத காரியக் கற்பனைத் தோற்றங்களாகவும், பின்ஞான்று அத்தோற்றங் களைக் குணபேதங்களாகவும், அதன் பின்ஞான்று முடிவில் அக்குண பேதங்களைத் தன்மயமாகவு மாகுமாறு (க)-வது துவிதமாகவும், (உ)-வது விசிட்டாத்துவிதமாகவும், (ங)-வது அத்துவிதமாகவும் தெளிந்து அகம்பொருளாகவே இருக்கின்றதாம். அவ்வகம்பொருள் டை துவிதமுதலிய மூன்றுமாயும், அம்மூன்றும் அல்லவாயு மிருக் கின்றதே இயல்பாமென்க. என்னை?

ஸ்ரீபுகீதை மகாவாக்கியம்.

"எனக்கயலாய்ச் சத்தான பொருளுமில்லை
யெனக்கயலாய்ச் சித்தான பொருளு மில்லை
யெனக்கயலாய்ச் சுகமான பொருளு மில்லை
யெனக்கயலாய்ச் சுத்தமதாம் பொருளு மில்லை
யெனக்கயலாய்த் துவிதமெனும் பொருளு மில்லை
யெனக்கயலா யத்துவிதப் பொருளு மில்லை
யெனக்கயலா யெவையுமிலை யெல்லா நானென்
றித்திறமா முறுதியினாற் சித்தம் வெல்வாய்."

எனக் கூறியவாற்றாற் காண்க.

இஃது இங்ஙனம் நிற்க, முன்ஞான்று ஞானகதப் பிரத்தியட்ச மாதற்கியைந்த சரியை கிரியை யோகமென்னும் மூன்று மிருக்கின்றன வெனக் கூறியவாற்றால், உபாசனைகாண்டச் சரியை கிரியை

யோக மூன்றும் விடயகதப் பிரத்தியட்சத்திற் கியைந்தனவென்
ருகின்றதே! ஆகலின், இவ்விரண்டினது பிரிவுகளைச் சற் றாகிக்கு
தும். எங்ஙனமெனின். உபாசனைகொண்ட நெறிப்படி வழுவறச் செய்
துவரும் சரியையாதி மூன்றினுலு மெய்தும் பயன் மறுமைக்
கண்ணு? அன்றி இம்மைக்கண்ணு? மறுமைக்கண்ணெனின், அம்
மறுமைக்கண் எய்தும் பயன் யாது? சாலோகாதிப் பதவிப்பே
றெனின், அப்பதவிகளில் நாம் என்ன பாவமா யிருக்கின்றது? நாம்
ஒவ்வொருவரும் நானல்லாத நானக இருக்கின்றதா? அன்றி நானே
நானக இருக்கின்றதா? நானல்லாத ஏதோ ஓர் நானகத்தானே
இருக்கவேண்டியது!

அங்ஙனம் நானல்லாத நானக நிற்கும் ஞான்றும் பொருளாப்
பொருளை நாடவேண்டியதுதானே! அங்ஙனம் நாடுங்காறும், வெய்
யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன் வினையினேன்
என்னும் இவை முதலிய இழிந்தோனகத்தானே யிருக்கவேண்டும்?
இங்ஙனமிருக்கு மிழிந்தோன் என்ன இன்பத்தை அனுபவித்துக்
கொண் டிருக்கின்றது? இவ்விகத்திலுள்ள இன்பத்திற்குமேல்
சற்று நீடித்திருக்கின்றதுதானே! நிரதிசயானந்த வாழ்வல்லவே?
அப்பதவியின்பம் சற்று நீடித்ததால் பேரின்ப மெனப்பட்டது.
அப்பேரின்பம் எதன்பாலுளதாக அனுபவிக்கின்றது? அனுபவிப்
பான் நாமரூபமாக நிற்கின்றதால் இந்த உருவபாவப் புருடனுக்கு
இன்பம் உருவ இன்பமாகத்தானே யிருக்கின்றது? தான் அருவ
பாவமாக நிற்பானயின், அருவ இலட்சியார்த்தமும் அருவ இன்ப
மும் வாய்க்கும். அங்ஙன மின்மையால், அஃது உருவ இலட்சி
யார்த்தமும் உருவாநந்தமு மென்பதற்கு மூரணென்னை? இன்றாக
வின், தானும் விடயகதப் பிரத்தியட்ச சொருபி அவ்வின்பமும்
விடயகதப் பிரத்தியட்ச சொருபமாகலின், இப்பேறுக் கியைந்த
சரியையாதி மூன்றும் யாதெனப்படும்? மேற் கூறியவாறே விடய
கதப் பிரத்தியட்சத்திற் கியைந்ததாமென்க. ஞானகதப் பிரத்தி
யட்சத்திற்கியைந்த சரியை கிரியை யோகமென்னும் மூன்றினையும்
சற்றாகிக்குதும்,

அம்மூன்றனுள் இஃது 1-வது சரியையெனப்படுவது.

எங்ஙனமெனின், தேகோகமென்ப திருத்தலினல் இதைப்பற்றி
அகமெனவும், புறமெனவும் வந்திருக்கின்றன. அகமென்பது உள்
ளிடமும் புறமென்பது வெளியிடமு மாகின்றன. ஆகவே, அகத்

துள் சீவாந்தக்கரணேந்திரியமும் புறத்துள் சகபரமு மாகின்றன. பரமென்பதைப் புறத்தது என்பானேனெனின், அநுமான அளவையால் கணிக்கின்றதாகலி னென்க. அகத்துச்சேட்டைக் கியைந்த வை சீவாந்தக் கரணேந்திரியங்களும், புறத்துச்சேட்டைக் கியைந்த பரமும் சகமும் என்னு மிவையனைத்தும் கற்பிதப் பொருள்களா? அன்றி எதார்த்தப் பொருள்களா? எதார்த்தப் பொருள்களெனின், இவைகள் எதார்த்த மெனப்படுவது சத்தாகத் தோற்றுவதனாலன்றோ? நாம் சத்தாகப் பார்ப்பதனால் அங்ஙனம் தோற்றுகின்றனவா? அன்றி அவைகளின் இயல்பே அங்ஙனமா? அவற்றின் இயல்பே அங்ஙனந்தா னெனின், அவற்றின் இயல்பே அங்ஙனந்தானென்ன யாதினாலேற்கின்றது? துய்த்தல் துஞ்சல் முதலிய அநுபவங்கள் விடாதிருக்கின்றதா லெனின், எதார்த்தானுபவ மெனவும், விபரீதானுபவ மெனவு மிரண்டிருக்கின்றதால், இவை என்ன அநுபவத்தை யுடையன. எதார்த்தானுபவ முடையன வெனின், விபரீதானுபவத்திற் கியைந்தவை யென்பமே! கூடாதெனின், இஃதுங் கூடாதென்பமே! இதற்கென் செய்குதும்! இஃது ஐயமயமன்றோ? இவ்வைய மகறற்கு என்ன வேண்டுவது? ஆராய்ச்சி வேண்டுவதன்றோ? இவைகளை ஆராயுஞான்று யாதாய் முடிகின்றது? கயிற்றரவாதிபோல் பிராதிபாஸிகசத்தாயும் கனக்காட்சிகள்போல் வியவகாரிக சத்தாயு முடிகின்றதால் இவைகள் சத்தாகத் தோற்றுவானேன்? சத்தாகப் பார்ப்பதனாலன்றோ? சத்தாகப் பார்ப்பது எதுகாறுமோ அதுகாறும் சத்துப்போலவே தோற்றுகின்றதால், நாம் பொருளைப் பொருளாகக் கண்டுணர்வது எஞ்ஞான்றோ? இவை யனைத்தும் சொல்மாத்திரமாயும், தோற்றல்மாத்திரமாயும் காணப்பட்டுக்கொண்டிருந்தாலன்றோ இவற்றை நாடும் நமது நாட்டம் வேறுபடும்? இவை யனைத்தும் தோற்றுங்காறும் தோற்றன்மாத்திரமாகத் தோற்றுதற்கும், இவற்றை நாடும் நமது நாட்டம் வேறுபடுகிறதற்கும் நாம் என்ன செய்துகொண்டிருக்கின்றது? காரணகாரிய முதலிய நெறித்தாகக் கணஞான்றும் மாறாது ஆராய்ந்துகொண் டிருக்கவேண்டுமன்றோ? இஃதல்லவோ பரிபாகிகளுக்கான உழைப்பெனப்படுவது? இங்ஙனம் விடாதுழைக்கும் உழைப்பே வை ஞானகதப் பிரத்தியட்சமாதற் கியைந்ததாகலின், இஃது சரியை யெனப்படுவதற்குக் கிஞ்சித்தும் முரணின்று மென்க.

இஃது 2 வது கிரியையெனப்படுவது.

எங்ஙனமெனின், சரியை யென்கிற இவ்வுழைப்பானது பன்ஞான்றும் சிறுகச் சிறுக முதிர்ந்துவந்த முதிர்ச்சியினால், இச்சீவேசுர சகத்துக்கள் மித்தையானுபவப் படுமன்றோ? இம்மித்தையாந் தோற்றமும், மித்தையானுபவமும் யாதுக்கெனப்படும்? ஆங்காங்கு மிருப்பது நானென்பதாகலின் அந்நானென்பதற்கன்றோ? அந்நானென்பதற்குப் பரிபாகம் வந்துழி இம்மித்தையானுபவம் வேண்டுவதன்றோ? அன்றாயின், வேண்டுவது யாதெனப்படும்? சத்தானுபவமன்றோ? அச்சத்தானுபவம் யாதெனப்படும்? நானென்கிற ஸ்புரிப்பை யன்றி அயலென்பது அணுத்துவமுமில்லையே? இல்லாதுழி, நானென்னும் போதமன்றோ சத்தென்படுவது? அச்சத்தானுபவமன்றோ சுகானுபவ மென்பது? நானென்பதற்குச் சுகானுபவம் வேண்டுதலின் தனக்குத்தா னெட்ட வேண்டு மன்றோ? அங்ஙனமெட்டுதற்குத் தான் என்ன செய்ய வேண்டியது? நானென்ப தல்லாதவைகள் நானாகக் கற்பனைகளாகவேனுந் தோற்றுந்தோறும் நானன்று நானன்றென நியதி களைந்துகொண் டிருக்கவேண்டுமன்றோ? இவ்வுழைப்பு வேண்டுவதின்றெனின், நானல்லாத உபாதித்திரயம் அவத்தைகடோறும் நான் நானெனத் தோன்றாதிருக்கட்டும்!

அன்றியும், அவற்றை நானென மருவாதிருக்கட்டும்! மேலும் நானென்பது என்ன நிலைமைத்தா யிருக்கின்றதென எக்கிருத்தியங்களிலும் நான் நானெனத் திடங்கொண் டிருக்கின்றனம்? அஃது தோன்றாமல் நான் நானெனக் குளறுதலெல்லாம் வெட்க மில்லாமையாக்கும்! இவ்வெட்க மில்லாமையை எஞ்ஞான்று மேற்கொண்டிருக்கினும், தனக்குச் சுகவாழ்வு வேண்டுகோளாகலின், நானென்னும் போதப்பொருள் சமாதிக்கண் இலட்சியார்த்தானுபவ மாகுங்காறும்.

"நோக்கா நோக்கை நோக்க நோக்க
நோக்கா நோக்கம் நோக்கு மன்றே"

என அறிஞர் திருவாய்மலர்ந் தருளியவாறு, நாம் ஞேய கற்பனைகளைக் களைந்து களைந்து, எது நான் எது நானென இடையறாது நோக்கும் நோக்கமாகிய இவ்வரிய உழைப்பே ஞானகதப் பிரத்தியட்சமாதற் கிணையர்ந்ததாகலின், இஃது கிரியை யென்பதற்குக் கிஞ்சித்து முர ணின்றாமென்க.

இஃது 3-வது யோகமெனப்படுவது.

எங்ஙனமெனின், தனதெதார்த்த வடிவை இது நான் இது நானெனக் கண்டு சுகித்தற்கு எது நான் எது நானென மிக்க வெறி கொண்டு நோக்கினும், அந்நிலை விரைவில் எட்டிவிடுமா? அங்ஙனம் பன்னாளும் பழகவேண்டுமா? சின்னாளு போதுமா? அதி தீவிரதர மேலிட்டிருக்கின்றதால், இதுகாறு முறைத்தும் வெளிப் படவில்லையே யென்னும் ஆராமை மேலிட்டு வருமன்றோ? அஃது மேலிட்டால் ஷை நோக்கம் அயர்வுறு மன்றோ? அவ்வயர்வால் தனது நாட்டம் பகிர்முகப்படுமன்றோ? படுங்கால், முன்னாளு இது நானன்றிது நானன்றெனக் கழிக்கப்பட்ட உருவாருவ முதலிய கற்பனைகள் முன்போற் றோற்றுமன்றோ? தோற்றினும் அவ்வப் பாவங்க ளாதற்கியையுமோ? இயையாதுழி, மீண்டும் எது நான் எது நானென எட்டவேண்டி வருமன்றோ? அங்ஙனம் நோக்கினும் நெடுங்காற் பழக்க முதிர்ச்சி யில்லாமையின், அப்போதமாகிய நிலை விரைவில் வெளிப்படாதன்றோ? அஃதும் வெளிப்படாமலும், பகிர்முகத்ததாகிய ஷை நாமரூபபாவ மாதற்குங் கூடாமலும், இரு தலைக் கொள்ளியி லகப்பட்ட எறும்பு போன்று மிகுதியான இடுக்க ணுறவேண்டி வருமன்றோ? அவ்விடுக்கணால் தான் நீடித்தயர்வுறு விடினும், மேல் நோக்குக்கு இடையிடையேனும் அயர்வுற வேண்டி வருமன்றோ? அவ்வயர்வு சாக்கிர மெனப்படுமா? அன்றிச் சுழுத்தி யெனப்படுமா? சுழுத்தியெனப் படுமெனின், சூனியமாகிய மக்கனு நந்தமெனப்படும். சாக்கிரமெனப்படுமெனின், நாமரூபபாவ மெனப் படும். இந்நிலை நனவோடு திகைப்புண் டிருத்தலின், மேலுறும் துரியாவத்தையாகிய சத்பாவமும், கீழுறும் அவத்தாத்திரய முதலி யனவாகிய அசத்பாவமும், கிஞ்சித்து மின்றித் தற்பிரத்தியட்சானு பவம் வாய்த்தற்குச் சமீபித்திருக்கின்றதாகலின், இஃது என்னநிலை யெனப்படும்? நனவிற் சுழுத்திநிலை யெனப்படுமன்றோ?

அன்றியும் இஃது மத்தியகத நிலைமையுமாகலின், ஷை ஞான கதப் பிரத்தியட்சத்திற் கியைந்த யோகமென்பதற்குக் கிஞ்சித்தும் முரணின்றுமென்க. உபாசனகாண்ட முதிர்ச்சியாகிய யோகமானது, கரணேந்திரிய விடயப்பகுதிக ளனைத்து மொடுங்கியவிடத்து உதய மான சுகமயமாகிய பிரமானுபவ தெரிசனத்தில் உறைகின்றதா யிருக்க, அவ்வரிய நிலைக்கு இந்நிலை மேலிட்ட தென்னலாமோ வெனின், அந்த யோகானுபவம் தற்பாவமா அதாவது நானென்னும்

போதத்தின் பாவமா? அன்றி எதார்த்தமா? எதார்த்தந்தானெ னின், அகத்தும் புறத்தும் காணப்படுவனவாகிய ஜீவேசுர சகத் தாகிற சர்வமும், ஷை போதத்தின் பாவமன்றி யிருக்கின், ஆங்கு விளங்கும் பிரமசுகானுபவமும் வேறாக இருக்கலாம். ஈங்குக் கற்பனை களாகிற சர்வத்தையும் போலிச் சத்தெனத் தெளியாது, எதார்த்தச் சத்தென மயங்கிய மயக்கமானது, அந்த யோகநெறிக்கு ஆதியிலே னும், அந்தத்திலேனும், இடைக்கண்ணேனும் விட்டதா? மூன்றி டத்தும் விட்டதன்றே! இறுதிக்கண் விளங்கும் ஷை அனுபவம் இம் மயக்கானுபவமன்றோ? ஆங்கு அங்ஙனம் விளங்குவதும் நானென்பதுதானே! ஈங்கு சர்வ நாமரூபங்களாக விளங்குவதும் நானென்பதுதானே! இம்மயக்கமாகிய சுகானுபவந்தான ஷை நன விற் சுழுத்தியில் நின்று துரியாவத்தா சத்பாவமாய்த் தெளிகின்றது? அச் சத்பாவத் தெளிவுக்குச் சுசாதி விசாதி சுகதபேத மென்னும் வத்து பரிச்சேத மென்பதுண்டா? அதுவன்றோ ஞானகதப் பிரத்தி யட்சானுபவமென்பது? முன்ஞான்று கூறிய அருள் ஞானமாகிய துவிதமே போலி ஞானமாய் முடிந்திருக்க, முழுமயக்கமாகிய யோகானுபவந்தான ஷை ஞானகதப் பிரத்தியட்சத்திற் கியைந்த அடுத்த சோபானமெனப்படும்? அல்லவே! அதற்கியைந்த அடுத்த சோபானமென்பது ஷை நனவிற் சுழுத்தியாகலின்,

சசிவர்ணபோதம்.

"வினைவிற் பரத்தையறி வுறுதற் கவத்தைபுலன் வினைமாறியே
நனவிற் சுழுத்திநிலை வரினப் பொருட்டிகழு நலனுகவே."

எனக் கூறியிருக்கின்றதறிக. உபாசனகாண்டச் சரியை கிரியை யோக மூன்றும் ஞானத்துக் கியைந்த சாதனங்களாயிருக்க, இவற் றைப் பிரித்து வேறு சரியையாதிக ளிருக்கின்றனவாகக் கற்பித்துக் கூறுவது முறைமையோ வெனின், சாதன சதுட்டயம் ஷை ஞானத் துக்கு நேர் அடுத்த சாதனமா யிருக்க, அச்சரியையாதிகள் அடுத்த தெனக் கூறுவானேன்? அச்சாதன சதுட்டயம் சரியையாதி மூன்றி னுக்கும் நேர் அடுத்த சாதனமும், இச்சரியையாதிகள் ஷை ஞானத் துக்கு நேர் அடுத்த சாதனமுமா யிருக்கின்றதே யெனின், அச் சாதன சதுட்டயத்துள்,

1-வது, நித்தியாநித்திய வத்து விவேகத்தைச் சற்றாகிக்குதும். எங்ஙனமெனின், நித்தியமென்பது சதாஞான்று மாறாதிருத்தலா? அன்றி மாறிக்கொண் டிருத்தலா? மாறாதிருக்கின்றதாமெனின்,

அங்ஙன மாறுதிருத்தல் கயிறுதிகளைப்போலவா? அன்றி அரவாதிகளைப்போலவா? கயிறுதிகளைப் போலவெனின், அந் நித்தியத்துக்கு எதிர்மறையான அநித்தியமென்பது எங்ஙன மிருக்கவேண்டியது? ஷை சதுர்ஞான்றும் மாறுதலை யுற்றிருக்க வேண்டியதன்றோ? அம்மாறுதலை யுற்றிருத்தல் ஷை அரவாதிகளைப்போலவா? அன்றிக் கயிறுதிகளைப் போலவா? அரவாதிகளைப்போலவெனின், இதனால் நித்தியமென்பது என்றும் சத்துப்பொருளாயும், அநித்தியமென்பது என்றும் அசத்துப் பொருளாயு முடிந்தன. முடியவே, சத்தாகிய நித்தியப்பொருள் யாது? அசத்தாகிய அநித்தியப் பொருள் யாது? வியட்டி சமட்டி அவத்தாத்திரய முதலியவைகட்கு ஆதார விளக்கமாயும், சாட்சியாயுமிருக்கும் போதமே நித்தியமும், அவ்வவத்தாத்திரய முதலிய சர்வமும் அநித்தியமு மாகின்றன. ஆகிய இவ்விரு தன்மையையும் வேத முதலிய சதுர்த்தச சத்பிரமாணங்களாலும் தேர்ந்த தேர்ச்சியன்றோ நித்தியாநித்திய வத்து விவேக மெனற்பாலது? இவ்விவேகமன்றோ ஷை அநித்தியங்களாயுள்ளவற்றின் காரணமாக வாய்க்கும், இக சுவர்க்காதி பதவி பேறுகளிலும் கான்றசோற்றைத் திருட்டிப்பதுபோல் திருட்டியுற் றிருக்கும், இக முத்திரார்த்த பலபோக விராகமென்னும் இரண்டாவது சாதன மெனற்பாலது? இவ்விரண்டு சாதனமும் வாய்த்த பின்ஞான்றன்றோ சமாதி சட்க சம்பத்தென்னும் மூன்றும் சாதனம் வாய்க்கின்றது? அதாவது சமம் தமம் திதீக்கை உபரதி சமாதானம் சிரத்தை என ஆறும். அவற்றுள்,

1-வது, சமமென்பது—இம்மை மறுமைக்கண் எவ்வெவ் விடயத்தில் பழக்க வாசனையால் ஏகதேசமாக அவா வெழுகின்றதோ அந்நெறித்தாக மனம் செல்லாதிருக்கக் காத்தலும்,

2-வது, தமமென்பது—புறக்கரணங்கள் பழக்க நெறியிற் செல்லாதிருக்கக் காத்தலும்,

3-வது, திதீக்கை யென்பது—மாறிமாறி வரும் இன்ப துன்ப வசமுறா திருத்தலும்,

4-வது உபரதியென்பது—கிரகாச்சிரம மாகவேனும், துறவாச்சிரம மாகவேனு மிருக்கினும், அதற் கியைந்த விவகாரங்களை நாளுக்குநாட் சிறுகச்சிறுகச், சுருங்குமாறு செய்துகொண்டிருத்தலும்,

5-வது, சமாதானமென்பது—அரிய ஆப்தர்பால் ஆத்மானுத்ம சிரவணம் விடாது செய்து செய்து, அதனாற் றேர்ந்த ரசங்களை யெல்லாம் விடாது மனனித்துக்கொண் டிருத்தலும்,

6-வது, சிரத்தை யென்பது—ஷை ஆப்தரிடத்தும் சத் பிரமாணங்களினிடத்தும் அகலாத அன்புடைமையும், அச்சமுடைமையும் வைத்திருத்தலுமாமென்க. இச்சாதனம் முதிர்ந்த பின்ஞான்று வாய்ப்பது, ஒருவன் தனது சிரத்திற் றகிக்கும் அழலைைத் தணிப்பான் வேண்டிச் சலத்தை அதிகவிரைவிற் றேடுவான்போல், இத் தேகோகத்தால் வரற்பாலன வாகிய தாபத்திரயாக்கினி தகிக்கும் தகிப்பைத் தணிப்பான் வேண்டி அதிகவிரைவில் தனதுபோத சொரூபமாகிய தீர்த்தத்தை விளக்கிவைக்கும் கண்ணுடையான் எங்குளன் எங்குளனென்று, கடலில் திசை தப்பித் திகைத்தலையு மாலுமிபோல் துடி துடித்துத் திகைதிகைத்து அலையு மதிதீவிரதர மாகிய முமூட்சுத்துவமென்னும் நான்காவது சாதனமாமென்க. இம் மகத்தாகிய நான்கு சாதனங்களுமா ஷை உபாசனகாண்ட வொழுக்க மாகிய சரியை கிரியை யோக மூன்றுக்கும் நேர் அடுத்த சாதனங்களெனப்படும்? இஃது விந்தையினும் மிக்க விந்தையாக்கும்! ஏனெனின், பொருளல்லவற்றைப் பொருளென மயங்காதுழி, இச்சரியையாதி மூன்றும் நிகழுமா? அவை நானல்லாததை நானெனவும் என தல்லாததை எனதெனவும் கொண்டிருத்தல். சரியையாதி மூன்றினையும் மயக்க மென்னலாமோவெனின், மூர்த்தி தலம் தீர்த்தங்களில் முறையா யனுட்டிப்பது எவற்றை? பாஞ்சபூத விகாரங்களையெனின், இக்கிருத்தியங்களன்றோ சரியை யெனப்படுவது? பின்னர் எவற்றை உபாசனு மூர்த்தங்க ளெனக்கொண்டு கிரியாபூசை மானதபூசையாக உபாசித்து வருதல்? பாஞ்சபூதத்தின் விகாரங்களையு மெனின், அதன் பின்னர் யோகமென்பது அரிய சாதனமாயினும், அதில் விளங்கிய விளக்கம் அறிவானுடைய பாவனையாகின்றதே! அப்பாவனை கற்பனையென்பதன்றோ? இச்சரியையாதி மூன்றனையும் கற்பனைகளை மெய்ப்பொருள்க ளெனக்கொண் டுழைப்பதற்கா ஷை மகத்தாகிய சாதன சதுட்டய முன்பு வேண்டியது? கர்மோபாசனைகள் யாதுக்கு வேண்டியது? உயிர்கள் தேக யோகத்துக்கே அங்காத்திருத்தல் இயற்கையாகலின், தத்தம் இட்டப்படியே திரிந்துழலுவது தவிர்ந்து, விதிவிலக்கின்படி கட்டுண் டொழுகுதற்குக் கர்மகாண்டமும், அதில்

முதிர்ந்த பின்ஞான்று, அஃது தேகபோகத்தால் நிகழும் யானெனை தென்னும் அகமமதைகள் குன்றித், திரிகரணங்களும் கட்டுப்பட்டிருத்தற்குச் சரியையும், இஃது முதிர்ந்த பின்ஞான்று, அங்ஙனம் கட்டுப்பட்ட திரிகரணங்களும் ஒருங்குபடுதற்குக் கிரியையும், அங்ஙன மொருங்குபட்ட திரிகரணங்களுள் மனமானது ஒடுங்கி யிருத்தற்கு யோகமும் கற்பித்திருக்கின்றன. இவை முதிர்ந்த பின்ஞான்றன்றோ நித்தியாநித்திய வஸ்துவிவேக முதலிய மகத்தான சாதனங்கள் வேண்டியது? இவை முதிர்ந்த பின்ஞான்று என்ன செய்ய வேண்டியது? நிட்டைகூட வேண்டுவதன்றோ? அதாவது சர்வமும் தோற்றன் மாத்திரமாக விளங்கச் செய்வதும், பின்னர் எது நான் எது நானெனை நோக்குதலும், அதன் பின்னர் நனவிற்சுழுத்தி யெய்துதலுமா மென்க. இதுகாறுங் கூறிப் போந்ததனால் என்ன ஆயிற்றெனின், சாதன சதுட்டயம் சரியையாதிகள் வாய்த்தற்குச் சாதன மன்றெனவும், அச் சாதன சதுட்டயம் வாய்த்தற்குச் சரியை கிரியையாதிகளே சாதன மெனவும், சாதன சதுட்டயம் ஞானத்துக்கே இயைந்த சாதனமென்வு மாயிற்றென்க. இது நிற்க.

சர்வமும் மித்தையாக்குதன் முதலியவற்றைச் சரியைகிரியை யோகமெனக் கற்பித்துக் கூறலாமோ வெனின், அங்ஙனம் மித்தையாக்குதன் முதலிய உழைப்புகள் மனத்தின தாயினும், மித்தையாகத் தோன்றுமாறு செய்தல் தூலவிருத்தி யுழைப்பாயும், அகமுகமாகத் தன்னை இடையறாது நோக்கமுற்றிருத்தல் சூக்குமவிருத்தி யுழைப்பாயும், இவ்விரு விருத்தியு மின்றி நனவிற் சுழுத்தியுற்றிருத்தல் நிருபாதிக விருத்தி யுழைப்பாயு மிருத்தலினால், இவற்றை அங்ஙனம் கூறவந்ததா மென்க. இவை எதுபோ லெனின், எல்லாமாயும் அல்லவாயு மிருக்கும் சாட்சி சைதன்னியமே போதமெனத் தேர்ந்து, சதோதயமாகவொளிரும் விளக்கமே கர்மோபாசனாகாண்டங்களுள் வழங்குவனவாகிய தீர்த்தம் ஸ்நானம் மந்திரம் தர்ப்பணம் ஓமம் முதலியவைகளெனக் கூறியதுபோலா மென்க. என்னை?

சிபுகீதை மகாவாக்கியம்.

"அகம்பிரம நிச்சயமே தானமற்று
மகம்பிரம நிச்சயமே மந்திரங்கா
ணகம்பிரம நிச்சயமே தருப்பணமற்
றகம்பிரம நிச்சயமே யோமமென்றா

வகம்பிரம நிச்சயமே மற்றுமுள்ள
வறங்களெலா மாதலினுன் முமுட்சுவானோ
ரகம்பிரம நிச்சயமே யிடைவிடாம
லனவரத மாதரவாய்ப் பழகல்வேண்டும்.'' என்றும்,

"இவ்விதமே பரமசிவ னிசைத்தவண்ண
மீனமிலாத் தானமுத லோமமீருய்ச்
செவ்வியதாம் பொருளையெலாஞ் செப்பினேனுன்
செப்பியதி லையமில சத்தியந்தான்
றிவ்வியமாய் நிறைந்தெங்கு நின்றவீசன்
றிருப்பாதந் தன்னுணை யுரைத்ததுண்மை
யவ்விதமா யிப்பொருளை யொருக்காலேனு
மன்புடனே கேட்டுணர்வோன் பிரமமாவன்.'' என்றும்

கூறியவாற்றுற் காண்க.

இதுகாறும் கூறிப்போந்ததால் கர்மோபாசனை யிரண்டும் உள்ள படியே வழிபடுதற் கியைந்ததெனவும், அவை வாய்த்துழி ஞானச் சரியையாதிகளும், அவை நிலைத்துழிச் சொரூப நிட்டையும், அது நிலைத்துழிச் சகச நிட்டையும், அது முதிர்ந்துழித் தானேதானுகிய ஏகமேவாத்வைதம் பிர்மோகமாமென்க.

## வேத வேதாந்த விசாரம்.

எங்ஙனமெனின், வேதாந்த மென்புழி அஃது வேதத்தின் அந்தமெனப் பொருள்படுகின்றது. அந்தமென்பதொன் றிருக்கின்ற தால், அவ்வேதத்தின் ஆதியென்பதொன் றிருக்கவேண்டுமே! ஆகலின், அவ்வந்த மென்பதும் ஆதியென்பதும் யாதெனப் படுமெ னின், அந்தமென்பது பொருளென்பது பொருளாக விளங்குவதும், ஆதியென்பது பொருளல்லவை பொருளாக விளங்குவதுமாமென்க. பொருளென்பது சச்சிதாநந்த மயமாயுள்ள அகம்பொருளும், பொரு ளல்லவை யென்பது அசந்துசடதுக்க மயமாயுள்ள சீவேசுர சகத் துக்களுமாம். இவற்றால், அவ் வகம்பொருள் அதிட்டானமும், இச் சீவேசுர சகத்துக்கள் ஆரோபிதமுமாம். இவ்விரண்டிற்கும் வேத மாதா மத்தியகதமா யிருக்கின்ற தாகின்றது. இங்ஙன மிருக்கும் அம் மாதா கருணையுடையா ளாகலின் அக்கருணை அபக்குவர்கள் வழிப்படவேண்டு மென்பதா? அன்றித் தெளிந்திலங்கவேண்டுமென் பதா? தெளிந்திலங்கவேண்டு மென்பதெனின், பரிபாகிகள் அங் ஙனம் விளங்க வேண்டுமென்பது கூடாதாக்கும்! அங்ஙனமன்று,

ஷை அபக்குவிகள் வழிப்படுதற்கே அக்கருணையுற் றிருக்கின்ற தெனின், வழிப்படுதலாவது அவ்வுயிர்கள் போகதாகம் இயற்கை யாகவே யுற்றிருக்கின்றனவாயினும், இராகாதி துர்க்குணமுதலிய துராச்சார வொழுக்கங்கள் குன்ற அறநெறியிற் கட்டுப்படுதலும், அக்கட்டு நிலைத்த பின்னொன்று அப்போகங்களில் மிதப்புற்று, யான் எனதென்னும் அகமமதைகள் குன்றிச் சுதந்தர ஈனத்துவம் வாய்க்க, அடிமையாக நின்றொழுகுதலுமாம். ஆகலின் இவ்விரு நெறிகளையும் அவ்வுயிர்கள் பற்றுதற்குக் கர்மோபாசனகாண்டமிரண் டையும் அவ் வேதமாதா ஊட்டவந்தது, முதற்கண்ணெனப்படுமா? அன்றி இறுதிக்கண்ணெனப் படுமா? முதற்கண் ணெனப்படு மெனின், இறுதிக்கண் அவ் வேதமாதா யாது செய்ய வேண்டியது? முன்னொன்று கர்மோபாசனைகளால் வழிப்பட்ட உயிர்கள், சாதன சதுட்டயப் பரிபாகம் வந்துழி, பின்னொன்று யானார் என்னுள்ளமார் என் ஞானங்களார் என்னை யாரறிவாரெனப் பன்னொன்றும் ஆராய்ந்து ஆராய்ந்து தனது அதிட்டான போதத்தை ஐயந்திரிபற எட்ட வேண்டியது அவசியமாகலின் அதற்கு ஞானகாண்டத்தை ஊட்ட வேண்டுமன்றோ? இங்ஙன முணர்த்தப்பட் டிலங்கும் ஞானகாண் டம், அவ்வேதத்தின் அந்தமென்பதா? அன்றி ஆதியென்பதா? அந்தமென்ப தாகலின், ஆதியென்பது எவையெனப்படும்? ஷை கர்மோபாசனைக ளன்றோ? இதனால் இவ்விரு காண்டமும் ஆதியென் பதற்கு முரணின்றாமென்க.

அன்றியும், இவ் வேதமாதா முதற்கண் கர்மகாண்டத்தையும், இடைக்கண் உபாசன காண்டத்தையும், இறுதிக்கண் ஞானகாண்டத் தையும் பயனாக உணர்த்தியிருக்கின்றதென்க. அவ்வக்காண்டப் பயனும் எதெதுமுதல் எதெதுகாறும் நிகழ்கின்றதெனின், கர்மகாண் டப் பயன் வேதமாதாவின் நாபித் தானத்திற்குக் கீழுற்றிலகும் சொர்க்கலோக பரியந்தமும், உபாசனகாண்டப்பயன் அந்நாபித் தானத்திற்கு மேலும், கண்டத் தானத்திற்குக் கீழுமுற் றிலங்கும் பிரமலோக பரியந்தமும், ஞானகாண்டப் பயன் அக்கண்டத் தானத் திற்குமேல் சிரத்தான பரியந்தமுமாமென்க. இம் முக்காண்டங்களுள் உபாசன காண்டம் ஞானகாண்டத்தோடு சேர்ந்த உத்தர மீமாம்சை யெனப்பட்டதா? அன்றிக் கர்மகாண்டத்தோடு சேர்ந்த பூர்வமீமாம் ஸை யெனப்பட்டதா வெனின், அவ்விரண்டு காண்டங்களில் ஒன்றி னோடும் சேராது மத்தியகாண்டமா யிருக்கின்றதாமென்க.

எங்ஙனமெனின், கர்மகாண்டம் இராகாதி துர்க்குண முதலிய துராச்சாரங்கள் குன்றியதாயினும், நான் எனதல்லாததைக் கர்த்தத்துவம், போக்தத்துவமாக மயங்கி யொழுகுகின்றதுபோல் இஃது இன்றாகலின் பூர்வமீமாம்சையும், ஞானகாண்டம் சர்வம் மித்தை, சர்வம் பிரமம், சர்வம் நான் எனத் தெளிந் திலங்குகின்றதுபோல் இன்றாகலின் உத்தரமீமாம்சையு மெனப்படாது, நானென்ப தல்லவற்றை நானென மயங்கி அடிமையெனவும், நீயென்பதல்லவற்றை நீயென மயங்கி ஆண்டானெனவும் நிகழுகின்றதால், உபாசனகாண்டம் இவ்விரண்டு பட்சமு மன்றென்பதா மென்க. இங்ஙன மிருக்கினும் இவ்வுபாசனகாண்டம் ஞானத்துக்குச் சமீபமன்றோ வெனின், இவ்விரண்டுக்கு மிடைக்கண்ணுள்ள சாதன சதுட்டயமின்றி இஃதிருக்கின் சமீபமென்பதற்கு முரணின்று. ஆகலின், அச்சாதன சதுட்டயம் வாய்த்தற்குச் சமீபமே யன்றி வேறன்றென்க. இவ்வுபாசன காண்டம் உத்தர மீமாம்சையென வழங்குவானேனெனின், கர்மகாண்டத்தில் யான் எனதெனக்கொண்ட கற்பனைகளை மித்தையாக்கிப் பின்னர்ச் சிவமாக்கி அதன்பின்னர்த் தானாக்கித் தெளியாது, அக்கற்பனைகளைப் பொருளாகக்கொண்டு மயங்கி யிருக்கினும், அவைகள் தன்னு ளுபாசிக்கப்படும் உபாசன மூர்த்தியதெனத் திடமுற்று, அத்திடத்தால் சுதந்தர ஈனத்துவமும், அதனால் போகதிருட்டி குன்றுதலு முற்றிருத்தலினாலென்க. இங்ஙன மிருப்பதால் முழுவதும் உத்தரமீமாம்சை யெனப் படாதோவெனின்,

குறள் மகாவாக்கியம்.

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு."

என்னு திருக்கட்டுமே! ஆகலின், உத்தரமீமாம்சைக்கு முற்றும் ஒத்ததன்றென்க. கிஞ்சித்தேனும் ஒத்திருக்கின்றதால், இஃது வேதாந்தமெனப் படாதோவெனின், இவ்வுபாசனகாண்டம் அல்லவற்றை ஆண்டான் அடிமை யென்னுது தானே தானாகிய உபாசாந்த நிலையை எடுத்துணர்த்த வேண்டுமே! அங்ஙன முணர்த்துவது இரண்டு காண்டங்களுமன்றென்க. ஞானகாண்டம் ஒன்றேயன்றி ஏனைய இருகாண்டங்களுமன்றென்க. ஞானகாண்டம் வேதவேதாந்தத் தீர்ப்பென்பதுதான் யாதெனின், ஞானகாண்டம் வேதத்தின் அந்தமும் மற்றிரண்டு காண்டங்களும் அவ்வேதத்தின் முதலுமாமென்க. கர்மோபாசன ஞானமென்னும் இக்காண்டத்திரயம் ஒன்றுக்கொன்று பூர்வபட்சமும், சித்தாந்த பட்சமுமா யிருத்

தலால், வேதத்தில் முதற்கண் கூறப்பட்ட இரண்டு காண்டமும் வழிபடு மார்க்கமும், அவ்வேதத்தின் இறுதிக்கண் கூறப்பட்ட ஞான காண்டம் தெளிந்திருத்தற்கு மார்க்கமுமா யிருக்கின்றமையால்,

கைவல்லிய நவநீதம்.

"சீவ பேதங்க ளளவிலை மைந்தனே செய்கையு மளவில்லை
யாவ வாமவ ரவரதி காரங்க ளறிந்துபக் குவநோக்கிப்
பூவ லர்ந்துபின் பலன்கள்காட் டுவனபோற் பூருவஞ் சித்தாந்தங்
காவல் வேதங்க ளிரண்டையும் வசனிக்குங் காண்டமூ வகையாலே.

எனக் கூறியிருப்பதை யுணர்க.

இவை அறம்பொருளின்பம் வீடெனப்படுவது.

நூற்பயனென வழங்கும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கும் காண்டத்திரயத்துள் எதற்கியைந்ததெனின் அம் மூன்றுக்குமே இயைந்தன. அவை:—

முதலாவது கர்மகாண்டத்துள்.

க-வது, அறமென்பது—குடும்பத்தில் நின்று விரக்தியுற்று அகன்று தனிப்பட் டொழுகும் துறந்தார்க்கும், அங்ஙனம் தனிப் படாது வறுமையுற் றொழுகும் துறவாதவர்க்கும், இவ்விருவருள் காலவரையறைப்படிநின் றிறந்தார்க்கும் கிஞ்சித்தும் பின்னிடாது அவரவர்க்கும் தக்கவாறு இயன்றமட்டும் உபசரித்தலும்,

உ-வது, பொருளென்பது—இங்ஙனமாகிய நெறிக்கணின்று, கிஞ்சித்தும் அகலாது இம்மைக்கண் புகழும், மறுமைக்கண் சுவர்க் கப் பேற்றையும் குறைவறச் சம்பாதித்தலும்,

ந-வது, இன்பமென்பது—இவ்விரு தவமும் வழுவற முதிரு மாறு நன்னெறிக்கண் கோடாதொழுகும் மனைவியோடு இருவிழி களும் ஒருபொருளை ஒத்துணர்வதுபோல் இருவரது மனமொழி மெய்களுமொத்து வழுவற ஒழுகுதலும்,

௪-வது, வீடென்பது—நாம் புரியும் இத்தவமனைத்தும் தேக போகங்கள் விர்த்தித்தற்கே யன்றி இவற்றை நமக்கு வினையீடாகக் கொடுப்பித்துப் புசிப்பித்துத் தொலைப்பித்துக்கொண்டு வரும் ஒப்பற்ற இறைவனை வேண்டியல்லவே என உள்ளவாறு அவ்விறைவனை நாடி இவ்வற முதலிய மூன்றிலும் மிதந்திருத்தலுமா மென்க.

இரண்டாவது உபாசனகாண்டத்துள்.

௧-வது, அறமென்பது—நமக்குத் தொன்றுதொட்டு வந்துவந்தகலப்படுவனவாகிய மாயாகாரிய தனுவாதிகள் இறைவனாற் கொடுப்பிக்கப்படுவதால் அவைகள் நானெனது அன்றென்றும், முற்றும் அவனுடையதென்றும் உள்ளவாறு நாத்திகானுபவத்தைக் கிஞ்சித்தும் தழுவாது திடங்கொண்டு, அத்தனுவாதிகளை அவனுக்கே ஒப்பித்து முற்றும் சுதந்தர ஈனனா யிருத்தலும்,

௨-வது, பொருளென்பது—அத்தனுவாதிகளைத் தத்தம் செய்துவிட்ட மிக்க திடத்தினால் நாம் சார்பாகப் பற்றி யிருத்தற்கு இறைவனை யன்றி வேறில்லையென அவனையே விடாது பற்றுதலும்,

௩-வது, இன்பமென்பது—அவனது திருநாமங்களைக் கணமேனும் விடாது உன்னியுன்னிக் களிப்புற்றிருத்தலும்,

௪-வது, வீடென்பது—தான் எஞ்ஞான்றும் தனித்திருந்து ஷை அறமுதலிய மூன்றாக நின்ற அந்தக்கரணமானது கிஞ்சித்துஞ் சலியாது அவனுகாரமாகவே எய்த்திருத்தலாமென்க.

மூன்றாவது ஞானகாண்டத்துள்.

௧-வது, அறமென்பது—அறிவானுக்கு அகம்புறமாக் காணும் சிற்சட பேதங்களாகிய சர்வமும் பிராக்கபாவம் பிரத்தொம்சாபாவம் அன்யோன்யாபாவம் அத்தியந்தாபாவமென்னும் இந்நான்கினையு மெய்திச் சொன்மாத்திரமாயும், தோற்றன் மாத்திரமாயு மிருப்பதனால் அங்ஙனமின்றி அச்சதுர் ஞான்றும் மாறாதிருப்பது யாதெனப்படும்? அறிவானாகலின், அவ்வறிவானாகிய தனக்குத் தான்

எதை அளிக்கின்றது? தனக்கு ஒன்றை அளிப்பானேனெனின், தான் பற்றியிருத்தற்கு ஒன்றுவேண்டுமே? பற்றுதல்தான் எற்றுக் கெனின், தான் எஞ்ஞான்றும் பற்றியிருப்பது எதனை? அயலை யெனின், அயலென்பதற்குக் கிஞ்சித்தும் பொருளில்லையே! இருப்பது தான்மாத்திரந்தானே! தனக்கு எதைக் கொடுக்கின்றது? தன்னையன்றோ? தன்னை எவ்வாறு கொடுக்கின்றது? வியாபக சாட்சி விளக்கமாகவன்றோ? அங்ஙனமாகிய தன்னை அங்ஙனமாகவே தனக்களித்தலும்,

உ-வது, பொருளென்பது—தன்னை அபரோட்சாத்மானுபவ மாகத் தன்னால் தன்னில் தனக்களித்த ஞான்று தான் எதைப் பொருளாகப் பற்றவேண்டியது? தானன்றி வேறொன்று மில்லாத பூரணச் சச்சிதானந்த சிவம் தானாகலின், தன்னையே பற்றவேண்டியதன்றோ? அதாவது தனது இலட்சியார்த்தானுபூதியைக் கணமேனும் விடாது பற்றி யிருத்தலும்,

ங-வது, இன்பமென்பது—அங்ஙனம் தன்னைப் பொருளாகப் பற்றிய ஞான்று தனக்கயலாகக் கயிற்றரவு முதலியனபோற் றோற்றிக்கொண்டிருக்கும் சிவேசுராசகத் கற்பனைகளாகிய ஒவ்வொன்றிலும், மாவெவற்றினும் வெல்லப்பாகை யூட்டில் தனது இனிப்புமயமாக்கி விடுவதுபோல், தனது சொப்பிரகாச திருட்டியைக் கொடுத்துக்கொடுத்துக் காணில் சர்வமும் யாதாய் முடியும்? சொப்பிரகாசமாய் முடியுமன்றோ? முடியவே, துக்கமென்பது கிஞ்சித்தேனு முண்டெனப்படுமோ? இல்லாவுழி, தன்னைத்தான் இன்புருவாக நாடவேண்டுமன்றோ? அங்ஙனம் நாடுவதற்குத் தான் யாதெனப்படும்? இன்பமெனப் படுமன்றோ? ஆகலின், தன்னைத்தானே சுகித்தலும்,

ச-வது, வீடென்பது—ஷை முதலாவது தன்னைத் தனக்களித்தலாகிய அறமும், இரண்டாவது அங்ஙனம் அளிக்கப்படும் தன்னைத் தான் இருப்பாகப் பற்றுதலாகிய பொருளும், அங்ஙனம் பொரு

ளர்க் பற்றிய தன்னைச் சுகித்தலாகிய இன்பமுமென்னும் இம்மூவித
சுத்தக் காரணங்களும் ஆகாயமே காற்றென்றாற்போ லாகலின்;
இக்காரணமே மனோவிருத்தி அகண்டாகார விருத்தியென்னு மிரண்
டிற்குந் தலைமையாகிய விவேகவிருத்தி யெனப்பட்டது. இவ்விவேக
விருத்தியானது அயர்ந்து தானே தானாய் விடுதலையாமென்க.
இவற்றுள்,

### மனோவிருத்தி யென்பது.

சீவேசுர சகத்தாகச் சத்தியம்போற் றடித்து, இவற்றுள் சகத்
தாகிற நாமரூபங்களில் ஒன்றை நானெனவும், அதைச்சார்ந்த சார்பு
கள் எனதெனவுமாய் நிகழ்தல்.

### அகண்டாகார விருத்தியென்பது.

இச்சீவேசுர சகத்துக்களைத் தக்கவாறு ஆராய்வுழி தமக்கெனச்
சொருபமின்றி, ஈற்றில் சோபாதிக மென்பதின்றி, நிருபாதிகமாய்க்
கிஞ்சித்தும் நாமரூபத் தாக்கின்றி அருவபாவ முற்றிருத்தலா மென்க.

### விவேக விருத்தியென்பது.

அவ்வருவபாவத்தில் நின்று மின்மினியொளிபோலும், சுடரொளி
போலும், பகல்வத்தியொளிபோலும், நட்சத்திரங்களினொளிபோ
லும், மூன்றாம்பிறை யொளிபோலும், வளர்பிறை யடுக்குகளின்
ஒளிபோலும், பூரணச்சந்திர னொளிபோலும், சூரியப்பிரகாசம்
போலும், அநேக சூரியப்பிரகாசம்போலும் நாளுக்குநாள் முதிர்ந்து
ஈற்றில் அகண்ட பரிபூரண வியாபக சாட்சி விளக்கமயமாய் நிற்றலே
யாமென்க. அன்றியும், இவ்வியாபக சாட்சி விளக்கமே ஏகமே
வாத்வைத மெனவும், சுத்தத்திரிபுடி யெனவும், சுவானுபவ மெனவு
மாம். இச்சுவானுபவ விவேக விருத்தியே ஈற்றில் திரிபுடிரகித
மெனவும், பாவாபாவாதீதமெனவும், சுவானுபவாதீத மெனவும்,
தானே தானாகிய தெனவுமாமென்க. இத்தானே தானாகிய போத
மே வீடெனப்பட்டதென்க. ஷை அறமுதலிய நான்கினுக்கும்

உதாரணம்:—

சொரூபசாரம்.

"என்னையே யல்லாமல் யான்பெற்ற தேதுமில்லை
யென்னையான் பெற்றிருந்த தெப்போது—மென்னையன்றிப்
பந்தமில்லை வீடுமில்லை பார்க்கிலிவை யாராயின்
சிந்தனையு மில்லாத தே." என்றும்,

திருக்குத்திரிசிய விவேகம்.

"அறம்பொரு ளின்பம்வீ டாயவோர் நான்கின்
திறந்தெரிந்திங் கொன்றாக்கிச் சிந்தை—கறங்கென்ன
வாடாது நிற்றற் கருநெறியெல் லாமுறையிற்
கோடாத் தளிப்போன் குரு." என்றும்

கூறியவாற்றாற் காண்க.

சீவன்முத்தர்களது பேதங்க ளினையவென்பது.

இவ்விதமாகிய சுகானுபவிகளின் பேதங்க ளெங்ஙனமெனின், தேகோகானுபவமான்து உருக்கொண்டு வெளிப்பட்டு வளரும் வளர்ச்சியில் சிசுத்துவம் குமாரத்துவம் எவ்வனத்துவம் வயோதிகத்துவமாகிய இச்சதுர்விதப் பருவ பேதங்களாக் முதிர்ந்து, ஈற்றில் சாக்காடுக் கிடனுகின்றதுபோல், சமாதிக்கண் உதயமான இச்சிவோகானுபவமும் இது நானென விளங்கியதுமுதல் சதுர்விதப் பருவ பேதங்களையு முற்றிருத்தலா மென்க. எங்ஙன மெனின், பிரமவித்தெனவும், பிரமவா னெனவும், பிரமவரிய னெனவும், பிரம வரிட்டனெனவும் சதுர்வித ஞானப்பியாசிகளா மென்க. இவ்வப்பியாசிகளது தற்பிரகாச இலட்சியார்த்தானுபவமானது, 1-வது—பிரமவித்துக்களுக்கு நூதன அனுபவமும், 2-வது—பிரமவார்களுக்குச் சற்று நீடித்த அனுபவமும், 3-வது—பிரமவரியர்களுக்கு முன்னையினும் சற்று நீடித்த அனுபவமும், 4-வது—பிரமவரிட்டர்களுக்குப் பலஜனனப் பழக்கானுபவமுமா மென்க.

இவ்வனுபவ வளர்ச்சியின் பேதங்களாவன:—ஷை பிரமவித்துக்களது நூதனனுபவம், ஷை தேகோகானுபவத்திலுள்ள சிசுத்தன்மை போன்றது. ஷை பிரமவார்களது சற்று நீடித்த அனுபவம்,

ஷை தேகோகானுபவத்திலுள்ள குமாரத்தன்மை போன்றது. ஷை பிரமவரியர்களது மிக்க நீடித்த அனுபவம், ஷை தேகோகானுபவத்திலுள்ள எவ்வனத்தன்மைபோன்றது. ஷை பிரமவரிட்டர்களது பலஜனனப் பழக்க அனுபவம், ஷை தேகோகானுபவத்திலுள்ள வயோதிகத் தன்மை போன்றதென்க. அந்நால்வாது அரிய தற்பிரகாசானுபவத்தில் சிசுத்தன்மை முதலியனவாகிய இத்தேகோகப் பிரபஞ்சானுபவம் எங்ஙன மிருக்கின்றதெனின்,

1-வது, நூதனானுபவத்தில் நனவு நினைவு கனவு சுழுத்தியென்னும் நான்கனுள் நனவாகிய சாக்கிராவத்தையாகவும்,

2-வது, சற்று நீடித்த அனுபவத்தில் ஷை நனவாகிய சாக்கிராவத்தையை விடாது அகத்துள் நிகழும் நினைவாவத்தையாகவும்,

3-வது, மிக்க நீடித்த அனுபவத்தில் தசேந்திரியங்களுங் குன்றி நிகழும் சொப்பனாவத்தையாகவும்,

4-வது, பலஜனனானுபவத்தில் ஷை நனவு நினைவு கனவு என்னும் மூன்றுங் குன்றிய சுழுத்தி யவத்தையாகவு மிருக்கின்றதாமென்க. இங்ஙன மிருக்கும் நால்வர்களுக்கும் தற்பிரகாச சுகானுபவவீடு ஒன்றுயினும், பிரமவித்துக்களுக்குப் பிரவிருத்தி சாக்கிரானுபவமா யிருப்பதால் இத்தேகோ கானுபவத் தாக்கிருக்கினும் இஃது தாக்குந்தோறும் தமதனுபூதியை நாடி நாடி இத்தாக்குதலைத் தணித்துக்கொண்டு வருகின்றது அவர்களுக் கியல்பெனப்படும். ஏனைய வரன் வரியா னென்பவர்கள் விடாவனுபூதி யுடையவாாகலின் இத்தேகோகத் தாக்கானது நினைவாவத்தை போலும் கனவாவத்தை போலும் ஜாலமாக இருப்பதால் அவர்கள் இத்தாக்கின் காரணமாகத் தமது நிலையை நாடாது இயல்பாக நாடும் நாட்டத்திலேயே நின்று தேகோகப் பிராரத்துவத்தை அனுபவித்துக் கழித்துக்கொண்டு வருவது அவர்களுக்கு இயல்பெனப்படும். ஏனைய வரிட்ட நிலையுடையவர்கள், தேகோகப் பிராரத்துவத்தை ஷை பிரமவித்துக்களைப்போல் புத்தி பூர்வகமாகவும், வரன் வரியானென்பவர்களைப்போல் அபுத்தி பூர்வகமாகவு மனுபவித்துக் கழிக்காமலே கழித்து வருகின்றது அவர்களுக் கியல்பெனப் படுமென்க.

இங்ஙனமிருக்க, வரிட்டர்களைப்போல் பிரமவித்துக்கள் முதலிய மூவர்களும் தேகோகத்தில் மேற்படி சுழுத்தியானுபவ மடையவில்லை யென் றெண்ணிச் சாமானியர்களென்று அவமதித்தல் என்ன கொடுமை யெனப்படும்? ஆகலின்,

கைவல்லிய நவநீதம்.

> "பொறுமையாற் பிராரத் துவத்தைப் புசிக்குநாட் செய்த கன்ம
> மறுமையிற் றொடர்ந்தி டாமன் மாண்டுபோம் வழியே தென்னிற்
> சிறியவ ரிகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வ
> ரறிபவ ரறிந்து பூசித் தறமெலாம் பறித்துண் பாரே."

எனக் கூறியிருக்கின்றது.

இங்ஙனமாகிய சீவன்முத்தி முதிர்ச்சியே விதேகமுத்தியாகலின், இவ்விதேகமுத்தி யென்னும் வீட்டின்பத்தை விளக்குவான் வேண்டி வேதமாதா காண்டத் திரயமாக நிகழுகின்றது.

இஃது நிட்டையெனப்படுவது.

இந்நூலிற் கூறப்பட் டிருக்கும் அகம்பொருளை எட்டவேண்டின் கல்விகேள்வி யென்னும் படிப்பாராய்ச்சியில் முற்றும் செல்லாது அகமுக உழைப்பாராய்ச்சியில் முற்றும் செல்லவேண்டியதாமென்க. அவ்வகமுக உழைப்பாராய்ச்சியாவது—முன்னர் ஆதனங்கட்டி இரு கரத்திலும் சின்முத்திரை கொண்டு தேகத்தைத் தறிபோல் நிறுத்தி, பின்னர் ஐம்பொறிகளாற் காணப்படுவனவாகிய விடயங்களைக் காரண காரியங்களால் சிந்தித்தும் பொருள்படாது நசிப்புறுமாறு செய்து, அதன்பின்னர் அவ்விடயக் காட்சிகளால் முன்ஞான்றேறி யிருந்த வாசனா விடயங்க ளனைத்தையும் மேலெழும் ஊர்த்தமுக திருட்டியினாற் கெடுத்து, இவ்வாசனையிறந்த முடிவிற் றோன்றும் மறைப்பாகிய அந்தகாரத்தையுங் கெடுத்து, அலையற்ற சமுத்திரத் தைப்போல் நிற்றலாமென்க. இங்ஙனமாகிய உழைப்பையும் இவ் வுழைப்பை விளக்கும் மேற்படி கல்வி கேள்வியென்னும் படிப்பாராய்ச் சியையு மேலாது, ஆதனங்கட்டிச் சின்முத்திரையுங் கையிற்கொண்டு முத்திரை நெறிகளிற் சிந்தையூன்றி யிருக்கின் தனது எதார்த்த

பாவமின்றிக் கற்பிதபாவம் உண்மைபோற் றோன்றி நீடித்திருக்கினும் அஃது பின்னர் மறைந்து முன்போலவே தேகோகமென்பது பலப்பட்டுவிடும். ஆகலின், இந்நூலை நன்கு அழுந்திப் பார்ப்பவரே சீவன் முத்தராவா ரென்பதற்குச் ஐஞ்சித்தும் விருத்தமின் றென்க.

தமதாசிரியர் தமக்கீந்த கைம்மாறுக்கோத்த
கைம்மா றளித்தற்கு வேறின்றெனை வியந்து துதித்தல்.

வெண்பா.

இந்நூலன் காய்ந்துணரு மேய்ந்தபரி பாகிகடா
மன்னியமென் றொன்றின்றி யார்ங்தொளிர்தற் ...ங்நெறியி
னன்னயமெற் கன்றளித்த நங்குரவற் கிந்நிலனி
லென்னகைம்மா றீவே னியான்.

இதுவுமது.

கைம்மா றளித்தற்குக் காணேநா னொப்பெங்கு
மம்மாவீ தென்ன வதிசயமோ—வெம்மா
வியைந்ததியா தென்னினே வெங்குநா மாகத்
தியங்குதலற் றேகிற்பேந் தேர்ந்து.

வாழ்த்து.

எந்தைச்சி தாநந்த னேய்ந்தசர ணம்வாழி
வந்தஜன காதியரும் வள்ளுவருஞ்—சிந்தையின்றி
யொன்றுஞ் சடகோப ரோர்நால்வர் சங்கரரு
மென்றுமற்றோ ரும்வாழி யே.

அகம்புற ஆராய்ச்சி விளக்கம்
முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

